உ
சிவமயம்

ஸ்ரீ வியாச பகவான் சம்ஸ்கிருதத்தில்
இயற்றியருளிய ஸ்காந்தப் புராணத்துள்ள
சூதசம்ஹிதையில் "சொரூபானந்த சித்தி"
என்ற

# பிரஹ்மகீதை

இஃது
இறும்பூதூர் ஸ்ரீ தத்துவராய சுவாமிகளால்
தமிழில் செய்யுள் வடிவமாக மொழிபெயர்த்தருளிய
மூலமும்
கோவிலூர் மரபு

## ஸ்ரீ பிரஹ்மானந்த சுவாமிகள்

அருளிச்செய்த

# பிரஹ்மானந்தலகரி

என்னும் உரையும்



⁂

பதிப்பாளர் :
ஸ்ரீ பிரஹ்மானந்த சுவாமிகள்
ஸ்ரீரங்கம்
1972

# முன்னுரை

நிலவுலகத்தின்கண் பரதகண்டத்தில் வேதமார்க்கத்தி லுள்ள நல்ல குலத்தில் மக்களாகப் பிறந்தவர்கள் விரும்புவது துக்கமற்ற சுகத்தையே ஆனால் சுகசாதனத்தையறியாதவர்களாய் விஷங்கலந்த பால் போன்ற துக்க சாதனமாகிய தாரபுத்திரதனுதிகளையே விரும்பிப் பிறப் பிறப்பாகிய துக்க சாகரத்தில் விழுந்து கிடப்பவர்களிடத்தில் கிருபையுள்ள பரமேஸ்வரன் யுகதர்மத்திற்குத் தக்கவாறு கிரேதா யுகத்தில் கபிலராகவும் திரேதா யுகத்தில் தத்தாதிரேயராகவும் துவாபரயுகத்தில் வியாசராகவும் கலியுகத்தில் சங்கரராகவும் அவதரித்து காலத்துக்குத் தக்கவாறு வேதாகம புராணுதிகளால் மக்களுக்கு கர்மம் பக்தி ஞானம் முறையே உபதேசித்தனர். ஆயினும் இக்கலியுகத்தில் மக்கள் சமூகம் மனிதத் தன்மையையிழந்து வந்து கொண்டிருக்கிறது அஃதெப்படியென்னில் "இல்வாழ்வானென்பான் இயல்புடைய மூவர்க்கும் நல்லாற்றின் நின்றதுணை" என்பதை மறந்து இல்லறத்திலுள்ள பலர் அருந்தல் பொருந்தலையே கருத்தாகக் கொண்டு இரவும் பகலுமாக எவ்விதமாயினும் பொருள் தேடலையே குறியாக வாழ்நாளையேயிழக்கின்ருர்கள்.

சிலர் புண்ணியவசத்தால் "எறியுங்கடலினுகத் துளையில் ஆமைக் கழுத்து புகுவதுபோல் புருடன் விவேகி யெனப் பிறந்தும்" என்றபடி துறவிகளாகி சம்சார சாகரத்தினின்றுங் கரையேறவேண்டுமென்று உறுதி பூண்டு வந்தவர்களும் காலவசத்திஞலோ கர்மவசத்திஞலோ அல்லது முயற்சிக் குறைவிஞலோ தாம் அடைய வேண்டிய விவேகாதி சாதனங்களையும் குருசந்நிதானத்தில்தான் செய்யவேண்டிய சிரவணமனன நிதித்தியாசனங்களையும் அதஞல் அடையும் மோக்ஷத்தையும் மறந்துவிட்டு உலக நடையிலேயேயிருந்து விடுகிருர்கள் என்ருல் இந்த மாயையின் வல்லபம் யாரால்

கூறமுடியும் இதை பாகவதம் "மானுடவாக்கையென்னு மருவரும் தோணி பெற்றும் ஊனமில் குரவன் சொல்லாம் ஓடமுய்ப்பவனே டென்சீர் ஆனதோர் அனுகூலக்கால் அணு கவும் பிறவி வேலைதானெழி தரவொண்ணுதோன் றன்னை யேகொல்கின்றனல்" என்றபடி மனித சரீரத்தில் ஈசுவர பத்தியினல் குருவாயிலாக ஞானத்தினல் மோக்ஷத்தை யடையாமல் மரணத்தையடைவானேல் அவன் ஈடு செய்ய முடியாத நஷ்டமாகிய ஆத்மஹத்தி (ஆத்மாவைகொன்றவனுகின்றுன்) எல்லாவித பாவங்களுக்கும் பிராயச்சித்தம் உண்டு ஆனல் ஆத்மஹத்தி செய்தவனுக்கு ஞானமொன்றிலைல்லது பிராயச்சித்தம் இலதாம். ஆதலால் குருகிருபையாலும் ஈசுவரகிருபையாலும் வேத கிருபையாலும் தத்துவக் ஞான மடைவதற்கு விரோதியாயிருக்கின்ற மனத்தை வெல்வது "கலங்குறு மனதை வெல்வோர் கைகையாற் கால்கள் காலா விலங்குபற் பல்லா லங்க மியாவுமிப் படிமுன் சேர்க்க" "பகைமனம் வெற்றி யல்லாற் பவக்கடல் வங்க மில்லை" அன்றியும் "ஒளிகொள் ஊகபுந்தியினலால் வெலப்படானெருங்கே" என்றும் முதுவிசாரத்தின் மிக்க முதன்மை மையோர்க் குளமொன் றில்லை" என்றும் "அகமெனல் எங்கு மாகுமற்பமிங் ககமன்றுகும்" என்றும் வாசிட்ட முதலிய நூல்கள் கூறுவதாலும் மோக்ஷத்தை விரும்பிய அதிகாரிகளுக்கு முத்தாபங்களின் அத்தியந்த நிவர்த்தி தத்துவ ஞானத்தாலன்றி வேறுசாதனத்தால் பெறமுடியாதென்பது அனுபவஞானிகளின் கருத்தாகும். அதற்கு "நல்லன நூல்களாலே நல்லன நெறியை நோக்கி நல்லன தியானஞ் செய்து நல்லனுபவத்தை நண்ணி" என்றபடி சற்குரு சந்நிதியிற் அத்யாத்ம சாஸ்திர விசாரம் வேண்டும். அப்படிப்பட்ட விசாரரூப பிரஹ்ம வித்யா விருக்ஷமானது ஆதிமூலமான விஷ்ணு குருமூர்த்தியிலிருந்து முளைத்து வியாசரால் வளர்ந்து சங்கரர் வழியாக விரிந்து கோவிலூர் மரபில் பழுத்து பலரும் உண்டு கழிக்கும் பாக்கியம் நம் தமிழ்நாடு பெற்றது என்பதில் ஐயமேதுமில்லையாம்.

ஆனால் இன்றய நிலையில் இப்படிப்பட்ட பிரஹ்ம வித்யா சம்பிரதாயத்தை எண்ணிப் பார்க்கும்போது இதை அறிந்த பெருமக்கள் யாரும் வருந்தாமலிருக்க முடியாது. ஏனென்றால். சாதுக்கள் உச்சியம்பொழுதில் உறுபசிதணிக்க ஊர்வலம் வந்த காலத்தில் ஊருணி சலத்திற்கு ஒருமையில் சென்ற காலத்தில் ஓலையில் எழுதிப் படித்த காலத்தில் ஓலைச்சாவடியில் தங்கியிருந்த காலத்தில் இலக்கண விலக்கியங் கற்ற வித்வான்களும் வேதாந்த விசாரஞ் செய்ததத்துவ ஞானிகளும் மலிந்து விளங்கினர்கள். இன்றோ கேட்பவருமில்லை யதைச் சொல்பவருமில்லை அதைப்பற்றியே ஏனென்று கேட்பவருமில்லை. இதைத்தான் முன்னர் தசரதன் "காலத்தால் எல்லாப் பொருள்களுங் கலங்கி வேறும்" என்றனர் ஆயினும் எந்தச் சமயமும் குறையுமேயன்றி அழிய மாட்டாது ஏனெனில் மாயை மாயா காரியங்களுக்கு ஞானத்தினலேதான் அத்தியந்த நாசமாம் அன்றி வேறுவிதத்தால் எப்பொருள்களும் அழிவற்றதேயாகும்.

அஃது நிற்க கோவிலூரின் கண் தமிழ் முறையாக பாடம் படித்து வந்த நூல்கள் 16-ஆம் அதில் நாநா சீவவாதக் கட்டளை முதல் வாசிட்டம் வரை 14 நூல்களுக்கும் உரைகள் பற்பலவந்துள்ளன. அஞ்ஞவதைப் பரணிக்கும் பிரஹ்மகீதைக்கும் சரியான முறையில் உரையெழுதி வெளியிடவில்லை ஸ்ரீ பொன்னம்பல சுவாமிகள் குறிப்புரையும் பிரதிகள் தீர்ந்து விட்டபடியினுலும் ஸ்ரீ சுந்தரசுவாமிகள் எழுதியவுரையும் சிறிது பாடபேதத்தினுலும் அதுவும் படிப்பவர்களுக்கு புஸ்தகம் கிடைப்பதரிதாயிருப்பதாலும் இந்த பிரஹ்ம கீதைக்கு உரை செய்யும்படியாக திருப்புவனம் காசிகானந்த சுவாமிகள், புனவாசல் மகேஸ்வரானந்த சுவாமிகள் இவர்களிடம் தெரிவிக்கவும் அவர்கள் அதற்கிசைந்து செய்யவில்லை அன்றியும் சாதுக்கள் பலரும் கை நோட்டுகளில் எழுதிப் படித்துக் கொண்டிருந்தார்கள். அன்றியும் திருமருகலில் பிரஹ்மகீதை பாடம் படித்தபோது சாதுக்களிடமிருந்த குறிப்புரையைக் கொண்டு உரை எழுதி

பாடம் படித்தோம் மருபடியும் திருச்சி அத்வைதானந்த சுவாமிகளிடமிருந்த குறிப்புரையை ஆதாரமாகக் கொண்டு ஸ்ரீரங்கத்திலிருந்து பூரணமாக இரண்டாவது முறை எழுதினேன்.

மருபடியும் இரண்டாவது முறை திருமருகலில் பாடம் படிக்கும்போது மூன்றுமுறையும் எழுதிப்பார்த்தேன் இந்தப் பிரஹ்மகீதையின் அர்த்த கெம்பீரத்தை நோக்கும் போது வேதத்தின் சிரோரத்னமான உபநிஷதார்த்தமான தினுலும் தத்துவராய சுவாமிகளால் தண்தமிழில் மொழி பெயர்த்து தமிழ் மக்களுக்குத் தேன் போன்று தித்திப்பதாய் இருப்பதனுலும் அத்வைத சித்தாந்தத்தை பூர்வபக்ஷ மென்று கூறும் பேதவாதிகளுக்கு தமதறியாமையே யவ்வித மெண்ணினே மென்றறியும் படி விளக்கிக் கூறுவதனுலும் அஞ்ஞானந்தகாரத்துக்கு ஞான சூரியனுகவும் சந்தேகமாகிய சூரனுக்கு வெற்றி வேலாயுதமாகவும் விபரீதமான திரிபுரங்களுக்கு சிவபெருமானுடைய புன்முருவலாகவும் பிறப்பிறப்பென்னும் முதலே வாயினின்றும் விடுபடவெண்ணும் அதிகாரிகளுக்கு மோக்ஷாமிர்தம் கொடுக்கும் லோக மாதாவாகியும் ஒரு பொருளேயுண்டென்றுரம்பித்து அதைச் சுருதி யுக்தி யனுபவத்தினுல் அத்வைதஞான மொன்றிலேயே தாற்பரியமாகக் கூறுவதனுலும் அத்வைதமே சத்திய மென்று பலமுறை பிரஹ்ம தேவர் கூறியபடியினுலும் நாராயணனுடன் பரமேஸ்வரன் இருமுறை எழுந்தருளி பிரஹ்மாவினுபதேசமே சுருதியின் தாற்பரிய மென்பதினுலும் இப்படிப்பட்ட நூலானது மக்களுக்குக் கிடைப்பது துர்லப மென்றெண்ணி இந்த பிரஹ்ம கீதைக்கு உரையெழுத வேண்டுமென்ற உறுதியும் உற்சாகமும் எல்லாம் வல்ல பரமேஸ்வரன் திருவருளால் எனக்கு உண்டானது. அதனுல் திருப்பெரும்பதியான திருமருகலிற்றங்கி உரையெழுதி முடித்தேன். பிரஹ்ம கீதை மூலத்திற்கு பிரஹ்மானந்த * லகரி யென்று இவ்வுரைக்குத் திருநாமமுஞ் சூட்டினேன்.

---

* லகரி – வெள்ளம்.

இப்படி எழுதி முடித்து கோவிலூர் சந்நிதானம் சோம சுந்தரஞான தேசிகர் முதலாவது ஆண்டு விழாவிற்குச் சென்று ஆண்டவர் சந்நிதானத்தில் வைத்து கற்பூராரத்தி செய்து வணங்கி மீண்டும் கொண்டுவந்து ஒன்பதாவது சந்நிதானமாக விளங்கும் ஸ்ரீ-ல-ஸ்ரீ இராமநாத ஞான தேசிக சுவாமிகளின் சந்நிதானத்தில் வைத்து நமஸ்கரித்தேன். சுவாமிகள் வாங்கிப் பார்த்து, திருவாரூர் தெட்சணாமூர்த்தி மடாலயம் ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முகானந்த சுவாமிகளிடம் கொடுக்கட்டும் என ஆக்ஞையிட அடியேன் கொடுத்ததை சுவாமிகள் வாங்கிப் பார்த்தவுடன் இந் நூல் இதுவரையும் நமது பரம்பரையில் வெளியிடாமையால் நீங்கள் தாமதமின்றி அச்சிட வேண்டுமெனத் தெரிவித்தார்கள். மற்றுமங்குற்ற சாதுக்களும் கேட்டுக்கொண்டபடி வெளியிடத் துணிந்தேன். இது எதுபோலுமெனில் வீட்டில் தாய்மார்கள் சமையல் செய்வதைப் பார்த்த குழந்தைகள் தெருவில் மணற்சோறு செய்வதுபோல மூதறிஞர்கள் உரை எழுதி வெளியிட்டதைப் பார்த்த யானும் இவ்வுரையை வெளியிட்டேன்.

ஆயினும் இதைக் காணும் பேரறிவாளிகளான பெருங் குடிமக்கள் எப்படி பால், தேன், புனுகு, கோரஜனை முதலிய வஸ்த்துக்களை இடங்கருதாமல் உலகத்தவர்கள் கொள்வதுபோல் இதிலுள்ள குணங்களெல்லாம் திருவருளால் பெற்றதென்றும் குறைகளெல்லாம் என்னுடையதென்றும் கருதி ஏற்றுக் கொள்ளுவார்களென நம்புகிறேன். மேலும் விரைவாக அச்சிட்டபடியால் அவசரத்தில் சில பிழைகள் உள்ளன. அதைப் பார்த்து பிழை திருத்தம் போடப் பட்டது. அதைத் திருத்திப் படிக்கவும். இதிற் சொற் குற்றம் பொருட் குற்றம் இருந்தால் திருத்திப் படிப்பதுடன் அறிவித்தால் நன்மைபோல் ஏற்று மறுபதிப்பில் திருத்தி அமைக்கச் சௌகரியமாயிருக்கும் எனக் கேட்டுக் கொள்கிறேன்.

இந்நூல் வெளியிடுவதற்கு திருமருகல் குமாரபாளையம் ஸ்ரீரங்கம் முதலான இடங்களிலுள்ள நமது மெய்யன்பர்களி

டம் தெரிவித்தவுடன் எல்லோரும் மனப்பூர்வமாகப் பொருளுதவி செய்தனர். அவர்களுக்கு யார் யார் எதை எதைக் கருதி இந்த நல்ல காரியத்திற்குப் பொருளுதவி செய்தனரோ அவரவர்களுக்கும் எல்லாம் வல்ல பரமேஸ்வரன் அந்தந்த நலன்களை அருளும்படியாகப் பிரார்த்திக்கின்றேன். மேலும் கலைவாணன் K. அப்புலிங்கம் அவர்கள் இவ்வுரையை சரி பார்த்து அணிந்துரையும் எழுதியளித்ததற்கு பெரிதும் நன்றி தெரிவிக்கிறேன். மேலும் திருச்சி ஜோதி பிரஸில் அவர்கள் தாமதமின்றி நல்லமுறையில் அச்சிட்டளித்ததற்கும் நன்றி தெரிவிக்கிறேன்.

இப்படிக்கு,

ஸ்ரீ பிரஹ்மானந்த சுவாமிகள்

ரெங்கூன் ரெட்டியார் பங்களா,
ஸ்ரீரங்கம் P. O.
திருச்சிராப்பள்ளி - 6.

வேணும் சற்குருநாதன் துணை.

சிதம்பரம் ஸ்ரீ மௌன தேசிக ராதினம்

## ஸ்ரீமத் மௌன சபாபதி சுவாமிகள் இயற்றியவை.

திங்களணி முடிப்பரமன் திருவருள்பெற்
றுயர்ந்தோர்கள் செப்பு கின்ற
பங்கமிலாச் சமயநெறி பற்பலவா
மாயிடினும் பாரு ளோர்க்குத்
துங்கமுறு சிவசீவர் அயிக்கியத்தை
நனிவிரித்துச் சொல்லு மாற்ருல்
தங்குபுகழ் வியாசமுனி யுரைத்தருளும்
வேதாந்த சால்பிற் ருமால். 1

இந்நெறியி னியல்புரைக்கும் உபநிடத
முதலான இயல்நூல் தம்முள்
மன்னுபுகழ் மிகுகாந்த புராணமதிற்
சூதமுனி வகுத்துக் கூறும்
நன்னயம்சேர் சூதசம் ஹிதைசிறப்பும்
இலாகவமும் நயப்ப தாகும்
அன்னபெரு நூலின்கண் பிரஹ்னுரை
கீதையும்உள் அடங்கும் அன்றே. 2

பிரமனெலா மறைப்பொருளும் வானவர்க்கு
விரித்துரைத்த பெற்றி தன்ருல்
வரமுறுசீர்ப் பிரஹ்மனுரை கீதையென
வழங்கினர்கள் வாஞேர் முன்னம்
பரமனெழுந் தருளியமர்ந் தவருள்ளத்
தையங்கள் படரா வண்ணம்
உரமுடைச் சொல் லிதுவேயாம் அறிந்துய்மி
னென அறுதி உரைத்தான் அம்மா. 3

சங்கரப்பேர் ஆசிரியன் பிரஹ்மசூத்
திரநூற்குத் தரணி போற்றும்
பங்கமிலாப் பேருரைசெய் திடுவதன்முன்
இந்நூலைப் பதினெண் காறும்

சங்கையறப் பயின்றுதெளிந் ததன்பின்னர்த்
தெள்ளியதாந் தகுதி வாய்ந்த
துங்கமுறு நல்லுரைசெய் தனனென்னில்
இதன்பெருமை சொல்லற் பாற்றே 4

மன்னுபுகழ் திருத்தில்லை மருங்கிலுறும்
இறும்பூதூர் மகிப ஞன
பன்னுதிரு தத்துவரா யப்பெயர் கொள்
மறைமுனிவன் பரிந்திந் நூலை
இன்னமுத முறழ் தமிழால் ஐந்நூற்று
நாற்பத்தேழ் இயற்பா வாக
முன்னுசொரு பானந்த சித்தியெனும்
பெயரமைத்து மொழிந்திட் டானல்

செந்தமிழில் வேதாந்த சிரவணத்தில்
பதினுருச் செப்பு நூலுள்
சந்தமுறும் இந்நூல்தான் பதினைந்தா
முறைநூலாச் சாரும் அன்றே
இந்திரனேர் அரசமர்ந்தும் பெருந்துற வேய்ந்
தொளிர் *கழனிக் கிறைவர் தம்மால்
சந்ததமும் பொருள்விரிக்கும் இயல்பினெடு
தாரணியில் தழைவ தம்மா. 6

எந்நூற்கும் உரைவகுத்தே பயின்றுவரும்
உலகத்தார் இயைபு நோக்கி
இந்நூற்கும் முன்னர்உரை இருப்பினும்சம்
பிரதாயம் இழுக்கெய் தாமல்
இன்னூற்றென் ருெளிருபிர மானந்த
லகரியெனும் உரையைச் செய்தான்
பன்னூற்று நூலறிவன் தகுபிரஹ்மா
னந்தமுனிப் பனவன் ருனே. 7

---

* கழனி — கோவிலூர்.

# அணிந்துரை

"திருவுளப் பாங்கு இங்ஙனமானதேன்? என்று ஒருக்கால், குருநாதர் இன்று பூர்ண அமாவாசை என்பதை மறந்து போனுர் போலும். நாம்தான் நினைவுறுத்தலாமே!" என்று எண்ணிய சீடன் "சுவாமி! இன்று அமா ... ..." எனச் சற்றுத் தயக்கத்தோடு கூற எடுத்த வாய் கூச, மேலும் பேச வார்த்தைகள் வெளிவராது விழுங்கிய படி நிற்க; குரு முனிவரின் சினம் பொங்கிய கண்கள் திரும்பின. "விதியைக் கடந்த நமக்கு விதி கூற வந்தவனே! வெளியே போ! என் முன் நில்லாதே!" என்று சொருபானந்தர் சீறினுர். அஞ்சி நடுங்கிய சீடன் பின்தாங்கி நின்ருர். "போ வெளியே என் எதிரில் வராதே!" என மீண்டும் கோபம் பொங்கக் கொதித்திடவும், நாத் தழுதழுக்க, கண்ணீர் பொங்க சன்னிதானத்தைவிட்டு ஒதுங்கி நின்ருர் அத்தெய்வீகச் சீடர். "எப்படியாவது தன்மேல் கோபங்கொண்டுள்ள குருநாதர் மனத்தில் அது தணியச் செய்யவேண்டும்" இல்லையேல் தான் இத்தனை நாளாகச் செய்த தவம் முழுதும் வீணுகுமே! "குரு அபராதி" என்ற பழிச்சொல் வந்து சாருமே! சினத்தை மாற்ற ஏற்றவழி இதுதான்" எனத் துணிந்த அந்த சீடர் தனது பிரிவாற்ருமை விளங்க ஒன்றன்பின் ஒன்ருகப் பதினெட்டு நூல்களைச் செய்தார். உடனிருந்தோர் எழுத, எழுத, கவிதை ஊற்று கங்கை போலப் பிரவாகித்து வந்துகொண்டே இருந்தது! தமிழகம் செய்ததவப் பயனுய்த் தோன்றிய அந்த சீடரைத் தான் உலகம் "தத்துவராயர்" என பூரிப்போடு பூசித்து வணங்கியது. இன்றும் வணங்கிக் கொண்டிருக்கிறது. வேதாந்தத் தமிழின் தாதை என விற்பனர்கள் பல்லாண்டிசைக்கிருர்கள்.

தத்துவராயர் தண்டமிழில் துறைபோகிய புலவராயினும், புலமைச் செருக்கு முழுதும் தேய்ந்து தனது குரு

நாதனின் சன்னிதியில் சதா பிர்ம நிஷ்டராக தன்னை மறந்த நிலையிலேயே இருந்து வரலானர். வேதாந்த பரமான நூல்கள் பல வாக்கும் வல்லமை மிக்கவனுன தன் தலைமைச் சீடனைக் கொண்டு உலகோபகாரமாக நல்ல பல அத்துவித சாத்திர நூல்களைச் செய்து தமிழ்த் தெய்வத் திற்கு அணி செய்ய விரும்பிய சொரூபானந்தரின் கருணை உள்ளத்தின் திருவிளையாடல் இது என்பது வெளிப்படை. இந்த நாடகம் நடக்காவிடில் நல்ல பல நூல்களை நம் நாடு பெற்றிருக்க முடியாதல்லவா !

சம்ஸ்கிருதத்துக்கு எவ்விதத்திலும் சளைக்காது, சமய இலக்கியக் கிளைகள் செழித்துக் கொழுத்து வளரத் தண்ட மிழ்க் கற்பகமும் கம்பீரமாக நிமிர்ந்து நின்ற தென்ருலும், சமணம், பௌத்தம், சைவம், வைணவம், என்ற நான் கோடு நின்றதை மறுக்கமுடியாது. வேதாந்த மத இலக் கியம் வடமொழி போலத் தமிழ் பெற்றில்லாப் பெருங்குறை 15-ஆம் நூற்ருண்டு வரை நீடித்தது என்னவோ உண் மைதான். அக்குறையையும் நிறையாக்கிடக் கொண்ட திருவருள், அம்மான், மருமகன் முறையில் இரண்டு சிவப் பிராமணர்களைத் தமிழ் கூறு நல்லுலகுக்குத் தந்தது. அம் மான் சொரூபானந்தர். மருமகன் தத்துவராயர் மூறையே சேந்தமங்கலமும், வீரைமா நகரும் இவர்கள் பிறப்பிடமென வரலாறு கூறுகிறது. கற்றுத் துறை போகிய இவ்விருவரும் மெய்ஞான நாட்டமிக்கவராய் பன்னெடுங்காலம் தமக்கு உபதேசிக்கத்தக்கதொரு சற்குருவைத் தேடி அலைந்தனர். ஏற்ற ஆசிரியர் எவரும் எதிர்ப்படாது போகவே, அவ்விரு வரும் தம்மிடையே ஒரு ஒப்பந்தம் செய்துகொண்டு பிரிந் தனர். அதன்படி முதலில் சற்குருவைக் கண்டு ஞான ஒளி பெற்றவர் மற்றவரைச் சீடராக ஏற்றுக்கொண்டு, தான் பெற்ற மெய்ஞானத்தை உபதேசிக்க வேண்டும். சொரூ பானந்தர் வடக்கு நோக்கியும், தத்துவராயர் தெற்கு நோக்கியும் ஞான குருவை நாடித் தேடித் திரிந்தனர். பல்லாண்டுகள் நாடும், நகரும், காடும், மேடும், சுற்றிச் சுற்றி அலைந்தனர்.

திருச்சி மாவட்டம், திருப்பைஞ்ஞீலி, திருவெள்ளறைத் திருத்தலங்களை யொட்டி உள்ள கோவர்த்தனக்குடி (இன்று கோவத்தக்குடி எனும் சிற்றூர்) எனும் தலத்தில் ஆற்றங் கரை நாணற் புதரில் தனி மோனத் தவம்புரியும் சிவப் பிரகாசமுனிவரின் திருவருள் சொரூபானந்தருக்குக் கிடைத்தது. அஃதறிந்த தத்துவராயர் தன் மாமனின் சீடரானார். தனது குருநாதரான சொரூபானந்தர் பேரிலும் அவர்தம் குருவான சிவப்பிரகாசர் பேரிலுமாகத் தத்துவ ராயர் பாடிய நூல்கள் அடங்கன் முறை, பாடுதுறை, முதலிய பன்னூறு வகையில் விரிந்து தமிழ்த் தெய்வத்துக்கு வேதாந்திகளின் பங்கைப் பூர்த்தி செய்தது.

ஆயிரம் யானைகளைக் கொன்று போர்க்களத்தில் வென்றுவரும் ஜெய சீலனுக்கே பாடப் பெறுவதென்றும் பரணி இலக்கணத்தை உடைத்து புலன்களாய யானைகளை வென்று புறங்கண்ட புண்ணிய சீலன், போர்க்களத்தில் யானைப்படைகளைக் கொன்று குவித்து வந்த விசயனுக்கும் மேலானவன் என்று துணிந்து பேசித் தன் குருநாதன் பேரில் 'மோக வதைப் பரணி' 'அஞ்ஞ வதைப் பரணி' எனும் இரண்டு பரணிகளைப் படைத்து, இலக்கியத்தில் பெரும் புரட்சி செய்த வித்தகர் நம் தத்துவராயர். அவர் பல பல நூல்களைத் தன்னிச்சையாக முதனூலாகவே செய் தாரெனினும், நல்ல சில நூல்களை வட மொழியிலிருந்து மொழிபெயர்த்துச் செய்யுளாக்கம் செய்தும் செந்தமிழ்த் தெய்வத்தை பூசிக்க எண்ணி, அவ்வாறே முடித்தார். அவற்றுள் உபனிடத சாரமாகவும், ஒப்பற்ற பெருநூலாக வும், வேதாந்த நூல்களின் சிரோரெத்தினமெனக் கொண் டாடப்படுவதாகவும் உள்ளது ''பிரமக்கீதை''யாகும். ஒன்பது முக்கிய உபநிடதங்களையும் தொகுத்து பிரமன் தேவர்களுக்கு உபதேசிக்கும் கதை வடிவில் அமைந்த பழ மையான வடமொழி இலக்கியத்தை, அழகான பல்வகைச் சந்தப்பாக்களாக்கி தனது தெள்ளிய தமிழ்ப் புலமையை உல கறிய விளக்குவதாய் இப்பெருநூலை தத்துவராய முனிவர் பெருமான் யாத்தருளியுள்ளார்.

பதினைந்தாம் நூற்றாண்டின் மாபெருந் தமிழ்க் கவிஞராகவும், வேதாந்த வித்தகராகவும், விளங்கிய தத்துவராய முனிவர் பெருமானின் அதிட்டானம் சிதம்பரம்-விருத்தாசலம் நெடுஞ்சாலையில் எறும்பூர் என்னும் திருத்தலத்தில், நாட்டின் பல பாகங்களிலிருந்தும் யாத்திரீகர்களை ஈர்ப்பதாய் இன்றும் இலகுவது கண்கூடு.

ஸ்காந்தபுராணத்தில், சூதசம்கிதையில், யக்ஞ வைபவ காண்டத்தில், உள்ள பிரமக்கீதையான வடமொழி நூலை மூலமாகக் கொண்டு நம் தத்துவராய முனிவர் பெருமான் முடித்த இந்நூல் 547 பாக்களால் கவிதை நயம் சிறக்க அமைந்துள்ளது. கசப்பான மருந்தைத் தேனிலே குழைத்துக் கொடுக்கும் மருத்துவனைப் போல சற்றே எம்போன்ற மந்த மதியினருக்குக் கடினமான வேதாந்த தத்துவத்தைப் பல்வகையான சந்தப் பாக்களாலும், கற்பனை நயம் பொங்கும் சொற்ஜாலத்தாலும் மிக அழகானதொரு காவியமாக்கி பயிலுவார் நெஞ்சில் "முதநூலோ?" எனப் பிரமிக்கும் வண்ணம் அழகூட்டித் தந்துள்ளார்கள்.

பல நூற்றாண்டுகளாக அத்துவித வேதாந்தம் பயிலுவோர் முறையாக நாநா ஜீவ வாதக் கட்டளை, கீதாசாரத் தாலாட்டு முதலிய சிறு நூல்களிலிருந்து தொடங்கி இறுதியாகப் படித்து முடிவு செய்யும் சிறப்பை இப்பிரம கீதை பெற்றுள்ளது.

இந்நூலுக்குப் பயிலுவார் பயன் கருதி பன்னெடு நாளாகப் பாடம் சொல்லவே, மிகப் பழய உரையொன்று உண்டு. அது அத்துவித வேதாந்த மடங்களின் சிகரமாக நம் தமிழகத்து விளங்கும் கோயிலூர் மடத்தினுள்ளது. அது இன்னும் ஏட்டுப் பிரதியாகவே உள்ளது. எனினும், அதற்கும் பல வருடங்களுக்கு முன் கோடக நல்லூர் திருப்பெருந் திரு, சுந்தரசுவாமிகள் எழுதிய மிகப்பழைய உரையொன்று அச்சிட்ட முழு நூலாக வெளிவந்துள்ளது, அறிஞர்கள் அவ்வுரையில் சிறிது மாறுபட்ட கருத்துடையார். அச்சிறு குறையையும் நீக்கக் கருதிய ஆண்டவனின் பெருங்கருணை

திருப்பெருந்திரு பிரஹ்மானந்த சுவாமிகளின் இப்பேருரை யான "பிரமானந்த லகரி"யாக வெளிவந்துள்ளது. தமிழ கம் பெற்ற தவப்பயன் என்பது மிகையல்ல. இது பெரும் பாலும் கோயிலூர் சம்பிரதாயத்தைத் தழுவியதாகும். திருப் பெருந்திரு. பிரஹ்மானந்த சுவாமிகள் முறையாக அத்துவித நூல்களைப் பல்லோருக்கும் பாடஞ் சொல்லிப் பரப்பிவரும் தவமுனிவர். இதற்கு முன்னறே *ஏழு செய்யுள் நூல்களை யாத்துத் தமிழ்த் தெய்வத்தின் பொன்னடியில் சூட்டி மகிழ்ந்த அனுபவம் பெற்ற வித்தகர், தான் முறையாகக் கோயிலூர் மடத்தில் பயின்ற உரையோடு, சுந்தரசுவாமி கள் உரையையும், மூல நூலையும் ஒப்பு நோக்கி, கவி நாய கராகிய தத்துவராயர் செய்யுளாக்கத்தில் விடுபட்ட பற்பல பகுதிகளையும் இடை இடையே பெய்து, இப் பிரமானந்த லகரியை முடித்துள்ளார்கள். வடமொழியில் அமைந்துள்ள பல சங்கேதச் சொற்களையும் எளிய இனிய தமிழில், கற்றோ ரும் மற்றோரும் அறிந்துய்யும் வண்ணம் தெளிவுபடுத்தி எழுதியுள்ளார்கள்.

நல்லதொரு பெருநூலை, மறந்த தமிழ் சமூகத்துக்கு மீண்டும் அறிமுகப் படுத்தி, "பிரமானந்த லகரி" எனும் விளக்க உரையும் அருளிய, இப் பேரருளாளருக்கு நம் நாடும், சமூகமும் என்றென்றும் கடமைப்பட்டுள்ளது. மாபெரும் ஞான சாத்திரப் புத்தக மொன்றைத் தனது சிர மங்களைப் பாராது உதவி அருளிய திருப்பெருந் திரு. பிர மானந்த சுவாமிகளின், கைமாறு கருதாக் கடப்பாட்டை, எண்ணி அவர்தம் திருவடிகளை வாழ்த்தி வணங்கி உய்தி பெறுவோம். தத்துவராயரின் தண்ணருள் வாழ்க! பிர மானந்தரின் பேரருள் வெல்க! வாழ்க உலகெலாம்!

இங்ஙனம்,

சேக்கிழார் இல்லம்,
திருவானைக்கா.

**கலைவாணன்.**

---

* திருவருள் வெண்பாவந்தாதி, அயோத்தி மாலை, முருகல் மாலை, முருகலந்தாதி, சிக்கல் சிங்காரவேலவர் வெண்பாவந்தாதி, ஸ்ரீ ராமர் பிள்ளைத்தமிழ், முருகல் மும்மணிக் கோவை.

திருப்பெருந்திரு

# பிரமானந்த சுவாமிகள் வரலாறு

கலைவாணன், திருவானைக்கா.

---

திருவருள் உருவாய் ஆதி தெய்வம்வந் தாடப்பெற்ற
பெருமைசால் பாண்டிமண்ணில் பிறங்கிடும் சாத்தூரோடின்
ஒருமைகொண் டிலகும் வேங்கடாசலப் புரப்பேரூரின்
அருமையைப் பேசஈண்டோர் ஆயினும் நாவேண் டாமோ? 1

மதம்பல மயங்கிப் பண்டை மறை முடி வறியா தோதும்
விதமெலாம் புகுந்து பார்த்து வேதனைச் சுமையைத் தாங்கி
இதமுறத் தவிக்கும் நெஞ்சுக் கேற்றவா றெடுத்துக் கூறி
உதவிடத் தகுந்த ஞானி உதித்ததிம் மண்ணிலன்றோ? 2

கம்மவார் குலம் முன் செய்த கடுந்தவப் பயனே யாக
அம்மை ஐயம் மாளோடு அழகிரி சாமி என்பார்
தம்முதற் சேயாய் ஈன்று தரணியில் 'பெருமாளா'க
நம்மிடம் கொடுத்து வைத்த நன்றியை மறக்கலாமோ? 3

பள்ளியுள் புகுந் தேழாண்டில் பயிலுவ பயின்றும், சின்னாள்
தள்ளரும் குடும்பங் காக்கத் தாம் பணி புரிந்தும், வாழ்வின்
துள்ளுறூ வாருண் டோடத் "துய்த்திடக் கிட்டும் உண்மை
உள்ளிய துழைத்தால், ஈசன் உதவியால் பெறலாம்" என்ற 4

தெள்ளிய செஞ்சொல் காதில் தெய்விகப் பசியைத் தூண்ட,
சள்ளையாம் குடும்பம் தாண்டி சாது சங்கத்தை நாடித்
துள்ளிடும் அறிவே பெற்ற துணையெனத் தொடர்ந்துபாயும்
வெள்ளமொத் தான்ம ஞான விருப்பனுய்ப் பெருமான்
சென்றான். 5

வேண்டுமவ் வுளத்தை வாட்டும் வேட்கையைத் தீர்க்க
வென்றே
தீண்டரும் புனித ஞானத் திருக்களர் உலகுக் கீந்த
ஆண்டவன் மரபின் முத்தா னந்தமா மடத்தில் ஞானம்
பூண்டொளிர் கின்ற தெய்வப் பொன்னி னம்பலவ னென்ற
6

அருட்டிரு மேனி யோடு ஆதரித் தறிவை யூட்டி,
இருட்டினை ஒளியாய் மாற்றி, இறைநிலை எடுத்துக் காட்டி,
மருட்டிடும் மாயை சாம்பி மடிந்திட, அகக்கண் கொண்ட
குருட்டினை மாற்ற வந்த குருமுனி வரன் நற்றுளே, 7

சதமெனப் பற்றி ஞான சாத்திரா ராய்ச்சி செய்து,
விதவித மாக நூல்கள் விரிப்பன வனைத்தும் கற்று,
இதமுறும் நாளில், ஆசான் இறை யடி நீழல் சார
உதவியை நாடித் தேடி உளை ந்தனன் பெருமாள் யாண்டும். 8

கலை நலஞ் செறிந்த பாண்டிக் காளையார் கோயில் மேலும்
விலைமதிப் பில்லா ஞான வித்தகர் பலரும் தங்கும்
நிலைகள் பற் பலவும் சார் ந்து நிலமிசை வேதா ந் தத்தின்
தலை நக ரெனும்பேர் கொள்ளத் தக்கதாம் கோயி லூரில். 9

தட்டினைத் தலையில் தாங்கித் தன் வலந் தோளி லேமண்
வெட்டியைத் தூக்கி வைகை வெள்ளமுன், கைலை வெற்பை
விட்டுவந் தெங்கள் தெய்வம் விருப்புட னிருந்த கூடற்
குட்டையா மடத்திற்; பன்னுள் குரு குல வாசம் செய்தே. 10

ஆண்டொரு சிலவாழ்ந் தப்பால் அத்துவிதான ந்தப்பேர்
பூண்டு புத்தூரில் வாழ்ந்த புண்ணியத்துறவி தன்னே(டு)
ஈண்டவந் தழைத்துச் சென்று இருத்தி நற் றுறவும் தந்தே
ஆண்ட பேரருளைப் பாட ஆயிரம் நா வேண்டாவோ? 11

படிமிசைப் பெருமாளாகப் பயிலுவ பயின்றும், தூயோர்
அடிபணிந்திருந்தும், தெய்வ ஆலயந் தொழுதும், மெத்தக்
கடினமென் றுலகம் கூறும் கட்டெலாங் கடந்தும்; உற்ற
முடிவினில் பிரமான ந்த முனிவர னுகி விட்டான். 12

நீத்தெலாங் கடந்த பிர்ம நிஷ்டனுய் இருந்தும், காசி
யாத்திரை முடித்திங்குண்மை யதி நிலை ஈதே என்று
மாத்தமிழ் உலகம் கண்டு மலரடி பணிய மீண்டு
ஏத்திடும் அடியார் கூட்டம் எண்ணரிதாக்கிக் கொண்டான்.

மண்டிடும் அடியார் தன்னை மருகலில் பணிந்து வேண்டிக்
கொண்டதற் கிணங்கி, மேலும் கொல்லி மாமலையைச்சார் ந்த
பண்டார்தங் குலத்தோர் கொப்பம் பட்டியில் கூடி வேண்ட
தண்டமிழ்த் திருவரங்கத் தவர்களும் விருப்பம் கூற. 14

சீடர்கட் கருள்பாலிக்கச் செந்தமிழ் மொழியில் பண்டு
பாடலாய் அமைந்த நூல்கள் பற்பல பயிற்றிப் பின்னர்
ஈடிலா நன்னூலாக இரணிய கருப்பன் தந்த,
ஏடிதைப் பிரம கீதை என்பதை விளக்க லானுன். 15

பூவிரி கலமப் புத்தேள் போதனை உருவாய் வந்த
காவிய மதனைப் பண்டைக் கடவுள்மா மொழியில் கண்டு
மேவிநந் தமிழும் அந்த மேன்மையையெய்தி வாழ
நாவினுல் பிரம கீதை நவின்றனன் ஒருமெஞ்ஞானி. 16

வித்தகம் அனைத்தும் கூடி விளங்கிடும் பனுவல் சேர்ந்த
புத்தகமதனைப் பெற்ற பூந்தமிழ் அன்னை தன்னை
பத்தியோடருச் சித்திட்ட பாவலன் தனை அன்போடு
தத்துவ ராயன் என்றித் தரணியே வணங்கச் சொன்னுன். 17

மாலவன் காணு மோன மன்றினின்ருடும் ஆதி
மூலமே உயிர்க்குள் நிற்கும் மூர்த்திஎன்பதனைப் பண்டைக்
காலமே உணர்ந்து கூறக் கடுந்தவம் புரிந்த ஞான
சீலர் சொல் மறையே யாம் இச் சிந்தனைச் செல்வம் காணீர்.
18

தன்னடி யார்முன் கொள்ளத் தந்ததைத் தரணி முற்றும்
பன்னெடுங் காலம் கேட்டுப் பயன்பெற நினைந்த ஞானி
இன்னதைப் பிரமானந்த லகரி யென்னும்பேரிட்டு
மன்னிட அளித்த வாஞ்சை மனந்தொட வணங்குகின்ருேம்.
19

அத்துவிதத்தைப் பேசும் அரியபன் நூல்கள் கொண்ட
தத்துவத் தயிரைத் தானே தனிமையில் அடைந்து கண்ட
வித்தகர் விளக்கம் காணீர்! விரிவுரை உருவில் தோன்றும்
இத்தமிழ்ப் பிரமானந்த லகரி வேறேதென்பேன் யான்? 20

பாடிடும் வாயும் நாவும் பரிமளித் திட முன் வந்து
கூடிய பிரம கீதை கொடுத்த மாமுனிவன் வாழ்க!
தேடிநற் றமிழில் ஈதைத் தீட்டிய மறையோன் வாழ்க!
ஈடிலாப் பிரமானந்த லகரி என்றென்றும் வாழ்க! 21

---

உ

கம்பன் புகழ் வாழ்க!

கன்னித் தமிழ் வாழ்க!

'கல்விக்கடல்'

## S. K. இராமராசன்

'கம்பராமன்'

திங்களங் கண்ணிப் பரன்விளை யாட்டாற்
சிறப்புறு பாண்டிநன் னாட்டில்
மங்கலச் சாத்தூர் மருங்கினிற் சீர்த்தி
மருவுவேங் கடாசல புரத்தில்
துங்கமார் பாவை பாடிய பாவை
துணையடி மலரில்வண் டாகிப்
பொங்கொளி வளரும் கம்மவார் குலத்தார்
புவிக்கொரு திலகமாய்ப் பொலிவார். 1

மாவடி மறவாச் செம்மையி னாலே
மகிதலம் விளக்குமக் குலத்திற்
சீலமார் அழகர் சாமிசெய் தவத்தாற்
சிறந்தவே தாந்தநூல் ஓங்க,
ஞாலமார் மாயை ஓடிடப். பிரம
ஞானமே ஒளிசெயச் சுடர்போல்
தாலமேற் பெருமாள் பிறந்தனர்: வளர்ந்தார்
தகவுறு நூல்பல கற்றார்.

கற்றவர் பராவும் கோவிலூர் மரபிற்
கதிர்நிகர் வீரமா முனிவன்
பெற்றிசால் பாத சேகரன், சாத்தூர்
பிறந்து*பொன் னம்பலக் குருவின்
கொற்றமார் பாத மலரினில் ஞானம்
குலவுநா லெனுமது மாந்தி
பெற்றியில் மாயை எனுமிருள் விலக்கிப்
பிரமமே யுளதெனக் கண்டார். 3

* மதுரையின் வடபால் யானைமலை புதூரில் சிலநாள் வசித்து சமாதியிலமர்ந்தார்.

கட்டிமாங் கனிபோற் கவிதைகள் வளங்கும்
கார்நிகர் பாரதி பிறந்த
எட்டைய புரத்தின் பாங்கொளிர் புதூரில்
இலகிய அத்வைதா னந்தர்
மட்டிலாக் கருணை நோக்கினைப் பெற்று
மாண்புறு புதுப்பிறப் பெய்தி
இட்டமார் பிரம்மா னந்தப்போர் நல்க
ஏற்றனர் திருவருள் வலத்தால் 4

மன்னிய பிரம்மா னந்தராய் மலர்ந்த
மானவர், தமையடைந் தோர்க்குப்
பன்னரும் புகழ்சால் கட்டளை, தெய்வப்
பனுவலுக் கறிவுரை வழங்கும்
நன்னயஞ் சான்ற செய்யகை வல்யம்,
நான்மறை துணிபொருள் காட்டும்
துன்னுவா சிட்டம் முதலிய வாய்மைச்
சுருதிகள் விளக்கினர் அம்மா! 5

செவ்விய நன்னூற் பொருளினைக் கேட்ட
சீரிய நண்புறு பெரியோர்
"திவ்விய வளஞ்சால் பிரம்மகீதைக்குத்
தெளிபொருள் வரைந்தருள் செய்தால்
வெவ்விய ஐயம் நீங்கியாம் உய்வோம்
விமலனே! யருள்கெனப் பரவ
இவ்வுல குய்யப் பாடி"யம் வழங்கி
யீந்தனர் அன்பினிற் றேய்ந்தார். 6

உள்ளமாம் கொடிய மாயையைப் போக்கின்
உள்பொருள் நாமல தொன்றும்
தெள்ளிதின் இல்லை; மெய்ம்மையீ தென்று
திடமுடன் அறிந்தமெய்ச் சீலன்;
தள்ளரும் புகழ்சால் தத்துவ ராயன்
தகவுற மொழிந்தகீ தைக்கு
வள்ளலாய்ப் பகர்ந்த தெளிபொருள் நோக்கி
மகிழ்ந்தனர் சீர்க்கலை வாணர். 7

மண்ணினுட் புதைந்த நிதியினை வெளியில்
மாண்புறக் கொணர்ந்தனர் என்கோ ?
வண்ணமார் கரும்பைப் பிழிந்துதீஞ் சாற்றை
மகிழ்வுற வழங்கினர் என்கோ ?
நண்ணிய மாயைச் செருக்கினால் மறந்த
நம்மையே நல்கினர் என்கோ?
புண்ணியர்க் குருவம் தந்தனர் என்கோ?
புகல்வது தெரிகிலேன் அம்மா ? 8

கற்றவர் நெஞ்சத் தொளிர்த்தனித் தீபம் ;
கவலையாம் நஞ்சினுக் கமுதம் ;
பெற்றிசால் கலைமா மகட்கொரு திலகம் ;
பெருந்தமிழ்த் தாய்மணி மகுடம் ;
கொற்றமார் ஞான மகட்கமை யிதயம் ;
கோதிலாத் தத்துவ ராயர்
சொற்றநூற் கினிமை ததும்பிடப் பெருமாள்
சொல்லிய நல்லுரை யம்மா ! 9

சித்தமா சறுத்து மேனிலை பெற்றுத்
தெள்ளிய மெய்ப்பொருள் கண்ட
தத்துவ ராயர் பகர்ந்தகீ தைக்குத்
தகுபிரம் மானத்தர் வரைந்த
வித்தகர் வுரைநூல் பாரெலாம் போற்றி
வியப்புற அச்சுவா கனத்தில்
இத்தரை மகிழ ஏற்றிய பெரியோர்
எம்பிரான் அருளினால் வாழ்க ! 10

தளர்நடைப் பருவத் தெம்பெரு மாட்டி
தந்ததீம் பாலினைப் பருகி
வளர்கலை கற்ற ஞானசம் பந்தர்
வல்விட மகற்றிய பதிசேர்
கிளர்புகழ்ப் புருடோத் தமப்பெயர்த் தோன்றல்,
கேண்மைசால் பதுமநா பப்பேர்
இளவல்நா ரணப்பேர்த் தூயரே முதலோர்
இணையிலாக் கொடைப்புகழ் பெற்றார். 11

எம்பிரான் வளரும் திருவரங் கத்தின்
எழில்மிகு திலகமே யனையார் ;
செம்பொரு ளாய மாலினுக் கன்பர் ;
செருக்கொரு சிறிதுமில் லாதார் ;
வம்பருப் பொழில்சேர் தென்றலே யனையார் ;
மாசிலா வேணுகோ பால
நம்பிசெய் திட்ட கொடையினுல் இந்நூல்
நாவலர்க் கமுதமா கியதே. 12

இருகலை போலப் பெருகிடு *நதிகட்
கிடைவளர் முனைநிகர் *நணுவில்
மருவிய பெம்மான் திருவரு ளோங்கும்
மாண்புறு குமாரபா ளையத்தில்
பெருகுவேங் கடப்ப நம்பியும் அவர்தம்
பின்வரு மூன்றுசோ தரரும்
தருவென நிதியம் வழங்கியிந் நன்னூல்
தழைவுறப் புரிந்தனர் அம்மா ! 13

போதமார் பிரம்மா னந்தமா முனிவர்
புகன்றஇப் பாடியம் வளரப்
பேதமில் அன்பால் நன்கொடை யளித்த
பெரியவர் யாவரும் மலர்வாழ்
கோதையார் வழங்கும் திருவருள் வலத்தாற்
குறைவிலா நலம்பல பெற்றுப்
பூதலந் தன்னில் வாழிபல் லூழி !
பொலிவொடு வளர்கபல் லூழி ! 14

குன்றுநேர் வேழம் நீள்கரத் தேந்திக்
குலாவியுண் கவளத்திற் சிறிது
நன்றெனப் புவியில் விழுந்திடின் அங்கே
நயந்துணும் எறும்பினம் கோடி ;

---

* நதிகள் — காவேரி – பவானி ஆறுகள்.
* பவானி சங்கமேஸ்வரர்.

இன்றிதைச் செல்வர் திருவுளங் கொண்டால்
எண்ணிலா நூற்கணம் பிழைக்கும்;
மன்றுகள் தோறும் அறிவுவீற் றிருக்கும்
மானிட சமூகமே தழைக்கும் 15

தெள்ளிய அறத்தின் வடிவமாய்ப் பொலியும்
சீர்திகழ் இராமநா தப்பேர்
வள்ளலார் தர்ம வாரிசாய்ப் பொலியும்
மாண்புறு வேணுகோ பாலர்
உள்ளமே யனைய பங்களா மேவி
யொப்பிலார் வரைந்தபா டியத்தைத்
துள்ளிய மாயைச் செருக்கினை வெல்லத்
தொல்புவி பயிலுக நாளும் 16

சங்கரர் வழங்கும் தூயவே தாந்தச்
சலதியைக் கடந்திட வேண்டின்;
மங்கல மாய மெய்ப்பொருள் கண்டு
மாண்பினை எய்திட வேண்டின்;
துங்கமார் வாழ்விற் சாந்தியைக் கண்டு
தூயபே ரின்புற வேண்டின்;
கங்கைநேர் பிரம்மா னந்தமா முனிவர்
கழறுமிப் பாடியம் காண்மின் 17

பூரணச் சிவமே தானெனக் கண்ட
புண்ணிய சொரூபன்றான் வாழி!
வாரணம் அனைய தத்துவ ராயர்
மலர்ப்பதம் வாழி! கீதைக்குச்
சீரண வியநற் பாடியம் கண்ட
செவ்விய முனிவரன் வாழி!
நாரணன் வழங்கும் திருவருட் பெருக்கால்
நன்னிலம் வாழி! பல் லூழி 18

கம்ப நிலையம்
வேலூர். (சேலம்)

S. K. இராமராசன்
கம்பராமன்

உ

# தத்துவ ஞானியே குருவெனல்

---

ஒருதினஞ் சங்கரா சாரியன் காசியில்
உத்தம வீதியிற் சஞ்சரிக் கும்பொழு
தொருவன்சண் டாளவே டந்தரித் தங்ஙனே
யூனமில் லாவிவன் ஞானஞ்சோ திக்கவே
திரிதரும் போதவன் றன்னையங் கன்னவன்
திட்டியாற் கண்டுநீ யெட்டிப்போ போவெனப்
பரவிடும் வாக்கியங் கேட்டதற் குத்தரம்
பறையனுந் தேவன்ருன் பகர்ந்ததைப் பகருவாம். 1

அன்னமே யாதியாம் பஞ்சபூ தத்தினுல்
ஆக்கிய வுன்னுடை யாக்கையைப் பற்றியிவ்
வன்னமே யாதியின் காரிய வாக்கையை
யணுக வொண்ணுதென வெட்டிப் போவென்றதோ
பின்னமே தும்மிலாப் போதவான் மாவினைப்
பேணியான் மாவினைப் போவெனச் சொன்னதோ
பன்னிடும் பரமகஞ்சாச்சிரம யதிகளிற்
பரமனே யிவ்வித மென்றுநீ பகருவாய். 2

அலையிலா வாரிபோற் சச்சிதா னந்தமா
மான்மவா காசமே யெங்கனு மசலமா
யெலையற நிற்கவிங் கந்தணன் புலையனென்
றிம்மகா பேதமெக் கலையினுற் கண்டதோ
விமலமாங் கங்கையி னப்பிலும் புலையர்தம்
வீதியி னப்பிலும் விம்பமாந் தன்மையா
னிலகுசொன் னக்குட மட்குடப் புணர்வினு
லிரவிவா னங்களி னேதுபே தஞ்சொலாய். 3

சாக்கிரஞ் சொப்பன நித்திரை மூன்றிலுஞ்
சாட்சியாய்ப் பங்கய ஞதிதம் பாந்தமாம்
ஆக்கை கடம்மிலுங் கோவையாய்ச் சாட்சியா
யச்சித்தி யாதொன்ரு காசமே போன்றிடுந்
தாக்கறுஞ் சித்ததே நானிந்தத் திரிசியந்
தானல வென்றுர நிச்சய முள்ளவன்
யோக்கிய வந்தண னீசன்ரு ஞகிலும்
முத்த வாசானென வென்மனே நிச்சயம். 4

எந்தச்சித் துத்தனைத் தேவர்திர் யக்கொடு
விந்நர ரியாவரு மியானென வறிவரோ
வந்தசித் தொளியினுற் சடமன விந்திய
வாக்கை யெப்புலனுமே சித்தென வொளிர்வதோ
வந்தமே கத்திஞன் மறைவதா மிரவிபோல்
வளர்கர ணங்களான் மறையுமச் சித்தினைச்
சந்ததம் பாவித்துச் சுகமுறு மியோகிதான்
சாதியா லாரெனுங் குருவெனு நிச்சயம். 5

பிரமநானென்னுடை மாயை முக்குண மதாற்
பேதமாஞ் சகபர சீவகற் பிதமதாம்
பரமபூ ரணசிதா காசநா னேயெலாம்
பரமநா ஞெழியவோரணுவும் வேறின்றெனப்
பரசுக நித்தநின் மலநிரஞ் சனபரப்
பிரமநிச் சயவுர முடையனு ரோவவ
னருமையா மந்தண னீசன்ரு ஞகிலும்
அகிலவாசானென வென்மனே நிச்சயம். 6

குரவன்வாக் காற்சக நசுவரம் பிரமமே
குற்றமி னித்திய மென்றுரங் கூர்ந்துபின்
ஞெருமையாய் நாடொறு மிடையறப் பிரமமே
யுணர்ந்து தானேதனிற் சாந்தமாஞ்சித் தனுய்ப்
புரிந்த முன்வினையினைப் பெளடிய வினையுடன்
போதமாம் வன்னியிற் றகனமே செய்துபின்
வருபிரா ரத்தத்துக் காக்கையை யொப்பித்து
வானம்போ னிற்பவன் குருவென நிச்சயம். 7

எந்தவின் பக்கட லேசலே சத்தினு
லிந்திர ணுதிய ரின்பமுற் றுள்ளவ
ரெந்தவின் பந்தனை யோகிகள் சாந்தமா
மிதயமீ தெய்தியே யின்பமே லாகினு
ரந்தவின் பக்கட லுள்ளடங் கும்மனத்
தன்மையோன் பிரமமே பிரமவித் தல்லமற்
றந்தத்தே வேசரும் வந்திக்கும் பாதனு
மன்னவன் குருவென வென்மனே நிச்சயம். 8

---

# உள்ளுரை

(குறிப்புரை - விஷேடவுரை)

உ

ஓம் தத் சத்
பரப் பிரஹ்மணே நம:

## கடவுள் வணக்கம்

முத்திக்கும் வித்தாகி மூவுருவுந்
தானுகி முதலு மாகி
எத்திக்குந் தெய்வமெனப் பல்சமய
மேத்துதற்கு மிறைவ ளுகி
சத்துக்கும் சத்தாகித் தனியோக
வின்பமுமாய்த் தகவி லேன்றன்
புத்திக்கும் உணர்வாகிப் போத சுகம்
தந்தானைப் போற்றல் செய்வாம். 1

## வியாசர் வணக்கம்

வேதமுதற் பலகலையின் சித்தாந்தம்
அறியார்தம் வினையி ருட்கோர்
ஆதவனுய் மறைப்பொருளின் சிக்கறுத்துச்
சூத்திரஞ்செய் தன்பர்க் கீந்து
பேதஞ்செய் வாதியர்தம் குதர்க்கமற
வழித்துணையாய் பிரமங் தானுய்
வாதனைதீர் மெய்ஞ்ஞான வீடளித்த
வியாதன்ருள் வணங்கல் செய்வாம். 2

## சூதர் வணக்கம்

வியாசனுங் கடனீ ருண்டு மெய்யுணர் வசல மேவி
தியானஞ்செய் யன்ப ரென்னுஞ் செழும் பொழில் வாடா [வண்ணம்
நியாயமாம் பிரம ஞான நிறைமழை பெய்து காக்கும்
தயா ளனும் சூத மேகச் சசதுரனை யேத்தி வாழ்வாம். 3

## சங்கர பகவத்பாதாள் வணக்கம்

கங்கையும் பிறையும் பாம்பும் கற்றையும் மழுவும் மானும்
மங்கையும் மறைத்தோ ராறு மதமும்பா டியமுந் தோன்றச்
சங்கையும் பயமும் நீங்கித் தளர்விலா வீடுந் தோன்றச்
சங்கரன் அருளாய்த் தோன்றுந் தாள்மலர் போற்றல்
செய்வாம். 4

## தத்துவராயர் வணக்கம்

போதினுன் முகத்தோன் சொல்லப் பொன்னுல கத்தோர்
கேட்டத்
தீதின்மெய்ப் பொருளை யெல்லாந் திருவுளத் தமைத்து வைத்தே
ஓதிசெந் தமிழால் யார்க்கு முளங் கயிற் கனிபோற் காட்டிச்
சாதலும் பிறப்புந் தீர்க்குந் தத்துவன் றிருத்தாள் போற்றி. 5

## கோவிலூர் ஆண்டவர் வணக்கம்

உகந்தலிங் கேச ஞர்க்கோர் ஒப்பருஞ் சீட ஞனுன்
தகுந்த மெய்யன்பர்க் கென்றுந்தனிப் பெருஞ் செல்வ மாஞன்
அகந்துறந் தடைந்தார் ஞான வகவிருட் பானு வாஞன்
சுகந்தரு முத் திராமத் தோன்றலைத் தொழுதல் செய்வாம். 6

## பரமகுருநாதன்
## திருக்களர் ஆண்டவர் வணக்கம்

துறவருஞ சலமுனிவற் கிளவலெனுங்
கருணைநிதித் துணைத்தாள் சேர்ந்தோன்
அறமுதவு கண்ணுடையான் ஆசையெனுங்
குரங்கதனை யாட்டி வைக்கும்
திறவுணர்வாங் கோலுடையான் சென்றடைந்தார்
வீடுடையான் சீல மெல்லாம்
உறவுடையான் திருக்களர்வீ ரேசன்ருள்
சென்றடைவோ முய்வ தற்கே. 7

## சற்குருநாதன் வணக்கம்

பூவிலயன் முதற்றம்பப் பூச்சி யீரும்
பொய்ப்பிறவிக் கடலழுந்தும் புலையனேனை
நாவிலமர் நான்மறையின் நல்ல வாக்கால்
நயந்தருளால் ஞானமெனு நாவாய் தந்து
பாவிலமர் பயனறிந்தும் பலன்பெற் றுய்யார்
பலர்வியக்கும் அத்துவிதப் பரமானந்தக்
காவிலமர்ந் தின்பமுறக் கரையி லேற்றுங்
கருணைபொன்னம் பலவனடி கருத்துள் வைப்பாம். 8

## அவை யடக்கம்

உலகறியா தும்பர்களு மூவர்களு
மனவாக்கால் உரையா தெண்ணு
திலகுமுயிர்க் குயிராகி யுணர்வுக்கு
முணர்வாகி யெல்லா மாகி
அலமறுநன் மௌவுனத்தை யுரைசெய்தே
னென்றுரைக்கு மறிவி லேன்சொல்
பலகலைக்கும் விடைதருவன் எனுங்குழவி
மழலைச் சொற் பான்மை போன்றே. 9

அரியரன்பேர் இரண்டெழுத்தா மிராமநாமஞ்
செபித் தனுமா ஞழி தாண்டும்
பரிசெனமெய்ப் பொருளுணர்ந்தவ் வுருவமானச்
சான்றோர்தம் பாதம் போற்றித்
திரிசியமற் றறிவுருவை மனவாக்கிற்
றெரியாத சிவரு பத்தை
பிரமனருள் தமிழ்கீதைக் குரைசெய்தேன்
பிரஹ்மானந்த லகரி யென்றே. 10

---



உ

**ஸ்ரீ பிரஹ்மானந்த சுவாமிகள்**

உரை ஆசிரியர்

திருவருளால் ஈசன் திறம்பரவும் நல்லோர்
குருவருளால் மெய்யுணர்வைக் கொண்டே—ஒருபொருளாய்த்
தன்னை அறிந்தால் தலைவனாய்ப் பேரின்பாய்ப்
பின்னமிலா வீடுறுவர் பேசு.

உ

ஓம்தத்சத் பரப்பிரஹ்மணே நம :

# பிரஹ்மகீதை மூலமும் பிரஹ்மானந்தலகரி யென்னும் உரையும்

## பாயிரம்

சகுண நிர்க்குண வஸ்து நமஸ்காரரூப * மங்கலம்.

இரவியும் மதியும் வானும் வாயுவு மனலு மப்பும்
உரவிய மண்ணும் அற்றை யுணர்பவன் ருனுமாகி
பரவிடுங் கரணம் பன்ஞன் காயுமன் ருயு நின்றே
உரைமன மிறந்து ளோங்கு மொளியினை வணங்கல்
செய்வாம். 1

(இதன் பொருள்)

இரவியும் – சகஸ்திர கிரண சொருபனுகிய ஆதித்தியனும்

மதியும் – சோடச அமிர்தகிரணனுகிய சந்திரனும்

---

* விக்கினதும்ஸத்திற்கனுகூலமான வியாபாரம் மங்கலம். விக்கினம் என்ருல் பாபம் துப்ஸமென்ருல் அதன் நாசம். அநுகூலமானவென்ருல், உபயோகமுள்ள. வியாபாரம் என்ருல் மனோவாக்கு காயங்களின் கிரியை. அது மங்கலமெனப்படும். வஸ்து நிர்த்தேசரூபம்–பொருளின் இயல்புரைத்தலாம். நமஸ்காரரூபம் பொருளியல்பு கூறி வணங்குவதாம். ஆசீர்வாதரூபம் தன்பொருட்டு அல்லது தன் சீடன்பொருட்டு பொருளியல்பு கூறி இஷ்டவஸ்துவை வேண்டுதலாம். இப்படி மூன்று விதமாம் அவற்றின் அவாந்தரபேதம் இருபத்தேழாம். அவை போத ரத்நகர நூலிலெழுதப்பட்டுள்ளது. ஈண்டு நூலாசிரியர் எடுத்துக்கொண்ட கிரந்தத்தின் நிர்விக்கினத்தின் பொருட்டும் மற்றவர்களுக்கு தம்மிடத்துள்ள நாஸ்திக பிராந்தி நிவர்த்தியின் பொருட்டும் சகுண நிர்க்குண வஸ்துவாகிய தமதிஷ்டதெய்வத்தின் நமஸ்காரரூப மங்கலம் செய்யப்பட்டதென்பதாம்.

வானும் – * இடந்தருஞ் சக்தியுடைய ஆகாசமும்

வாயுவும் – சலனசக்தியுடைய மாருதமும்

அனலும் – உஷ்ணசக்தியுடைய அக்கினியும்

அப்பும் – குளிர்ந்த சக்தியுடைய நீரும்

உரவிய மண்ணும் – திண்மை சக்தியுடைய பிருதிவியும்

அற்றை உணர்பவன் தானும் ஆகி } முற்கூறியவற்றை அறியும் ஞான சக்தியுடைய ஜீவனுமாகிய இவ்வஷ்டமங்கல மூர்த்தமாகியும்

பரவிடும் – தத்தம் விஷயங்களில் விரிந்து செல்கின்ற

கரணம் பன்னுன்கு ஆயும் } (மாயோபாதி வசத்தால் திரிபுடிரூப ஞானகர்மேந்திரிய அந்தக் கரணமான) பதினுன்கு கரணங்களாயும்

அன்றுயும் – நிருபாதிகத்வ வசத்தால் அவைகளனைத்துமல்லாததாகியும்

நின்றே – இருந்த வண்ண மிருந்தே

உரை (இறந்து) – (நிர்க்குண நிர்விசேடமாதலால்) வாக்குக்கெட்டாததாகியும்

மனமிறந்து – (நிர்விஷயம் சுயஞ்சை தன்யமாதலால்) மனதுக்கெட்டாததாகியும்

உள்ளோங்கும் ஒளியினை } சர்வாந்தர சர்வோத் கிருஷ்ட சொப்பிரகாச பிரத்யகபின்ன பரமாத்மாவை

வணங்கல் செய்வாம் } மனவாக்கு காயமென்னும் முக்கரணங்களினுலும் வழிபாடு செய்வாம்.

தான் அசை

பரமாசாரிய வணக்கம்

கண்முதற் புலன்க ளந்தக் கரணங்கள் விளங்கு மெத்தாற்
றண்மதி யருக்க னங்கி தாரகை விளங்கு மெததால்
விண்முதற் பூதம் யாவும் விளங்கிடு மெத்தால் அந்த
உண்மையைச் சிவப்பிரகாச வொளியினை யுளத்துள்
வைப்பாம். 2

(இதன் பொருள்)

கண் முதல் புலன்கள் – சக்ஷுராதி ஞானேந்திரியங்களும்

* சூன்ய சக்தியென்றும் பாடம்.

| | |
|---|---|
| அந்தக் கரணங்கள் | – மனமுதலிய அந்தக்கரணமும் (ஜீவனும்) |
| எத்தால் விளங்கும் | – எந்தப் பிரகாசத்தால் விளங்குகின்றதோ |
| தண்மதி, அருக்கன் | – குளிர்ச்சி பொருந்திய சந்திரனும் சூரியனும் |
| அங்கி, தாரகை | – அக்கினியும் நக்ஷத்திரங்களும் (மின்னலும்) |
| எத்தால் விளங்கும் | – எந்தப் பிரகாசத்தால் விளங்குகின்றதோ |
| விண் முதல் பூதம் யாவும் | ஆகாய முதலான பஞ்சபூத பௌதிகப் (காரிய) பிரபஞ்சங்களனைத்தும் |
| எத்தால் விளங்கும் | – எந்தப் பிரகாசத்தால் விளங்குகின்றதோ? |
| அந்த சிவப்பிரகாச | – அத்தகையசிவப்பிரகாசனென்னும் திருநாமமுடைய |
| உண்மையை ஒளியினை | – சத்திய சிற்கன சொரூபத்தை |
| உளத்துள் வைப்பாம் | – இருதயத்தில் வைத்து தியானிப்பாம் |

ஜீவனையும் மின்னலையும் வருவித்தாம்.

### சற்குரு வணக்கம்

முன்னைநற் சுருதியோதி முடிவுறற் கரிய தாக
இன்னமத் தேவர் மூவர் எய்துதற் கிடரே மேவத்
தன்னையிப் படியே காணத் தாளளித தெனக்கோர் வார்த்தை
சொன்னநற் சொரூபானந்தச் சோதியைத் தொழுதல்
செய்வாம். 3

(இதன் பொருள்)

| | |
|---|---|
| முன்னை நல் சுருதி ஓதி | – அனாதியாயும் உத்தமமாயும் உள்ள வேதமானது பிரதி பாதித்து |
| முடிவு உறற்கு அரியதாக | சத்தி விருத்தியால் நிச்சயித்தற்கு அருமையாகவும் |
| அத்தேவர் மூவர் | – தேவ தேவர்களாகிய மும்மூர்த்திகளும் |

| | |
|---|---|
| எய்துதற்கு | – இதுவென்னும் வடிவத்தால் சுட்டி யறிதற்கு |
| இன்னும் இடரே மேவ தன்னை | இதுகாறும் வருத்தமுற்றிருக்கவும் அத்தகைய அருமைவாய்ந்த தனது சொரூபத்தை |
| இப்படியே | – இந்நில வுலகத்தின் கண்ணே |
| காண | – சர்மசக்ஷுவினுலும் தெரிசிக்குமாறு தோன்றி |
| தாள் அளித்து எனக்கு ஓர் வார்த்தை சொன்ன | திருவடி சூட்டி அடியேற்கு ஒப்பற்ற மகா வாக்கியத்தை உபதேசித் தருளிய |
| சொரூபானந்த நல் சோதியை | சொரூபானந்தர் என்னும் திரு நாமம் வாய்ந்த ஆனந்த சின்மய சொரூபத்தை |
| தொழுதல் செய்வாம் | – வணங்குவாம். |

தனது குரு பரம்பரைப் பெரியோராகிய தத்துவப்
பிரகாச நாயனுர் வணக்கம்

நித்த னிர்குண னின்மல னீடொளிச்
சுத்த னேகன்சு ருதித்தொ டர்பிலா
னத்த னென்னையு மாண்டவ ருளினன்
றத்து வன்றிருத் தாளேவ ணங்குவாம். 4.

(இ – ள்)

| | |
|---|---|
| நித்தன் | – நான்கு விதாபங்களற்றவனும் |
| நிர்க்குணன் | – சத்துவரஜோதமோகுணங்களற்றவனும் |
| நின்மலன் | – அவித்யாதி மலமற்றவனும் |
| நீடு ஒளி | – சுயம்பிரகாசனும் |
| சுத்தன் | – கன்ம சம்பந்தமின்றியவனும் |
| ஏகன் | – சஜாதி விஜாதி சுவகத பேத மற்றவனும் |
| சுருதித் தொடர்பு இலான் | பிரமாணங்கட்கதீதனும் |

| | |
|---|---|
| அத்தன் | – ஜெகத்தாகிய பூர்வான்னத்தை எமனாகிய ஊறுகாயுடன் புஜிப்பவனும், |
| என்னையும் ஆண்ட | – அடியேனையும் அடிமைகொண்ட. |
| அருளினன் | – கிருபையுடையவனுமாகிய |
| தத்துவன், திருத்தாளை. வணங்குவாம் | குருபரம்பரை யாகியதத்துவப் பிரகாச நாயனாரது. திருவடிகளை நமஸ்கரிப்பாம். |

## இந்நூலின் நாமமும் மொழிபெயர்ப்பும்.

மயலில் வானவர் கேட்பம யக்கற
அயன்மு னாட்சொன வாரணத் துட்பொருள்
இயலு மாசொரு பானந்தச் சித்தியென்
பெயரி னற்றமி ழாலிங்குப் பேசுவாம் 5

(இ – ள்)

| | |
|---|---|
| மயலில் வானவர் கேட்ப மயக்கு அற | (வேதார்த்த நிர்ணயத்தில்) மயக்கமுற்ற தேவர்கள் வினவ. அவர்களின் மயலொழிய. |
| அயன்முனாள் சொன ஆரணத்து உள் பொருள் | பிரஹ்ம தேவர் பூர்வகாலம் உபதேசித்தருளிய. வேத ரகசியார்த்தத்தை. |
| சொரூபானந்த சித்தி என் பெயரின் | சொரூபானந்த சித்தியென்னும் நாமம் புனைந்து. |
| இயலுமா நல் தமிழால் | – பொருந்துமாறு நல்ல தமிழ் பாஷையினால். |
| இங்கு பேசுவாம் | – யாமிவ்விடத்துக் கூறுகின்றோம். |

குருவினாமத்திற்கும் பிரஹ்மா கூறிய பொருட்கும் பொருந்துமாறு இந் நூற்கு சொரூபானந்த சித்தியென்னும் நாமமிடப்பட்டமையின் " இயலுமா " வென்றார்.

## அவையடக்கம்

தானா காதி யாவையுமாந் தன்மைத் தாய வொரு பொருளை
யூனா மென்றன் வாக்கதனா லுண்மை யறிய வுரைத்திடுதன்
மானா கந்தான் மலர்தலையில் வையந்தரிப்ப மற்றதுபோற்
பூனா கந்தான் பொருப்பனெனும் புன்சொற்போலும்
புகலுங்கால் 6

(இ - ள்)

| | |
|---|---|
| தான் ஆகாது | – (பரமார்த்தத்தில்) தான் ஒன்று மாகா திருந்த வண்ணமிருந்தே |
| யாவையும் ஆம் தன்மைத்து ஆய ஒரு பொருளை | வியாவகாரியத்தில் சர்வ வடிவமாயும் விளங்குகின்ற இயல்பினையுடைய ஒப்பற்ற பரமாத்மாவினது |
| உண்மை அறிய | – எதார்த்த தன்மையை அதிகாரிகள் நன்குணருமாறு. |
| என்றன் ஊனும் வாக்கு அதனுல் உரைத் திடுதல் | எனது தோஷம் பொருந்திய புன்சொற்களால் கூறப்புகுந் ததை. |
| புகலும்கால் | – சொல்லுமிடத்து (எதுபோலு மெனின்) |
| மா நாகந்தான் | – மாட்சிமைபொருந்திய ஆதிசேட னென்னும் சர்ப்பமானது |
| மலர் தலையில் | – விரிந்த ஆயிரம் பணமகுடங்களி லும் |
| வையம் தரிப்ப | – பூமியைத்தாங்க |
| அதுபோல | – அவ்வாதி சேடனைப் போல |
| பூ நாகம்தான் பொருப் பன் எனும் | பூமிக்குள் இருக்கும் நாக்களாம் பூச்சியானது தானும் தாங்குவ னென்கின்ற |
| புன்சொல்போலும் | – புல்லிய வாக்கினைப்போலுமாம் |

7 முதல் 11 வது செய்யுள்வரை 5 செய்யுள்களால்
அத்தியாய வரலாறு கூறுகின்ருர்

மன்னிய கமலத் தோன்ருள் வானவர் வணங்கியெல்லாம்
பன்னரு மறைய ருத்தம் பகரென வினவு மாறு
முன்னதின் மொழிந்து பின்னர் முளரியந்தவிசின் மேலோன்
இன்னிய லிருக்கி லைத ரேயம தியம்புமாறும். 7

(இ - ள்)

| | |
|---|---|
| வானவர் எல்லாம் கம லத்து மன்னியோன் தாள் வணங்கி | தேவ குழாங்கள் பதும பீடத்தமர் வுற்ற பிரஹ்ம தேவரது பாதகமலங் களில் பணிந்தெழுந்து. |

| | |
|---|---|
| பன் அருமறை அருத்தம் பகர் என வினவும் ஆறு | யாவராலும் அத்தியயனஞ் செய்தற்கரிய வேதங்களினது உண்மையான அர்த்தத்தை உபதேசித்து அருளவேண்டுமென்று கேட்ட தன்மையை |
| முன்னதின் மொழிந்து | – முதலத்தியாயத்தில் கூறியும் |
| முளரி அம்தவிசின் மேலோன் | – அழகிய புண்டரீகாசனத்தமர்ந்த பிரஹ்மதேவர் |
| இன் இயல் இருக்கில் | – இனிய சந்தஸ்களமைந்த இருக்கு வேதத்தின் |
| ஐதரேயம் அது | – ஐதரேயவுபநிஷதமானது |
| இயம்புமாறு | – பிரதிபாதித்த தன்மையை |
| பின்னர்மொழிந்தும் | – இரண்டாவது அத்தியாயத்திற் கூறியும் |

வான்முன் முதலா மனைத்துலகும் வானோர் முதலாம் வருபிறப்பு
மீன்றான் இருக்கிற் றைத்திரிய மியம்பும் பரிசையியம்புவார்
மூன்று மோத்தி லுரைத்தாதி மூலப் பிரமந் தனைத் தேடச்
சான்றோர் சொன்ன நெறியைவிடாச் சதுர்த்தத் தாலே
சாற்றியபின் 8

(இ - ள்)

| | |
|---|---|
| வான் முதலாம் அனைத் துலகும் | சத்தியலோக முதலான சர்வ லோகங்களையும் |
| வானோர் முதலாம் வரு பிறப்பும் ஈன்றான் | தேவர் முதலாக வாரா நின்ற (எழுவகைப் பிறவிகளையும் சிருஷ்டித் தருளிய பிரஹ்மா வானவர் |
| இருக்கில் | – இருக்குவேதத்திலுள்ள சேஷமான ஐதரேய உபநிஷதமும் |
| தைத்திரியம் | – எசுர்வேதத்திலுள்ள தைத்திரிய உபநிஷதமும் |
| இயம்பும் பரிசை | – பிரதி பாதித்த தன்மையை |
| மூன்றும்ஓத்தில் உரைத்து | – மூன்றுவது அத்தியாயத்திற் கூறியும் |
| இயம்புவார் | – அடைந்து கேட்பவருக்கு உபதேசிப்பவராகிய பிரஹ்மதேவர் |

| | |
|---|---|
| சான்ருேர் ஆதிமூலப் பிரமந்தன்னைத் தேடச் சொன்ன | பெரியோர்கள் முதற்காரண வஸ்துவான பிரஹ்மத்தை (கெட்ட பிரஹ்மத்தைக் கேனுேப நிஷத்தில்) தேடு என்று கூறிய |
| நெறியை விடா | - முறையை நீங்காதகத்துடைய கேனுேபநிஷத்தை. |
| சதுர்த்தத்தால் சாற்றிய பின் | நான்காவது அத்தியாயத்தில் கூறிய பின்னர். |

சந்தோ கத்திற் சட்டந்தா னுரைக்கும் பரிசைச்சதுர்முத்தோன்
ஐந்தா மோத்தி லுரைத்தாறி லேழு மெட்டு மாங்கறைந்தான்
மைந்தார் முண்டங் கைவலிய மறையின் பொருளை
வையமெலாந்
தந்தானசத்த மத்தாலு மட்ட மத்துஞ் சாற்றியபின் 9

(இ - ள்)

| | |
|---|---|
| சதுர்முகத்தோன் | - நான்கு முகங்களையுடைய பிரஹ்ம தேவர் |
| சந்தோகத்தில் | - சாமவேதத்தின் கணுள்ள சாந்தோக்கிய உபநிஷத்தல் |
| சட்டம் உரைக்கும் பரிசை | ஆருவது அத்தியாயம் கூறிய முறையை. |
| ஐந்தாம் ஓத்தில் உரைத்து | ஐந்தாவது அத்தியாயத்தில் கூறியும் |
| ஆங்கு ஏழும் எட்டும் ஆறில் அறைந்தான் | அச்சாந்தோக்கிய உபநிஷத்தின் 7=8வது அத்தியாயப் பொருளை ஆருவது அத்தயாயத்திற் கூறியும் |
| வையம் எலாம் தந்தான் | சர்வலோக சிருஷ்டாவாகிய பிரஹ்மதேவர் |
| மைந்து ஆர் முண்டம் | பெருமை வாய்ந்த முண்டகோபநிஷதப் பொருளை. |
| சத்தமத்தாலும் | - ஏழாவது அத்தியாயத்திலும் |
| கைவல்ய மறையின் பொருளை | கைவல்லிய உபநிஷதார்த்தத்தை. |
| அட்டமத்தும் சாற்றிய பின் | எட்டாவது அத்தியாயத்திலும் கூறிய பின்னர். |

அன்பினா லகில லோகம் படைத்தவ னமரர் தங்கட்
கின்பமா ரணுபிரகதா ரணத்திசை மயித்ரி யத்தை
யொன்பதா லுரைத்துப் பத்தா லுடத்தமுங் கார்க்கி தானும்
பின்பதா யந்த ரியாமிப் பிராமண விடயம் பேசி 10

(இ – ள்)

| | |
|---|---|
| அகில லோகம் படைத்தவன் | சர்வப் பிரபஞ்சங்களையும் தோற்றுவித்த பிரஹ்மதேவர் |
| அமரர் தங்கட்கு அன்பினால் | தேவர்களுக்கு கிருபையினால் |
| இன்பம் ஆர் அணு பிரக தாரணத்து | (கேட்பவருக்கு) இன்பம் பயப்பதான சூக்ஷ்மார்த்தப் பிரதிபாதகமாகிய பிரகதாரண்ய உபநிஷத்தில் |
| இசை மைத்திரியத்தை | பொருந்திய மைத்ரேயப் பிராமணார்த்தத்தை |
| ஒன்பதால் உரைத்து | ஒன்பதாவது அத்தியாயத்திற் கூறியும் |
| உடத்தமும் கார்க்கி தானும் | உஷத் பிராமணமும் கார்க்கிப் பிராமணமும் (கூறும் பொருளை முதல் பாகத்திலும்) |
| அந்தர்யாமிப் பிராமண விடயம் | அந்தரியாமிப் பிராமணப் பொருளை |
| பின்பதாய் பத்தால் பேசி | பிற்பாகத்திலுமாகப் பத்தாவது அத்தியாயத்திற் கூறியும் |

தாதா வேகா தசந்தன்னிற் றக்கோர் சொல்லுங் கடவல்லி
சுவேதா சுவதர மெடுத்துரைத்துச் சொன்ன தெல்லாந்
தொகுத்தோனாய்
தூய்தா யருளிச் செய்தத்தி னீரா றேத்திற் சொல்லின்பப்
போதா லயத்தோன் புகன்றபொரு ளியானுந் தமிழாற்
புகல்கின்றேன் 11

(இ – ள்)

தாதா – வள்ளலாகிய பிரஹ்ம தேவர்.

| | |
|---|---|
| தக்கோர் சொல்லும் கடவல்லி சுவேதா சுவதரம் | மகான்கள் சிறப்பித்துக் கூறுகின்ற கடவல்லி உபநிஷதார்த்தத்தையும் சுவேதா சுவதர உபநிஷதார்த்தத்தையும் |
| எடுத்து ஏகாதசம் தன்னில் உரைத்து | தாரணஞ் செய்து பதினோராவது அத்தியாயத்திற் கூறியும் |
| சொன்னது எல்லாம் ஒன்றாய் தொகுத்து | பதினோரத்தியாயங்களாலும் கூறப்பட்ட சர்வார்த்தத்தையும் ஏகமாக சங்கிரகித்து |
| அத்தின் ஈராறு ஓத்தால் | பிரஹ்மகீதையின் பனிரெண்டாவது அத்தியாயத்தில் |
| தூய்தாய் அருளிச் செய்து | பாவனமாகக் கூறியும் |
| சொல்லின்பப்போது ஆலயத்தோன் புகன்ற பொருள் | மாதுர்ய வசனனாகிய பத்மாசனன் இங்ஙனம் உபதேசித்த அர்த்தத்தை |
| தமிழால் யானும் புகல்கின்றேன் | திராவிட பாஷையால் யாம் கூறுகின்றோம் |

பாயிரம் சம்பூரணம்

# முதலாவது அத்தியாயம்

## தேவர்கள் பிரஹ்மாவை தெரிசித்து வேதார்த்தம் வினவுதல்

(அவதாரிகை)

சூத சம்ஹிதையில் எக்ஞ வைபவ கண்டத்தின் பூர்வ பாகத்தில் ஓர் உபநிஷத் பிரமாண தாற்பரிய விருத்தியால் அறியத்தக்கதாயுள்ள பிரஹ்மான்ம ஐக்கியத்துவ ஞானத்துக்கு சாக்ஷாத் கைவல்லிய ஏதுக்துவமானது பிரதி பாதிக்கப்பட்டது இந்தத் தாற்பரியம் சர்வ வேத சாகோப நிஷத சம்மதமென்று தெரிசிப்பிக்க வேண்டி ஐதரேய தைத்திரீய முதலிய சகல உபநிஷத்களின் பொருள்கண் முழுதும் பிரதி பாதித்திரா நின்ற பிரஹ்ம கீதையை உபதேசித்தருள வேண்டும் என்னும் முனிவர்கள் வினுவைத் தொடங்கி பூர்வ விருத்தாந்த பூர்வங் கூறுகின்ருர்

சூதனு முனியை நோக்கி தொல்லைமா முனிவர் சொல்வார்
மாதவா வினவிற் றெல்லாம் வகுத்துநீ தொகுத்துச்சொன்னுய்
ஆதிநான் முகத்தோன் கீதை யறியவா தரித்தோ மின்றென்.
ருேதிமா முனிக ளெல்லாம் மீளவு முரைக்க லுற்ருர். 1

(இ-ள்)

| | |
|---|---|
| சூதனும் முனியை நோக்கித் தொல்லை மாமுனிவர் சொல்வார் | சூத புராணிகரைப் பார்த்து புராதன சௌனகாதி முனிவர்கள் (ஆசன முதலியவைகள் கொடுத்து அர்ச்சித்து வணங்கி அவரது ஆக்ஞையின் பின்னர்) கூறுவாராயினர். |
| மாதவா? வினவிற்று எல்லாம் | மகா தவ சிரேஷ்டரே யாங்கள் வினவிய வினுக்கள் அனைத்திற்கும். |
| நீ வகுத்து தொகுத் துச் சொன்னய் | தேவரீர் விரிவாகவும் சுருக்கமாகவும் திருவாய் மலர்ந்தருளினீர்கள் |
| இன்று ஆதி நான் முகத்தோன் கீதை | இப்பொழுது புராதனமான (பழமையான) பிரஹம கீதையை. |
| அறிய ஆதரித்தோம் என்று ஓதி | தெரிந்துகொள்ள விரும்பினேம் என்று கூறி |

| | |
|---|---|
| மாமுனிகள் எல்லாம் | –மாட்சிமை பொருந்திய முனிபுங்கவர்களனை வரும். |
| மீளவும் உரைக்கல் உற்ருர் | மீண்டும் கூறத் தொடங்கினுர்கள். |

வேதநூ றெறிந்தோ ஞலே விஞ்சையும் விளங்கப் பெற்ருய்
ஆதலா லியாது முன்ஞல் அறியலா காத தில்லை
மேதையான் மிக்கா யெங்கண் மேலுனக் கன்புண் டாகில்
ஓதுவாய் போதோன் சொன்ன வுபநிடப் பொருளை யென்ருர் 2

(இ-ள்)

| | |
|---|---|
| வேத நூல் தெரிந்தோனுலே | சர்வ வேத சாஸ்திரங்களை நன்குணர்ந்த கிருஷ்ணத்வையாயனரா (வியாசரா) லே. |
| விஞ்சையும் விளங்கப்பெற்ருய் | மேலான வித்தையும் விளங்க நன்குணர்ந்தாய். |
| ஆதலால் உன்ஞல் அறியலாகாதது யாதும் இல்லை | ஆகையால் தமக்குத் தெரியாத விஷயம் யாதொன்றுமில்லை. |
| மேதையால் மிக்காய் | – அர்த்ததாரண (மனன) சக்தி மிக்குடையவரே. |
| எங்கள் மேல் | – எங்களிடத்தில் |
| உனக்கு அன்பு உண்டாகில் | உமக்குக் கிருபை யிருக்குமாயின். |
| போதோன் சொன்ன | -- பிரஹ்மாவானவர் தேவர்களுக்கு பதேசித் தருளிய |
| உபநிட(த)ப்பொருளை | – உபநிஷதார்த்தத்தை. |
| ஓதுவாய் என்ருர் | – கூறியருளுவீர் என்று விண்ணப்பித்தனர். |

இன்ன பரிசை முனிவரெலா மியம்பக் கேட்டங் கிமையோர் கண்
முன்ன மொருநான் மறையோதி முடிந்த பொருளோர்ந்
துணராமல்
அன்ன மிசையோன் றனைக்கேட்ப வண்டத் தவர்கட்
கவனருளாற்
சொன்ன பரிசைக் கேளுமெனச் சூதன் சொல்லத்
தொடங்கினனுல் 3

(இ-ள்)

| | |
|---|---|
| முனிவர் எல்லாம் | — சௌனகாதி. முனிகணங்கள் |
| இன்ன பரிசை இயம்பக் கேட்டு | இவ்வாறு விண்ணப்பஞ் செய்தலை செவிமடுத்து. |
| அங்கு இமையவர்கள் | விண்ணுலக வாசிகளாய தேவர்கள். |
| முன்னம் ஒரு நாள் மறை ஓதி | பூர்வத்தில் ஒப்பற்ற நான்கு வேதங்களாலும் பிரதி பாதித்து. |
| முடிந்த பொருள் | — நிர்ணயஞ் செய்த வஸ்துவை |
| ஓர்ந்து உணராமல் | — ஆராய்ந்து அறியப்பெருது. |
| அன்ன மிசையோன் தனைக்கேட்ப | ஹம்ச வாகனனுகிய பிரஹ்மாவை அடைந்து வினவ |
| அவன் அண்டத்தவர் கட்கு அருளால் சொன்ன பரிசை | அப் பிரஹ்மதேவன் விண்ணவர் களுக்குக் கிருபையினுல் உப தேசித்த பிரகாரத்தை (யானுங் களுக்குக்கூற) |
| கேளும் என சூதன் சொல்லத் தொடங்கினன் | நீங்கள் கேட்கக்கடவீர்கள் என்று சூதமாமுனிவர் கூற ஆரம்பித்தார். ஆல்-அசை. |

பண்டொரு கற்பந் தன்னிற் பழமறைப் பொருளை யெல்லா.
அண்டருங் கூடி யாய்ந்தங் கறியலா காமை யாலே,
யெண்டரு மாத வத்தை யெய்தியே யிதனைக் கேட்பப்
புண்டரீ கத்தில் வாழும் புனிதனை நோக்கிப் போனுர். 4

(இ-ள்)

| | |
|---|---|
| பண்டு ஒரு கற்பம் தன்னில் | முன்னமொரு கற்பாந்திரத்தில். |
| பழமறைப் பொருளை | அநாதியாயுள்ள வேதார்த் தங்களை |
| எல்லாஅண்டரும் கூடி | — சர்வ தேவர்களும் ஒருமித்து. |
| அங்கு ஆய்ந்து அறியலாகாமையால் | அவ்விண்ணுலகத்தில் (வெகு காலம்) ஆராய்ந்து அறிய வியலாமையின். |
| எண்தருமாதவத்தை எய்தி | மதிக்கத்தக்க மாட்சிமை பொருந் திய தவத்தை யடைந்து |

இதனைக் கேட்ப — இவ்வேதார்த்த நிர்ணயத்தை வினவ

புண்டரீகத்தில் வாழும் புனிதனை நோக்கிப் போனார் — பங்கேருகனுகிய பரிசுத்தனை கருதிச் சென்றார்கள். ஏ = அசை.

மேருவர்ணனம்

பாவவே ரறுக்குந் தீர்த்தமென் றெண்ணப்
பட்டன யாவையும் பரப்பித்
தேவரோ டியககர் அரக்கர்கந் தருவர்
சித்தர்சாத் தியர்களுஞ் செறிந்து
நாவினு லறியு மறுவகைப் பட்ட
ரிரதமு நலம்பெற வுடைத்தாய்
ஓவிலா தொழுகு மருவிக ளுடைத்தா
யொருபொரு ளொழிவற வுடைத்தாய். 5

(இ-ள்)

பாவவேர் அறுக்கும் — பாவத்தை மூலத்தோடு கெடுக்கும்

தீர்த்தம் என்று எண்ணப்பட்ட யாவையும் பரப்பி — புண்ணிய தீர்த்தங்களிவையாமென கருதுகின்ற அனைத்தையும் தன்னிடத்தில் விரிவாக வுடையதாயும்

தேவரோடு இயக்கர் அரக்கர் கந்தருவர் சித்தர் சாத்தியர்கள் செறிந்தும் — ஆகிய இவர்கள் நெருங்கிச் சேவித்திருப்பதாயும்

நாவினுல் அறியும் — சிங்குவையால் அறியத் தக்க

அறுவகைப்பட்ட இரதமும் — ஷட்வித ரசமுடைய பதார்த்தங்களும் (தித்திப்பு, கைப்பு, புளிப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, கார்ப்பு என்பவைகளும்)

நலம்பெற உடைத்தாய் — நன்மைபொருந்த உடையதாயும்

ஓவிலாது ஒழுகும் — இடையருதொழுகும்

அருவிகள் உடைத்தாய் — அருவிகளுடையதாயும்

ஒருபொருள் ஒழிவு அற உடைத்தாய் — ஒன்ருெழியாது சர்வபதார்த்தங்களை யுடையதாயும்.

சகல யோகிகளு மேவவினி தான தனிசேர்
குகைகள கோடிபல கூடியுள கோடி பலவாம்
சிகர மேவுநவ மாமணிகள் சிந்தி யுளதாய்
நிகரி லாமனிகழ் மேருகிரி நீண்முடி யினைமேல். 6

(இ-ள்)

சகல யோகிகளும் மேவ– இனிதான — சர்வயோகீஸ்வரர்களும் பொருந்தி யிருக்க இன்பகரமான

தனிசேர் பலகோடி குகைகள் கூடிஉள — ஏகாந்தமாயிருக்கத் தக்க அநேக கோடி முழைகள் செறிந்துள்ள

கோடி பலவாம் – கோணங்கள் பலவுடையதாயும்

சிகரம் மேவு – கொடு முடிகள் பொருந்திய

நவமாமணிகள் – மாட்சிமை பொருந்திய நவரத்தினங்கள்

சிந்தி உளதாய் – சிதறியுள்ளதாயும்

நிகர் இலாமல் நிகழ் – இணையற்று விளங்கா நின்ற

மேருகிரியின் நீள் முடியின் மேல் — மகாமேருமலையின்கண் உன்னதம் பொருந்திய சிகரத்தின்மீது

ஐம்பதிற் றிரட்டி யோசனை நீளத்
தைப் பதிற் றிரட்டியே யகன்று
கம்பநற் கரியை முதல்வரு மிருகக்
கணங்களா லாகுலங் கனத்துச்
செம்பொருள் கொழிக்குந் தீர்த்திகை யுடைத்தாய்த்
திரண்டபுள் ளினங்களு முடைத்தாய்ப்
பைம்பொழிற் செழுந்தே னருந்திய வறுகாற்
பறவையி னொலியினாற் பரப்பி. 7

(இ-ள்)

ஐம்பதில் இரட்டிய யோசனை நீளத்து – நூறு யோசனை நீளமுடையதாயும்

ஐம்பதில் இரட்டி யோசனை அகன்று – நூறு யோசனை அகலமுடையதாயும்

| | |
|---|---|
| கம்பநல் கரியை முதல் வரு | பார்ப்பவர்க்கு நடுக்கத்தை யுண்டு பண்ணத்தக்க யானைகள் முதலாக வாரா நின்ற |
| மிருகக்கணங்களால் | – விலங்கின் கூட்டங்களால் |
| ஆகுலம் கனத்து | – ஆரவாரமுடையதாயும் |
| செம்பொருள் கொழிக்கும் | செவ்விய மணிமுத்தாதிகளை வாரித் திரைக் கரங்களால் தெள்ளுகின்ற |
| தீர்த்திகை உடைத் தாய் | நதிகளையுடைத்தாயும் |
| திரண்ட புள்ளினங் களும் உடைத்தாய் | நெருங்கிய பக்ஷி சாலங்களையுடைத் தாயும் |
| பைம்பொழில் செழுந்தேன் | பசியம் சோலைகளிலுள்ள (புஷ்பங் களினின்றெழுகாநின்ற செழுமை யான நறவத்தை |
| அருந்திய அறுகால் பறவையின் ஒலியினுல் பரப்பி | மாந்திய வண்டினங்களின் ஓசை யை விரிவாக உடையதாயும். |

இந்து பாநுவென் றிருவரு நிலவினோ டிளவெயில் பாரிப்ப
கொந்து பாய்தரு சோலையின் கிழங்குகாய் கொழுங்கனி வழங்கு
தண்
சந்த னுடவி புகுந்துவண் டுலவுதண் டாமரை தடந்தோய்ந்து
மந்த மாருதந் திரிதரு பிரமமா வனமுளத தன்கண்ணே. 8

(இ–ள்)

| | |
|---|---|
| இந்து பாநு என்று இருவரும் நிலவினோடு இளவெயில் பாரிப்ப | சந்திரன் சூரியன் என்கிற இரு வரும் சந்திரிகையுடனே யிள வெயிலையும் வீச |
| கொந்து பாய்தரு சோலைகள் | பூங்கொத்துக்களிலிருந்து தேன் பாயப் பெற்ற சோலைகள் |
| இன் கிழங்குகாய் கொழுங்கனி வழங்க | உண்ணற்கினிய கிழங்குகளையும் காய்களையும் பழுத்த பழங்களையும் கொடுக்கவும் |
| சந்தனடவி புகுந்து வண்டு உலவு | சந்தனச் சோலைகளில் உள் புகுந்து வண்டுகள் உலாவுகின்ற |

| | |
|---|---|
| தண்தாமரை தடம் தோய்ந்து | குளிர்ச்சி பொருந்திய தாமரைத் தடாகத்திற் படிந்து |
| மந்த மாருதம் திரி தரும் | தென்றற் காற்ருனது உலாவுகின்ற |
| மா பிரமவனம் உளது அதன் கண்ணே | பெரிய பிரஹ்ம வனமிருக்கின்றது அதனிடத்தில். 8 |

புரவர்ணனம்

வளமாமதி லொன்ப தோடெண்பது வாசலாகி
யிளநாயிறு போலவிளங்கியி லங்கு மொள்வாள்
வளைநேமி கொடுஞ்சிலை தண்டு மழுக்கள்வல்லோர்
அளவோத விலாதவர் காப்புடைத் தாகியெங்கும். 9

(இ - ள்)

| | |
|---|---|
| வளமா மதில் ஓன்பதோடு எண்பது வாசலாகி | வளப்ப மிகுந்தவொன்பது திரு மதிலோடு எண்பது வாசலுடைய தாகி |
| இள நாயிறு போல விளங்கி இலங்கும் | சுவர்ண கஜிதமாய் பாலசூரியனைப் போன்று பிரகாசித்து விளங்குகின்ற |
| ஒள்வாள் வளை நேமி — | அழகிய வாளாயுதம் சங்கு சக்கரம் |
| கொடும் சிலை தண்டு மழுக்கள் | கொடியவில் தண்டாயுதம் மழுவாயுதம் |
| வல்லோர் அளவு ஓத இலாதவர் | வல்லமையுடையவர்களில் அளவு சொல்லக் கூடாதவர்களால் |
| எங்கும் காப்பு உடைத் தாகி | எவ்விடத்தும் காக்கப்பட்டதாகி. 9 |

பூரண கும்ப மெங்கணு நிறைத்துப்
பொன்றிகழ் நித்திலம் புணர்ந்த
தோரண முயர்த்தித் தூய்மலர் துதைந்து
சுகந்தமா லைகள்பல தூக்கி
ஏரணி தீப மேற்றியெம் மருங்கும்
ஏழிசை யாழிலெங் கெங்கும்
வாரணி கொங்கை மடந்தையர் பாடு
மாடமா ளிகைவரம் பிலதாய். 10

(இ – ள்)

| | |
|---|---|
| பூரண கும்பம் எங்கணும் நிறைத்து | எவ்விடத்தும் பூரண கும்பங்கள் நிறைத்து வைத்து |
| பொன்திகழ் நித்திலம் புணர்ந்த தோரணம் உயர்த்தி | பொற்கம்பியிற் கோக்கப்பட்டு விளங்குகின்ற முத்துமாலைகள் தொங்கப்பட்ட தோரணங்கள் உயரக்கட்டி |
| தூய்மலர் துதைந்த சுகந்த மாலைகள் பல தூக்கி | பரிசுத்தமாகிய மலர்களால் தொடுக்கப் பெற்ற நல்ல வாசனையுடைய பல மாலைகள் தூக்கி |
| ஏர் அணிதீபம் எம்மருங்கும் ஏற்றி | எவ்விடங்களிலும் அழகுபொருந்திய தீபங்கள் ஏற்றி வைத்தும் |
| ஏழ் இசை யாழில் எங்கு எங்கும் | எல்லாவிடங்களிலும் ஏழிசையோடு கூடிய வீணையைப்போல |
| வாரணி கொங்கை மடந்தையர் பாடும் | கச்சணிந்த தன பாரங்களோடு கூடிய மாதர்கள் பாடுகின்ற |
| மாட மாளிகை வரம்பு இலது ஆய் | மண்டபங்களோடு கூடிய அளவற்ற மாடி வீடுகளாய கோயில்கள் உள்ளதாய் 10 |

சித்திர மமைத்த பித்திகோ டிகளாற்
சீர்பெற விளங்கிமா ணிக்க
உத்திரம் வயிரப் போதிகை பவள
வொளிமணித் தூணிறை பொதிந்து.
நித்திலத் தாமம் எங்கணுந் தூக்கி
நித்தில விதானமே எங்கும்
வித்தரித் தோங்கி வியனெடுங் கொடிகள்
விண்ணள வெறிந்துமீண் டுளதாய் 11

(இ – ள்)

| | |
|---|---|
| சித்திரம் அமைத்த | – சித்திரங்களெழுதப் பெற்றுள்ள |
| பித்தி கோடிகளால் | – பலசுவர்களினாலே |
| சீர்பெறவிளங்கி | – சிறப்புற விளங்கி |
| மாணிக்க உத்திரம் | மாணிக்கத்தால் செய்யப்பெற்ற உத்திரங்களும் |

| | |
|---|---|
| வயிரப்போதிகை | வயிரத்தால் செய்யப்பெற்ற போதிகை கட்டைகளுடைய |
| பவள ஒளிமணித் தூண் நிரை பொதிந்து | பவளத்தாலாக்கப்பெற்று அழகுடன் விளங்கும் தூண்கள் வரிசையாக சூழ நாட்டப்பெற்றதும் |
| நித்திலத் தாமம் எங்கணுந்தூக்கி | முத்து மாலைகள் எவ்விடத்தும் தொங்கவிட்டு |
| எங்கும் நித்தில விதானமே | எவ்விடத்தும் முத்துக்களினாற் செய்யப்பெற்ற மேற்கட்டிகளும் |
| வித்தரித்து ஓங்கி வியன் நெடும் கொடிகள் விண்ணளவு எறிந்து மீண்டு உளதாய் | விரித்து உயர்ந்து பெருமை வாய்ந்த நீண்ட துவசங்கள் ஆகாயமளவும் வீசி திரும்புகின்றதாகி 11 |

வெடிபட வுச்ச மந்தமத் திமமாய்
விளங்குகா களவொலி யொருசார்
இடிபடு முரச முழக்கொலி யொருசார்
இயம்புவாச் சியவொலி யொருசார்
வடிவுடை மகளிர் கூத்தொலி யொருசார்
மறையவர் ஓத்தொலி யொருசார்
முடிவறு மிருதி புராணவா கமங்கள்
மொகுமொகென் றெழுமொலி யொருசார். 12

(இ - ள்)

| | |
|---|---|
| வெடிபட உச்ச மந்த மத்திமமாய் விளங்கு காகள ஒலி ஒருசார் | அஞ்சும்படி உயர்வாயும் மிருதுவாயும் மத்திமமாயும் விளங்குகின்ற எக்காள வாத்தியத்தினோசையொரு பக்கத்தில் முழங்கவும் |
| இடிபடு முரசமுழக்கு ஒலி ஒருசார் | வானிடிபோல் முரசம் ஒலிக்கும் ஓசை யொருபக்கத்திலும். |
| இயம்பு வாச்சிய ஒலி ஒருசார் | சொல்லா நின்ற (பல) வாத்தியங்களினுடைய சப்தம் ஒருபக்கத்திலும். |
| வடிவு உடைமகளிர் கூத்து ஒலி ஒருசார் | அழகமைந்த பெண்களினுடைய நடனவொலியானது ஒரு பக்கத்திலும் |

| | |
|---|---|
| மறையவர் ஓத்து ஒலி ஒருசார் | வேதங்களில் வல்ல பிராமணர்கள் வேதத்தை (பாராயணஞ் செய்கின்ற) வொலியொருபக்கத்திலும் |
| முடிவு அறு மிருதி | – அளவற்ற ஸ்மிருதிகளும் |
| புராண ஆகமங்கள் | – புராணங்களும் ஆகமங்களும் |
| மொகுமொகு என்று எழும் ஒலி ஒருசார் | ஈரடுக்கொலியுடன் கிளம்புகின்ற ஓசையொருபக்கத்திலும் 12. |

மேவிய சகலா கமங்களின் பொருளும்
விருப்புடன் ஆய்பவர் ஒருசார்
காவிய மென்னும் கனியினை நுகர்ந்து
களித்திடு முளத்தவ ரொருசார்
ஆவியோ டாக்கை யுறவறி யிருநால்
அங்கத்து யோகியர் ஒருசார்
ஓவியம் போல விருந்துணர் விறந்த
வுணர்வுகொண் டுறங்கின ரொருசார் 13

(இ – ள்)

| | |
|---|---|
| மேவிய சகலாகமங்களின் பொருளும் | பொருந்திய சகல சாஸ்திரங்களினுடைய அர்த்தங்களையும் |
| விருப்புஉடன் ஆய்பவர் ஒருசார் | விருப்பத்தோடு ஆராய்ந்து கொண்டிருப்பவர் ஒரு பக்கத்திலும் |
| காவியம் என்னும் கனியினை நுகர்ந்து | காப்பியம் என்று சொல்லப்பட்ட பழத்தை யுண்டு |
| களித்திடும் உளத்தவர் ஒருசார் | ஆனந்தமடைகின்ற மனமுடையவர்கள் ஒரு பக்கத்திலும் |
| ஆவியோடு ஆக்கை உற அறி | உயிரோடு சரீரமானது அழியாதிருக்கும்படி உணருகின்ற |
| இருநால் அங்கத்து யோகியர் ஒருசார் | அஷ்டாங்கத்தையுடைய யோகிகள் ஒரு பக்கத்திலும் |
| ஓவியம் போல இருந்து உணர்வு இறந்த | சித்திரம்போன்று அசைவற இருந்து விருத்தி ஞான மில்லாத |
| உணர்வுகொண்டு உறங்கினர் ஒருசார் | சொரூப ஞானத்தையடைந்து காஷ்ட சமாதி செய்கின்றவர்கள் ஒரு பக்கத்திலும் 13 |

மத்தநற் களிறும் வயிரநற் றேரும்
வாசியும் வரம்பில வாகி
அத்திரத் தாலும் சத்திரத் தாலும்
அளவறு வீரர்காப் புடைத்தாய்
மெய்த்தவர்க் கெளிதா யல்லவர்க் கரிதாய்
வேண்டிய பொருளெலா மீண்டி
இத்தகைத் தான விடத்திலா யிரக்கால்
இலங்கிய விரத்தினமண் டபத்தே 14

(இ – ள்)

| | |
|---|---|
| மத்தநல்களிறும் | மும்மதங்களை பொழியும் நல்ல யானைகளும் |
| வயிர நல் தேரும் | வயிரத்தால்செய்யப்பெற்ற அழகிய இரதங்களும் |
| வாசியும் வரம்பு இலது ஆகி | குதிரைகளும் கணக்கற்றனவாகி |
| அத்திரத்தாலும் சத்திரத்தாலும் | பாணங்களாலும் கைவிடாப் படையான வாள் முதலிய ஆயுதங்களாலும் விளங்குகின்ற |
| அளவு அறுவீரர் காப்பு உடைத்தாய் | அளவற்ற படைவீரர்களால் காக்கப் பெற்றதாகி |
| மெய்த்தவர்க்கு | உண்மையான தவமுடையவர்களுக்கு |
| எளிது ஆய் | – அடைவதற்குச் சுலபமாயும் |
| அல்லவர்க்கு அரிதாய் | தவமற்றவர்க்கு அடைய முடியாததாகியும் |
| வேண்டிய பொருள் எலாம் ஈண்டி | இச்சித்த பதார்த்தங்களனைத்தும் செறிந்திருப்பதாகியும் |
| இத்தகைத்து ஆன இடத்தில் ஆயிரக்கால் இலங்கிய இரத்தின மண்டபத்து | இவ்வளவு பெருமை வாய்ந்த அவ்விடத்தில் ஆயிரங் கால்களால் விளங்குகின்ற இரத்தின மண்டபத்திலே |

ஆசனவர்ணனம் 14

கற்பக தருவும் மகரதோ ரணமுங்
கவின்பெற வமைத்துள தாகி

அற்புத மான வரிமுகத் துறுகால்
ஆசனத் தம்பஞ்சி யணைமேற்
சொற்பத வடிவாந் தோகையோ டெல்லாப்
பொருளுமாய் விளங்கிய தோன்றல்
உற்பவ மறுப்பா னுகவீற் றிருந்தான்
உம்பருங் கோயிலுட் புகுந்தார். 15

(இ - ள்)

கற்பகத் தருவும் – கற்பக விருக்ஷமும்

மகரதோரணமும் – வாயிலிற் றூக்கும் மீன்போன்ற தோரணமும்

கவின் பெற அமைத்து உளது ஆகி – அழகமையப் பெற்றிருக்கின்ற தாகியும்

அற்புதமான அரி முகத்து உறுகால் – அதிசயிக்கத் தகுந்த சிங்க முகத்தையும் அதற்குரிய கால்களையுங் கொண்டுள்ள

ஆசனத்து அம்பஞ்சி அணைமேல் – ஆசனத்தில் அழகிய பஞ்சணையின் மீது

சொல்பதவடிவாம் தோகையோடு – சொல்லும் பதமுஞ் சொரூபமாக உடைய சரஸ்வதி தேவியாரோடும்

எல்லாப்பொருளுமாய் – தானே சகல பொருள்களுமாய்

விளங்கிய தோன்றல் – பிரகாசிக்கின்ற பெருமையிற் சிறந்தவனாகிய பிரஹ்மதேவர்

உற்பவம் அறுப்பானுக – தன்னை வந்தடையும் சீவர்களுடைய பிறப்பையொழிக்கும் பொருட்டு

வீற்றிருந்தான் – எழுந்தருளியிருந்தான் (அச்சமயத்தில்)

உம்பரும் கோயில் உள் புகுந்தார் – தேவர்களும் அந்தக் கோயிலுள்ளே சேர்ந்தார்கள். 15

வேறு

ஆரமணி குண்டலமொ டாழிகட கங்கே
யூரமபி டேகமுத லொப்பனைக ளுஞ்செய்
தாரமகி ழுவிபனி நீரொடள வுங்கற்
பூரமது கொண்டுதிரு மேனிநனி பூசி. 16

(இ - ள்)

| | |
|---|---|
| ஆரமணி குண்டல மொடு ஆழி | முத்துமாலைகளும் இரத்தின மாலைகளும் இழைக்கப்பெற்ற குண்டலங்களோடு மோதிரமும் |
| கடகம் கேயூரம் அபிடேகம் முதல் ஒப்பனைகளும் செய்து | கங்கணம் தோளணி கிரீடம் முதலாகிய அலங்காரங்களும் செய்து |
| ஆரம் அகில் நாவி பனிநீரொடு அளவும் | சந்தனமும் அகிற்குழம்பும் கஸ்தூரியும் குளிர்ந்த நீரொடு கலந்து |
| கற்பூரமதுகொண்டு | - பச்சைக் கற்பூரமும் கொண்டு |
| திருமேனி நனி பூசி | - திருமேனியில் மிகவும் அணிந்து. 16 |

வேறு

நித்தமானதன் ஒளியினு லனைத்தையு நிகழ்த்து நின்
மலனோட
வைத்த செம்பொனிற் றிகழ்திரு மேனியின் மாலிகை பலசாத்தி
யுத்த ரீயவெண் ணெக்ஞோபந் திகழுதர பந்தனத்தோடு
சுத்த மானவெண் கலிங்கமும் சாத்திநற் சுராசுரர்
தொழுதேத்த 17

(இ - ள்)

| | |
|---|---|
| நித்தம் ஆன தன் ஒளியினுல் | நித்தியமாய் விளங்கா நின்ற தனது சுயம் பிரகாசத்தினுல் |
| அனைத்தையும் நிகழ்த்தும் நின்மலன் | எல்லாவற்றையும் விளங்கச் செய்கின்ற மலரகிதனுன பிரஹ்மதேவர் |
| ஓட வைத்த செம் பொனில் திகழ் | மாற்றுயரப் புடமிட்டு சிவந்த பொன்போன்று விளங்குகின்ற. |
| திருமேனியில் மாலிகை பல சாத்தி | அழகிய தனது சரீரத்தினிடத்தில் அநேக மாலைகளை அணிந்து கொண்டு |
| உத்தரீயம் வெண் எக்ஞோபம் | அங்கவஸ்திரமும் வெண்மையான எக்ஞோப வீதமும் (பூணூலும்) |
| திகழ் உதரபந்தனத் தோடு சுத்தமான வெண் கலிங்கமும் சாத்தி | இடுப்பு வஸ்திரத்தோடு விளங்குகின்ற பரிசுத்தமான வெள்ளை வஸ்திரமும் தரித்து |

| | |
|---|---|
| நல் சுர அசுரர் தொழுது ஏத்த | நல்ல தேவர்களும், அசுரர்களும் வணங்கி வாழ்த்த 17 |

தமத்தை யப்புறங் கடந்துநின் றறிவுறு சான்றதாய் மதனெல்லா
மமைத்தொ ருத்தரா லமைத்திடப் படா துள வமூலனு
யிருப்பானை
இமைத்தி டப்படா விழியினு லிமையவ ரியாவருங் கண்டிந்தச்
சுமைக்கி ளைத்தன மென்பவர் போலவன் றுணையடி தனில்
வீழ்ந்தார். 18

(இ – ள்)

| | |
|---|---|
| தமத்தை அப்புறம் கடந்து நின்று | மாயை யென்னும் இருளுக்கு அதீதமாய்க் கடந்து நிற்பவராகி |
| அறிவு உறு சான்ற தாய் | அறிகின்ற சாக்ஷியாகி |
| மதன் எல்லாம் அமைத்து | அழகுடைப் பொருள் எல்லாம் தான் சிருஷ்டித்தும் |
| ஒருத்தரால் அமைத் திடப் படாது உள | தன்னை யொருவராலும் சிருஷ்டிக் கப்படாமல் சுபாவமாயுள்ள |
| அமூலன் ஆய் இருப்பானை | தனக்கு ஒரு காரணமும் இல்லாது இருக்கின்ற பிரஹ்ம தேவரை |
| இமைத்திடப் படா விழியினுல் இமையவர் யாவரும் கண்டு | இமை கொட்டாத தம் கண்களால் தேவர்கள் அனைவரும் தெரிசித்து |
| இந்த சுமைக்கு இளைத்தனம் என் பவர் போல | இந்தவுடற் சுமையைத் தாங்குவ தற்கு இளைத்தனம் என்று சொல்லி அதைக் கீழே போடுகிறவர்கள் போல |
| அவன் துணையடி களில் வீழ்ந்தார் | அப்பிரஹ்ம தேவருடைய உபயசரணாரவிந்தங்களில் தண்டம் போல் விழுந்து வணங்கினுர்கள் 18 |

கஞ்ச நற்பதம் பணிந்தெழுந் தமலனைக் கண்டுகண் களிகூர்ந்து
மஞ்செ னச்சொரி தரமயிர்ப் புளகிதம் வரமகிழ்ச்சியினேடு
நெஞ்சநெக்குற நின்மலரா யவாவெலா நீங்கிநீண் முடிமேலே
அஞ்ச லித்தகை யினர்களா யானந்த வாரியிற் படிந்தார். 19

(இ - ள்)

| | |
|---|---|
| கஞ்சநல்பதம் பணிந்து எழுந்து | செந்தாமரை மலர் போன்ற நல்ல திருவடிகளில் நமஸ்கரித்து எழுந்து நின்று |
| அமலனைக் கண்டு | நிர்மலனாகிய பிரஹ்மதேவனை தெரிசித்து |
| கண்களி கூர்ந்து மஞ்சு எனச் சொரிதர | கண் களிப்படைந்து (ஆனந்தக் கண்ணீரானது) மேகங்களைப் போலவே பொழிய |
| மயிர்ப் புளகிதம் வர | – ரோமம் சிலிர்ப்ப |
| மகிழ்ச்சியினோடு | – ஆனந்தத்தோடு |
| நெஞ்சம் நெக்கு உர | – மனமானது நெக்குவிட்டுருகவும் |
| நின் மலராய் அவா எலாம் நீங்கி | நின்மலராய் ஆசையனைத்தும் நீங்கினவர்களாய் |
| நீள்முடிமேலே அஞ்ச லித்த கையினர்களாய் | உயர்ந்த சிரசினிடத்தில் கூப்பிய கரங்களையுடையவர்களாய் |
| ஆனந்தவாரியில் படிந்து ஆடி | பேரானந்தப் பெருங்கடலில் மூழ்கி ஆனந்தக் கூத்தாடி |

19

அழுத்த மிக்கதி பத்தியா லவசத்த ராயுள வண்டர் தங்
குழுப்பு விக்கண்வி ழுந்துமீ ளவெழுந் துதங்கள் குரல்களும்
தழுத்த முத்தெம துற்பவங் கடவிர்க்கை யேதக வென்றுதாம்
வழுத்த லுற்றனர் வல்லவா மறை சொன்ன வாறுதம்
வாய்மையால் 20

(இ - ள்)

| | |
|---|---|
| அழுத்தமிக்க அதி பத்தியால் | திடமிகுந்த விசேஷச பத்தியினாலே |
| அவசத்தராய் உள்ள | – மெய்மறந்தவர்களாயுள்ள |
| அண்டர்தம் குழு | – தேவர்களுடைய கூட்டங்கள் |
| புவிக்கண் விழுந்து | – பார்மிசை படிந்து |
| மீள எழுந்து | – மறுபடியும் எழுந்து நின்று |
| தங்கள் குரல்களும் | – தங்களுடைய சொற்களும் |
| தழுதழுத்து | – குளறினவர்களாய் |
| எமது உற்பவங்கள் | – எங்களுடைய பிறப்புக்களை |

| | |
|---|---|
| தவிர்க்கையே தகவு என்று தாம்வல்லவா | ஒழித்தலே நீதியென்று தம்மால் கூடியவரை |
| மறை சொன்னவாறு | – வேதம் சொன்ன பிரகாரம் |
| தம் வாய்மையால் வழுத்தல் உற்றார் | தங்களுடைய சத்தியமான வாக்கினால் தோத்திரஞ் செய்யத் தொடங்கினார்கள். 20 |

பரம ஞானமாம் பாற்கடல் பண்ணிய பரமனே யடிபோற்றி
கரத லாமல கத்தினேர் பரவொளி காட்டிடு கழல்போற்றி
ஒருப ராபர மன் றிநீ யொருவனு மாகிய வொளிபோற்றி
பிரம நாரண சங்கர போற்றியெம் பெருமநின்
பதம் போற்றி 21

(இ - ள்)

| | |
|---|---|
| பரம ஞானமாம் பாற் கடல் | பிரஹ்ம ஞானமாகிய திருப்பாற்கடலை |
| பண்ணிய பரமனே அடிபோற்றி | செய்தருளிய மேலானவனே திருவடிகளுக்கு நமஸ்காரம் |
| கரதல ஆமலகத்தி நேர் | உள்ளங்கை நெல்லிக்கனிபோல |
| பர ஒளி காட்டிடும் கழல் போற்றி | பரவஸ்துவைக் காட்டியருளுகின்ற பாதங்களுக்கு நமஸ்காரம். |
| ஒரு பரா பரம் இன்றி | – ஓர் உயர்வு தாழ்வு இல்லாமல் |
| நீ ஒருவனும் ஆகிய ஒளி போற்றி | தேவரீர் ஏக ரூபமாகிய சுடரே நமஸ்காரம் |
| பிரம நாரண சங்கர போற்றி | பிரஹ்மனாயும் நாராயணனாயும் சங்கரமூர்த்தியாயும் இருக்கின்றவனே நமஸ்காரம் |
| எம் பெருமநின் பதம் போற்றி | எங்கள் நாயகனே உன் திருவடிகளுக்கு நமஸ்காரம். 21 |

அடைய நீயறிந்து ஒருவரா லுன்னையிங் கறிவரியாய் போற்றி
தொடைய தாமுல கனைத்தையுந் தரித்தொரு துவக்கறு
சுடர் போற்றி
முடிவு மாதியும் கண்டுநீ முதன்முடி வின்றிய முதல் போற்றி
வடிவி யாவையு முடையையா யுனக்கொருவடி விலாய்
போற்றி 22

(இ - ள்)

| | |
|---|---|
| அடைய நீ அறிந்து | அனைத்தையும் தேவரீர் தெரிந்திருப்ப |
| ஒருவரால் உன்னை | – எவராலும் தேவரீரை |
| இங்கு அறிவு அரியாய் போற்றி | இவ்விடத்தில் அறிதற்கு அரியவனா யிருக்கின்றவரே நமஸ்காரம் |
| தொடையதாம் உலகு அனைத்தையும் தரித்து | பரஸ்பரம் சம்பந்தமுடையதாகிய சர்வ ஜெகத்தையும் தாங்கி |
| ஒரு துவக்கு அறுசுடர் போற்றி | ஓர்வித சம்பந்தமுமின்றிய ஜோதி சொரூபனே நமஸ்காரம் |
| முடிவும் ஆதியும் கண்டு நீ | உற்பத்தி நாசங்களை செய்தும் நீ (உற்பத்தி நாசமின்றியவனே நமஸ்காரம்) |
| முதல் முடிவு இன்றிய முதல் போற்றி | ஆதியும் அந்தமு மில்லாத முதற் காரணனே நமஸ்காரம் |
| வடிவு யாவையும் உடையாய் | சர்வ நாம ரூபப் பிரபஞ்சவடிவமா யிருந்தும் |
| உனக்கு ஒரு வடிவு இலாய் போற்றி | தமக்கு யாதொரு வடிவமும் இல்லாதவரே நமஸ்காரம். 22 |

அகில மாயகி லத்தினுக் கதிபனு யகிலமு மொன்றின்றி
நிகழு ஞானமா நிமலனே போற்றிநீ நினைத்திடு மிடமெல்லாம்
முகம தாயொரு முகமுனக் கின்றியே யிருக்குநான் முகபோற்றி
திகழு முன்னொளி யாற்றிகழ்ந் திலங்கிய சின்மய
வொளிபோற்றி 23

(இ - ள்)

| | |
|---|---|
| அகிலமாய் | – சர்வஜெகத்தாயும் |
| அகிலத்தினுக்கு அதிபனுய் | சர்வஜெகத்துக்கதிபதியாயும் |
| அகிலமும் ஒன்று இன்றி | ஒரு ஜெகமுமில்லாமல் |
| நிகழும் ஞானமாம் நிமலனே போற்றி | விளங்கா நின்ற ஞானமாயுள்ள மலரகிதனே நமஸ்காரம் |

| | |
|---|---|
| நீ நினைத்திடும் இடம் எல்லாம் முகமதாய் | தேவரீர் நினைக்கும் இடங்களெல் லாம் முகங்களாயிருந்தும் |
| ஒரு முகம் உனக்கு இன்றியே | ஓர் முகமும் இல்லாதவராய் |
| இருக்கும் நான் முக போற்றி | இருந்திலங்கும் சதுரானனங்களை யுடையவரே உமக்கு நமஸ்காரம் |
| திகழும் உன்னொளி யால் | விளங்குகின்ற உமது சுயம் பிரகா சத்தால் |
| திகழ்ந்து இலங்கிய சின்மய ஒளிபோற்றி | பிரகாசித்து விளங்குகின்ற ஞான ப்பிரகாசரே நமஸ்காரம். 23 |

வேத மோதிய விமலனே போற்றிவே தாந்தமெய்ப் பொருள்
போற்றி
காது மாபிற விக்கடல் கடத்துநின்கழலிணைப் புணைபோற்றி
சாத லானதும் பிறப்புமற் றிருந்துள சம்புவே கழல்போற்றி
யேது மாயினுய் போற்றியோ ரளவிலா வின்பமே கழல்
போற்றி 24

(இ – ள்)

| | |
|---|---|
| வேதம் ஓதிய விமலனே போற்றி | வேதங்களைப் பிரதிபாதித்த மல (பாவ) மற்றவனே நமஸ்காரம் |
| வேதாந்த மெய்ப் பொருள்போற்றி | வேதமுடிவான வுண்மைப் பொருளே (யுமக்கு) நமஸ்காரம் |
| காதுமா பிறவிக் கடல் கடத்தும் | வருத்துகின்ற பெரிய பிறவியாகிய கடலின் நின்றுங் கரையேற்று கின்ற |
| நின்கழல் இணைப் புணை போற்றி | உமது திருவடிகளாகிய தெப்பத் திற்கு நமஸ்காரம் |
| சாதல் ஆனதும் பிறப் பும் அற்று இருந்துள சம்புவே கழல் போற்றி | இறப்பும் பிறப்புமில்லாமல் என்றும் நித்தியமாயுள்ள கடவுளே உமது திருவடிகளுக்கு நமஸ்காரம் |
| ஏதும்ஆயினுய்போற்றி- | எல்லாம் தானானவரே நமஸ்காரம் |
| ஓர் அளவிலா இன்பமே கழல் போற்றி | எல்லையற்ற இன்பமாயிருப்பவரே உமது திருவடிகளுக்கு நமஸ்காரம் 24 |

தோத்தி ரஞ்செயப் படுபவனுகியத் தோத்திரந் தானுகி
யேத்தி நிற்பவ னுகியே யிருந்துள விறைவனே கழல்போற்றி
காத்தி ரந்தனை யெடாவகை மெய்யினைக் காணவே
நினைவோர்க்கு
நேத்தி ரங்கொடுத் தருளியங்கவர் துயர்தீர்க்கு நின்மல
போற்றி. 25

(இ - ள்)

| | |
|---|---|
| தோத்திரம் செய்யப் படுபவனுகி | துதிக்கப்படுகின்றவனுகியும் |
| அத்தோத்திரம் தான் ஆகி | அந்தத் தோத்திரமாகியும் |
| ஏத்தி நிற்பவன் ஆகியே | துதித்து நிற்கின்றவனுகவும் |
| இருந்துஉள இறைவனே கழல் போற்றி | இருக்கின்ற கடவுளே (உமது) திருவடிகளுக்கு நமஸ்காரம் |
| காத்திரம் தனை எடா வகை மெய்யினைக் காணவே | தேகத்தை இனி அடையாவண்ணம் உண்மைப் பொருளை தானுகவே தெரிசிக்கவே |
| நினைவோர்க்கு நேத் திரம் கொடுத்தருளி | சிந்தனை செய்கின்றவர்களுக்கு ஞானக்கண்ணை கொடுத்தருளி |
| அங்கு அவர்தம் | - அவ்விடத்தில் அவர்களுக்கு உற்ற தான |
| துயர் தீர்க்கும் நின்மல போற்றி | துன்பத்தைப் போக்குகின்ற நிர்மலரே தேவரீருக்கு நமஸ்காரம். 25 |

ஈசனுக் கன்ப ராஞர்க் கன்பனு மிறைவ போற்றி
நாசமற் றிருப்பாய் போற்றி நாரணர்க் கினியாய் போற்றி
ஆசையற் றவர்க்கு ஞானம் அருளுவாய் போற்றி யல்லற்
பாசமுற் றவரை வெய்ய பவத்திடு பகைவ போற்றி. 26

(இ - ள்)

| | |
|---|---|
| ஈசனுக்கு அன்பர் ஆஞர்க்கு அன்பனும் இறைவ போற்றி | சிவபெருமானுக்கு தொண்டரானவர்களுக்கு தொண்டனுகிய தேவனே நமஸ்காரம் |

| | |
|---|---|
| நாசம் அற்று இருப்பாய் போற்றி | என்றும் அழியாமல் (ஒரே சுபாவமாய்) இருக்கின்றவரே (உமக்கு) நமஸ்காரம் |
| நாரணர்க்கு இனியாய் போற்றி | விஷ்ணுவுக்கு அன்புடையவரே (உமக்கு) நமஸ்காரம் |
| ஆசை அற்றவர்க்கு ஞானம் அருள்வாய் போற்றி | நிராசையுள்ளவர்க்கு ஞானத்தை கொடுத்தருளுபவரே நமஸ்காரம் |
| அல்லல் பாசம் உற்றவரை வெய்ய பவத்திடும் பகைவ போற்றி | துன்பமாகிய (அபிமானமாகிய) கயிற்றை பொருந்தினவர்களை கொடிதான பிறவிக் கடலில் தள்ளும் சத்துருவே நமஸ்காரம் 26 |

அண்டருக் கதிப ராலும் அறிந்திடற் கரியாய் போற்றி
பண்டுடைப் புவனமெல்லாம் படைத்திடும் பரனே போற்றி
கண்டிடப் படாதே யெல்லாம் கண்டிருக் கின்றாய் போற்றி
புண்டரீ கத்தில் வாழும் புனிதனே போற்றி போற்றி. 27

(இ - ள்)

| | |
|---|---|
| அண்டருக்கு அதிபராலும் | தேவர்களுக்குத் தலைவர்களாலும் |
| அறிந்திடற்கு அறியாய் போற்றி | உணர்தற்கு அரியவனே நமஸ்காரம் |
| பண்டு உடைப் புவனம் எல்லாம் படைத்திடும் பரனே போற்றி | பழமையான உலகங்கள் அனைத்தையும் சிருஷ்டி செய்யும் ஆதிப் பொருளே நமஸ்காரம் |
| கண்டிடப்படாதே எல்லாம் கண்டு இருக்கின்றாய் போற்றி | தேவரீரை (எவ்வளவையாலும்) காண முடியாமல் யாவற்றையும் (சாக்ஷியாக) இருந்து பார்த்துக் கொண்டு இருப்பவரே நமஸ்காரம் |
| புண்டரீகத்தில் வாழும் புனிதனே போற்றி போற்றி | தாமரை மலரில் வசிக்கின்ற பரிசுத்தமானவரே உமக்கு அநேக நமஸ்காரம். 27 |

பத்தியால் இமையோ ரிங்ஙன் பங்கயத் தவனைப் போற்றி
சுத்தவே தங்க ளோதித் துணிந்த மெய்ப் பொருளை யெங்கட்
கத்தனே யருள்செய் யென்ன வவர்களா தரத்தைக் கண்டே
புத்தியாற் போதோ னுண்மைப் பொருளையே புகல லுற்றான். 28

(இ - ள்)

| | |
|---|---|
| பத்தியால் இமையோர் இங்ஙன் பங்கயத் தவனைப் போற்றி | அன்பினால் தேவர்கள் இவ்வாறு தாமரை மலரில் வசிக்கின்ற பிரஹ்ம தேவரை நமஸ்கரித்து ஏத்தி |
| சுத்த வேதங்கள் ஓதி | – பரிசுத்தமான வேதங்களை மொழிந்து |
| துணிந்த மெய்ப் பொருளை | நிச்சயித்த வுண்மைப் பொருளை |
| எங்கட்கு அத்தனே அருள் செய் என்ன | அடியேங்கட்கு ஐயனே திருவாய் மலர்ந்தருள் வாயாக என்று வினவுதலும் |
| அவர்கள் ஆதரத்தைக் கண்டு | (தன்னிடத்தில்) அத்தேவர்கள் கொண்டுள்ள சிரத்தா பத்தியைப் பார்த்து |
| போதோன் புத்தியால் உண்மைப் பொருளையே புகலல் உற்றான் | பூ மேல் வாழும் பிரஹ்மதேவர் அறிவினால் சத்தியப் பொருளையே சொல்லத் தொடங்கினார். 28 |

முதலாவது அத்தியாயம் சம்பூரணம்

சற்குருநாதன் துணை.

---

## இரண்டாவது ஐதரேய வுபநிஷதார்த்தம் உரைக்கும் அத்தியாயம்

(அவதாரிகை)

முற்கூறியவண்ணம் துதித்து வினவிய தேவர்கட்கு. பிரஹ்மாவானவர் பரம கெம்பீரமாகிய சகல வேதார்த்தங் களையும் தரிசிப்பிக்கவேண்டி பரமாத்வைத நிர்க்குண சொரூபமான வேதார்த்தம் *இலக்ஷணாவிருத்திக்கன்றி சத்தி விருத்திக்கு விஷயமாகாதென்பதைத் தோன்றக்கூறுகின்றார்.

இது கவிநாயகர் வாக்கியம்

மறைக ளோதுபொரு டன்னை யெவ்வழியி
னுலு மெக்கலையும் வல்லராம்
அறிஞ ராலுமறை யப்ப டாதறிய
வாத ரிக்குமிகு மன்பினீர்
செறித லாலதனை நான்வி ளங்கவுரை
செய்ய வொன்றுபடு சிந்தையால்
நெறிய தாகவிது கேண்மி னென்றயனு
நேர்மை யானபொருள் ஓதுவான்.

(இ-ள்)

| | |
|---|---|
| மறைகள் ஓது பொருள் தன்னை | வேதப் பிரதிபாதித வஸ்துவை |
| எக்கலையும் வல்லர் ஆம் அறிஞராலும் | அசேஷ சாஸ்திர பாண்டித்தியத் துவமுடைய வித்வான்களாலும் |
| எவ்வழியினுலும் | – எவ்வித மார்க்கங்களினுலும் |

* பதத்திற்கு அர்த்தத்தோடுளதாய சம்பந்தம் விருத்தி யெனப்படும்; அவ்விருத்தி இருவகைத்து; ஒன்று சக்தி விருத்தி மற்றொன்று இலட்சணா விருத்தி, கடபதத்தில் கேட் பவனுக்குக் கலசரூபமாகிய அர்த்தஞானத்தை உண்டு பண் ணத்தக்க சாமர்த்தியம் சத்தி விருத்தியாம். அப்படியே பட பதத்திலும் கேட்பவனுக்கு வஸ்திர ரூபமாகிய அர்த்த ஞானத்தை உண்டு பண்ணத்தக்க சாமர்த்தியம் சக்தி விருத்தியாம் இவ்வாறே சர்வ பதார்த்தங்களிலும் காண்க.

| | |
|---|---|
| அறையப்படாது | (ஜாதி குணம் கிரியை சம்பந்தமின் றியதால் வாக்கினுல் நேரே) கூறற்கியலாது |
| நீர் அறிய ஆதரிக்கும் மிகும் அன்பில் செறிதலால் | நீங்கள் தெரியவேண்டு மென்னும் விருப்பமிக்க பிரீதியோடு என்னை அடைந்தமையின் |
| நான் விளங்க உரை செய்ய | நான் உங்கட்கு விளங்குமாறு (இலக்ஷணவிருத்தியால் சுபானு பவமாக வுபதேசிக்கின்றேன் |
| இது ஒன்றுபடு சிந்தையால் நெறியதாக | இவ்வுபதேசத்தை ஏகாக்கிர சித்தத்தோடு சிஷ்டா சாரத்துடன் |
| கேள்மின் என்று | – கேட்கக்கடவீர்களென்று |
| அயனும் நேர்மையான பொருள் ஓதுவான். | பிரஹ்மாவானவர் சுருதிப் பிரதி பாதக வஸ்துவை கூறத் தொடங்கினுர். |

---

சக்தி ஆற்றல் என்பன ஒருபொருள் சொற்கள். உதாரணம் அக்னியில் தன்னைச் சேர்ந்த வஸ்துக்களை தகிக்கும்படியான சக்தி எப்படியுண்டோ அப்படியே பதத்தில் சுரோத்திரத்தோடு சேர்ந்த வஸ்துவின் ஞானத்தை உண்டுபண்ணத்தக்க சாமர்த்தியமுண்டு; அதுவே சக்தியாம். இலட்சணையின் ஞானத்தில் சக்கிய ஞானம் உபயோகமாம். எப்பதத்தில் எவ்வர்த்த சக்தியுண்டோ! அப்பதத்தின் அவ்வர்த்தம் சக்கியமாம். அதையே வாச்சியமெனவும் கூறுவர். வாச்சியார்த்தத்தை அறிவிக்கும் பதத்தை வாசகமென்பர். சக்கிய சம்பந்தம் இலட்சணையின் சொரூபமாம். எவ்வர்த்தத்தின் ஞானம் பத சக்தியினுலுண்டாகாமல் இலட்சணையால் உண்டாகுமோ! அது பதத்தினுடைய இலட்சியார்த்தமெனப்படும். விட்டலட்சணை, விடாதலட்சணை, விட்டுவிடாத லட்சணை என மூவகையாம். அதில் விட்டு விடாத லட்சணையே சீவப் பிரஹ்மைக்கிய ஞானத்தில் உபயோகமாம். இதை விசேஷமாய் அறிய விரும்புவோர் 12ஆம் அத்தியாயம் 4ஆம் பாட்டின் உரையிலும், கைவல்லிய நவநீதம் 79, 80, 81ஆம் பாடல்களில் பொன்னம்பலசுவாமிகள் உரையிலும், வேதாந்த சூடாமணியிலும், விசாரசாகரம் ஆறும் தரங்கத்திலும், விசாரசந்திரோதயம் பஞ்சதசி தத்துவானு சந்தானம் முதலிய நூல்களில் காணலாம்.

(அவதாரிகை)

[இருக்குவேதம் முந்தினது ஆதலால் அதனது ஐதரேய உபநிஷத்தில் பிரதி பாதியா நின்ற அர்த்தத்தைக் கூற இச்சை நண்ணி "இது மார்க்கம்" என்றது முதலான சகுண பாகத்திற்கு சித்தவொருமையாதி ஜனகத் துவாரமாய் நிர்க்குணபாக சேஷத்துவ முண்டாதலால் அனன்ய சேஷமாய் சுதந்தரமாய்ப் பலத்தையுடையதானதாய் பிரஹ்மான்ம வைக்கிய விக்ஞான ஜெனகமாகிய "இந்த ஆன்மா ஒருவனே சிருஷ்டிக்கு முன்னிருந்தான்" என்றது முதலான நிர்க்குண பாகத்தின் அர்த்தத்தையே சங்கிரகிக்கின்ருர்.]

வேறு

சின்மாத் திரமா யுள்ளவெறுஞ் சிவனே திகழ்வா னியாதுக்கு
முன்மாத் திரமு வேறில்லை முற்று மவனே மொழிவுற்ற
நன்மாத் திரமா யான்மாவென் றுரைக்கு நாமத் தினையுடையான்
தன்மாத் திரமே யாகியவத் தன்மையான சங்கரன்ருன். 2

(இ - ள்)

| | |
|---|---|
| யாதுக்கு முன் | ஜெகத்து உற்பத்திக்கு முன்னர் (சிவனே) |
| சின்மாத்திரம் ஆய் உள்ள | சேதனமாத்திரமாயுள்ள (சுத்தனுய்) |
| வெறும் சிவனே திகழ்வான் | ஏகனுய், அத்வைதனுய் சதா விளங்கா நிற்பன் |
| மாத்திரமும் வேறு இல்லை | கிஞ்சிற்றும் அவனுக்குப் பின்னமாக இல்லை |
| மொழிவுற்ற முற்றும் அவனே | அபாவப் பிரதியோகியாக கூறு நின்ற சர்வபதார்த்தங்களும் அப் பரமாத்மாவேயாம் |
| நன்மாத்திரமாய் ஆன்மா என்று | சச்சிதானந்த மாத்திரமாய் தனது சொரூபமென்று |
| உரைக்கும் நாமத்தினை உடையான் | பிரதிபாதிக்கத்தக்க சமிக்ஞையை உடைய அவனே |
| தன்மாத்திரமே ஆகி | தன் வடிவமாயிருக்கின்ற |

| | |
|---|---|
| அத்தன்மை ஆன சங்கரன் (தான் அசை) | (சச்சிதானந்தாதி விதிமுகமாகவும் அகண்ட மசலமாதி நிஷேகமுகமாகவும் கூறும்) அந்த இலக்கணங்களையுடைய பரசிவனும். 2 |

(அவதாரிகை)

[இவ்வாறு அசங்க உதாசீனனும் சொப்பிரதிஷ்ட (தன்னிலேயுள்ளவ)னும் அத்விதீயனும் அசரீரனுன ஆன்மாவுக்கு சிருஷ்டவ்ய (ஆக்கப்படு பொருளின்) பரியாலோசனை ரூபமான ஈக்ஷணமானது எங்ஙனம் கூடும் என்று சங்கித்துச் சொல்லுகின்ருர்.]

அந்தத்துள தன்சத்தியை யடையுற்று தாமிச்
செந்துக்கள்செய் கருமந்திகழ் காலம்பரு வஞ்செய்
தெந்தப்பொருள் களுமாக்குவ னெனவேயிறை யுன்னுப்
பந்தப்பட முன்போற்பல வுலகங்கள்ப டைத்தான். 3

(இ - ள்)

| | |
|---|---|
| இச்செந்துக்கள் செய் கருமம் அந்தத்து | பூர்வ கற்பத்தில் சீவர்களால் செய்துள்ள சஞ்சித கர்மமானது பிரளய காலத்தில் |
| தன்னுள சத்தியை அடைவுற்று உளதாம் | தனது காரணரூப மாயையோடு பரசிவ சொரூபத்தில் வாசனு சேஷங்களாக லயித்து கால வசத்தினுல் தத்தம் பலத்தைக் கொடுப்பதே முக்கிய லக்ஷணமாகவுள்ள ஓர் அதிசயமடைகின்ற அதனுலும் |
| திகழ்காலம் பருவம் செய்து | விளங்காநின்ற காலத்தால் செய்யப்பட்ட பரிபாகத்தினுலும் |
| இறை | பரமேஸ்வரர் திரிகுணுத் மிகையான தனது மாயையின் ரஜோ தமோ சம்பந்தமற்ற விசுத்த சத்துவப் பிரதான உபாதியால் |
| எந்தப் பொருள்களும் ஆக்குவன்என உன்னு | பூர்வகற்ப துல்லியமாகச் சர்வ பதார்த்தங்களும் ஆவோம் என்று கருதி |

| | |
|---|---|
| பந்தப்பட முன்போல் பல உலகங்கள் படைத்தான் | பந்தமுத்தி விவஸ்தையுண்டாம் வண்ணம் பூர்வம்போல நானாவித (அண்டபிண்ட சராசர) உலகங்களை சிருஷ்டித்தார். 3 |

(அவதாரிகை)

[கால் கட்டைவிரல்களாலும், பிரஹ்மரந்திரத்தாலும் சரீரத்தை யடைந்தானென்ற சுருதி பலத்தால் அவ்விதப் பிரவேசமுடைய கிரியா சக்தி, ஞானசக்திகளையுடைய பிரஹ்மங்களுள் யார் ஆன்மாவென்று முமுக்ஷுக்களுக்குண்டாகும் சம்சயம் போலவே வாதிகளின் விவாதத்திற்கும் அஃதே காரணமாவதால் அவ்விவாதத்தை உதாகரித்துக் கூறுகிறார்.]

பரமன்செய லறியாதுப டைத்தானுல கெல்லாம்
அரனென்பவ ரரியென்பவ ரயனென்பவர் சிலரிந்
திரனென்பவன் முதற்றேவர்கள் செயலென்பவர் சடமா
மருவுங்குண வடிவென்பவ ரணுவென்பவர் மயலால். 4

(இ - ள்)

| | |
|---|---|
| சிலர் மயலால் | மதவாதிகளில் சிலபேர்கள் பிராந்தியால் |
| பரமன் செயல் அறியாது | அசிந்திய பரமேஸ்வரரது *(கர்த்துருத்வம் அகர்த்துருவத்வம் அன்யதாகர்த்துத்துவமான) வைபவத் திருவிளையாடலின் இயல்பை உணராது |
| உலகு எல்லாம் படைத்தான் அரன் என்பர் | அகில லோகங்களையும் சிருஷ்டித்தவன் உருத்திரனென்று கூறுவார்கள் |
| (சிலர்) அரி என்பவர் | - சிலபேர்கள் விஷ்ணுவென்றும் |
| (சிலர்) அயன் என்பவர் | - சிலபேர்கள் பிரஹ்மாவென்றும் |
| (சிலர்) இந்திரன்முதல் தேவர்கள் செயல் என்பவர் | கர்மகாண்டிகளான சிலபேர்கள் தேவேந்திரன் முதலிய தேவர்கள் சிருஷ்டித்தனரென்றும் |

* ஒன்றைச் செய்தல், செய்யாதிருத்தல், வேறுவிதமாகச் செய்தல்.

| | |
|---|---|
| (சிலர்) சடமாமருவும் குண வடிவு என்பவர் | (சாங்கியரான சிலபேர்கள்) சடமும், மூடமுமாகப் பொருந்திய திரிகுண சாமியாரூபமான பிரதானமென்றும் |
| சிலர் அணுவு என்பர் | (தார்க்கீகரான சிலபேர்கள்) பரமாணுக்களென்று கூறுவர். 4 |

வானிலா மோசை யென்பார் வந்தொரு கணத்திற் ருேன்றி
ஆனியாம் புந்தியென்பார் அடையவுங் கெட்டு நின்ற
சூனியம் என்பார் பூதத் தொழிலெனச் சொல்லா நிற்பர்
ஆனவா றொருவ ராலன் றடையவு மியல்பே யென்பார். 5

(இ - ள்)

| | |
|---|---|
| வானில் ஆம் ஓசை என்பார் | (சப்தப்பிரஹ்மமே அருத்தரூப பிரபஞ்சமாக விவர்த்தித்தலால் வையாகரணிகள்) ஆகாயத்தின் காரியமான சப்தம் பிரஹ்மமென்பர். |
| வந்தொரு கணத்தில் தோன்றி ஆனி ஆம் புந்தி என்பார் | (விஞ்ஞானவாதிகள்) ஒரு கணத்திற்ருேன்றி (ஒரு கணத்திலிருந்து) ஒரு கணத்தில் நாசமாகும் திரிக்ஷண ஸ்தாயியா (இருப்பதா)கிய புத்தியென்றும் கூறுவர் |
| அடையவும் கெட்டு நின்ற சூனியம் என்பார் | (சூனியவாதிகள்) சர்வலக்ஷணங் களுமிறந்து நின்ற சூனியமென்றும் கூறுவர் |
| பூதத் தொழில் எனச் சொல்லா நிற்பர் | (லோகாயிதர்) சதுர்ப்பூதச் சேர்க்கையே காரணமென்பார்கள் |
| ஒருவரால் ஆனவாறு அன்று அடையவும் இயல்பே என்பார் | (சுபாவவாதிகள்) முற்கூறிய சடசேதனங்களுள் ஒன்ருலும் உளதானது அன்றென்றும் யாவும் சுபாவமே என்றும் கூறுவார்கள். 5 |

(அவதாரிகை)

[இப்படி சுருதி ஸ்மிருதிகளுக்கு விரோதமாகையால் சாங்கியாதி சாஸ்திரங்கள் அப்பிரமாணமாயுள்ள அளவில் அவைகளில் தீர்த்தக்கார (பரிசுத்த)ர்களுக்கு எப்படி பிரவிருத்தி வரலாம் என்ருசங்கித்துச் சமாதானங் கூறுகின்ருர்.

தத்தமா லான பெத்தவா தியர்தாந்
தங்களிற் றுங்கடர்க் கங்கள்
கத்திடா நிற்கும் பரிசெலாஞ் சுருதி
மிருதிகள் கருதிய தழிக்கும்
சுத்தமா விருத்த மாகுமென் றேயென்
றுணிவுதொல் பிறவியிற் சுழல்வார்
சித்திமா னதுபோ யிவற்றிலே காதல்
செய்யுமுன் செய்ததீ வினையால். 6

(இ - ள்)

| | |
|---|---|
| பெத்தவாதியர்தாம் | (பிராந்தர்களான) பந்தமுற்ற வாதியர்கள் |
| தத்தம்மால் ஆன | – தங்கள் தங்களாலியன்ற மட்டும் |
| தர்க்கங்கள் தங்களில் தாங்கள் கத்திடா நிற்கும் பரிசு எலாம் | யுக்திகளால் தங்களுக்குள்ளே தாங்கள் (கரடிகள் போல்) கதறு கின்ற தன்மையானது முற்றுமே. |
| சுருதி மிருதிகள் கருதியது அழிக்கும் | பரமப்பிரமாணமான வேதஸ் மிருதிகளின் கருத்தை யொழிப் பதுவாம் (ஆதலால்) |
| சுத்தமா விருத்தம் ஆகும் என்றே என் துணிவு | அத்தியந்தம் விரோதமா மென்பதே எனது நிச்சயமாகும் |
| முன் செய்த தீவினை யால் தொல் பிறவி யில் சுழல்வார் | பூர்வம் செய்த பாவகர்மத்தின் மிகுதிப்பாட்டினால் அநாதியாகவே பிறவியிலுழல்பவர்களது |
| சித்தமானது போய் இ வற்றிலே காதல் செய்யும் | மனமானது சென்று இம்மதங்களை அவலம்பிக்கும் (விரும்பி பற்றும்) |

( அவதாரிகை )

[வேத விருத்தமான மதங்களில் புகுந்து அவர்களும் காலாந்திரத்தில் வேதமார்க்கத்தைச் சார்ந்து வீட்டை யடைவர்களெனக் கூறுகின்றார் ]

காதலாற் றந்தங் கடவுள ரருளாற்
காலபா கத்தினு லறத்தால்
போதரா தலினுல் வேதவா தத்தைப்
பொருந்துவர் புகன்றவவ் வடைவே
வேதவா தத்தை மேவுநல் வினையால்
விருப்பினு லன்றிமே வினரும்
சாதலா னதுவும் பிறத்தலு மில்லாத்
தற்பதந் தன்னையே சார்வார். 7

(இ - ள்)

| | |
|---|---|
| காதலால் | உண்மையை யடைய வேண்டுமென்னும் விருப்பத்தினுலும் |
| தத்தம் கடவுளர் அருளால் | தங்கள் தங்களுடைய உபாசனுமூர்த்தியின் அனுக்கிரகத்தினுலும் |
| காலபாகத்தினுல் | – காலபரிபாகத்தினுலும் |
| அறத்தால் | – புண்ணிய புஞ்ச பரிகாகத்தினுலும் |
| பூதர் ஆதலினுல் | – பரிசுத்தமடைந்தவர்களாதலால் |
| வேத வாதத்தை பொருந்துவர் | வைதீக மார்க்கத்தையடைவார்கள். 7 |

(வி - ரை)

வேத மார்க்கத்தை யடைந்தவர்களாகிய அவர்கள் தமது சாஸ்திரத்திற்கும் வேதத்திற்கும் உள்ள பலாபலன்களை விசாரித்து புருஷ புத்தியினுல் உண்டானதாதலால் தமது சாஸ்திரத்திற்குத் துற்பலத்தன்மையும் அபௌருஷயத் தன்மையால் வேதத்திற்கு நிற்தோஷப் பிரமாணத் தன்மையும் நிச்சயித்து அதன் பரவசர்களாய்த் தமது மார்க்கத்தை பரித்தியாகஞ் செய்து வேத மார்க்கத்தையே கேவலம் ஆசரிக்கின்ருர்கள்.

| | |
|---|---|
| புகன்ற அவ்வடைவே | – முற்கூறிய அந்தக்கிரமமாகவே |
| வேதவாதத்தை மேவும் நல்வினையால் | வைதிக மார்க்கத்தைப் பொருந்தா நின்ற சற்கருமத்தினுலும் |

| | |
|---|---|
| விருப்பினல் அங்கு மேவினரும் | விசுவாசத்தினலும் அவ்வேத மார்க்கத்தை அடைந்தவர்களாகிய அவர்களும் |
| சாதல் ஆனதுவும் பிறத்தலும் இல்லாத் தத்பதம் தன்னேயே சார்வார் | ஜெனன மரணமற்ற தற்பதார்த்த இலக்ஷய ரூபமான பிரஹ்மத்தையே அடைவார்கள். 7 |

(அவதாரிகை)

[வேத நெறியை விடுத்து பிற நெறியில் செல்பவரை யிகழ்ந்து கூறுகின்ருர்]

வான்கரு தியமறை வழியை விட்டுமேற்
ருன்கரு துதல்சது ரன்று தன்கையிற்
றேன்கமழ் திரளேயைச் சிந்திச் சந்தியாற்
கூன்கையில் விழுந்துளி கொண்ட தன்மையே. 8

(இ-ள்)

| | |
|---|---|
| வான் கருதிய | (வியாசவசிட்டாதி ஆன்ருேர்களால் சிரேஷ்டமாகக் கருதாநின்ற |
| மறை வழியைவிட்டு | – வேத மார்க்கத்தை விடுத்து |
| மேல்தான் கருதல் | தாந்திரிக மார்க்கங்களே மேலானதாகக் கருதுதல் |
| சதுர் அன்று | – அறிவாளிகளுக்கழகன்று |

[அங்ஙனம் கருதல் எதுபோலுமெனில்]

| | |
|---|---|
| தன் கையில் தேன் கமழ்திரளேயை சிந்தி | ஒருவன் தன் கையிலுள்ள வாசனே பரிமளியாநின்ற பாற்றிரளேயைக் கீழேசிந்தி |
| சந்தியால் கூன் கையில் விழுந்துளி கொண்ட தன்மை | இடைவழியே அது வடிந்த எட்டப்படாத முழங்கையை நக்குதலுக்குச் சமானமாம். (தான். ஏ. அசை) |

(9 வேறு)

பொருள்கொண்ட மறைநின்று புகல்கின்ற துணரா
மருள்கொண்ட சமயங்கள் மதிகொண்டு கதியா
அருள்கொண்ட பரவின்ப மடைகின்ற வவர்பேர்
இருள்கொண்டு பொருள்கொண்ட வரன்றி யிவரார். 9

| | |
|---|---|
| பொருள் கொண்ட மறை நின்று புகல் கின்றது உணரா | சதுர்வித புருஷார்த்தமாகிய உண்மைப் பொருளை தன்ன கத்தே கொண்ட வேதமானது ஆராய்ந்து பிரதி பாதிக்கத்தக்க பொருளை அறியாமலே |
| மருள்கொண்ட சமயங்கள் கதியா மதி கொண்டு | மயக்கம்பொருந்திய தாந்திரீக சமய மார்க்கர்களால் வந்த புத்தியை இதுவே சாதனமெனக்கொண்டு |
| அருள் கொண்ட பர இன்பம் அடைகின்ற அவர் | பரஞானத்தைச் சாதனமாகப் பெற்று அதனால் அடையத்தக்க பரமுத்தியை அடைய இச்சிப்பவர் எவர்போலும் எனின் |
| பேர் இருள் கொண்டு பொருள் கொண்ட அவர்போல் அன்றி இவர் ஆர் | (பிரகாசத்தைச் சாதனமாகப் பெற்று அறியத்தக்க) பொருளை அந்தகாரத்தைச் சாதனமாகப் பெற்று அறிய (இச்சிக்கின்ற) அவரை யொப்பானவரன்றி இவரெத்தன்மையர். 9 |

(அவதாரிகை)

[வேதப் பிரதிபாதக அர்த்தமே சத்தியம் மற்றை சமய நூல் கூறும் பொருள் அசத்தியமெனக் கூறுகின்றார்.]

வேதமோ தியதே மெய்ப்பொருள் மற்றைப்
பொருளெலா மித்தையே வேதம்
ஓதமே வுற்ற பொருளிரு வகையா
மதனிலொன் றென்றுமுண் மையதாய்ப்
போதவா னந்த மாகிய சிவனும்
பொருளது மற்றதப் பொருளில்
ஏதமே வாமற் கற்பித மாகும்
மற்றத னியல்பையு மிசைப்பாம். 10

(இ – ள்)

| | |
|---|---|
| வேதம் ஓதியதே மெய்ப் பொருள் | வேதப்பிரதிபாதகமான அர்த்தமே சத்தியமாம். |
| மற்றைப் பொருள் எலாம் மித்தையே | ஏனைய சமய நூல்கள் கூறும் பொருள்கள் அசத்தியமே யாம் |

(வி – ரை)

வேதப் பிரதி பாதக அர்த்தமே சத்தியமென்னில் *கிரியாகாரகாதி பேதங்களால் பின்னமாகிய ஜெகத்தும் ஆன்மாவைப் போலவே வேதப் பிரதி பாதக அர்த்தமாகையால் சத்தியமாகலாமே எனச் சங்கித்து அதற்கு வியாவகாரிக சத்தியத்துவம் பிரதி பாதிக்கும்பொருட்டு வேதார்த்தமிரண்டு விதமெனக் கூறுகின்ருர்.

| | |
|---|---|
| வேதம் ஓதமேவுற்ற பொருள் இருவகையாம் | வேதமானது ஞானகாண்ட பரமாகவும் கர்மகாண்ட பரமாகவும் பிரதி பாதியா நின்ற அர்த்தமானது இரண்டு விதமாம் |
| அதனில் ஒன்று | – அவ்விரண்டினுள் ஒன்று |
| என்றும் உண்மை யதாய்ப் போதவானந்தமாகிய சிவனும் பொருள் அது | ஞானகாண்டப் பிரதிபாத்தியனும் சத்திய ஞான லக்ஷணமுடையவனும் உள்ள பரசிவனுகிய பரமார்த்தவஸ்துவாம். |
| மற்றது அப்பொருளில் ஏதம் மேவாமல் | ஏனையவொன்று அப் பரமார்த்த வஸ்துவில் தோஷத்தை யுண்டு பண்ணுமல் |
| கற்பிதம் ஆகும் | கர்மகாண்டப் பிரதிபாத்ய சுவர்க்க அபூர்வதேவதாதி லக்ஷணமுடைய அத்தியஸ்தமாகிய செகத்தாம் |
| அதன் இயல்பையும் இசைப்பாம் | அக்கற்பித ஜெகத்தின் தன்மையையும் கூறுவாம். மற்று – அசை 10 |

(அவதாரிகை)

[இங்ஙனமாயின் கர்மகாண்டம் கற்பிததுவித விஷயமானுல் வேதார்த்தமனைத்தும் சத்தியமென்னும் நியமம் சித்தியாது என்று ஆசங்கித்து அதற்குச் சமாதானங் கூறுகின்ருர்]

சொல்லுரு நின்ற கற்பிதப் பொருளில்
சொல்லள வுள்ளதா யுண்மைக்
கில்லையா யிருக்குஞ் சிலபொருள் சொலவு
மில்லையாஞ் சிலபொரு ளவைதான்

* பகவத்கீதை 18ம் அத்தியாயம் 13ம் சுலோகார்த்தம் காண்க.

எல்லைதீர் வானு திகளுஞ்சுத் திகையி
லிரசதா திகளுமா முன்னைத்
தொல்லையாம் பொருளுங் கற்பிதத் துண்மைப்
பொருளையுஞ் சொல்லுநற் சுருதி. 11

(இ - ள்)

| | |
|---|---|
| சொல்லுரு நின்ற கற்பிதப் பொருளில் | கர்மகாண்டப் பிரதி பாத்தியமான அத்தியஸ்தப் பதார்த்தங்களுள் |
| சிலபொருள் சொல் லளவு உள்ளதாய் | சில பதார்த்தங்கள் வியாவகாரிக சத்தியமாயும் |
| உண்மைக்கு இல்லை யாய் இருக்கும் | பாரமார்த்தத்தில் அசத்தியமாயும் இருக்கும். |
| சில பொருள் சொல வும் இல்லையாம் | சில வஸ்துக்கள் வியாவகாரத் தினும் அசத்தியமாம் |
| அவைதான் | – அவ்வஸ்துக்கள் யாதோவென்னில் |
| எல்லைதீர் வானுதி களும் சுத்திகையில் இரசதாதிகளும் ஆம் | அளவற்ற ஆகாச முதலியனவும் இப்பியில் காணப்படும் வெள்ளி யாதிகளுமாம். |

[செகத்தை வியாவகாரிக சத்தியமாயங்கீகரித்தால் வேதார்த்தத்துக்கு சத்யத்வ ஹானியில்லை யென்று கூறுகின்றார்]

| | |
|---|---|
| முன்னை நல் சுருதி | அநாதியாயும் உத்தமமாயுமுள்ள வேதமானது |
| தொல்லையாம் பொருளும் | புராதன சிற்கன வஸ்துவையும் |
| கற்பிதத்து உண்மைப் பொருளையும் சொல்லும் | அத்தியஸ்த சத்திய வஸ்துவையும் கூறு நிற்கும் (அன்னிய மார்க்கங்கள் இவ்வாறு கூறுது). |

11

(அவதாரிகை)

[ஆனுல் அன்னிய மார்க்கங்களால் சொல்லப்படுவ தென்னவெனில் அதைக் கூறுகின்றார்.]

கனவிற் கற்பிதப் பொருள்போல் வாதகலக் கங்கள்
நனவிற் கற்பிதப் பொருளை நவிலா ரினியச்சிற்
கனவத் துவிதத் தினையென் கண்ணுற் றவர்கண்ணால்
சொனவத் தகவும் மெய்யே மெய்யிற் றோன்றாதே. 12

(இ – ள்)

| | |
|---|---|
| வாதகலக்கங்கள் | மயக்கமூற்ற சுவகத வைசேஷிகாதி வாதிகள் |
| கனவில் கற்பிதப் பொருள்போல் | சொப்பனாவஸ்தையில் தோற்றா நின்ற தோஷசகித அவித்யா கற்பித பதார்த்தங்களைப்போல் |
| நனவில் கற்பிதப் பொருளை நவிலார் | சாக்கிராவத்தையிற் றோற்றாநின்ற மாயா கற்பித பதார்த்தங்களை கூறமாட்டார்கள். |

(வி – ரை) மற்றெங்ஙனங் கூறுவாரெனின் அவ்விரு வகை வாதியருள் சுவகதர் (ஜைனர்) சொப்பனாவஸ்தையில் அவித்யா கற்பிதங்களாகிய சத்தியார்த்த சாதிர்சமான சாக்கிர பதார்த்தங்களையே கேவலம் பிரதிபாதியா நிற்பர். அப்படியே வைசேஷிகாதியர் சாக்கிராவஸ்தையின்கண் வியாவகாரிக சத்தியமாய் மாயா கற்பிதங்களாகிய யாதொரு வேதாந்தி அபிமதார்த்தங்களுண்டோ அவற்றிற்குச் சமான மாய் திரவிய குணகர்ம லக்ஷணங்களான அர்த்தங்களையே கேவலம் பிரதிபாதியா நிற்பர் ஆதலால்

| | |
|---|---|
| இனி அச்சிற்கன | – பின்னர் அந்தச் சிதேக ரசமான |
| அத்து விதத்தினை | – அத்வைத பிரஹ்ம வஸ்துவை |
| என் கண்ணுற்றார் | அவர்கள் எவ்வாறு அடைந்தவராவர். (அடைவேம் என்னும் வார்த்தைக் கிடமின்று) |
| சொன அத்தகவும் | – அம்மதவாதியர் கூறிய கூற்றும் |
| கண்ணால் மெய்யே | வியாவகாரிக திருஷ்டியில் சத்தியமே |
| மெய்யில் தோன்றாதே | பாரமார்த்த திருஷ்டியில் அவ்வாறு தோன்றாது (மற்றோ அசத்தியமேயாம்) 12 |

(அவதாரிகை)

வியாவகாரிக சத்தியமே பராமார்த்திக சத்தியமல்லவாயின் ஒரு வஸ்துவே சத்தியமாயும், அசத்தியமாயும் எங்ஙனம் சம்பவிக்கும் என்று சங்கித்து திருஷ்டி பேதத்தால் கூடுமென்று உபதேசிக்கின்ருர்.]

போதக் கண்ணிற் பூதம் பொய்யே மெய்யேயாம்
பேதக் கடகுட் டியமா நிகழ்விற் பேதந்தான்
ஓதப் படுசுத் திகைவெள் ளியின்மெய் யுணர்காலம்
சேதப் படுமக் கனவிற் பெரிதும் திடமுண்டே. 13

(இ - ள்)

| | |
|---|---|
| பூதம் போதக் கண்ணில் பொய்யே | ஆகாய முதலிய பஞ்சபூதங்கள் தனது காரணமான பரமார்த்த திருஷ்டியால் அசத்தியமே |
| பேதக் கடகுட்டியமாம் நிகழ்வில் மெய்யேயாம் | தமது காரியமான குடம், சுவர் முதலிய திருஷ்டியால் சத்தியமே |
| பேதம் (கடாதிகள்) | (தமது காரணமான வியோமாதி பூதங்களின் திருஷ்டியால்) கடம் குட்டியாதி பேதங்கள் (அசத்திய மாயினும்) |
| ஓதப்படு சுத்திகை வெள்ளியில் மெய் | (பிரமாதாவிருக்கும் காலத்திலேயே வாதிக்கப்படுவனவாகக்)கூரு நின்ற சுத்திரஜதாதி திருஷ்டியில் சத்தியமேயாம் |
| (நனவு ஆன்மாவை) உணர்காலம் (பொய்யாயினும்) | சாக்கிராவஸ்தையானது தனது காரணரூபமான ஆத்மதிருஷ்டியில் அசத்தியமாயினும் |
| சேதப்படும் அக்கனவில் பெரிதும் திடம் உண்டு | பிரமாதாவுள்ளளவில் வாதிக்கப் படும் சொப்பன திருஷ்டியில் சத்தியமாம் (தான். ஓ. அசை.) 13 |

(அவதாரிகை)

இந்தப்படி பாரமார்த்த திருஷ்டியால் அசத்தியங்களாயுள்ளவைகளில் சத்தியபுத்தியுடைய மார்க்கங்கள் பிராந்தங்கள். ஆனுல் மித்தியாபூத (வடிவ)ங்களான அவைகள் பரம்

பரையாகத்தான் எப்படியாகுமென்னில் வேத மார்க்கத்தைப் பெறும் வாயிலாய் பரமார்த்த சத்திய சிற்கன பரமேஸ்வர ரூபப் பேற்றின் காரணமாமென்று சங்கித்து சில பொருள் சொப்பனத்திற் கண்டது சாக்கிரத்தில் சத்தியமான பொருளையடைவிப்பது போலாகுமென திருஷ்டாந்தத்தால் கூறுகிறுர். ]

கனவிற் கண்டபொரு ணனவிற் காணும் பொருளைக் காட்டலால்
நினையிற் சமயநெறிவேத நெறிக்கு நிமித்தமா நினைமின்
வினவிற் சமய நெறிவிட்டு மேலாம் வேதநெறி நின்றேன்
பினையச் சமயத் தவன்குறுகிற் பிராயச் சித்தஞ்
செயவேண்டும். 14

(இ – ள்)

| | |
|---|---|
| கனவில் கண்ட பொருள் நனவில் காணும் பொருளைக் காட்டலால் | சொப்பனத்தில் கண்ட வஸ்துவானது (சில) சாக்கிர பதார்த்தத்தை தெரிவிப்பதுபோல |
| நினையில் சமய நெறி | விசாரிக்குமிடத்து சமய மார்க்கங் கள் பிராந்தர்களால் செய்யப் பட்டாலும் |
| வேத நெறிக்கு நிமித்தமா நினைமின் | வேதமார்க்கத்தை யடைவிப்பதற்கு காரணமாகுமென நினையுங்கள் (ஆயினும்) |
| வினவில் சமய நெறி விட்டு | குறிக்கோளுண்டோவெனக் கேட்பீரேல் அந்தச் சமய மார்க்கத்தை விட்டு |
| மேல் ஆம் வேத நெறி நின்றேன் | சர்வோத்கிருஷ்டமான வேத மார்க்கத்தில் வந்தவர்கள் |
| பினை அச்சமயத்து அவன் குறுகில் | பின்னர் அந்தச் சமயத்தவர்களை அவன் கிட்டில் திரும்ப வைதிக மார்க்கத்துக்கு வந்தால் |
| பிராயச் சித்தம் செயல் வேண்டும் | வேதத்திற் கூறிய) பிராயச்சித்தம் செய்து வேத மார்க்கத்தில் சேரவேண்டும். 14 |

(அவதாரிகை)

புற மதத்தர்களை பாஷாண்டிகளென்றும் அவர்களுடைய சம்பந்தம் முதலியன கூடாதென்றும் இதுமுதல் எட்டு செய்யுள்களால் கூறுகின்றார்.

தண்ணிய சமயிகள் தங்கள் பந்தியில்
உண்ணுத லவர்களோ டுறவு பண்ணுதல்
புண்ணிய மறிந்திடப் புகுதல் செய்திடில்
பண்ணுக சாந்திரா யணம்ப கர்ந்தவா. 15

(இ - ள்)

| | |
|---|---|
| தண்ணிய சமயிகள் தங்கள் பந்தியில் உண்ணுதல் | (வேத மார்க்கத்திலுள்ளவர்கள்) தாழ்ந்த சமயிகள் பந்தியில் (மறந்தேனும்) புசித்தாலும் |
| அவர்களோடு உறவு பண்ணுதல் | அச்சமயத்தவர்களோடு சினேகம் செய்தலும் |
| புண்ணியம் அறிந்திடப் புகுதல் செய்திடில் | இன்னும் புண்ணியமென்று கருதி அவர்களிடத்தில் தர்மாதர்மங்கள் அத்தியயனம் விவேக ஞானம் முதலியவைகளை ஒருவன் தெரிய மோகத்தால் பிரவேசித்தாலும் |
| பண்ணுக சாந்திராயணம் பகர்ந்தவா | அத்தோஷ நிவர்த்திக்காகச் சாந்திராயண விரதம் வேதத்திற் கூறியபடி செய்யவேண்டும். |

15

வேதஞ்சொன படியொழிய வேறுஞ்சில கலைகளினை
யோதுந்திர மருவிமறை யோதுஞ்சிவ னிருகமலப்
பாதந்தொழ நினைவிலர்கள் பாடண்டிக ளெனவறிக
தீதொன்றிய வவர்களொடு சேருங்கலர் களுமவர்கள். 16

(இ - ள்)

| | |
|---|---|
| வேதம் சொனபடி ஒழிய வேறுசில கலைகளினை | (எவர்கள்) வேதத்திற்கூறிய பிரகாரமன்றி அதற்கு பின்னமாக சில சாஸ்திரங்களை |
| ஓதும் திரம்மருவி | அப்பியாசித்து அதில் வல்லமையடைந்து |

| | |
|---|---|
| மறை ஓதும் சிவன் இருகமலப் பாதம் தொழ நினைவிலர்கள் | வேதப்பிரதி பாத்தியனுன பரமேஸ்வானது உபய சரணுர விந்தங்களை வணங்க வேண்டுமென்று மனதிலும்கூட நினைக்காதவர்கள் |
| பாடண்டிகள் என அறிக | பாஷாண்டிகள் எனவே அறிக |
| தீது ஒன்றிய அவர்களொடு சேரும் கலர்களும் அவர்கள் | வேத நிந்தகமான புறமதப் பிரவேசர்களாகிய அப்பாஷாண்டர்களோடு சேருகின்ற பாவிகளும் அப்பாஷாண்டிகளே. 16. |

மையறு வேத மார்க்கம் மறந்துபாடண்ட மார்க்கக்
கையரான் மயக்கப் பட்டுக் கலியுகந் தன்னி லுள்ளோர்
மெய்யுணர் வனந்தா னந்த மேனியாஞ் சிவனைப் பூசை
செய்யவா தரியார் செய்வார் தம்மையுஞ் செய்யவொட்டார் 17

(இ - ள்)

| | |
|---|---|
| கலியுகம்தன்னில் உள்ளோர் மையறு வேதமார்க்கம் மறந்து | கலியுகத்திலுள்ள ஜனங்கள் சர்வ மயக்கங்களையும் நிவர்த்திக்கும் வேதமார்க்கத்தை யுபேக்ஷித்து |
| பாடண்டமார்க்கக்கையரால் மயக்கப்பட்டு | பாஷாண்டி மார்க்கத்தில் கைதேர்ந்தவர்களால் மோகிக்கப்பட்டு |
| மெய்யுணர்வு அனந்தானந்த மேனியாம் சிவனை பூசை செய்ய ஆதரியார் | ஜெகத் கர்த்தாவும் சச்சிதானந்த ரூபமுமாகிய சிவனை (வேத மந்திரங்களால்) பூஜிக்க விரும்ப மாட்டார்கள் |
| செய்வார் தம்மையும் செய்ய ஓட்டார் | அங்ஙனம் செய்பவர்களையும் செய்யாமற் றடுப்பார்கள் 17 |

காதும்வா தியர்க ளாலே கலியுகத் துள்ளோர் கெட்டு
வேதமோதியவா செய்யார் மிருதிசொல் லுவதுஞ் செய்யார்
பூதியும் அணியார் ஞான சாதன பூத மாக
வோதுவ தொன்றும் செய்யார் ஒழிந்ததே யுகந்து செய்வார். 18

(இ - ள்)

| | |
|---|---|
| காதும் வாதியர்க ளாலே கலியுகத்து உள்ளோர் கெட்டு | (வேதமார்த்கத்தைக் கெடுத்து) வருத்துகின்ற மதவாதியர்களாலே கலியுகத்திலுள்ள மானுடர்கள் மதிமயக்கமுற்று |
| வேதம் ஓதியவா செய் யார் மிருதிசொல்லு வதும் செய்யார் | சுருதிஸ் மிருதிகளில் கூறிய சிரௌ தஸ்மார்த்த கர்மங்களை அனுஷ் டிக்க மாட்டார்கள் |
| பூதியும் அணியார் | (வேதத்திற் சொல்லியபடி) விபூதி யால் உத்தூளனதிரி புண்டரமுந் தரிக்க மாட்டார்கள் |
| ஞானசாதன பூதமாக ஓதுவது ஒன்றும் செய்யார் | ஞான சாதனவடிவமாக (சுருதி யாதிகளில் கூறுவதொன்றையும் அனுஷ்டிக்க மாட்டார்கள். 18 |

(அதாவது சிவபூசை முதலியவைகள் செய்யார் வேத பாஹ்ய மார்க்கத்தால் விஷ்ணுவை பூசித்து சங்கரனை நிந் திப்பார்கள் சாஸ்திர விரோதமான சிரார்த்தம் செய்வார்கள் ஏகாதசி சிவராத்ரி முதலிய விரத நாட்களில் உபவாச மிருக்க மாட்டார்கள் சதருத்ரம் சமகம் புருஷசூக்தம் இவற் ருல் ஈசுவரனை அபிஷேகம் செய்ய மாட்டார்களென்பதாம்)

| | |
|---|---|
| ஒழிந்ததே உகந்து செய்வார் | (வேதத்தில்) விலக்கப்பட்டதையே மிகவும் பிரியத்தோடு செய்வார்கள் |

தருமம தறிவில்பா டண்டர் தங்களை
மருவலால் வேதமா வாக்கியப் பொருள்
கருதிடா ரதுகர மணியிற் காட்டிடும்
குருவையும் வழிபடார் குதற்கம் மேவலார் 19

(இ - ள்)

| | |
|---|---|
| தருமம் அது அறிவு இல் பாடண்டர் தங்களை மருவலால் | (உலக ஜனங்கள்) தருமம் இது வென்றும் அறியாத பாஷாண்டி களை மோகத்தால் அடைதலால் |
| வேதவாக்கியப் பொருள் கருதிடார் | வேதத்திற் கூறிய மகா வாக்கி யார்த்தத்தைச் சிந்திக்க மாட்டார்கள் |

| | |
|---|---|
| அது கர மணியில் காட்டிடும் | அதை யுள்ளங்கையிலுள்ள இரத்தினத்தைப்போல் அபரோக்ஷமாகத் தெரிவிக்கும் |
| குருவையும் வழிபடார் | அருள்வடிவமான சற்குரு மூர்த்தியை முக்கரணங்களினலும் வணங்கமாட்டார்கள் (பின்னையோ) |
| குதர்க்கம் மேவலார் | – விதண்டாவாதம் பேசுவார்கள். |

(அதாவது சாஸ்திரமேது ஈஸ்வரனேது என்று மூர்க்கத்தனத்தால் முறையற்ற தர்க்கம் பேசுவார்களென்பதாம்) 19

முன்னநான் மறைக ளோதி முடிந்திடு பரம மான
சன்னியா சத்தைச் சாரார் சார்ந்தவர் தமக்குந் தீங்கு
பன்னிடா நிற்பர் வேறு பலபல சொல்லி யென்னை
மன்னும்வீ டெய்தா தான வழிகளே மருவா நிற்பர். 20

(இ – ள்)

| | |
|---|---|
| முன்னம் நான்மறைகள் ஓதி முடிந்திடும் | அநாதியான நான்கு வேதங்களால் முத்தி சாதனமாக நிச்சயிக்கும் |
| பரமம் ஆன சன்னியாசத்தைச் சாரார் | * பரமஹம்சமான சன்னியாசத்தை அடையமாட்டார்கள் |
| சார்ந்தவர் தமக்கும் தீங்கு பன்னிடா நிற்பர் | அச்சன்னியாசத்தை அடைந்தவர்களுக்கும் (கலியுகத்தில் சன்னியாசம் கூடாதென்பதாதி) தோஷங்களைக் கூறுவர் |
| வேறு பல பல சொல்லி என்னை மன்னும் வீடு எய்தாது ஆன வழிகளே மருவா நிற்பர் | இன்னும் வெவ்வேறு விதமாக பலவாறு சொல்லுவதிலென்னை (பயன்) நிலைபெற்ற மோக்ஷத்தையடையாததான மார்க்கங்களையே பின்பற்றுவார்கள் 20 |

(அதாவது மும்மூர்த்தி நிந்தை வேத நிந்தை பேதபுத்தி வேதபாகியமான கர்மங்களனைத்தும் சிரத்தையோடு செய்யா நிற்பதாகிய இவைகளை செய்வரென்பதாம்)

* கைவல்லிய நவநீதம் சந்தேகம் தெளிதற்படலம் காண்க.

துட்டமா மார்க்கர் நூலிற் றுவக்கிலாப் பெரியராகிச்
சிட்டராய்த் தீர ராகிச் சிவனரு ளுடைய ராஞர்
கட்டமாம் பிறவி தீரக் காதலால் வேதஞ் சொல்லப்
பட்டதே செய்யா நிற்பர் பரமமாம் பதத்தை யுன்னி. 21

(இ – ள்)

| | |
|---|---|
| துட்டமா மார்க்கர் நூலில் துவக்கு இலாப் பெரியர் ஆகி | தோஷ நிவர்த்தியில்லாத அன்னிய மதத்தாருடைய சாஸ்திரத்தில் சம்பந்தமில்லாத மகான்களாய் |
| சிட்டர் ஆய் தீரர் ஆய் | நற்குணசீலர்களாய் தைரிய முதலிய தேவ சம்பத்துடையவர்களாய் |
| சிவனருள் உடையர் ஆஞர் | பரசிவ கிருபையை பெற்றவர்கள் |
| கட்டமாம் பிறவிதீர | துன்ப மயமான சம்சாரம் நீங்கும் பொருட்டு |
| பரமமாம் பதத்தை உன்னி | மேலான பிரஹ்ம பதத்தையடையக் கருதி |
| வேதம் சொல்லப் பட்டதே காதலால் செய்யா நிற்பர் | வேதப் பிரதிபாத்திய அனுஷ்டானங்களையே மிக்க பிரீதியோடு செய்யா நிற்பர். |

இது கவிநாயகர் வாக்கியம் 21

அவத்தமே பிதற்றப் படுங்கலை யெல்லா மல்லற்
பவத்தை வேரறுத் திடுவது பழமறைப் பொருளே
யுவப்பினுல் ஒருகணத்தி லப்பொருள் பெறவுரைப்பான்
சிவப்பிர காசனே யென்றனன் றிசைமுகன் றெளிய. 22

(இ – ள்)

| | |
|---|---|
| கலை எல்லாம் | வேத விரோதமான சமயிகள் நூல்களெல்லாம் |
| அவத்தமே பிதற்றப் படும் | பொய்ப் பதார்த்தங்களையே சத்திய பதார்த்தங்களாக கூறுகின்றது. |
| அல்லல் பவத்தை வேர் அறுத்து விடுவது | துக்க வடிவ சமுசாரத்தை மூலத்தோடு சேதிப்பது |

பழமறைப் பொருளே – அநாதியான வேதார்த்தமேயாம்

| | |
|---|---|
| உவப்பினுல் ஒரு கணத்தில் அப் பொருள் பெற | (அதிகாரிகள்) ஓர் க்ஷணத்தில் அவ்வஸ்துவை அடையும்படி சந்தோஷமாக |
| சிவப்பிரகாசனே உரைப்பான் | உபதேசிக்கத் தக்கவன் சிவப் பிரகாசனென்னும் குருமூர்த்தியேயாம் |
| என்றனன் திசை முகன் தெளிய | என்று தேவர்களுக்கு தெளியும்படி நான்முகனுன பிரஹ்மதேவன் உபதேசித்தான். 22 |

ஐதரேய உபநிஷதாற்பரியம் உரைத்த
2-ம் அத்தியாயம் சம்பூரணம்.

ஆகச் செய்யுள் (61)
சற்குருநாதன் துணை

---

## 3-வது ஐதரேய உபநிஷத தாற்யபரிசேஷமும் தைத்திரீய உபநிஷத தாற்பரியமும் உரைக்கும் அத்தியாயம்

### சாக்ஷி சிவசொரூபம்

இது கவிநாயகர் வாக்கியம்

தற்பர ன்றனு ருவஞ்ச யம்புவாம்
உற்ப வமது ருவையு முண்மையில்
அற்ப முமதி லந்நிய மின்மையும்
பொற்ப மைந்தநற் பூமக னோதுவான். 1

(இ - ள்)

| | |
|---|---|
| சயம்புவாம் தத்பரன் தன் உருவும் | சுயம்புவான பரசிவத்தின் சொரூபத்தையும் |
| உற்பவமது உருவையும் | (அத்தற்பரனிடத்தில்) அத்தியஸ்தமான ஜெகத்தின் சொரூபத்தையும் |
| உண்மையில் அதில் அற்பமும் அன்னியம் இன்மையும் | எதார்த்த திருஷ்டியில் அவ்வதிஷ்டான பரசிவத்தினும் (அத்தியஸ்தமான ஜெகத்து) பின்னமின்றிய தன்மையையும் |
| பொற்பு அமைந்த நல்பூமகன் ஓதுவான் | அழகு நிறைந்த பத்மாசனத்தில் வீற்றிருக்கும் பிரஹ்மதேவரானவர் கூறத் தொடங்கினர். |

1

(அ-கை.) அரனென்பவர் சிலர் என்ற பாடல் முதலிய வற்றால் வாதிகளின் சங்கையை நிராகரித்து சுருதிப் பிரசித்த ஆன்மாவே திருஷ்டாவெனக் கூறப்பட்டான் அவ் வான்மா, தான் சிருஷ்டித்த தேகங்களில் கால் கட்டைவிரல் களின் வழியால் கிரியா சக்தி ரூபனாகவும், பிரம்மாந்தரத்தின் வழியால் ஞான சக்தி ரூபனாகவும் பிரவேசித்தான் என்ற சுருதியால் "அவர்கட்குள் யார் பிரத்தியகான்மாவாக அறியத்தக்கவன்" எனச் சுருதியில் கேள்வி வர, எதனால் பார்க்கின்றானோ, எதனால் கேட்கின்றானோ என்றது முதலிய உத்தரமாகும் சுருதியின் பொருளைக் கூற இச்சை நண்ணி அவ்வான்மாவே சிற்பரமாக வொப்பவேண்டும் எனக் கூறுகின்றார்.

சான்றதே யெல்லாப் பொருட்குமெல் லாமாஞ்
சங்கரன் சான்றிலா தாகிற்
றேன்றிடா துலகம் தோன்றிடா வாறு
தனக்கெனத் தோற்றமின் மையினுல்
தான்றனக் குலகம் தோற்றமில் லாமை
சடத்துவத் தாற்சட மாகை
யேன்றுதான் அறியா தொன்றினு லறியப்
படும்பொரு ளாகிய வியல்பால். 2

(இ - ள்)

| | |
|---|---|
| எல்லாம் ஆம் சங்கரன் எல்லாப் பொருட் கும் சான்றதே | வியாவகாரிக திருஷ்டியில் சர்வான் மகவாக விளங்காநின்ற பரமேஸ் வரன் (பாரமார்த்த திருஷ்டியில் சர்வ வஸ்துக்களுக்கும் *சாட்சியே |

[இப்பக்ஷத்தில் பாதகத்தைக் கூறுகின்றுர்]

| | |
|---|---|
| சான்று இலது ஆயின் | அப் பரமாத்மா சாக்ஷியா யிலதாயின் |
| உலகம் தோன்றிடாது | சாக்ஷியரூபமான பிரபஞ்சம் விளங்கமாட்டாது |
| தோன்றிடாவாறு | – அச்சகம் விளங்காத்தன்மை |
| தனக்கு எனத் தோற்றம் இன்மை யினுல் | அங்ஙனம் ஜெகத்து விளங்காத தெதனுலெனில் சுதந்தரப் பிரகாச மின்மையின் |

[பிரபஞ்சம் சடசேதன வடிவாயிருத்தலால் சேதன பாகத்தால் சடபாகம் விளங்கப்படலாமே யெனிற் கூறு கின்றுர்.]

* ஒரே சிவன் வியாவகார திருஷ்டியில் அந்தக்கரண விசிஷ்ட சேதனம், சீவனும், பாரமார்த்த திருஷ்டியில் அந்தக் கரண வுபகித சேதனம் சாக்ஷியாம். அல்லது உதாசீனமாய்ச் சமீபத்திலிருந்துகொண்டு அறிவதாகிய சேதனம் சாக்ஷியாம். அல்லது அந்தக்கரணத்திலும் அதன் விருத்திகளிலுமுள்ள சேதன மாத்திரம் சாக்ஷியாகவும், விளங்குமென்பதாம்.

| | | |
|---|---|---|
| உலகம் தனக்குத் தோற்றம் இன்மை சடத்து வத்தால் | } | பிரபஞ்சம் தனக்கு சுயவிளக்கம் இன்மை (எதனால் எனில்) சடத்தன்மை யேதுவால் |
| சடம் ஆகை | – | அச்சடத்தன்மையானது (எதனாலெனில்) |
| தான் ஏன்று அறியாது | } | தான் ஒன்ருேடு சம்பந்தித்து அறியாததாயும் |
| ஒன்றினால் அறியப் படும் பொருள் ஆகிய இயல்பால் | } | அன்னியப் பிரகாசத்தால் அறியப் படுவதாயுமுள்ள சுபாவ வஸ்துவாதலால் 2 |

(வி-ரை) அதனால் ஜெகத்தானது தனக்கன்னியமாக ஓர் பிரகாசத்தை யபேக்ஷிக்கிறது என்பது திண்ணம்.

(அவதாரிகை)

[பான (விளக்க)மானது இருக்குக அப்பானம் சக்ஷு வாதிகளால் ரூபாதி விளக்க ஞான முண்டாவதுபோல் அப் பிரகாசமான விஞ்ஞானத்தினால் தனது விஷயத்தில் ஜென் னியமா மென்னும் பட்டர் மதத்தைச் சங்கித்து அப்படி ஜனித்தால் கடாதிகளுக் கன்றிப் பானத்திற்குக் கூடாதென வும் மண்ணிலுண்டான கடத்திற்கும், பானத்திற்கும் ஜனிக் குந் தன்மை சமானமாயிருத்தலால் கடம்போல் பானமும் பிரகாசியாது எனவும் கூறுகின்ருர்.]

உலகெலாம் விளக்கம் உறுமொளி யுணர்வில்
　　உற்பவ மெனச்சிலர் சொல்வர்
அலகில்பேர் ஒளிதான் பிறக்குமேற் சடமாம்
　　ஆதலாற் பிறக்கைகூ டாது
கலவரு நாச முள்ளது சடங்கள்
　　ஆங்கடா திகடமக் கேயாம்
உலைவிலா வொளிவிஞ் ஞானமுண் டாக
　　வாக்குகை யுள்ளவா றன்றே.　　3

(இ – ள்)

உலகுளலாம் விளக்கம் உறும் ஒளி } சர்வ ஜெகத் பிரகாச பானமானது

உணர்வில் உற்பவம் எனச்சிலர் சொல்வர் } விஞ்ஞான ஜெனிதமாமென்று (குமாரிலபட்டர் முதலிய) சில வாதியர் கூறுவர்

அலகில் பேரொளி பிறக்குமேல் சடமாம் } வியாபக விளக்கமானது (விஞ் ஞானத்தினுல் ஜென்னியமாயின் சடமாம்

ஆதலால் } (ஜென்னியத்துவம் சடத்துவ ஏது) ஆதலால் (பானத்திற்கு உற்பத்தி கூடாது)

கலவரும் நாசம் } அவயவச் சேர்கையின் பிரிவாகிய நாசம்

சடங்கள் ஆம் கடாதிகள் தமக்கே உள்ளது ஆம் } அசேதன கடபடாதி பதார்த்தங் களுக்கே ஜென்னியத்வமுளவாம்

உலேவு இலாஒளி(யை) – (ஆதலால்) நாசரகித பானத்தை

விஞ்ஞானம் உண் டாக ஆக்குகை } விஞ்ஞானமானது ஜெனிக்குமாறு செய்வித்தல்

உள்ளவாறு அன்று – எதார்த்தம் அன்று. (தான்–அசை)

(அவதாரிகை)

[அன்றியும் விஞ்ஞானமானது பானத்துக்கு ஜெனகமா மென்னின் அது பான ரூபமாக பரிணமிக்கிறதென்ருவது ஆரம்பிக்கிறதென்ருவது சொல்லவேண்டும் அவ்வா றெனில் பால் முதலிய சடப்பொருள்களைப் போல் விகாரப் பட்டு சொரூபமின்றியதாமென அவ்விரு பக்ஷங்களும்கூடா தென மறுக்கின்ருர்.]

பான ரூபத் தான்ஞானம் பரிணு மத்தை யடையாது
ஞான ரூபமவிகாரி யாத லாலே விஞ்ஞானம்
தானும் விகாரப் படுமேற்பால் தன்னை முதலா
சடப்பொருள்போல்
ஆனி யாகி யறிபொருளா மறிவு ம றியும் பொருளாமோ. 4

(இ - ள்)

| | |
|---|---|
| * ஞானம் பான ரூபத்தால் | விஞ்ஞானமானது ஸ்புரண ரூபமாக |

பரிணாமத்தை அடையாது –பரிணமித்தலைப் பொருந்தாது.

| | |
|---|---|
| ஞான ரூபம் அவிகாரி ஆதலால் | (ஏனெனில்) ஞானத்தின் சொரூபமானது நிர்விகாரமானதால் |
| விஞ்ஞானமும் விகாரப்படுமேல் | விஞ்ஞானமானது (பானரூபமாக) விகாரத்தை யடையுமேல் |
| பால் முதலாம் சடப் பொருள்போல் | விகார ரூப பரிணாமத்தையுடைய க்ஷீர (பால்) முதலிய ஜட வஸ்துக்கள் போன்று |
| அறிபொருள் ஆகிஆ னியாம் | திரிசிய வஸ்துவாய் நாசமாம் |
| அறிவும் அறியும் பொருள் ஆமோ | ஞானமானது திரிசிய வஸ்துவாமோ (ஆகாதென்க) தான் ஏ. |

அசை. 4

அறிவு பானந் தனக்குத்தா ஞரம் பமுமா கக்கூடாது
தறிவு தானோ ரறியவுறும் பொருளா யிராத வதனாலும்
அறிவைக் குணமா கப்பிறரு மங்கீ கரித்த வதனாலும்
அறிவிங் கசத்தாம் பானத்துக் காரம் பகமு மாகாதே. 5

(இ – ள்)

| | |
|---|---|
| பிறர் அறிவை குணமாக அங்கீகரித்த அதனாலும் | (ஆரம்பவாதிகளாகிய) நையாயிகர்கள் ஞானத்தை குணமாக அங்கீகரித்திருப்பதால் |
| அறிவு ஓர் அறிய உறும் பொருளாய் இராது அதனல் | விஞ்ஞானமானது ஓர் திரவியமாகாது (திரவியமே திரவியாந்தர ஆரம்பக (தொடக்க) மாம் ஆதலால் |

* அந்தக்கரணம் அதன் விருத்திகளில் உள்ள சேதனத்தை ஞானமென்றும் அதன் வேருய் நாமரூபங்களின் அதிஷ்டானமாயுள்ள சேதனத்தை பான மென்றும் விளக்கமென்றும் சொல்லப்படும்.

| | |
|---|---|
| அறிவு பானந்தனக்கு ஆரம்பகமும் ஆகக்கூடாது | குணவடிவ ஞானமானது பானத்திற்கு (எவ்வாறு) ஆரம்பகமாம் (ஆகாதென்க) |

[சத்தாகிய பானத்திற்கு ஆரம்பகமாகாவிடினும் அசத்தாகிய பானத்திற்கு ஆரம்பகமாகலாமே எனில் கூறுகின்றார்.]

| | |
|---|---|
| அறிவு இங்கு அசத்தாம் பானத்திற்கும் ஆரம்பகமும் ஆகாது | ஞானமானது இவ்விடத்தசத்தாகிய பானத்திற்கு ஆரம்பகமும் ஆகாது |

(வி – ஆயின் வந்தியா சுதன் முதலியவைகளுக்கும் ஆக வேண்டும். ஆகலின் பரிணாம பக்ஷம்போல் ஆரம்ப பக்ஷமும் ஞானத்திற்கு பானத்தின் ஜனகத்துவம் சித்தியாது) ஏ. தான். தான். அசைகள். மூலப்படி உம் நீக்கம். 5

தொல்லை யசத்தாம் பானத்தைத்தோற்றுவிப்பதொரு ஞான்றும்
இல்லை யில்லாப் பொருளுக்குப் பண்டின் றென்ன வியம்பவரும்
சொல்லு மில்லை யாதலினால் தோற்றப் படுதல் விஞ்ஞானத்
தில்லை யெல்லாப் படியாலு மென்று முள்ள திவ்வொளியே. 6

(இ – ள்)

| | |
|---|---|
| தொல்லை யசத்தாம் பானத்தைத் தோற்றுவிப்பது ஒரு ஞான்றும் இல்லை | பூர்வம் அசத்தாய பானத்தை (விஞ்ஞானமானது) உண்டு பண்ணுவது எக்காலத்திலு மில்லையாம் |

[அதுகூடாது பூர்வம் அசத்தாயுள்ள பதார்த்தத்திற்கு சத்தாசம்பந்தம் உளதாகவே உற்பத்தியாதலாலே விஞ்ஞானத்தினால் விளக்க முண்டாகலாமே யெனின் அதுவும் கூடாதென்று பரிகரிக்கின்றார் ]

இல்லாப் பொருளுக்கும் – அசத் பதார்த்தத்துக்கும்

| | |
|---|---|
| பண்டு இன்று என்று இயம்ப வரும் சொல்லும் இல்லை ஆதலினால் | முன்பு பின்புயென்று வசனிக்கும் வார்த்தையும் இன்று ஆனபடியால் (பானமானது) |

| | |
|---|---|
| எல்லாப் படியாலும் விஞ்ஞானத்துத் தோற்றப்படுதல் இல்லை | சர்வ பிரகாரத்தாலும் விஞ்ஞானத்தினின்று ஜென்னியமாதலில்லை |
| இவ்வொளி என்றும் உள்ளது | இப்பானமானது நித்தியமேயாம். (தான் அசை) |

6

( அவதாரிகை)

[கூறிய அர்த்தத்தை வேறிடத்தும் அதிதேசம் செய்கின்றூர்.]

ஓதுநெறி யாலுணர்வு முற்பவ முருதே
பேதைமைய தேயது பிறக்குமெனு மாறிங்
கோதிவரு பானமதி லுற்பவமு மற்றே
நீதிபிறவா மலுள தாலவ்வொளி நித்தம். 7

(இ - ள்)

| | |
|---|---|
| ஓதும் நெறியால் | ஜன்னியத்வம் சடத்துவ ஏதுவாகக் கூறிய முறையால் |
| உணர்வும் உற்பவம் உருது | ஞானமும் ஜெனிக்க மாட்டாது |

[ரூபாதி விஷயங்களோடு சக்ஷுராதி சம்யோகானந்தரம் ரூபாதி விஷய ஞானம் ஜென்னியமாவதாகக் காணப்படுகின்றதே அதற்கு என்ன கதி எனச் சங்கித்துக் கூறுகின்றூர்.]

| | |
|---|---|
| அதுபிறக்கும் எனுமாறு பேதமையதே | அந்த ஞானம் ஜெனிக்கும் என்னும் பிரதீதி பிராந்தியே |
| அதில் இங்கு ஓதி வரு பானம் | அந்த ஞானத்தில் இவ்விடத்திற் கூறிவந்த பானமானது |
| உற்பவமும் அற்றே | ஜெனிக்கும் என்பது பிராந்தியே. |

[இந்தப் பிரகாரம் பானத்துக்கு அஜன்னியத்வத்தைச் சாதித்து நித்தியத்துவத்தைச் சாதிக்கின்றூர்.]

| | |
|---|---|
| நீதி அவ்வொளி | கூறிய முறையால் அந்தப் பானமானது |
| பிறவாமல் உளதால் நித்தம் | ஜென்னியமின்றி பாவமாதலால் நித்தியமேயாம். (ஏ. அசை) 7 |

(அவதாரிகை)

[இந்தப் பிரகாரம் பானத்திற்கு நித்தியத்வத்தைச் சாதித்து அந்தப் பானத்திற்கு அபின்னத்தன்மையால் பரமேஸ்வரனுக்குக் கூறப்பட்ட சாக்ஷி சின்மாத்திர ரூபத் தன்மையை நிகமனம் செய்கின்றார்]

நிகில லோகந் தனை நிகழ்ந்து நித்தவொளியே தவ்வொளியே
சகல லோகந் தனக்கென்றும் சான்றாய் நின்ற சங்கரன்றான்
றுகளி லிறையிற் கற்பிதமாம் சம்பந் தத்தாற் றோற்றமுறுந்
தகவி லஞ்ஞானமுமன்றித் தானாய்த் தோற்றந் தாராதால். 8

| | |
|---|---|
| நிகில லோகம் தனை நிகழ்த்தும் நித்த ஒளி ஏது | சர்வ லோகப் பிரகாசமும் நித்தியமான யாதொரு பான முண்டோ |
| அவ்வொளியே சகல லோகம் தனக்கும் | அந்தப் பானமே சர்வத்திர உலகங்களுக்கும் |
| என்றும் சான்றாய் நின்ற சங்கரன் | சர்வ காலத்திலும் சாக்ஷி மாத்திர மாயுள்ள சம்புவாம் |

[நித்திய சொப்பிரகாச பான மாத்திர சொரூபமாகிய அப்பரசிவனுக்கு அஞ்ஞான தற்காரிய ரூப ஜெகத் சாக்ஷித் வத்தை மூன்று செய்யுளாற் கூறுகின்றார்.]

| | |
|---|---|
| தகவு இல் அஞ்ஞான மும் | (இருப்பு விளக்கத்) தகுதியற்ற அஞ்ஞானமும் |
| துகள் இல் இறையில் கற்பிதம் ஆம் சம்பந் தத்தால் தோற்றம் உறும் அன்றி | சர்வ தோஷ விநிர்முத்த பரசிவத்தில் கற்பித தாதான்மிய சம்பந்தத்தால் விளங்குமே யல்லாது |
| தானாய்தோற்றம் தராது | சுயமே விளங்காது. (தான் ஆல் அசை) 8 |

தெரிவிலாமையிற் செனித்திடுஞ் சித்தமுஞ்
செற்றமார் வழுமெல்லாம்
தெரிவிலாமையைத் திகழ்த்திய சேதனச் செறிவினுற்
றிகழ்கின்ற
புரிவதாம்பிரா ணன்றிகழ் வதும்புறக் கரணங்களு டலந்தான்
விரிவதாம்விட யங்களெலாம் சித்தவி ருத்திசேர்
உணர்வாலே. 9

(இ - ள்)

| | |
|---|---|
| தெரிவிலாமையில் செனித்திடும் சித்தமும் செற்றமும் ஆர்வமும் எல்லாமும் | அஞ்ஞான செனிதமாகிய அந்தக், கரணமும் தன் தர்மமாகிய கோபராகாதிகளனைத்தும் |
| தெரிவிலாமையை திகழ்த்திய சேதனச் செறிவில் திகழ்கின்ற | அஞ்ஞானத்தை விளக்கிய சிற்பிரகாசத்தினுல் விளங்கு கின்றன |
| புரிவதாம் பிராணன் | சீவன விவகாரத்தை செய்வதாகிய பிராணனும் |
| புறக்கரணங்கள் உடலம் | பாகிய கரணங்களும் தேகமும் |
| விரிவதாம் விடயங்கள் | பாகிய விஷயங்களும் (ஆகிய) |
| எல்லாம் திகழ்வதும் | அனைத்தும் விளங்குவதும் |
| சித்த விருத்திசேர் உணர்வாலே | அந்தக்கரண விருத்தியவச்சின்ன சைதன்யப் பிரகாசத்தினுலேயாம். (தான் – அசை) 9 |

அன்றியநு மானமுத றன்னிலறி யறிவு
நின்றுசில சில்பொருணி கழ்த்தியிடு மதனுல்
என்றுமிறை யெப்பொருள்க ளியாவுநிகழ் விப்பான்
ஒன்றுமவ னுலொழிய வென்றுநிக ழாதால். 10

(இ-ள்)

| | |
|---|---|
| அறி அறிவு அன்றி | சொப்பிரகாச சைதன்யமானது (கூறிய நீதியாக அபரோக்ஷ விருதிதிகளினின்று அபரோக்ஷ விஷயங்களையறிவதும்) அல்லாமல் |

| | |
|---|---|
| அநுமான முதல் தன்னில் நின்று | அநுமான (உபமான) முதலிய பரோக்ஷ விருத்திகளில் நின்று |
| சில சில் பொருள் நிகழ்த்தி இடும் | அநுமேய உபமேய முதலிய சிற்சில பதார்த்தங்களைப் பிரகாசிக்கும் |
| அதனல் இறை | – அக்காரணத்தினல் பரமேஸ்வரன் |
| என்றும் எப்பொருள்கள் யாவும் நிகழ்விப்பான் | எல்லாக் காலங்களிலும் எல்லாப் பொருள்களையும் விளக்குகின்ருன் |
| அவனல் ஒழிய ஒன்றும் | அப் பரசிவத்தினலன்றியோர் பொருளும் |

(வி - ரை) சாக்ஷி சேதனம் அஞ்ஞானத்தைச் சாக்ஷாத்தாகவும் அந்தக்கரணம் அதன் தர்மங்களை அஞ்ஞான வாயிலாகவும் பிராண கரண வுடலங்களை அந்தக் கரண விருத்தி வாயிலாகவும் பாஹிய விஷயங்களை இந்திரிய சம்பந்த விருத்தி வாயிலாகவும் விளக்குமென்பதாம். 10

(அ-கை) ஜீவ ரூபனக அனுப்பிரவேசித்து இருக்கின்ற பரசிவன் சாக்ஷி சின்மாத்திரன் என்று சிந்தாந்திக்கப் பட்டது. அப்படியே சுருதியில் இருவருக்குள் யார் ஆன்மா என்ற கேள்விக்கு சர்வ சாக்ஷியான சித்துருபனே ஆன்மா, பிராணனன்றெனக் கூறப்பட்டது. முந்திய கவிகளால் இந்தப் பொருளையே எவனுற் பார்க்கின்ருனே, எவனுற் கந்தத்தை நுகர்கின்ருனே எவனல் வாக்கைக் கொண்டு பேசுகின்ருனே, எவனல் ருசி அருசிகளை அறிகின்ருனே அவனென்று உத்தரமாகச் சொல்கின்ற சுருதிப் பொருளைக் கூறுகின்ருர்.

ஆதலா லுருவங் காண்பது மொலிதான்
அழகுறக் கேட்பது மொருவன்
காதலாற் கந்தங் கொள்வது மினிதின்
னுதென விரதங்காண் பதுவும்
ஓதலாம் பரிச முணர்வது மிறையால்
உரைத்தசங் கரனெனு முணர்வை
மேதையான் மிகுத்தோர் வேறு வேருக
விளம்புவார் அதுவிளம் பிடுவாம்.

(இ - ள்)

| | |
|---|---|
| ஆதலால் | (சிவனே சர்வப் பிரபஞ்சத்தினை விளக்குபவன்) ஆதலின் |
| ஒருவன் உருவம் காண்பதும் | ஓர் புருஷன் ரூபத்தைப் பார்ப்பதும் |
| அழகு உற ஒளி கேட்பதும் | நன்ருக சப்தத்தை சிரவணிப்பதும் |
| காதலால் கந்தம் கொள்வதும் | விருப்போடு வாசனையை கிரகிப்பதும் |
| இரதம் இனிது இன்னுது எனக் காண்பதும் | சட் ரசங்களையும் ருசி அருசியுடன் அறிவதும் |
| ஓதலாம் பரிசம் உணர்வதும் | சீதோஷ்ண முதலாகக் கூறுகின்ற பரிசத்தைத் தெரிவதும் |
| இறையால் | – பரசிவத்திஞலேயே. |
| உரைத்த சங்கரன் என்னும் உணர்வை | முன்னம் பிரதிபாதித்த பரசிவ மென்னும் சேதனத்தை |
| மேதையால் மிகுத்தோர் வேறுவேருக விளம்புவார் | அறிவில் (தாரணுசக்தியில்) சிறந்த மகான்கள் பின்ன பின்னமான நாமமிட்டழைக்கின்றனர் |
| அதுவிளம்பிடுவாம் | – அதனைக்கூறுவாம். (தான் – அசை) |

(அ-கை.) அந்நாமங்கள் இவையெனக் கூறுகின்ருர்.

சிலவர்தாம் இதய மென்பர்கண் மனமே
யென்பர்கள் சிலவர் தாஞ் சிலவர்
நலமதா ஞான மெனபர்க ளெல்லா
நாடிடு ஞானமென் பர்களாம்
இலகுவிஞ் ஞான மென்பர்கள் மிகுத்தே
யிலங்கிய ஞானமென் பர்களாம்
சொலவரு மேதை யென்பர்கள் வேறு
சொல்லிடும் பரிசையுங் கேண்மோ.

(இ - ள்)

| | |
|---|---|
| சிலவர்தாம் இதயம் என்பார்கள் | சிலர் (அத்தியவசாய-நிச்சய முடைய) அந்தக்கரண யென்பார் |
| சிலவர்தாம் மனமே என்பர்கள் | சிலர் சங்கல்பாதி விருத்தியென்பர் |
| சிலவர்தாம் நலஞானம் என்பர்கள் | சிலர் சம்ஞான மென்பர் |
| சிலர் எல்லாம் நாடிடும் ஞானம் என்பர்கள் | சிலர் அஞ்ஞான மென்பர் |
| சிலர் இலகுவிஞ் ஞானம் என்பர்கள் | சிலர் விளங்கா நின்ற லௌகீக விஷய கோசரமான சூக்ஷ்ம விஞ்ஞான மென்பர் |
| சிலவர் சொலவரும் மேதை என்பர்கள் | சிலர் கூறு நின்ற தாரணு ரூபசக்தி யென்பர் |
| வேறு சொல்லிடும் பரிசையும் கேண்மோ | மேலும் பலவிதமாக இசைக்கின்ற இயல்பையும் கேளுங்கள். 12 |

யாதையுங் காணுங் கண்ணென மொழிவர்
எழின்மிகு திருதியா மென்பர்
சூதிய தென்பார் மிருதியென் றுரைப்பார்
சொல்லுஞ்சங் கற்பமென் றுரைப்பார்
நீதியாங் கிருது காமமே யென்பார்
நிகழ்வுறு வசமென வுரைப்பார்
ஓதிய விந்த நாமதே யங்கள்
உணர்வதாஞ் சிவனுடை யியல்பே. 13

(இ - ள்)

| | |
|---|---|
| சிலர் யாதையுங்காணும் கண் என மொழிவர் | சிலர் யாவற்றையும் பாரா நின்ற திருஷ்டி யென்பர் |
| சிலர் எழில்மிகு திருதியாம் என்பர் | சிலர் அழகுமிக்க தேகேந்திரியாதி களின் தாரணுசாமர்தியமென்பர் |
| சிலர் சூதியது என்பர் | சிலர் ரோகாதி நிமித்தத்தால் உள தாகும் சித்தத்தின் பீடையென்பர் |
| சிலர் மிருதி என்று உரைப்பர் | சிலர் அதீத வஸ்து கோசர மென்பர் |

| | |
|---|---|
| (சிலர்) சொல்லுசங்கற்பம் என்று உரைப்பர் | சிலர் கூறுநின்ற கருமைவெண்மை யாதிபேதரூப கற்பனையென்பர் |
| (சிலர்) நீதியாம் கிருது என்பர் | சிலர் சாஸ்திர முறையால் இஃது இப்படிப்பட்டதென்றுவரும் நிச்சயமென்பர் |
| சிலர் காமமே என்பர் | சிலர் இஷ்டமான பரோக்ஷ விஷய ஆகாக்ஷை யென்பர் |
| சிலர் நிகழ்வுறு வசம் என உரைப்பர் | சிலர் விளங்காநின்ற சிற்கு சந்நிதி விஷயாபிலாஷை யென்பர் |
| ஓதிய இந்த நாமதேயங்கள் | கூறிய இந்நாமங்கள் |
| இயல்பு உணர்வாம் சிவனுடையதுவே | இயற்கை ஞானமுடைய சிவபெருமானுடையதுவேயாம். |

(மேற்சொன்ன அந்தந்த வுபாதிகளிலிருந்து அது அதுவாக விளங்குவதால் இத்தியாதி நாமங்கள் சொல்லப் பட்டது) 13

(அ–கை.) இதுகாறும் அந்தக்கரணம் அதன் விருத்தி இவைகளின் உபகிதமாயும் சப்தாதி சகல வஸ்துக்களையும் விளங்கச் செய்வதாயுமுள்ள நித்திய சுயம்பிரகாச சாக்ஷி சைதன்யமே ஆன்மாவென்று பிரதி பாதிக்கப்பட்டது இனி பிரஹ்மா முதல் ஸ்தம்ப பரியந்தமான ஸ்தாவர சங்கம ரூபமாயுள்ள ஜெகத்திலெங்கும் சீவரூபனாகவும் உபாதானரூபனாகவும் இருக்கின்றான் என்ற அபிப்பிராயத்தால் அவனைப் பற்றிய பரிச்சேதப்பிராந்தியை நீக்குதற்காக சுருதியிற் சொன்ன சர்வான்ம சொரூபத்தைக் கூறுகின்றார்.

பிரம னிவனே யிந்திரனும் பிரசா பதியு மிவனிவனே
யுரமதுடைய வும்பர்கள்பூ தங்க ளுலகங்களுமெல்லாம்
உரைசெய்திடுமண் டசமுதலா மியோனி பேதங்களு மிவனே
குரக தங்கோ மநுடருங் குஞ்ச ராதி களுமிவனே. 14

(இ – ள்)

இவனே பிரமன் – இப்பரமத்மாவே பிரஹ்மதேவனும்

(அதாவது அபஞ்சீகிருத பஞ்சமகா பூதங்களும் அவைகளின் காரியமான லிங்கசரீர சமஸ்டியை யுபாதியாக வுடைய இரண்ய கற்பனென்னும் அபர பரியாய நாமமுடைய பிரஹ்மாவென்பதாம்.)

பிரசாபதியும் } (பஞ்சீகிருத தூல பூதங்களால் ஆரம்பிக்கப்பட்ட பிரமாண்டத்தினுள்ளிருக்கும் பிரதம சரீரியாகிய) விராட்டும்

இந்திரனும் இவனே – தேவராஜாவும் இப்பரமாத்மாவே

உரமது உடைய உம்பர்கள் } ஞானமுடைய தேவர்களும்

பூதங்கள் உலகங்கள் எல்லாமும் } சர்வசரீரோபாதிரூப பிருதிவியாதி) பூதங்களும் (பூவாதி) யுலகங்களனைத்தும்

உரை செய்திடும் அண்டசம் முதலாம் யோனி பேதங்களும் இவனே } பிறப்பின் வகையாகக் கூருநின்ற அண்டசம் முதலாகிய யோனி பேதங்களு மிப்பரமாத்மாவே.

[இந்தப் பிரகாரம் சாமான்ய ரூபத்தால் நான்குவித பிறப்பின் பேதமாகச் சர்வ செகத்தையும் நிர்த்தேசஞ் செய்து விசேஷ ரூபத்தாலும் நிர்த்தேசம் செய்கின்ருர்]

குரகதம் கோ குஞ்சராதிகளும் இவனே } அஸ்வம் பசு மநுடர் யானை முதலியனவும் இப்பரமாத்மாவேயாம். 14

ஏனை மற்றும் இயம்பாத வியங்க ளிற்கப் படுவனவும்
ஞான கனமா மிறையவனே நலமாஞ் சிவனு மரனுமுதல்
ஆன நாமங் களையுடைய யாவு மறியு மெய்ப்பரமன்
ஈன மில்லா வறிவுருவே யெல்லாப் பொருட்கு
மிறைபேரும் 15

(இ - ள்)

| | |
|---|---|
| மற்றும் இயம்பாத | – பின்னருங் கூருதொழிந்த |
| ஏனை இயங்க நிற்கப் படுவன எல்லாம் | பக்ஷிகளும் பாதகமன சீலமும் (ஊர்வனவும்) தாவரமுமாகிய அனைத்தும் |
| ஞான கனமாம் இறையவனே | பிரக்ஞான கன லக்ஷணமுடைய சம்புவே |
| இறையாவும் அறியும் எல்லாப்பொருட்கு பேரும் | இந்த பரமேஸ்வர சம்பந்தமாகிய சர்வ செகத்தையும் அறியாநிற்கும் பிரக்ஞையே சர்வ வஸ்துக்களுக்கு மாஸ்ரயமாம் |
| ஈனம் இல்லா அறிவுருவே | நிர்தோஷமான இந்தச்சாக்ஷி ரூபப் பிரக்ஞையே |
| நலமாம் சிவனும் அரனும் முதலான நாமங்களை உடைய மெய்ப்பரமன் | ஆனந்த ரூப சிவருத்ராதிசம்க்ஞை (நாம) முடையவரும் அந்தச் சச்சிதானந்த வடிவ பிரஹ்மமாம், |

15

(அ - கை) உபக்கிரமித்துச் (ஆரம்பித்துச்) சொல்லி வந்த அர்த்தத்தைச் சங்கிரகித்து அதன் பலத்தையும் சபத பூர்வகமாகச் சொல்லி உபசம்மரி(முடி)க்கின்ருர்.

மையலொன் றறவிவ் வறிவினை யறியின்
　மாநுடன் முத்தனு மன்றித்
துய்யகன் மத்தால் மைந்தரால் மற்ருேர்
　பொருளினு லுற்பவந் துடையான்
வையகம் பிரம வேதனந் தன்னின்
　மாத்திரத் தாற்பிர மந்தான்
ஐயமொன் றறவே யாமென முக்கால்
　ஆணையிட் டறைந்தன னலரோன்.

16

(இ - ள்)

| | |
|---|---|
| மையல் ஒன்றுஅற | – சிறிதும் மயக்கமில்லாமல் |
| இவ்வறிவினை அறியின் | பிரஹ்மத்தை பிரத்யக்ஷாகச் சாக்ஷாத்கரிக்கின் |

| | |
|---|---|
| மானுடன் முத்தனும் அன்றி | மனிதன் முத்தியுறுவனே யல்லாமல் |
| துய்ய கன்மத்தால் மைந்தரால் | பரிசுத்தமான யாக எக்யாதி கர்மங்களாலும் புத்திராதிகளாலும் |
| மற்றோர் பொருளினுல் | ஏனைய ஒப்பற்ற திரவியங்களாலும் |
| உற்பவம் துடையான் | ஜன்மத்தை நீக்க மாட்டான் |
| வையகம் பிரம வேதனம் தன்னின் மாத்திரத்தால் | உலகிலுள்ள அதிகாரிகள் பிரஹ்ம க்ஞானமொன்றினுலேயே |
| ஐயம் ஒன்று அற | கிஞ்சிற்றும் சம்சயமின்றி |
| பிரமம்ஆம் என | பிரஹ்ம பிராப்தியை யடைவார்களென்று |
| முக்கால் ஆணை இட்டு | மும்முறை சத்தியம் செய்து. |
| அலரோன் அறைந்தனன் | பத்மாசனராகிய பிரஹ்ம தேவர் கூறினர். 16 |

(வி – ரை) மாத்திரபதம் தந்ததால் கருமம் ஞானம் என்னும் இரண்டும் பறக்கும் பட்சிக்கு இரு சிறகுகள் போல மோக்ஷசாதனம் என்று பர்த்திரு பிரபஞ்சர் கூறும் சமுச்சய வாதம் மறுத்ததாயிற்று.

ஐதரேயசேஷம் சம்பூரணம் தைத்திரீய உபநிஷததாற்பரிய ஆரம்பம்.

(அ – கை) ஐதரேய உபநிஷத தாற்பரிய பரியாலோசனையால் கர்மமாதியின் உதவியின்றி பிரஹ்மான்ம ஐக்கிய சாக்ஷாத் காரமே முத்தி சாதனமெனக் கூறி தைத்திரீய உபநிஷத்தின் பரியாலோசனையாலும் பிரஹ்மதேவர் இருதய குகேசரூப பரமான்மாவை சங்கை சமானத்தோடு பஞ்சகோச விசார அனுசந்தானமாக தேவர்கட்கு நிரதி சயானந்தவடிவ இயல்பைத் தெளியத்தக்கவண்ணம் வற்புறுத்துகின்றார்.

அந்தவிச் சைக்கு விடயமாம் சச்சி
தானந்த மாம்பிர மத்தைப்
பந்தமாங் குகையின் மாயையஞ் ஞானம்
என்பதிற் பரவியோ மத்தில்
அந்தவங் கத்துப் பிரமரூ பத்தை
அறிந்தவ னவனொருக் காலே
சிந்தைசெய் காம மியாவையும் பெற்றுத்
தீரவே சீவன்முத் தனுமாம். 17

(இ - ள்)

| | |
|---|---|
| அந்த விச்சைக்குவிட யமாம் சச்சிதானந்த (அனந்த) பிரமத்தை | ஐதரேயத்திற்கூறிய ஞானமொன்றிற்கே விஷயமாகிய சத்திய ஞான அனந்தானந்தவடிவ பிரஹ்மத்தை |
| மாயை அஞ்ஞானம் என்பதில் பரவியோமத்தில் பந்தமாம் குகையில் | மாயை அஞ்ஞானம் என்பதாகிய பரவியோமமென்னும் நாமமுடைய சம்சாரமாகிய குகையில் |
| அந்த அங்கத்து பிரமரூபத்தை | அந்தச் சச்சிதானந்த வடிவ பிரஹ்மத்தை (பிரத்யகான்மாவாக) |
| அறிந்தவன் அவன் | – அறிந்தவன் எவனோ அவன். |
| ஒருக்காலே சிந்தை செய் காமம் யாவையும் பெற்று தீரவே சீவன் முத்தனுமாம் | ஏக காலத்திலேயே கருதிய சர்வ காமாப்தியை அடைந்து நிச்சயமாய் சீவன் முத்தனுமாம். |

17

(அ-கை.) சத்தியமாயும் ஞானமாயும் ஆனந்தமாயும் உள்ளது பிரஹ்மம் அதைப் பரவியோமமென்னும் குகையில் வைக்கப்பட்டிருக்கின்ற பிரத்யகபின்னமாக யாவன் அறிகின்றானோ அவன் அறிந்த பிரஹ்மரூபமாகிய தன்னால் சகல காமங்களையும் அடைகின்றான் என்ற சுருதி வாக்கிய அக்ஷரானுசாரமாக முற்செய்யுளில் பொருள் கூறி இப்போது பலிதார்த்தத்தைக் கூறுகின்றார்.

அஞ்ஞான மாயாசத்திக்குச் சான்ருய்
அகத்துறை யசலவான் மாவை
மெய்ஞானப் பரத்தில் வேறறக் காணும்
அவன்பிர்ம வித்தினின் மிக்கான்
மெய்ஞ்ஞான பரத்தில் வேறறுஞ் சத்தி
மிச்சிர மித்தவான் மாவில்
பைஞ்ஞாக மாலே போலவே தோன்றப்
படுமபஞ் சீகரித் துளவான். 18

(இ - ள்)

| | |
|---|---|
| அஞ்ஞான மாயா சத்திக்குச் சான்ருய் | பரவியோமமாகிய மாயா சத்திக்குச் சாக்ஷியாகவும் |
| அகத்து உறை அசல ஆன் மாவை | இருதய குகேச ரூபமாயும் இருக்கின்ற நிச்சல வான்மாவை |
| மெய்ஞ்ஞான பரத்தில் | சச்சிதான ந்தன ந்த வடிவ பிரஹ்மத்தினும் |
| வேறு அறக்காணும் அவன் | பின்னமின்றி சாக்ஷாத் கரித்தவன் எவனே அவன் |
| பிரமவித்தினில் மிக்கான் | பிரஹ்மவித்தாகிய உத்தமன் சிரேஷ்டம் ஆவன். |

[சுருதியில் சூத்திரம்போற் கூறிய வாக்கியார்த்தத்தை அதன்பிறகு அவ்விடத்துண்டாகிய சங்கையை நிவர்த்தி செய்ய வேண்டி இவ்வான்மாவினிடத்தினின்றும் என்றது முதல் இப்படி உபநிஷதம் என்ற வரைக்கும் விரிவாக வுரை செய்யப்பட்டிருக்கின்றது. அது இதற்கு மேல் சங்கிரகித்துச் சொல்லப்படும் இவ்விடத்தில் சத்தியஞ்ஞானம் அனந்தம் பிரஹ்மமென்பதில் யாதொரு அனந்தத் தன்மை கூறப்பட்டதோ அது கூடாது. என்னவெனில் பரிச்சேதமாயுள்ள விண் முதலிய பூத பௌதீகப் பிரபஞ்சமிருத்தலால் என்ற சங்கையை நீக்குதற் பொருட்டு அந்த பிரஹ்மத்தினின்றும் சிருஷ்டியைக் கூறுகின்ருர்]

| | | |
|---|---|---|
| மெய்ஞ்ஞானபரத்தில் | சத்தியக்ஞான வடிவ பிரஹ்மத்தினும் | |
| வேறு அறும் சத்திமிச் சிரமித்த ஆன்மாவின் | பின்னமின்றிய சத்தியோடுங் கூடிய ஆன்மாவிடத்தில் | |
| அபஞ்சீகரித்துஉள வான் மாலைப்பைஞ் ஞாகம்போல தோன்றப்படும் | அபஞ்சிகிருத ஆகாசமானது மாலையினிடத்துப் படத்தை யுடைய சர்ப்பத்தைப் போன்று உற்பத்தியாகும். | 18 |

வாயு வென்னும் பெயருடைய பரிசம் வானத் துண்டாயத்
தேயு வதிலே தோற்றிற்றிவ் வனலி லப்பு முண்டாயத்
தோய மதனி லவனியாய்ச் சூக்க மைந்தும் பஞ்சிகரித்
தூய விறைவன் ஆக்கினையால் தூல பஞ்ச பூதமுமாம். 19

(இ – ள்)

| | |
|---|---|
| வானத்து | அவ்வாகாச (உபகித சேதனத்தினின்றும்) |
| வாயு என்னும் பெயர் உடைய பரிசம் உண்டாய் | வாயு வென்னும் பெயருடைய பரிச தன் மாத்திரையான துண்டாயது |
| அதிலே அத்தேயு தோன்றிற்று | அவ்வாயு (வுபகித சேதனத்தினின்றும்) ரூபதன் மாத்திரையான அக்கினி தோன்றிற்று |
| அவ் வனலில் அப்பு உண்டாய் | அவ்வக்கினி (யுபகித சேதனத்தினின்றும் இரசதன் மாத்திரையான) அப்பு தோன்றிற்று |
| அத்தோயம் அதனில் | அவ்வப்பு வுபகித சேதனத்தினின்றும் |
| அவனி ஆய் | (கந்ததன் மாத்திரையான) பிருதிவி தோன்றிற்று. |

[இப் பஞ்ச பூதங்களின் சத்துவாம்சத்தில் அந்தக் கரண ஞானேந்திரியங்களையும் இரஜோம்சத்தில் பிராணாதி கர்மேந்திரியங்களையும் சிருஷ்டித்து எஞ்சிய தமோம்சத் தால் தூல பஞ்ச பூதத்தைச் சிருஷ்டிப்பாய் என இறை வன் கூற]

| | |
|---|---|
| தூய இறைவன் ஆக்கினையால் சூக்கம் ஐந்தும் பஞ்சிகரித்(து) | பரிசுத்த பரமேஸ்வரனுக்கினையால் தாமோம்ச சூக்ஷ்ம பஞ்ச பூதங்கள் (என்னல்) பஞ்சீகரிக்கப்பட்டு |
| தூல பஞ்ச பூதமும் ஆம் | பஞ்சீகரண பஞ்சமகா பூதங்களாயின. |

(வி-ரை) சமுத்திரத்தில் அலை திவலை நுரை குமிழிகள் முதலான காரியங்களும் மண்ணில் கடாதி காரியங்களும் தத்தங் காரணங்களுக்கு கிஞ்சிற்றும் வேருகாது காரணமாகவே யிருப்பது போலவே ஆன்மாவினின்றுண்டான ஆகாசாதிகள் ஆன்மாவுக்கு அன்னியமாக கிஞ்சிற்றும் இராதபடியால் பரிச்சின்னம் வரமாட்டாது என்பதாம். 19

பரமனுக் கினையி னலே பஞ்சபூ தங்க ளாலே
பிரமாண்டம் படைத்தே னந்தப் பிரமாண்ட மத்தி னுள்ள
திரமுறு முலகு தேவ சாதியுந் தாந்தாங் பண்ணும்
கருமரு பத்தால் வான வாதியும் பிறவுங் கண்டேன். 20

(இ – ள்)

| | |
|---|---|
| பரமன் ஆக்கினையினல் பஞ்ச பூதங்களால் | பரமேஸ்வரர் ஆக்கினையினலும் பஞ்சீகிருத பஞ்சமகா பூதங்களாலும் |
| பிரமாண்டம் படைத்தேன் | பெரிய அண்டகோடிகளைச் சிருஷ்டித்தேன் |
| அந்த பிரமாண்டத்தினுள் | அப் பெரிய அண்டங்களுள் |
| திரம் உறும் உலகும் | (பிரளயம் வரை) திதி பெற்ற உலகங்களும் |
| தாம்தாம் பண்ணும் | தாங்கள் தாங்கள் அனுஷ்டியா நின்ற |
| கருமரூபத்தால் | புண்ணிய வடிவ (விசேஷ)த்தாலடையப் பெற்ற |
| தேவசாதியும் வானவ ஆதியும் பிறவும் கண்டேன் | கர்மத் தேவர்கள் முக்கியத் தேவர்கள் முதலியோர்களையும் ஏனையவற்றையுஞ் சிருஷ்டித்தேன். |

20

(அ – கை) பஞ்சகோச விசாரத்தினுல் பிரத்யக பின்ன பரமாத்மாவை கோசங்களினின்றும் வேறு பிரித்து அறிந்துய்யும் பொருட்டு அதிகாரிகளுக்கு சுருதியில் பிரதிபாதித்ததை கூறுகின்ருர்

யாதொன் றெலும்பு நரம்புமுத லிந்த வுடம்ப தன்னமயன்
ஓது பிராண மயனத்துக் குள்ளாய்வேரு யேயொளிரும்
ஓது பிராண மயற்கயலா யுள்ளா யொளிரு மனேமயனந்
நீதி யுறவிஞ் ஞானமய னவனுக்குள்ளாய் நிகழுமால். 21

(இ – ள்)

| | |
|---|---|
| எலும்பு நரம்பு முதல் யாது ஒன்று இந்த உடம்பு | சர்மம் உதிரம் மாமிசம் நரம்பு எலும்பு மச்சையெனச் சொல்லப்பட்ட யாதொரு தூலசரீர தாதான்மிய முண்டோ |
| அது அன்ன மயன் | அவனே அன்னமய கோச அபிமானியாம் |
| அத்துக்கு உள்ளாய் வேருய் ஓது பிராண மயன் ஒளிரும் | அவ்வன்னமயனினும் ஆந்தரமாயும் பின்னமாயும் (ஜீவன ஏதுவாகக்) கூறிய பிராணமயகோச அபிமானி விளங்குவான் |
| ஓது பிராண மயற்கு அயலாய் உள்ளாய் | கூறிய பிராண மயனினும் பின்னமாயும் ஆந்தரமாயும் |
| மனே மயன் ஒளிரும் | மனே மயகோச அபிமானி விளங்குவான் |
| அந்நீதி உற அவனுக்கு உள்ளாய் விஞ்ஞான மயன் நிகழும் | முற்கூறிய முறையாக அம்மனே மயனினும் ஆந்தரமாயும் பின்னமாயும் விஞ்ஞானமய கோச அபிமானி விளங்குவான். 21 |

(ஆல் – ஏ – அசை)

அன்னியமாய் விஞ்ஞான மயனுக் குள்ளாம்
ஆனந்த மயனன்ன மயன்றன் னுள்ளாய்
மன்னியவப் பிராணமய னுலே பூர்ணன்
மனேமயனுற் பூர்ணனவன் மனேம யன்ருன்

அன்னவகை விஞ்ஞான மயனுற் பூர்ணன்
ஆனந்த மயனுலே அவன்ருன் பூர்ணன்
தன்னிகரற் றனைத்திினுக்கும் உள்ளாய் வேருந்
தற்பதத்தாற் பூர்ணனது தானே பூர்ணம். 22

(இ - ள்)

| | |
|---|---|
| விஞ்ஞான மயனுக்கு உள்ளாம் அன்னியமாய் ஆனந்தமயன் (ஒளிரும்) | விஞ்ஞான மயனினுமாந்தர மாயும் பின்னமாயும் ஆனந்தமய கோச அபிமானி விளங்குவான் |
| தன்னுள்ளாய் மன்னிய அப்பிராணமயனுல் அன்னமயன் பூர்ணன் | (அன்னமயனுய) தனக்கு ஆந்தர மாயும் (பின்னமாயும்) பொருந்திய அந்தப் பிராணமயகோச அபிமானியால் அன்னமயன் பூர்ணன் |
| மனேமயனுல் அவன் பூர்ணன் | (வேருயும் உள்ளாயுமிருக்கிற) மனேமயகோச அபிமானியால் பிராணமயன் பூர்ணன் |
| மனேமயன் அன்னவகை விஞ்ஞான மயனுல் பூர்ணன் | மனேமயன் முற்கூறிய வழியே (உள்ளாயும் வேருயும் உள்ள) விஞ்ஞான மயகோச அபிமானியால் பூர்ணன் |
| அவன் ஆனந்த மயனுல் பூர்ணன் | அவ்விஞ்ஞான மயற்குஉள்ளாயும் வேருயும் உள்ள ஆனந்தமய கோச அபிமானியால் பூரணன் |
| தன்னிகர் அற்று அனைத்தினுக்கும் உள்ளாய் வேரும் தற் பரத்தால் (ஆனந்த மயன்) பூர்ணன் | தனக்கிணையின்றிச் சர்வாந்தர மாயும் சர்வத்திினும் பின்னமாயு முள்ள அந்தப் பிரஹ்மத்தால் (ஆனந்தமயகோச அபிமானி) பூர்ணன் |
| அதுதானே பூரணன் | அந்தப்பிரஹ்மம் சுயமே பூரணமாம். 22 |

(தான் - தான் - ஏ - அசைகள்)

(வி – ரை) இவ்வைங்கோசங்களில் அன்னமய கோசம் மாதா பிதாக்களுண்ட அன்னத்தினுலாகிய சுக்கில சுரோணிதங்களால் மாதாவினுதரத்திலிருந்துற்பத்தியாகிறது. பிறந்தபின் பால் முதலிய அன்னத்தால் வளர்கிறது. மரணத்தின் பின் அன்னமாகிய பிருதிவியில் ஒடுங்குகிறது. அதனுல், இதுவே அன்னமயகோசமாம். இந்த தூல தேகமாகிய அன்னமய பட்சிக்கு இதுவே (பிரசித்தமாயுள்ளதே) சிரசாம். வலது புஜம், வலது சிறகாம். இடது புஜம், இடது சிறகாம். இது (மத்திய தேகத்தின் பாகம் அங்கங்களின்) ஆத்மாவா (சொரூபமா)ம் இது. (நாபிக்குக் கீழ் அங்கம்) புச்ச (வால்) வடிவப் பிரதிஷ்டையாம் (ஆதாரமாம்) இது போகஸ்தானமாம்.

கன்மேந்திரியங்களைந்தும், பிராணுதி வாயுக்களைந்தும், இப் பத்து தத்துவங்களும் சேர்ந்து பிராணமய கோசமெனப்படும். இப்பிராணமய கோச பட்சிக்குப் பிராணனே சிரமும், வியானன் வலது சிறகும், அபானன் இடது சிறகும், ஆகாயம் (சமானவாயு ஆத்மாவு (மத்திய பாக சொரூபமு) மாம். பிருதிவி புச்ச (வால்) வடிவப் பிரதிஷ்டையாம். எதனுல் தேகத்தின்கணிருத்தல் வடிவ பிராணனுக்குப் பிருதிவி வடிவ தேவதை ஸ்திதிக்கு ஏதுவாயிருத்தலின் தாரணஞ் செய்வதாயிருக்கின்றதோ அதனுல் பிரதிஷ்டையாம். இது கிரியா சக்தியுள்ள காரிய ரூபம்.

ஞானேந்திரியங்களைந்தும், மனமாகிய ஆறு தத்துவங்களும் சேர்ந்து மனோமய கோசமெனப்படும். இம் மனோமய வடிவ பட்சிக்கு எசுர்வேதமே சிரமும், இருக்கு வேதம் வலது சிறகும், சாம வேதம் இடது சிறகும் ஆதேஷம் (உபநிஷத் முதலிய பிராமண பாகம்) ஆத்மாவாம். அதர்வண வேதம் புச்ச வடிவ பிரதிஷ்டையாம். எழுத்துக்கள் உச்சாணரத்தின் பிரயத்தனம் நாதம் ஸ்வரம் என்னுமிவற்ருல் நிறைந்த பதத்தினையும், வாக்கியத்தினையும் விஷயஞ் செய்வதாகிய அவற்றின் (ஸ்தான முதலியவற்றின் பாவனையுடைய மனத்தின் விருத்தி எதுவோ அது சுரோத்திர வாயிலாக எசுர்வேதத்தின் சங்கேதத்தால் விசிட்டமாய் எசுர்வேதமென்று சொல்லப்படுகிறது. இவ்வாறே இருக்குவேதமுளது. இவ்வாற்

ருல் மந்திரங்களுக்கு மனோவடிவத் தன்மையுளதாக மனதின் விருத்தியே ஆவர்த்தனஞ் செய்ய (திருப்ப) ப்படுகிறது. இதனுல் மானசசெபம் சம்பவிக்கிறது. இவ்வாற்ருல் மனோமய கோசத்திற்கு வேதரூபத் தன்மை தைத்திரீயத்தில் சொல்லப் படுகிறது. இது இச்சா சக்தியுள்ள கரண ரூபம்.

ஞானேந்திரியங்களைந்தும், புத்தியுமாகிய ஆறு தத்துவங்களும் சேர்ந்து விஞ்ஞானமய கோசமெனப்படும். இந்த விஞ்ஞானமய கோச வடிவ பட்சிக்குச் சிரத்தையே சிரமாம். ருதம் (சத்தியம் பேசுதற்கேதுவான விருத்தி) வலது சிறசாம். சத்தியம் (சமதரிசனம்) இடது சிறகாம். யோகம் (சித்த வொருமையே) ஆத்மாவாம். மக தத்துவம் (சமஷ்டி புத்தி) புச்சரூப பிரதிஷ்டையாம் (கொடிக்கு ஆதாரமாகிய பிருதிவியினைப்போலப் புத்திக்கு ஆதாரமாம். ஈண்டு மனோமயத்திற்கு வேதரூபத் தன்மையும், விஞ்ஞான மயத்திற்கு சிரத்தாதி வடிவத் தன்மையும் சொல்லப்பட்டது. அது அதிகாரியின் மனபுத்திகளால் நிகழ்வதாயிருத்தலின் சொல்லப்பட்டதாம். இது ஞான சக்தியுள்ள கர்த்தா ரூபம்.

பிராணமயம் கேவலம் இரஜோகுணவஸ்தையாம். மனோமயம், இரஜோகுணத்தோடு கூடிய சத்துவகுணவஸ்தையாம். விஞ்ஞானமயம், கேவலம் சத்துவகுணவஸ்தையாம். இம் முக்குணவஸ்தையின் பேதத்தால் ஓரே லிங்க தேகம் மூன்று கோசங்களாக கற்பனை செய்யப்பட்டது.

ஆத்மாவின் சொரூபவடிவ ஆனந்தத்தின் பிரதிபிம்பத்தோடு கூடிய பிரிய மோதப் பிரமோத வடிவ விருத்திகளின் லயத்திற்கு ஸ்தானமாகிய காரண தேக மெதுவோ, அது ஆனந்தமய கோசமெனப்படுகிறது. இஷ்ட விஷயத்தின் தரிசனத்தால் உண்டாகும் விருத்தி பிரியமாம். அதன் லாபத்தால் உண்டாகும் விருத்தி மோதமாம். அதன் போகத்தால் உண்டாகும் விருத்தி பிரமோத விருத்தியாம்.

இவ்விருத்திகள் ஜாக்கிர சொப்பனங்களில் புண்ணிய கர்மத்தின் பலமாகிய சுகத்தின் போக காலத்திற்ருேன்றி அப் புண்ணிய பல போகத்தின் அபாவ காலத்தில் அவ் விருத்திகள் தமது காரணமாகிய அஞ்ஞானத்தில் ஓடுங்குகின்றன. அவ்வஞ்ஞானம் ஆனந்தமய கோசமாம்.

இவ்வானந்தமய கோச வடிவ பட்சிக்குப் பிரியவிருத்தி சிரம் மோத விருத்தி, வலது சிறகாம். பிரமோத விருத்தி, இடது சிறகாம். இவ்விருத்திகளின் பிரதிபிம்ப வடிவ விஷயானந்தம் இதன் ஆத்மாவாம். பிம்பமாகிய ஆனந்தவடிவப் பிரஹ்மம் புச்ச வடிவப் பிரதிஷ்டையாம் (ஆதாரமாம்) இது போக்தா ரூபம்.

ஈண்டு அன்னமய கோசத்திற்குச் சிறகு வால் முதலியவற்றிற்குச் சமானமான அவயவங்கள் பிரசித்தமாம். ஆதலால் அதனது பக்ஷித் தன்மையின் உருவகமும் பிரசித்தமாம். கருவில் விடப்பட்ட உருக்கிய தாம்பரத்தின் பிரதிமைபோல பிராணமய முதலிய கோசங்களுக்கு உருவகம் சித்திக்கிறது. கோசங்களின் பக்ஷியின் ஆகாரத்தைக் கற்பித்தல் எதுவோ, அது பாகிய விஷயங்களின் ஆசக்தி (ஆசை)யை நிஷேதித்தற் கேதுவான புத்தியை ஆத்மாவில் நிறுத்துதற் பொருட்டாம்.

அதெப்படி யெனில் யாது யாது பாகியம் அது அது அனாத்மா யாது யாது ஆந்தரம் அது அது * ஆத்மா வென்னும் தாற்பரியத்தால் தாரபுத்திராதிகளைக் குறித்து அன்ன மயன் ஆத்மா அன்னரசமயனைக் குறித்து தாரபுத்ராதிகள் அனாத்மா அப்படியே மற்ற கோசங்களுக்கும் அறிக அன்ன ரசமயாதி கோசங்களுக்குள் ஆந்தர ஆந்தர கோசத்தைக் குறித்து பாகிய பாகிய கோசங்கள் அனாத்மா ஆதலே யன்றி கோசரூபமாகவு மிருக்கின்றன அது பிராணமயத்துக்கு அன்னரசமயன் கோசமாயிருப்பது போலும் கோசத்தில் தாதான்மிய ஆன்மாவையே இங்கு கோச சப்தத்தால் கூறினர் இவ்வாறு கோசங்களை ஒன்றுக்கொன்று விலக்ஷணாந்தரபூர்வகமாகக் கூறியது அவற்றினுபாசனார்த்தமன்று மற்றோ கோச வியல்பறிந்து அவற்றின் விசார பூர்வகம் அவற்றிற்கு ஆந்தர விலக்ஷண ஆதார பூதமான ஆத்மசாக்ஷாத் காரத்திற்கே யாம்.

---

* பிராணனின்றி தேகம் நிலையாது சங்கற்பவிகற்பமனமின்றி பிராணனசையாது பிரபஞ்ச ஞானமின்றி மனமில்லை அஞ்ஞான காரிய ரூபமின்றி உலக ஞானமில்லை அதனால் ஆத்மாவாம்.

சச்சி தானந்த மாகியொன் ரும்பரம் பிரமம்
புச்ச மென்றுரைத் திடப்படு மிரதமப் பொருளே
யிச்ச தானந்த மெய்திய யாவனெவ் விடத்துத்
துச்ச வாக்கையின் றுயறுத் தவன்சுகம் பெறுமால் 23

(இ - ள்)

| | |
|---|---|
| சச்சிதானந்தம் ஆகிய ஒன்றும் பரப்பிரமம் | சச்சிதானந்த ஏகரசமாகிய மேலான பிரஹ்மமானது |
| புச்சம் என்று உரைத் திடப்படும் | பிரஹ்மபுச்சம் பிரதிஷ்டை (ஆதாமதிஷ்டான மென்று சுருதியில்) சர்வாந்தரமாகக் கூறப்படும் |
| அப்பொருளே இரதம் | அச்சர்வாந்தரப் பிரஹ்மமே நிரதிசயானந்த வடிவமாம் |
| இச்சதானந்தம் எய்திய அவன் யாவன் | அவ்வேக ரசபிரஹ்மத்தை சுவாத்மாவாக அறிந்த வித்வான் எவனோ அவன் |
| எவ்விடத்தும் துச்ச ஆக்கையின் துயர் அறுத்துச் சுகம் பெறும் | யாண்டும் அற்பமான பிறவித்துன்பத்தை யொழித்து பிரஹ்மானந்தமடைவான். (ஆல் - அசை) 23 |

(அ-கை) சுருதியில் யாதொரு இத்த சிதானந்தம் இல்லாவிடில் எவன் சேஷ்டிப்பன் எவன் சீவிப்பன் எனக் கூறிய ஆத்ம சுதந்தர இருப்புத் தன்மை யங்கீகரிக்கத்தக்கதெனக் கூறுகின்றார்.

இன்ப மாம்பரம் இலதெனி லேவனுண் டாகுமே
தெவன்செய்வான்
றுன்ப மேதனக் கியல்பதாய்த் துயர்க்கடல் இடைப்படு
முயிர்தன்னைத்
தன்ப ரம்பெருங் கருணையாலி ரதமாய்ச் சார்ந்தவ னுளத்தேநின்
றின்ப மேவுற வளித்திட லிறைவனுக் கியல்பதெப்
படியாலும் 24

(இ – ள்)

| | |
|---|---|
| இன்பமாம் பரம் இலது எனில் | சர்வப்பிராணிகளுடைய சரீர மத்தியில் பரவியோமமென்னும் சம்ஞையுடைய அவ்வியாகிருத ஆகாசத்தின் கணணே சுவாத்ம பூதமாயும் நிரதிசயானந்த ரூபமாயுமிவ்வாத்மா இலதெனில் |
| ஏவன்உண்டாகும் ஏது ஈவன் செய்வான் | எப்புருடன் சீவிப்பான் எப்புருடன் எச்சேஷ்டை செய்வான் (செய்யானென்க) |

[எப்படியிப் பிரத்யக பின்ன பரமாத்மாவுக்கு ஆனந்த ரூபத்தன்மை எனின் துயரப்படுகின்ற சீவர்களை தன் கிருயையால் சுகப்படச் செய்தலினுலெனக் கூறுகின்ருர்.

| | |
|---|---|
| துன்பமே தனக்கு இயல்பதாய் துயர் கடல் இடைப்படும் உயிர்தன்னை | துக்கமே தனக்குச் சொரூபமாய் துன்ப சாகரத்தில் ஆழ்ந்த சீவினை |
| இறைவனுக்கு தன் பரம்பெரும் கருணையால் | பரமேஸ்வரனுக்கு தனது மேலான அபார காருண்யத்தால் |
| அவன் உளத்தே இரதமாய் சார்ந்து நின்று | அச் சீவனது இருதயத்தின் கண் ஆனந்த வடிவமாய்ப் பொருந்தி நின்று |
| இன்பம் மேவுற அளித்திடல் எப்படியாலும் இயல்பு | சுகமடையுமாறு அனுக்கிரகித்தல் எவ்வாற்ருலும் பாவமேயாம். (அது பகுதிப் பொருள் விகுதி) 24 |

(அ–கை) பயாபய ஏதுத்தன்மையாலும் பிரஹ்மத்தின் இருப்புத் தன்மை சுருதியில் சமர்த்திக்க (சிந்தாந்திக்க)ப் பட்டுள்ளது. அதை சங்கிரகிக்கின்ருர்.

யாதொரு பொழுது காட்சி முலலில தாம்ப ரத்தில்
பேதம தறவு ணர்ந்தான் அப்பொழு தபய ஞகி
கோதிலா வமுர்த மெய்தும் கூடுமேற் சிறிது பேதம்
சாதலும் பிறப்பு மச்சம் சார்தலுஞ் சங்கை யில்லை. 25

(இ - ள்)

| | |
|---|---|
| யாது ஒருபொழுது காட்சி முதல் இலது ஆம்பரத்தில் | எக்காலத்தில் அதிருசிய (அனுத்மிய அநிருத்த அனிலய மான) பிரஹ்மத்தினும் |
| பேதம் அற உணர்ந்தான் | பின்னமின்றி தன்னை யறிந்தானோ |
| அப்பொழுது அபயன் ஆகி | அக்காலத்தில் பயமற்றவனாய் |
| கோதிலா அமிர்தம் எய்தும் | தோஷமற்ற அமிர்தப் பிராப்தியைப் பெறுவான் |
| சிறிது பேதம் கூடுமேல் | கிஞ்சித் பேதப் பிரதீதியிருக்கு மேல் |
| சாதலும் பிறப்பும் அச்சம் சார்தலும் சங்கை இல்லை. | மரணமுஞ் செனனமும் பயமும் உண்டாம் என்பதில் சமுசயமில்லையாம். |

(வி-ரை.) அதிரிசயம் = திருசயமில்லாதது + அனுத்மியம் = (ஆத்மியம் ஆத்ம சம்பந்தி) அது தூல சரீரமில்லாதது + அநிருத்தம் = (நிருத்தம் அபஞ்சீகிருத காரியமாக நிரூபிக்கப்படுவது) அது சூக்ஷ்ம சரீரமில்லாதது + அநிலயனம் = (நிலயனம் காரியங்கள் லயித்தற்கு ஏதுவாயிருப்பது) அது காரண சரீரமில்லாதது. 25

(அ-கை.) பிரஹ்மத்திற்கு எவ்விடத்திலும் சமமாக விருக்குந் தன்மையிருந்தாலும் பக்ஷபாதங் கூடாமையாலும் பேத தெரிசிகளுக்கு அபயப்பிராப்தி யேனுண்டாகவில்லை யென்னுமிடத்துக் கூறுகின்றார்.

தானெ லாவிடத்திலுமுள தாகிலுஞ் சாங்கரி யஞ்சேர்ந்த
வீன சாதியைக் குறித்திது வெளிப்படா திருக்குமே எப்போதும்
ஞான மேமுயல் பவர்க்குநற் பரம்பரன் நற்பரம் பதமேதான்
ஆனவா றறிந் திடும்படி கேவல மருளினால் வெளிப்படும். 26

(இ - ள்)

| | |
|---|---|
| தான் எலாவிடத்தி லும் உளது ஆகிலும் | சத்தியாதி லக்ஷணமுடைய பிரஹ்ம மானது பேததரிசிகளுக்கும் அபேத தரிசிகளுக்கும் ஆகிய சர்வ ஜீவர்களுடைய இருதயங்களிலும் (ஆத்மத் தன்மையால்) விளங்கப்படுவதாயினும் |
| சாங்கரியம் சேர்ந்த ஈன சாதியைக் குறித்து அது வெளிப் படாது இருக்கும் | ஜிஞ்ஞாசையின்றிய மூர்க்க புருடரை முன்னிட்டு (அனாத்மாகார விருத்தியோடு கலந்த இழிவான அவிவேகிகளைக் குறித்துப்)அப் பிரஹ்மமானது பிரசன்னமாகாது உதாசீனமாயிருக்கும். |
| எப்போதும் ஞானமேமுயல் பவர்க்கு | நெடுங்காலத்திலும் நிரந்தரமும் நேயத்தோடும் ஞானத்தில் *நிஷ்டையுடையவர்க்கு |
| நற்பரம்பரன்தான் நல்பரம்பதமே ஆன வாறு அறிந்திடும்படி | ஆனந்த வடிவ பிரஹ்மமாகிய தான் ஆனந்த வடிவமாயும் சர்வோத்கிருஷ்ட மோட்ச வடிவமுமாயிருக்கும் தன்மையை சாக்ஷாத்கரிக்குமாறு |
| கேவலம் அருளினால் வெளிஆம் | சுயம் கிருபையினாலேயே பிரசன்னமாம். (ஏ. எல். அசை.) 26 |

அங்கமா றுடனே வேதநான் கினையும்
அறியினும் மனனமில் லவனுக்
கெங்குமெப் பொழுதும் பயத்தினுக் கேது
வாயிடு மிறைவனிங் திரன்கால்
செங்கதிர் வாரி தீயமன் றத்தஞ்
செய்தொழில் களிலொருக் காலும்
பங்கியா தொழுகும் பரிசது பரனைப்
பற்றியுண் டாகிய பயத்தால். 27

(இ-ள்)

| | |
|---|---|
| அங்கம் ஆறுடனே வேதம் நான் கினையும் அறியினும் | சடாங்கங்களோடு சதுர்வேதத் தினையும் சம்சயச மற்றுணரினும் |

---

* மனமானது பிரஹ்மாகாரமாய் நிலைத்தவர்க்கு.

| | |
|---|---|
| மனனம் இல்லவனுக்கு இறைவன் | விசாரமில்லாதவனுக்கு பரமேஸ்வரன் |
| எங்கும் எப்பொழுதும் பயத்தினுக்கு ஏது வாயிடும் | எவ்விடத்தும் எக்காலத்தும் பய காரணமே யாவன். |

[கூறப்பட்ட பிரஹ்மத்தினுடைய பயவேதுத் தன்மையைத் திடஞ் செய்யும் பொருட்டு சுருதி அன்னிய மந்திரத்தை உதாகரிக்கிறது அதைச் சங்கிரகிக்கின்றுர்.]

| | |
|---|---|
| இந்திரன் கால் செங் கதிர் வாரி தீ யமன் | தேவராஜன் வாயு சூரியன் வருணன் அக்கினி எமன் (ஆகிய இவர்கள்) |
| தத்தம் செய் தொழில்களில் | தாம் தாம் செய்யவேண்டிய கிருத்தியங்களில் |
| ஒருக்காலும் பங்கியாது ஒழுகும் பரிசது | ஒருகாலமும் தவருது நடக்கும் தன்மையானது |
| பரனைப்பற்றி யுண்டாகிய பயத்தால் | இறைவனை முன்னிட்டுளதாகும் பயத்தினுலாம். |

(அ - கை) நிரதிசயானந்தத் தன்மையால் ஆத்மாவின் அஸ்தித்வம் (இருப்பு) சாதித்து அந்நிரதிசயானந்தம் சார்வ பௌமன்முதல் இரண்ய கற்பாந்தம் நூறுநூறு மடங்கு தராதம்மியமாக இருக்கிறதென்று சங்கிரகித்துக் கூறுகின்றுர்.

தந்த மளவி லரியாதி தம்ப மீருய்ச் செகத்தெல்லாம்
இந்த விறைவன் ஆனந்த லேசத் தாலே யின்புறுமால்
அந்த வந்தப் பதத்தாசை யற்றேர்க் கருளா லுள்ளபடி
தொந்த மறுதன் சொரூபமதா மின்பந்தானே தோன்றுமால் 28

(இ - ள்)

| | |
|---|---|
| அரிஆதி தம்பம் ஈருய் செகத்து எல்லாம் | விஷ்ணு முதல் ஸ்தம்பப்பூச்சி பரியந்தமான உலகத்திலுள்ள உயிர்களனைவரும் |
| தத்தம் அளவில் | சொரூபானந்தம் அபிவியஞ்சகமான தம் தம் உபாதிகளின் மகத்துவ அற்பத்துவங்களினளவாக |

| | |
|---|---|
| இந்த இறைவன் ஆனந்தலேசத்தாலே இன்புஉறும் | அபரோட்ச பரமாத்மாவின் ஆனந்தமாகிய இரசலேசத்தாலேயே சுகத்தை அடைவார்கள் |

[முற்கூறிய பதங்களில் நிராசைவானுய் சுரோத்திரியனுயுள்ள புருடனுக்கு அவ்வானந்தந் தானே தோன்றும் என்னும் சுருதியை சங்கிரகித்துக் கூறுகின்ருர்.]

| | |
|---|---|
| அந்த அந்த பதத்து ஆசை அற்ருேர்க்கு | அவ்வச்சார்வ பௌமாதி பதங்களில் உத்தரோத்ர சாதிசய (பிறப்பிறப்பு)த் தன்மையால் அனித்யத்வத்தை யறிந்து இந்திராதி பதங்களில் நிராசைவானுய் சுரோத்திரியனு யுள்ள அதிகாரிக்கு |
| அருளால் உள்ளபடி | பரசிவத்தினது கிருபையால் எதார்த்தமாக |
| தொந்தம் அறுதன் சொரூபமதாம் இன்பம் | துவந்துவமில்லாத (சம்பந்தமில்லாத) தனது சொரூபமாகிய ஆனந்தம் |

தானே தோன்றும் – சுயமே விளங்கும் (அதாவது சாதனுந்தராபேக்ஷையாலுளதாகிய சுக விசேஷத்தோடு சார்வபௌமாதிகட்கு விளங்குவதுபோலல்லாமல் சுகாகாரமான தனது புத்திக்குச் சாக்ஷியாயிருப்பதுபோல, சர்வானந்தங்கட்கும் சாக்ஷியாய் அதிஷ்டானமாய் சர்வான்மகமாயிருப்பனென்பதாம். 28

(அ-கை) சார்வபௌமன் முதல் இரண்யகற்பாந்தம்தரதம் (பிறப்பிடம்சு) பாவத்திருப்பதாகிய (11) ஆனந்த விசேஷங்கள் ஜலதரங்க புற்புதாதிகள் சமுத்திரத்திற்போல எதனிடத்தில் ஐக்கிய மடைகின்றனவோ அந்த அத்விதீய பிரஹ்மம் பரிச்சேதமுடையது அன்மையால் நிரதிசயானந்த ரூபமாக பவிக்கின்றது என்னும் அபிப்பிராயம் கொண்டு அது சித்திக்கும் பொருட்டு ஜீவேசுரபேதப் பிரமத்தைச் சுருதி நீக்குகின்றது என்று சங்கிரகித்துக் கூறுகின்ருர்.

பருதி நெஞ்சினும் ஒழிந்தவர் நெஞ்சினும் பரனே
கரிய தாகிநின் றறிபவன் காயமே முதலாம்
பொருளை மாய்வுறத் தத்துவ விவேகத்தாற் போக்கி
கரிய தாகிய வீசனைக் கண்டவன் கண்டான் 29

(இ - ள்)

பருதி நெஞ்சினும் — அனுவிருத இரணியகற்பப் பரமேஸ்வரனது இருதயத்திலும்

ஒழிந்தவர் நெஞ்சினும்- ஏனைய ஜீவர்களது இருதயத்திலும்

பரனே கரியதாகி நின்று அறிபவன் — பரமாத்ம தேவனொருவனே சாக்ஷியாக நின்று அறிபவனும்.

[இந்தப் பிரகாரம் விரோத சுபாவமுடைய இச்சீவேசுரர்களின் ஏகத்துவப் பிரதிபத்திப் பிரகாரத்தை (ஞானத்தை) கூறுகின்றார்.]

காயமே முதலாம் பொருளை — தூலதேகம் முதல் மாயை பரியந்தம் சர்வஞ்ஞத்வ கிஞ்சிங்கத்துவாதி விருத்ததருமங்களுக்கு ஏதுவடிவமான பொருள்களை.

தத்துவ விவேகத்தால் மாய்வு உறப்போக்கி — (சாக்ஷியமாதலால் அனுத்மாவாமென்னும்) எதார்த்த விவேகத்தால் (சத்தியத்வபுத்தி) நசிக்குமாறு நீக்கி.

கரியது ஆகிய ஈசனை கண்டவன் கண்டான் — சர்வசாக்ஷியாகிய பரமேஸ்வரனை எவன் சாக்ஷாத் கரித்தானோ அவன் சுவாத்மதரிசியாம்.

உருத்திரன் மான் முதலாகத் தம்ப மீருய்
உளபொருட்கும் சான்ருகு மொருவன் றன்னைக்
கருத்துறத்தர்க் கத்தாலும் மானத் தாலும்
கண்டவன்கண் டவன்றர்க்க மான ஞானம்.
கருத்துறவுள் ளவனுலகி னின்றுந்தன்னைத்
தன்னுலே வேறுபடக் கழற்றிக் கற்றுன்.
உருத்துவரு மங்கமாதி கோச மெல்லாம்
உள்பகிரு மிறைவனரு ளொன்றி னுலே. 30

(இ - ள்)

உருத்திரன்மால் முதல் ஆகதம்பம் ஈருய் உள்ள பொருள்களுக்கும் — ருத்திர நாராயணுதி பரசிவ அவதார விசேஷமான லீலாவிக்கிரக தாரிகட்கும் ஸ்தம்பாந்தமுள்ள பொருள்களனைத்திற்கும்.

சான்று ஆகும் ஒருவன் தன்னை — சாக்ஷி சின்மயனுன ஒப்பற்ற பரசிவனை.

| | |
|---|---|
| மானத்தாலும் தர்க்கத்தாலும் கருத்து உறக்கண்டவன் | பிரமாண தர்க்கங்களாலுளதாகிய (ஞானத்தால்) இருதய தேசத்தில் (பிரத்யகபின்னபிரஹ்மமாகப்) பார்த்தவன் எவனே. |
| கண்டவன் | – அவனே தத்துவ தரிசியாவன், |

[நிரதிசய நிர்விகார சச்சிதானந்த ஏகரச பிரஹ்மாஸ்தித்துவம் கூறப்பட்டதனுல் அது அசத்தோ சத்தோ என்னும் ஆசங்கையை நிராகரித்து வித்வானும் அதனை அடையமாட்டானே அடைவானே என்ற வினுவுக்கு விடையாக இவ்வண்ணம் அறிந்தவன் எவனே அவன் ஒருவனே அறிந்தவன் என்றது முதல் ஆனந்தமயனை உபசங்கரிக்கின்ருன் என்றது ஈருக சொன்ன சுருதியின் பொருளைக் கூறுகின்ருர்]

| | |
|---|---|
| மான தர்க்க ஞானம் கருத்து உற உள்ளவன் | பிரமாண தர்க்கங்களாலுளதாய பிரஹ்மான்ம ஐக்கிய ஞானத்தை இருதயத்துடைய பிரஹ்ம வித்தானவன் |

[எந்தக் கிரமமாக அடைந்தானெனிற் கூறுகின்ருர்]

| | |
|---|---|
| உலகில் நின்றும் | திருஷ்டாதிருஷ்ட இஷ்ட விஷயமான பிருதிவி அந்தரிக்ஷ சுவர்க்காதியுலகங்களினின்றும் |
| தன்னைத் தன்னுலே வேறுபடற் கழற்றிக் கற்ருேன் | அன்ன ரசமய ஆன்மாவாகிய தன்னை (தூல தேகத்தை) புத்தியினுலே பின்னமாகும்படி விசாரித்தறிந்து |

[அன்னமயமாக பவித்துப்பின் ஆந்தரமான பிராணமயாதி ஆத்மாவை அவலம்பித்து (சார்ந்து) என்றபடி]

| | |
|---|---|
| உருத்துவரும் அன்னுதி கோசம் எல்லாம் | ஆபாசனுக்கு விஷயமாக விளங்காநின்ற அன்னுதி கோசமனைத்தையும் (அனுத்மா வென்றறிந்து உபேக்ஷித்து) |
| உள் | சர்வாந்தரமாயும் (பிரம்மபுச்ச பிரதிஷ்டை யென்பதனுலும் சகல ஜெகத் கற்பனுஸ்பதமாயும் சத்திய ஞானுனந்தமாயும் உள்ள பிரஹ்மத்தை.) |

| | |
|---|---|
| இறைவன் அருள் ஒன் றிஞலேயே பகிரும் | சிவப்பிரசாதமொன் றிஞலேயே பிறித்தறிவனென் பதாம் |

(அ – கை) அத்விதீய நிரதிசயானந்த அபயப் பிரஹ்மப் பிராப்தியானது ஞானமாத்திர சாத்தியமென்று தன்ஞல் கூறப்பட்ட பொருளில் சம்வாத நிமித்தமாக எதில் நின்றும் வாக்குகள் மனத்தோடு எட்டாமல் திரும்பிவிடுகின்றனவோ அதை அறிந்தவன் ஓரிடத்தும் பயத்தை அடையான் என்று சுருதியிற் கூறிய பொருளே இரண்டு செய்யுளால் கூறுகின்ருர்.

விளம்பும் வாக்கு யாதொன்றின் பக்கற் செல்லா தேமீளும்
விளம்பும் வாக்குத் தான்விளம்ப விசேட மொன்றும்
பெருமையிஞல்
விளம்பல் வாதம் சிறிதில்லே விசேடம் பெறிலே விசேடமாம்
விளம்ப லாவ தறுஞ்சிவனே யுரையால் விளம்பும் பரிசென்ஞே 31

(இ – ள்)

| | |
|---|---|
| விளம்பும் வாக்கு | சொல்லா நின்ற வாக்கிந்திரியமானது |
| தான் விளம்ப விசேடம் ஒன்றும் பெருமை யிஞல் | தான்வசனித்தற்குரிய சாதி குணம் கிரியை சம்பந்தங்களில் யாதொரு விசேடத்தையும் பொருந்தாமையிஞல் |
| விளம்பும் வாக்கு | லௌகிக வைதீக வசனங்களே வசனியா நின்ற வாக்கானது |
| யாதொன்றின் பக்கல் செல்லாதே மீளும் | சொல்லத்தக்கதென்னும் விவாதம் அற்பமும் இல்லேயே |
| விசேடம் பெறிலே விசேடமாம் | யாதேனும் ஓர் விசேடத்தைப் பெறுமேல் சவிசேஷமாமோ (அதஞல்) |
| விளம்பல் ஆனது அறும் சிவனே | வசனிக்குந் தன்மையில்லாத (மௌவுன நிர்விசேஷ) பரசிவத்தை |
| உரையால் விளம்பும் பரிசு என்ஞே | சுருதியாலும் பிரதிபாதிக்குந் தன்மையாங்கணுளது. 31 |

யாதொன்றின்பா லெங்குங்கோ சரமா மிந்த மனஞ்செல்லா
தியாதொன் றின்பாற் செவிமுதலிந் தியங்கள் விடயங்களுஞ்
செல்லா
ஓதுஞ் சச்சி தானந்த வொன்றும் பிரம மதுதன்னை
பேத மறத்தன் வடிவாகப் பெற்று னச்ச மற்றுனல். 32

(இ - ள்)

| | | |
|---|---|---|
| யாது ஒன்றின் பால் | – | எந்த வஸ்துவினிடத்து |
| எங்கும் கோசரமாம் இந்த மனம் செல்லாது | } | சர்வசூக்ஷ்மவஸ்துக்களையும் கோசரியா நின்ற இம்மனமானது தனது விருத்திகளோடு கூடிச் செல்லாது திரும்பிவிடுமோ |
| யாது ஒன்றின் பால் | – | எந்த வஸ்துவினிடத்திலே |
| விடயங்கள் செவி முதல் இந்தியங்கள் செல்லா | } | பராக்கு வஸ்துவிஷயகோசரங்களான சுரோத்ராதி ஞானேந்திரியங்களும் அடையாது திரும்பி விடுமோ |
| ஓதும் சச்சிதானந்த ஒன்றும் பிரமம் | } | சொல்லா நின்ற அஸ்திபாதி பிரிய ஏக ரசமான பிரஹ்மமாம் |
| அது தன்னை பேதம் அற தன்வடிவு ஆகப் பெற்றுன் அச்சம் அற்றுன் | } | அப்பரமான்மாவை அபேதமாக பிரத்தியகான்ம வடிவமாக அடைந்தவனே பயம் நீங்கினவன் ஆவான். (ஆல்=அசை) 32 |

(அ - கை) சுருதியில் பிரஹ்மவித்தை சுபாசுப கன்மங்கள் தபிக்கச் செய்யாது நற்கருமத்தையே நான் செய்யவில்லை. பாவகன்மத்தைநான் எப்படி செய்தவனுவேனென்று இந்தப் பிரகாரத்தை அறிந்தவனுக்குப் புண்ணிய பாவங்களுக்கும் ஆன்மாவாக விளங்கும் என்னும் பொருளைக் கூறுகின்றுர்.

அன்புறு குரவன் அருளினு லிங்கன்
அறிந்தவ னயர்ந்திரு வினையால்
துன்புறுன் றுன்பஞ் செய்வதுந் துன்பம்
துய்ப்பது மாகிய தோற்றம்

முன்பதாம் வேத முடிவுவாக் கியத்தான்
முளைத்தஞா னத்தினன் முற்றும்
இன்பமாந் தன்ன துருவமா யிலங்கும்
இறைமிகு திருவரு ளதனால். 33

(இ - ள்)

| | |
|---|---|
| அன்பு உறு குரவன் அருளினல் இங்ஙன் அறிந்தவன் | கிருபை நிறைந்த ஆசாரியருபதேசத்தாலும் முற்கூறிய விதமாக அறிந்தவன் எவனோ அவன் |
| இருவினையால் அயர்ந்தும் துன்பு உறான் | புண்ணிய பாவ கருமங்களால் மறதியுற்றேனும் கிலேசத்தையடையான். |
| துன்பம் செய்வதும் துன்பம் துய்ப்பதும் ஆகிய தோற்றம் முற்றும் | தாபக (வருத்துகின்ற பாவ புண்ணியங்களும்) தப்பிய (வருந்துகின்ற புருஷ) ரூபமாகி பிரதீதிகள் முழுவதும் |
| முன்பதாம் வேத முடிவு வாக்கியத்தால் | அனுதியாள்ள வேதாந்த மகாவாக்கிய சிரவணத்தாலும் |
| இறை மிகு திருவருள் அதனால் | பரமேஸ்வரருடைய பரிபூரண திருவருட் பிரசாதத்தினுலும் |
| முளைத்தஞானத்தினல் இன்பமாம் தன்னது உருவமாய் இலங்கும் | உண்டாகிய ஞானத்தினுலும் ஆனந்த வடிவப் பிரத்யகான்ம சொரூபமாய் விளங்கா நிற்கும். |

(வி - ரை) அஞ்ஞானிக்கு மரணாவஸ்தையில் சற்கருமஞ் செய்யா தொழிந்தமையின் சுவர்க்காதி லோகப்பிராப்தியின்மையும் பாவ கருமம் செய்தமையின் நரகாதி துக்கப்பிராப்தி யுண்மையையுங் குறித்து, கிலேசமுளதாம், ஞானிக்கோ அஃதின்றும், ஏனெனின் ஞானியின் தேகவியோக காலத்தில் பிராணன் வெளியிற் செல்லாமல் அந்தக்கரண உபகித சேதனத்தில் உலையிரும்புண்ட நீர்போல் சுவரி பரமானந்த கனமாய் நிலைத்திருப்பதாலென்க. 33

(அ - கை) முற்செய்யுளில் அனைத்தும் சுகவடிவப் பிரத்யகான்ம சொரூபமாக விளங்குமென்று சுருக்கமாகக் கூறி இச் செய்யுள் முதல் 41-வது செய்யுள் வரை அதை விஸ்தரித்துக் கூறுகின்றார்.]

செய்வான் செய்விப் பவன்செய்யும் பொருள்செய் கருவிசெய்
தொழிலென்
றைவாய்ப் பொருளும் வெறுமான்மா வாகித் தோன்று
மிறையருளால்
எய்ய மானம் அறிவுபொருள் அறிவோ னென்னப் படுபேதம்
பொய்யா மிறைவன் றிருவருளால் எல்லாந்தானுய் விளங்குமால்

(இ - ள்)

| | |
|---|---|
| இறை அருளால் | பரசிவப் பிரசாதத்தினுல் (இங்ஙன மறிந்த ஞானிக்கு |
| செய்வான் செய்விப்ப வன் செய்யும் பொருள் செய் கருவி செய்தொழில் என்று ஐவாய்ப் பொருளும் வெறும் ஆன்மா ஆகித் தோன்றும் | கர்த்தா பிரேக கர்த்தா (பரமேஸ்வரன்) கிரியை காரியம் கரணம் எனக்கூறும் ஐவகைப் பொருள்களும் கேவலம் ஆன்மவடிவ மாகவே தோன்றும் |
| எய்யா மானம் | அன்னியத்தால் இளையாத பிரமாணமும் |
| அறிவோன் அறி பொருளும் என்னப் பட்ட பேதம் எல்லாம் | பிரமேயமும் பிரமாதவும் (பிரமிதியும்) என்று கூறப்பட்ட பேதங்கள் அனைத்தும் |
| மெய்யாம் இறைவன் திருவருளால் தானுய் விளங்கும் | உண்மைப் பொருளாகிய பரமேஸ்வரனது மேன்மையுற்ற கருணையால் ஆன்மாவாக விளங்கும். (ஆல்-அசை) |

34

துய்க்கும் அவன்றுன் றுப்பிப்பான் றுய்க்கும் பொருடான்
றுய்த்தற்றுன்
கைக்கொள் பொருள்கொள் பவன்கொள்கை கடவுள ருளாற்
றுனேயாம்
மைக்கொள் ஞானம் ஒன்றென்று மாறுஞான மையமுறும்
துய்க்கு ஞான முற்றுமிறை யருளால் தானே யாய்த்தோன்றும் 35

(இ-ள்)

| | |
|---|---|
| துய்க்கும் அவன் துய்ப் பிப்பான் துய்க்கும் பொருள் துய்த்தல் | போக்தா போனஜ்தா (அனுபவிக்கச் செய்பவன் போக்கியம் போகம் |

| | |
|---|---|
| கைக்கொள் பொருள் கொள்வோன் கொள்கை | கிராகியம் கிராககன் கிரகணம் என்னுமிவை யனைத்தும் |
| கடவுள் அருளால் தானேயாம் | பரமேஸ்வரன் பெருங்கருணையால் ஆன்மாவாகவே விளங்கும். |
| துய்க்கும் மைக்கொள் ஞானம் ஒன்று ஒன்று மாறுஞானம் | அனுபவிக்கத்தக்க அஞ்ஞானம் விபரீத ஞானம் |
| ஐயமுறும் ஞானம் முற்றும் | சமுசய ஞானமிவை யனைத்தும் |
| இறை அருளால் | – பரமேஸ்வரப் பிரசாதத்தினல் |
| தானே ஆய்த் தோன்றும் | ஆன்மாவாகவே விளங்கும். |

தான் மூன்றிடத்தும் அசைகள். 35

கடபடகுட் டியமுதலா மிதின்ஞா னங்கள்
கடமதுகுட் டியகுதூல படம தாகும்
தடமலைபா தாளமுத லுலக மற்றை
சத்தியமே முதலான வுலக மெல்லாம்
இடவியமா மலரவன்றன் அண்ட மீதில்
கற்பிதமா மெல்லையிலண் டங்க ளெல்லாம்
கடறடமா றுகண்மற்றுங் கண்ட வெல்லாம்
கடவுளரு ளதனலே தானுய்த் தோன்றும் 36

( இ – ள் )

| | |
|---|---|
| கடபட குட்டியம் முதல் ஆம் இதின் ஞானங்கள் | குடம் வஸ்திரம் சுவர் முதலான இவற்றின் ஞானங்களும் |
| கடமது குட்டியம் கு தூலம் படமது தடமாகும் மலை | கலசம் சுவர் வஸ்திரம் குதிர் விசாலம் பொருந்திய பர்வதங்களும் |
| பாதாளம் முதல் உலகம் | பாதாளம் முதலிய கீழே முலகங்களும் |
| மற்றைச் சத்தியமே முதலான உலகம் எல்லாம் | பின்னும் சொல்லா நின்ற சத்திய லோக முதலிய மேலேழுலகங்களு மாகிய அனைத்தும் |

| | |
|---|---|
| இடவிய மாமலரவன் தன் அண்டம் | விசாலம் பொருந்தியதாயும் பெருமை பொருந்தியதாயும் உள்ள தாமரை மலரின்கண் வீற்றிருக்கின்ற பிரஹ்மாவினுல் சிருஷ்டிக்கப்பட்ட பிரமாண்டமும் |
| ஈதில் கற்பிதம் ஆம் எல்லே இலா அண்டங்களும் | இப் பிரமாண்டத்தினுள் ஜீவ கற்பிதமாகிய அளவிறந்த அண்ட கோடிகளும் |
| கடல் தடம் ஆறுகள் | சமுத்திரம் தடாகம் நதி (நதம்-(ஆண் ஆறு)களும் |
| மற்றும் கண்டனவெல்லாம் கடவுள் அருள் அதனுல் | அவற்றின் இனமாகக் கண்ட மற்றவையனைத்தும் ஈசுவர கிருபையால் |
| தானுய்க் காணும் | ஆன்மாவாகவே விளங்கும். |

(ஏ. அசை  இரண்டிடத்தும் அது பகுதிப் பொருள் விகுதி.)  36

மேரு மந்தர முதலதா மிகுத்தமால் வரைகள்
சாரு மெல்லேயின் றியவனம் வனத்திலுள் ளவைதான்
ருரு வந்தமில் விதங்கள்புற் புதலெலாந் தானுய்
ஏத மின்றிய விறைதிரு வருளினு லிலங்கும்  87

( இ-ள் )

| | |
|---|---|
| மேரு மந்தர முதலாம் | மகாமேருகிரி மந்தர சைலம் முதலாகிய |
| மிகுத்தமால் வரைகள் | உன்னதமும் பெருமையும் பொருந்திய மலேகளும் |
| அந்தம்இல் தாரு விதங்கள் சாரும் எல்லே இன்றிய வனம் | எண்ணிறந்த விருக்ஷ சாதிகள் பொருந்திய அளவிறந்த வனங்களும் |
| வனத்தில் உள்ளவை | அவ்வனத்திலுள்ள கொடி செடிகளும் |
| புல் புதல் எலாம் | – திரணம் பூண்டுகள் அனைத்தும் |

| | |
|---|---|
| ஏதம் இன்றிய | சர்வதோஷ விநிர்முத்தமான (விடுபட்டிருக்கின்ற) |
| இறை திருவருளினல் தானுய் இலங்கும் | ஈசுவரப் பிரசாதத்தினுல் ஆன்மாவாக விளங்கும். (தான்–அசை.) 37 |

வான்முதலாம்பூதங்கள் பௌதி கங்கள்
மன்னுமொலி பரிசமுருச் சுவைநாற் றங்கள்
ஊன்மருவு கிருமிகீடம் பதங்கம்
உலவுபசு விதமோடு மொட்டை யானை
கான்மருவு பரிகரப மநுடர் சித்தர்
கந்தருவ ரரக்கரியக் கர்கடா மிக்க
வான்மருவு தேவகண மெல்லா மற்றும்
மாபரமன் அருட்டனது வடிவாய் தோன்றும் 38

(இ–ள்)

| | |
|---|---|
| வான்முதல் ஆம் பூதங்கள் | ஆகாச முதலிய பஞ்ச பூதங்களும் |
| பௌதிக கங்கள் | – அந்தப் பஞ்சபூத காரிங்களும் |
| மன்னும் ஒலி பரிசம் உரு நாற்றங்கள் சுவை | அப்பூதங்களின் குணங்களாகப் பொருந்திய சப்த, பரிச, ரூப, ரச, கந்தந்தங்களும் |
| ஊன்மருவு கிருமி கீடம் பதங்கம் | தசை வடிவமாகப் பொருந்திய புழுக்கள் வண்டுகள் விட்டில் முதலியவைகளும் |
| உலவு பசு விதமோடு ஒட்டை யானை கான் மருவுபரி கரபம் | சஞ்சரிக்கின்ற பசு வகைகளுடன் ஒட்டகம் காட்டகத்திருக்கும் குதிரைகள் கர்த்தபங்களும் |
| மநுடர் சித்தர் அரக்கர் இயக்கர் கந்தருவர் | மனிதர் அணிமாதி சித்தி பெற்ருேர் யட்சர் அசுரர்கள் கந்தருவர்களும் |
| மிக்க வான் மருவு தேவகணம் | உயர்வு பொருந்திய விண்ணுலக வாசிகளாகிய தேவ கூட்டங்களும் |
| மற்றும் எல்லாமும் | கூறுதொழிந்த ஏனைய வஸ்துக் களாகிய அனைத்தும் |

| | |
|---|---|
| மாப்பரமன் அருள் தனது வடிவாய்த் தோன்றும் | மாக்ஷிமை பொருந்திய பரமேஸ்வரன் பிரசாதத்தால் ஆன்ம சொருபமாகவே விளங்கா நிற்கும் (தாம் அசை.) 38 |

வினைமிகு விண்ணோர் விண்ணவர் விண்ணோர்
வேந்தனும் விராட்டுடன் சுராட்டும்
எனையடைந் தவரென் செல்வமியா னெடுமால்
உருத்திர னீசனற் சிவனென்
றனைவர்தம் பதங்கள் அவர்களை யடைந்தோர்
அவர்கடா மன்னிய மின்றித்
தனைநிக ரில்லா விறையவ னருளாற்
சகலமும் தானெனத் தோன்றும். 39

(இ-ள்)

| | |
|---|---|
| வினை மிகு விண்ணோர் விண்ணவர் விண்ணோர் வேந்தனும் | கர்மத் தேவர்களும் முக்கியத் தேவர்களும் தேவராஜாவாகிய இந்திரனும் |
| விராட்டு உடன் சுராட்டும் | சமஷ்டி தூல சரீராபிமானியாகிய விராட்டோடு சமஷ்டி சூக்ஷூம சரீராபிமானியாகிய சுராட்டும் |
| எனை அடைந்தவர் என் செல்வம் யான் | எனது பத்தர்களும் எனதைஸ்வரியமும் பிரஹ்மாவாகிய நானும். |
| நெடுமால் உருத்திரன் நல்சிவன் என்ற அனைவர் தம் பதங்கள் | திரிவிக்ரமன் ஹரன் மகேஸ்வரன் சிரேஷ்டமான சதாசிவன் என்ற அவர்களது ஐஸ்வரியமும் |
| அவர்களை அடைந்தோர் அவர்கள் தாமும் சகலமும் | அவர்கள் பத்தர்களும் அவர்களும் ஆகிய அனைத்தும் |
| தனை நிகர் இல்லா இறை அருளால் | சமானமின்றிய பரமேஸ்வரனுடைய அநுக்கிரகத்தால் |
| அன்னியம் இன்றித் தான் எனத் தோன்றும் | அபேதமாய் ஆத்மவடிவமாகவே விளங்கும். |

தீதெனும் பொருள்கள் நன்றெனும் பொருள்கள்
　　செய்யலா வனசெயப் படாத
வேதமா முடல மிந்தியம் பிராணன்
　　இசைமனம் புந்தியாங் காரம்
தீதுறு காமம் கோபமே முதலாந்
　　தீயன சாந்திதாந் திகளே
யாதியா நலங்கள் அடையவுந் தானே
　　யாகியே தோன்றுமெய் யருளால். 40

(இ – ள்)

| | |
|---|---|
| தீது எனும் பொருள்கள் நன்று எனும் பொருள்கள் | நிஷேத்யமு (தள்ளுவது) ம் விதேயமு(கொள்வது)மாகிய வஸ்த்துக்களும் |
| செய்யலாவன செயப் படாத | விதி நிஷேதங்களும் |
| ஏதம் ஆம் உடலம் | – தோஷம் பொருந்திய தேகமும் |
| இந்தியம் பிராணன் இசை மனம் புத்தி ஆங்காரம் | இந்திரியம் பிராணன் சங்கற்ப விகற்பம் பொருந்திய மனம் புத்தி அகங்காரங்களும் |
| தீதுஉறு காமம் கோபமே முதலவாம் தீயன | துன்பம் பயப்பதான ஆசை வெகுளி முதலிய துற்குணங்களும் |
| சாந்தி தாந்தி ஆதி ஆம் நலன்கள் அடையவும் | *சம *தம முதலிய நற்குணங்கள் ஆகிய யாவும் |
| மெய்அருளால் | சத்தியசொரூபனுகிய சிவகிருபையால் |
| தான் ஆகியே தோன்றும் | ஆன்ம வடிவமாகவே விளங்கும். 40 |

பேதமாம் சீவ பரங்களு மவர்கள்
　　பேதமு பேதிக்கு மதுவும்
போதமில் சடசத்தியுமதன் பிதையும்
　　போதசத்தியுமதன் பிதையும்

* சமம் – மனத்தைச் சப்தாதி விஷயங்களிற் செல்லாதடக்குதல்
* தமம் – இந்திரியங்களைத் தத்தம் விஷயங்களிற் செல்லாதடக்குதல்

ஓதுமுண் டில்லை யெனவெழு முறையில்
உள்ளதாம் பொருள்களு மிலாதும்
யாதுமவ் விறைவன் அருளினாற் றன்ன
தேகமா முருவமா யெறிக்கும். 41

(இ - ள்)

| | |
|---|---|
| பேதம் ஆம் சீவ பரங்களும் | பேதமுடைய சீவேசுவரர்களும் |
| அவர்கள் பேதமும் | – அன்னவர்களின் பேதமும் |
| பேதிக்கும் அதுவும் | அவர்களை பேதப்படுத்தும் * உபாதிகளும் |
| போதம்இல் சடசத்தியும் அதன் பிதையும் போதசத்தியும் அதன் பிதையும் | ஞானமின்றிய அசேதன சத்தியும் அதனது பேதமும் சேதனசத்தியும் அதன் பேதமும் |
| உண்டு இல்லை என ஓதும் உரையில் எழும் உள்ளதாம் பொருள்களும் இலாதும் | அஸ்தி நாஸ்தி என்று கூறும் சொற்களில் தோற்றுவனவாகிய சத்பதார்த்த அசத்பதார்த்தங்களும் |
| யாதும் அவ்விறைவன் அருளினால் தன்னது ஏகம்ஆம் உருவம் ஆய் எறிக்கும் | ஆகிய அனைத்தும் அப் பரசிவ கிருபையால் தனதத்வைத சொரூபமாகவே பிரகாசிக்கும் |

41

(அ-கை.) இவ்விதமாக சகல செகத்தும் வித்வானுக்குத் தன் சொரூபமாகவே விளங்குமானால் ஆன்மாவுக்குச் சவிசேஷத்வ மடையப்படுமென்ற சங்கைக்கு சமாதானங் கூறுகின்றார்.

* எது வஸ்துவின் சொரூபத்தில் பிரவேசியாமல் வியாவர்த்தகமா (வேறு பிரித்தறிவிப்பதா) யிருக்கின்றதோ அது உபாதியாம். கடமும் மடமும் ஆகாசத்தை பேதப்படுத்துவது போலென்க.

தன்ன தொளியாற் ருன்விளங்கப் படுவா ஞன்மாவெனப் படுவான்
அன்ன வனேயே நானீயென் றறியா நின்ற வவ்வுளத்தே
யுன்ன வரிய வவன்றன்ன துண்மை யுணரா ரொருவர்களும்
பின்ன மில்லா மையிலறிவார் தாமு மறியப் பெற்றிலரால். 42

(இ - ள்)

தனது ஒளியால்தான் விளங்கப்படுவான் } (சாதனாந்தராபேக்ஷையின்றி) தனது பிரகாசசத்தையால் சுயமே விளங்குபவனே

ஆன்மா எனத் தகுவான் } ஆத்மா வென்று கூறப்படுவான்.

[ஆத்மா சர்வசெகத்தின் அதிஷ்டானமாவதால் அதன் சத்தாஸ் பூர்த்தியே சர்வ செகத்திற்கும் ஆம் அக்காரணத்தால் வித்வானுக்கு அனைத்தும் தன் சொரூபமாகவே விளங்குகின்றது ஆரோபித சவிசேஷம் அதிஷ்டான நிர்விசேஷத்தைப் பங்கப்படுத்தாது. இப்பிரகாரம் ஆன்மா சுயம்பிரகாசம் ஆயின் வித்வான்களைப்போல அவித்வான்களும் மோக்ஷமடைவார்களே எனச் சங்கித்துக் கூறுகின்ருர்.]

அன்னவனையே – அந்த ஆத்மாவையே

நான் நீ என்று அறியா நின்ற அவ்வுளத்தே } துவம் அகம் என்னும் சப்தங்களாலும் அவற்றின் அர்த்த விஷயமனோ விருத்திகளாலும் அகங்கார விசிட்டமாம அறியாநின்ற அந்தக்கரணத்தில்

உன்ன அரிய அவன் தன்னது உண்மை } கருதுதற்கு அரியதான அவ்வான்ம தேவனது எதார்த்தத்தை

ஒருவர்களும் உணரார் } எவரும் அறிவுற்றிலர்

பின்னம் இல்லாமையில் } அத்வைதத் தன்மையால்

அறிவார் தாமும் அறியப் பெற்றிலர் } (கருத்துரு கரணா பேக்ஷை கொண்டு விஷயமாக) அறிபவர்களுமுணராதவரே (ஆல்-அசை)

(அ - கை) இங்ஙனமாயின் வித்வான் மாத்திரம் எப்படி அறிவன் என்னில் கூறுகின்ருர்.

அயரு னின்றித் தன்னைத்தா ளுன்மா வாக வறிவுற்ருேன்
இயல்பா லிந்தப் பொருளினையே யென்றும் பாடி யிருக்குமால்
இயல்பா ராலு மறிவரிய வீசன் நடம்போ லியாவர்க்கும்
நயமார் ஞான விநோதன்றன் கீத நலமே நல்கிடுமால். 43

(இ - ள்)

| | |
|---|---|
| தன்னை அயல் இன்றி ஆன்மாவாக அறிவுற்ருேன் | (வித்வான்) பிரத்யகான்மாவை பின்னமின்றிப் பரமாத்மாவாக அறிந்தவனுவன் |

[சுருதியில், இந்தச் சாமவேதத்தை கானஞ்செய்து கொண்டிருப்பவன், என்றது முதல், சுவர்ணச்சோதி, என்றவரைக்கும் கூறிய வித்வானது கானத்தைப் பிரயோஜனமாகக் கூறுகிருர்]

| | |
|---|---|
| இயல்பால் இந்தப் பொருளினையே என்றும் பாடி இருக்கும் | சுபாவமாக இவ்வான்ம பிரபாவத்தையே சதா கீர்த்தித்துக் கொண்டிருப்பான் |
| ஆராலும் இயல்பு அறிவு அரிய ஈசன் நட (ன)ம்போல் | எவர்களாலும் சொரூப சுபாவம் அறியவியலாத பரமேஸ்வர நர்த்தனத்தைப் போல |
| நயம் ஆர் ஞான விநோதன் தன் கீதம் | ஆனந்தாவிர்ப்பாவ ஞான உல்லாசனது கீர்த்தனமானது |
| யாவருக்கும் நலமே நல்கிடும் | சர்வ ஜனங்களுக்கும் சுகரூபமான பிரயோஜனத்தை தருவதாம் |

(இரண்டிடத்து, ஆல், தான், அசை)

(அ - கை) ஞானியினுடைய கீர்த்தனம் சுகவேதுவாந் தன்மையை முற்செய்யுளில் நிருபித்து அதே ஞானத்திற்கு ஏதுவாந் தன்மையை திருஷ்டாந்தவாயிலாகக் கூறுகின்ருர்.

அன்பி ஞலெம் மாதிகுரு வாகு மிறைவன் அருள்கீதை
யின்ப மேசெய் திடலுலகுக் கியல்பா மெவ்வா றவ்வாறே.
முன்பு பரமன் றிருவாக்கான் மொழிந்த கீதைப் பொருளான
பின்பிக் குரவ னருள்கீதை பேரா வின்பம் பிறப்பிக்கும். 44

(இ – ள்)

| | |
|---|---|
| எம் ஆதிகுருவாகும் இறைவன் | எமது முதற் குருவாகிய பரமேஸ்வரன் |
| அன்பிஞல் அருள்கீதை | கிருபையிஞல் திருவாய் மலர்ந்தருளிய கீதையானது (பரமார்த்தப் பிரதிபாதனமாதலால்) |
| உலகுக்கு இன்பமே செய்திடல் | அதிகாரிகளுக்கு ஆனந்த ஏதுவான ஞானத்தை உண்டுபண்ணுதல் |
| எவ்வாறு இயல்பாம் அவ்வாறு முன்பு பரமன் திருவாக்கால் மொழிந்த கீதைப் பொருளான | எப்படிச் சுபாவீகமோ அப்படியே பூர்வம் இறைவன் (கூர்மபுராணத்தில் ரிஷிகளுக்குத்) திருவாய் மலர்ந்தருளிய ஈசுவர கீதார்த்த ரூபமாக |
| இக்குரவன் பின்பு அருள் கீதை பேரா இன்பம் பிறப்பிக்கும் | இவ்வித்வான் பின்னர் கீர்த்திக்கும் கானமானது நீங்காத சுகவேதுவான ஞானேற்பத்தி செய்வதாம் |

(அ – கை) இந்த வுபதேசமானது வாக்கியாந்தரத்திஞலும் பிரசித்தமாதலால் வித்வானுடைய கானமானது சுயுக்தம் எனச் சங்கித்துக் கூறுகின்ருர்.

உலகியல்லால் கீதைக்கும் உவந்தருளு மிறையென்ருல்
இலகியவை திகத்கீதைக் கேன்செய்யா னிறையதஞல்
நலமிகுத்த பொருள்வேண்டில் நலமிகுபத்தியிஞேடும்
பலமிகுநற் கீதைகளே யெப்பொழுதும் பாடுவான். 45

(இ – ள்)

| | |
|---|---|
| உலகு இயல்பாம் கீதைக்கும் | வேறு 'பாஷைகளிலுள்ள பரமார்த்தப் பிரதிபாதக லௌகீக கானத்துக்கும் |

| | |
|---|---|
| இறை உவந்து அருளும் என்ருல் | சிவபெருமான் சந்தோஷித்துத் திருவருள் புரிவானென்ருல் |
| இலகிய வைதிக கீதைக்கு இறை ஏன் செய்யான் | விளங்கா நின்ற சாமகானத்திற்கு பரசிவன் எதைத்தான் செய்யான். (சர்வாநுக்கிரகத்தையுஞ் செய்வன்) |
| அதனுல் நலமிகுத்த பொருள் வேண்டில் | அக்காரணத்தினுல் ஆனந்தமிக்கப் பரமான்மப் பேற்றை விரும்பினுல் |
| நலமிகு பத்தியினேடும்- | நன்மை மிகுந்த பத்தியினுல் |
| பலமிகு நல் கீதைகளே எப்பொழுதும் பாடுவான் | பிரயோஜன மிகுந்துள்ள சிரேஷ்டமான ஆன்ம கானத்தையே சதா கீர்த்திக்கக்கடவன். |

(அ - கை) ஆயின் பிரஹ்மான்ம வைக்கிய ஞானத்தை வைதீக கானத்தாலன்றி லௌகீக கானத்தால் அடைய இயலாதோவெனில் கூறுகின்ருர்.

அறையு மறையா லாகமத்தால் அறியானுகின் மற்றுந்தான்
அறிவ தொருபா டையினுலே யறைவான் என்று மமையாதே
இறையை யடைதற் கேதுவிது விதனுல் பரம யோகெய்தும்
பிறிவொன் றறவே சிவன்றன்னே யோகத்தாலே பெறலாமால்' 46

(இ - ள்)

| | |
|---|---|
| அறையும் மறையால் | - கூறிய வைதீக கானத்தாலும் |
| ஆகமத்தால் | (சூத்திரபாஷியாதி) வியாக்கியானத்தாலும் |
| அறியான் ஆகில் | - தெரியும் திரமில்லாதவனுகில் |
| மற்றும் தான் அறிவது ஒரு பாடையினுல் | வேறும்தான் அறிந்த தாயுள்ள ஒரு திசைச் சொற்களால் |
| என்றும் அமையாதே அறைவான் | எஞ்ஞான்றும் திருப்தியுருது கானஞ் செய்யக் கடவன் |

| | |
|---|---|
| இது இறையை அடைதற்கு ஏது | * இக்கானமானது ஆன்மா சாக்ஷாத்கார வேது வாகும் |
| இதனுல் பரமயோகு எய்தும் | இக்கானத்தால் மேலான பிரஹ் மான்ம வைக்கிய ஞானமுண்டாம் |
| யோகத்தாலே சிவன் தன்னே பிறிவு ஒன்று அறவே பெறலாம் | அந்த ஞானத்தாலே பிரமாத் மாவை கிஞ்சித் பேதமின்றி அபேத மாகவே அடையலாம். (ஆல் – அசை) 46 |

(அ - கை) பிரதிபந்த மிகுதியால் அப்போதே பிரஹ் மான்ம வைக்கியத்தை யடையாவிடினும் காலாந்தரத்தில் ஆவது சென்றடைவானெனவும் பரசிவ விஷயமின்றிய வீணுன கானஞ் செய்வானுகின் பாவியாவன் எனவும் கூறுகின்ருர்.

கீதஞ் செய்தோ னியோகத்தால் கீழ்ச்செய் வினேயின்
பெருமையினுல்
பேத மில்லா விறைகூடப் பெருதே விடினும் பின்சென்றும்
ஆத லாலே யிறைகீதம் அல்லா தெல்லாங் கைவிடுவான்
பேத மையினுல் செய்தானேற் பிராயச் சித்தம்
செயவேண்டும். 47

(இ – ள்)

| | |
|---|---|
| கீழ்செய் வினேயின் பெருமையினுல் | (தான்) பூர்வஞ் செய்துள்ள பாப ரூபப் பிரதிபந்த மிகுதியால் |
| கீதம் செய்தோன் யோகத்தால் | ஆத்மகானஞ் செய்த புருடன் தத்துவக் ஞானவாயிலாக |
| பேதம் இல்லா இறை கூடப்பெருதே விடினும் | அபேதனுகிய பரமேஸ்வரனேடும் ஐக்கியத்தை யடையாது மரிக்கினும் |
| பின் சென்று ஆம் ஆதலாலே | அக்கீதாதி புண்ணிய விசேஷத் தால் பிரதிபந்த நிவாரண வாயி லாக காலாந்தரத்தில் அடைவா னுனபடியால் |

* சர்வ அநான்மாகார விருத்திகளும் நிரோதமாய்ப் பிரஹ்மா காரத்தை யடைந்த அந்தக்கரணத்தின் கண் அது நானென உள தாகும் ஞானமே சாக்ஷாத்காரமாம். அதுவும் இராமனும் கர்னனும் போல் சுபாவசித்தமானதால் படித்தலும் கேட்டலும் ஏதுவாம்.

| | |
|---|---|
| இறைகீதை அல்லாது எல்லாம் கைவிடுவான் | ஆன்மகான மொழிந்த வேளைய கானங்களனைத்தும் கைவிடக் கடவன் |
| பேதமையினல் செய்தானேல் | அறியாமையினல் அனுத்மகானம் புரிந்தானுகில் அந்த துவிஜன் |
| பிராயச்சித்தம் செயவேண்டும் | (அதனிவர்த்தியின் பொருட்டு) பிராயச்சித்த செய்து கொள்ள வேண்டியது 47 |

(அ – கை) முமுக்ஷுவானவன் அநுஷ்டிக்கத் தக்க கிரமத்தையும் இவ்விரகசியத்தைச் சாமான்ய மானவர்கட்கு உபதேசிக்கக் கூடாதென்பதையும் கூறுகின்ருர்.

ஆதலாற் பிறவி யறுக்கவா தரிப்போன்
அருமறைப் பிரமாணத் தாலும்
தீதிலாத் தர்க்க நெறியத ஞலும்
சிவனுடை உணர்வுபெற் றதுவே
கிதமே செய்வான் உபநிட மதனிற்
கிளத்திய பொருளிதிப் பொருளைத்
தீதிலாச் சிவநற் பத்தருக் குரைக்க
வல்லவர் தமக்குரை செய்யா. 48

(இ – ள்)

| | |
|---|---|
| ஆதலால் பிறவி அறுக்கஆதரிப்போன் | ஆனபடியால் சம்சார நிவர்த்தியை விரும்புவோன் |
| அருமறைப்பிரமாணத் தாலும்தீதுஇலாதர்க்க நெறி அதனுலும் | அறிதற்கரிய சுருதிப் பிரமாணத்தி னுலும் குற்றமற்ற சுதர்க்க ரூப † மனனத்திஞலும் |
| சிவனுடை உணர்வு பெற்று | பிரஹ்மக்ஞானத்தை யடைந்து |

† அபேதசாதக பேத பாதக யுக்திகளால் அத்வைத பிரஹ்மத்தைச் சிந்தித்தல் மனனமாம் அவ்வுக்திகள் அறிய விரும்புவோர் 9 ஆம் அத்தியாயம் 4 ஆம் பாட்டின் உரையிலும் கைவல்லியம் பொன்னம்பல சுவாமிகள் உரையில் சந்தேகம் தெளிதற்படலம் 7 ஆம் பாடல் மற்றை முப்பிரமாணத்தால் என்பதின் விசேடவுரையிலும். விசார சாகரம் முதல் தரங்கம் மனன விலக்கண விளக்கவுரையிலும், விருத்திரத்திஞவலி விருத்திப் பிரபாகரம் முதலிய நூல்களிலும் பார்க்கவும்.)

| | |
|---|---|
| அதுவே கீதம் செய்வான் | அந்த ஞான மகிமையையே கீர்த்தித்துக்கொண்டிருக்கக்கடவன் |
| இதுவே உபநிடதமத னில்கிளத்தியபொருள் | இதுவே இந்த உபநிஷத்திற் கூறிய பொருளாகும் |
| இப்பொருளை தீதில்லா நல்சிவபத்தர்கட்கு உரைக்க | குற்றமற்ற நல்ல சிவனடியார் களுக்கு உரைக்கக்கடவன் |
| அல்லவர் தமக்கு உரை செய்யா | அத்தகையர் அல்லாதவர்களுக்கு உபதேசியாதிருக்கக்கடவன். 48 |

மூன்ருவது ஐதரேய உபநிஷதார்த்த சேஷமும் தைத்திரீய உபநிஷதார்த்தமும் உரைக்கும் அத்தியாயம் சம்பூரணம் ஆக விருத்தம் (109)

---

## நான்காவது

## கேனோபநிஷார்த்தம் உரைக்குமத்தியாயம்

(அ-கை) பிரஹ்மாவானவர் முந்திய அத்தியாயங்களில் ஐதரேய தைத்ரீய உபநிஷதங்களின் தாற்பரியத்தைக் கூறி இவ்வத்தியாயத்தில் பிரஹ்மத்வம் உபதேசத்தால் அடையத் தக்கதேயன்றித் தர்க்கத்தால் அடையத்தக்கதன்று என்று காண்பிக்கவேண்டி, சுருதியில் கேள்வி மறுமொழிகளால் பிரஹ்மம் உபதேசிக்கப்படுகின்றது. அவ்வித சங்கை சமாதானங்களை அர்த்தத்திஞல் சங்கிரகிக்கின்ருர்.

இது கவிநாயகர் வாக்கியம்

வான்ரெ டங்கிம லர்ந்தன யாவைக்கும்
சான்ற தாமறி வைத்தன் னருளிஞற்
ரேன்று சோதியைச் சொல்லுவ னென்றெலாம்
ஈன்ற வன்னிமை யோர்கட் கியம்பிஞன். 1

(இ-ள்)

| | |
|---|---|
| வான்தொடங்கி மலர்ந்தன யாவைக்கும் | ஆகாச முதலாக உற்பன்னமாகிய சகல ஜெகத்திற்கும் |
| சான்று அது ஆம் அறிவை | சாஷி ரூபமான பிரஹ்மத்தை |
| தன் அருளிஞல் தோன்று சோதியை | தனது ஞானத்திஞல் தாஞக விளங்கா நின்ற சொப்பிரகாச சொரூபத்தை |
| சொல்லுவன் என்று | – உங்கட்கு உபதேசிப்பனென்று |
| எலாம் ஈன்றவன் இமையோர்கட்கு இயம்பிஞன் | சர்வதூலப் பிரபஞ்ச சிருஷ்டாவான பிரஹ்மதேவர் தேவர்களை நோக்கிக் கூறிஞர். |

1

(அ-கை) சுருதியில் எதஞல் என்ற பொருள் பொதுவாதலால் அதனைச் சர்வ சாக்ஷியாகிய பிரத்யகபின்ன பரமாத்துமாவே என்று கூறி அவ்விறையால் மனம் பிராணன் என்னும் இரண்டும் பிரேரிக்கப்பட்டுத் தங்களது விஷயங்களில் செல்லுமெனக் கூறுகின்ருர்.

தானே யுள்ளா யெப்போது மெல்லாப் பொருட்குஞ் சான்றாகி
யூனேய் பவசா கரத்துற்றோர்க் குடன்றா ரகமா கியவும்பர்
கோனே நியமித் திடமனமுங் குறித்து விடயங் களிற்செல்கை
தானே சேட்டைசெய்யாது பிராண னிறைவன் றன்னாலே 2

(இ – ள்)

| | |
|---|---|
| தானே உள்ளாய் எப்போதும் | எஞ்ஞான்றும் சுதசித்தமாய் |
| எல்லாப் பொருட்கும் சான்று ஆகி | சர்வ பதார்த்தங்களுக்குஞ் சாக்ஷியாய் |
| ஊன் ஏய் பவ சாகரத்து உற்றோர்க்கு | தோஷம் பொருந்திய சம்சார சாகரத்திலாழ்ந்தோர்க்கு |
| உடன் தாரகமாகிய உம்பர்கோனே நியமித்திட | அநுகூலமாய் ஆதாரமாயிருந்து கடத்துபவனாகிய தேவதேவனே பிரேரணை செய்ய |
| மனம் விடயங்களில் குறித்து செல்கை | மனமானது விஷயங்களைக் கருதிச் செல்வதும் |
| பிராணனும் தானே சேட்டை செய்யாது | பஞ்சவிருத்திகளோடு கூடியப் பிராணனானது சுயமே உசுவாசாதி செய்கை செய்யாது (அவ்விதம் சேட்டிப்பதும்) |
| இறைவன் தன்னால் | அப்பரமேஸ்வரனாலேயாம். 2 (ஏ – அசை) |

(அ – கை) ஞானேந்திரிய, கர்மேந்திரியங்களும் இறைவனாலேயே பிரேரிக்கப்பட்டுத் தத்தம் விஷயங்களில் செல்லுகின்றதெனக் கூறுகின்றார்.

நாவுரைப் பதுவுஞ் செவியுரைப் பதனை
நலம் பெறக் கேட்பது நயனம்
மேவுருத் திகழக் காண்பது மற்றும்
வேறுள விந்தியங் களுமத்
தேவனாற் றத்தம் விடயமேற் செல்லப்
படுவதிங் கிவை செலுத் திடுமத்
தேவைமா யையினா லன்றியுண் மையிலத்
தேவனுக் கில்லையே தெரியில். 3

(இ - ள்)

| | |
|---|---|
| நாவுரைப்பதுவும் | - வாக்கிந்திரியம் வசனிப்பதுவும் |
| உரைப்பதனை செவி நலம்பெறக் கேட்பதும் | சப்தங்களை சுரோத்திரமானது நன்கு சிரவணிப்பதும் |
| நயனம் மேவு உருத் திகழக் காண்பதும் | நேத்திரமானது பொருந்தா நின்ற ரூபபதார்த்தங்களை விளக்கமாகப் பார்ப்பதும் |
| மற்றும் வேறுஉள இந்தியங்கள் தத்தம் விடய மேல் சொல்லப் படுவதும் | கூருதொழிந்த ஏனைய இந்திரியங் களும் அதனதன் விஷயங்களை நாடிச் செல்லா நிற்பதும் |
| அத் தேவனால் | - அப் பரமேஸ்வரனாலேயாம் |

[அசங்கவுதாசீனமாயும் கூடஸ்த நித்தியமாயும் நிஸ் தரங்க சமுத்திரம் போன்றதாயும் சின்மாத்திர சொரூப மாயும் உள்ள ஆன்மாவுக்கு இவ்விதப் பிரேரகத்துவம் எப்படிச் சம்பவிக்கும் என்னுமிடத்துக் கூறுகின்றார்]

| | |
|---|---|
| இங்கு இவை செலுத் திடும் அத்தேவை மாயையினால் அன்றி | இவ்விடத்து இவைகளைப் பிரேரிக் கும் அந்தப் பிரேரகத் தன்மை யானது (அதனிடத்துக் கற்பிதமா யுள்ள) மாயையினாலல்லாமல் |
| தெரியில் அத்தேவ னுக்கு உண்மையில் இல்லை | ஆராயுமிடத்து அப்பரமேஸ்வர னுக்கு எதார்த்தமாக இல்லை. (ஏ - அசை)　3 |

(அ - கை) பிரேரிப்பவனாகிய ஆன்மா வேறு பிரேரிக் கப்படுபவைகளான மனமுதலியவை அவனினும் வேறெனத் துவிதா புத்தி வருமே யெனிற் கூறுகின்றார்.

இந்தியங் களுக்குச் சத்தை யில்லையே யிவற்றின் சத்தை
செந்தழ லயம்போ லுள்ள தேவனா லுள்ள சத்தை
தொந்தமில் பரன்றான் றன்னிற் சோத்திரந் தன்னைக் கற்பித்
தந்தவத் தன்மை யுண்டா வளிக்குமங் கநுவே சித்து.　4

(இ-ள்)

| | |
|---|---|
| இந்தியங்களுக்குச் சத்சை இல்லையே | இந்திரியாதிகளுக்குச் சுபாவமாகச் சத்தை (இருப்பு) கிடையாது |

[ஆயின் சுரோத்திரமிருக்கிறது மனமிருக்கிறது என அவற்றிக்குச் சத்தை காணப்படுகிறதே என்னின்,]

| | |
|---|---|
| இவற்றின் சத்தை | - இவைகளின் இருப்பானது |
| செந்தழல் அயம்போல் | தப்தாய பிண்டம் (சுட்ட இரும்பு) போல |
| உள்ள தேவனால் உள்ள சத்தை | அவற்றிற்கு அதிஷ்டானமாய் இருக்கின்ற தேவனது சற்பாவமாம். (இருப்பாகும்) |

[இந்தப் பிரகாரம் மன முதலியவை எவனுடைய இச்சா மாத்திரத்தால் தத்தம் வியாபாரங்களில் செலுத்தப்படுகின்றனவோ அவன் எவ்வித சொரூபன் என்னும் சங்கை மூல சுருதியில் இல்லாவடினும் அர்த்தத்தால் அறியத்தக்கது அதற்குத் தரங் கூறுகின்றார் ]

| | |
|---|---|
| தொந்தம் இல் பரன் | யாதொரு *துவந்துவமுமில்லாத பரமேஸ்வரன் |
| தன்னில் சோத்திரம் தன்னைக் கற்பித்து | (தனது மாயையினால்) தன்னிடத்தில் சுரோத்திர இந்திரியத்தைத் தோற்றுவித்து |
| அங்கு அநுவேசித்து | அச்சுரோத்திரேந்திரியத்தில் அதிஷ்டானத் தன்மையால் பிரவேசித்து |
| அந்த அத்தன்மை உண்டா அளிக்கும் | அந்தக் சுரோத்திரத்திற்குச் சப்த கிரகண சாமர்த்தியத்தைக் கொடுக்கும் (தான்-அசை.) 4 |

தன்னிற்கற் பிதமனத்தை யநுவே சித்துச்
சத்துவத்தி னின்றுமனத் தன்மை நல்கும்
நன்னுற்ற கற்பிதமா நாட்டந் தன்னை
நாட்டமாந் தன்மைபெற நல்கா நிற்கும்

* பிறப்பு, இறப்பு, பசி, தாகம், சுகம், துக்கம் ஆகிய இரட்டை தருமம்.

மன்னுற்ற பிராணனுக்குப் பிராண னுகை
வாக்குக்கு வாக்காகை மற்று முண்டாய்ப்
பன்னுற்ற கற்பிதமாங் கருவி கட்கப்
பரிசநுவே சித்தளிக்கும் பரமன் ருனே.

( இ - ள் )

| | |
|---|---|
| தன்னில் கற்பித மனத்தை அநுவேசித்து | தன்னிடத்தில் அத்தியஸ்தமான மனத்தில் (அதிஷ்டானமாய்) பிரவேசித்து |
| சத்து வத்தில் நின்று மனத்தன்மை நல்கும் | காரியரூப அந்தக்கரணத்தின் காரணமான சத்துவ குணத்திலிருந்து மனன சாமர்த்தியத்தைத் தரும். |
| நன்னுற்ற கற்பிதமாம் நாட்டம் தன்னை அநுவேசித்து | (ஞாதாவுக்குக் கரணமாகப்) பொருந்திய அத்தியஸ்த நேத்ரேந்திரியத்தில் (அதிஷ்டானத் தன்மையால்) பிரவேசித்து |
| நாட்டமாம் தன்மை பெற நல்கா நிற்கும் | ரூபக்கிரகண சாமர்த்திய ரூபநேத்திரத்தன்மையைக் கொடுக்கும் |
| மன்னுற்ற பிராணனுக்குப் பிராணன் ஆகை | ஜீவாதாரமாகப் பொருந்தியப் பிராணனுக்கு (உசுவாச நிசுவாசகாரியரூப பிராணனுந்தன்மை |
| வாக்குக்கு வாக்கு ஆகை | வாக்கிந்திரியத்துக்கு (வசன காரியா சாமர்த்தியரூப) வாக்காந் தன்மை |
| மற்றும் உண்டாய்ப் பன்னுற்ற கற்பிதம் ஆம் கருவிகட்கு | வேறுள்ளதாகக் கூறப்பட்ட அத்தியஸ்தமான ஞானேந்திரிய கர்மேந்திரியாதி கரணங்களுக்கும் |
| அப்பரிசு பரமன் தானே அளிக்கும் | மேற்கூறிய பிரகாரம் பரமேஸ்வரன் அதனதன் தன்மையை நல்குவான் |

(செய்யுள் இரண்டு மூன்றில் இந்திரிய பிரேரகத் தன்மையும் நான்கு ஐந்தில் இந்திரியத் தன்மையும் கூறினுரென்க)

(அ-கை.) இந்திரியங்கள் தத்தம் விஷயங்களை நாடி அறிவது போல ஆன்மாவை அறியலாமே எனின் ஞாதாஞ் ஞாத விலக்ஷணமாதலால் உபநிஷத்ப் பிரமாணமொன்றினுலேயே அறியத்தக்கதெனக் கூறுகின்ருர்.

வர்க்குமன முங்கண்ணு மற்றுளவிந் தியங்களுமே
நோக்கரிய பரஞ்சுடரை நோக்கியிவை செலமாட்டா
தாக்கில்பரம் பரனறியிற் ருன்வேரும் அறியாதே
போக்குபொழு தினும்வேரும் பரனரிய பொருளன்ருே. 6

(இ – ள்)

| | |
|---|---|
| வாக்கும் மனமும் கண்ணும் மற்றுள இந்தியங்களும் இவை | வாக்கிந்திரியமும் மனமும் நேத்திரமும் அன்னிய கரணங்களுமாகிய இவைகள் |
| நோக்கரிய பரஞ்சுடரை நோக்கிச் செலமாட்டா | அறிதற்கசக்கியமான பரமாத்மாவை அறியப் பிரவிர்த்திக்கமாட்டா. |
| தாக்கு இல் பரம்பரன் அறியில் வேரும் | அசங்கமேலான பரமாத்மா (சிதாபாசன், பதார்த்தங்களைப்போல்) அறிவனேல் (அது ஞாதமாம் அந்த ஞாதபதார்த்ததினும் பரமாத்மா) பின்னமாம் |
| அறியாதே போக்கு பொழுதினும் வேரும் | (அவன்) அறியாது விடின் (அக்கால் அவ்வஸ்து அஞ்ஞாதமாம் அவ்வஞ்ஞாத பதார்த்தத்தினு பரமாத்மா) பின்னமாம் |
| பரன் அரிய பொருள் அன்ருே (தான்–அசை) | அப்பரமாத்மா ஞாதாஞ்ஞாத பதார்த்த வடிவமாய் அறிதற்கசக்கியமல்லவா. 6 |

(அ-கை.) ஞாதாஞ்ஞாத விலக்ஷணுவச்சேதகமாக ஆன்மா அறியத்தக்கதென்று சுருதி கூறினும். அதனினும் சிறிது பின்னமாக உபாசிய பிரஹ்மமிருக்கலாமே? யெனச் சங்கைவர அதை நிராகரிக்கவேண்டி எது வாக்கில் உதிக்கப் படாததோ, எதனுல் வாக்கு உதிக்கப்படுகின்றதோ, அது பிரஹ்மமென்றறி எது மனதால் எட்டப்படதோ எதனுல்

மன மதிக்கப்படுமோ, அதுவே பிரஹ்மம் என்று அறி. எந்தப் பிரம்மானது இத்தன்மை உடையது என உபாசிக்கப்படுகின்றதோ, அதுவே பிரம்மமென்று அறி. இந்தப் பொருள் இத்தன்மைத்தென அறியப்படாது, என்ற சுருதியின் அதாவது எது வாக்காதிகளுக்கு விஷயமாகாதோ எதற்கு வாக்காதிகள் விஷயமாமோ அதனை பிரத்யக பின்ன பிரம்மமா யறி என்ற பொருளைக் கூறுகின்றார்.

வாக்குமனங் கண்செவியால் மன்னிநின்ற பிராணனினால்
நீக்கியுள கரணத்தால் நின்மலன்கோ சரிக்கவுருன்
பாற்கரனுக் குருவம்போல் பகர்பொருளெ லாந்திகழ்வ
தாக்கதனைச் சனாதனமாம் பரப்பிரம மெனவறிமின். 7

( இ - ள் )

| | |
|---|---|
| வாக்கு மனம் கண் செவியால் மன்னி நின்ற பிராணனினால் நீக்கி உள கரணத்தால் | வசன மனன நேத்திர சுரோத்திரங்களாலும் நிலை பெற்றிருக்கின்ற பிராணனாலும் ஒழிந்துள்ள கரணங்களாலும் |
| நின்மலன்கோ சரிக்க உருன் | அமலனை பிரஹ்மம் அறிதற்கு அசக்கியமாம். |
| பாற்கரனுக்கு உருவம்போல் | சூரிய பகவானால் ரூப பதார்த்தங்கள் விளங்குவதுபோல் |
| பகர் பொருள் எலாம் திகழ்வது ஆக்கதனை | கூறுகின்ற சர்வ பதார்த்தங்களையும் விளங்குமாறு செய்வதெதுவோ அவ்வஸ்துவே, |
| சநாதனமாம் பரப் பிரமம் என அறிமின் | எஞ்ஞான்றும் ஒரே படித்தாக இருக்கின்ற பரமாத்மாவென்று அறிவீர்களாக 7 |

( அ - கை ) இந்தப் பிரகாரம் இந்திரியாதிகட்கு வேருயும் அவைகளின் சாக்ஷியாயும் இருக்கின்ற பிரத்யகாத்மாவுக்கு யாதொரு பிரஹ்மரூபத்வஞானம் உபதேசிக்கப்பட்டதோ அதன் பலத்தைச் சுருதி சொல்லுகிறது. அந்தச் சுருதியின் அர்த்தத்தைச் சொல்லுகின்ருர்:

ஆனதர்க் கத்தால் மானத்தாற் குரவ
னருளினா லநுபூதி யதனால்
ஞானமெய்ப் பொருளை யறிந்திடு மவரே
நலம்பெறு முத்தரா னவர்கள்
ஊனமற் றந்தத் தற்பரம் விளங்க
உணர்ந்திடப் பட்டதென் றுணரில்
தானனைத் தினுக்குஞ் சாட்சியாம் பிரமந்
தானறி பொருளுமா யசத்தாம். 8

(இ - ள்)

| | |
|---|---|
| மானத்தால் ஆன தர்க்கத்தால் | சுருதிப் பிரமாணத்தினாலும் மனனத்தின் ஏதுவாகிய*சுதர்க்கத்தினாலும் |
| குரவன் அருளினால் | – ஆசாரியரனுக்கிரகத்தினாலும் |
| அநுபூதி அதனால் | – சுவாநுபவத்தினாலும் |
| ஞானமெய்ப் பொருளை | சத்தியஞானாதி லக்ஷணமுடைய பிரஹ்மத்தை |
| அறிந்திடும் அவரே நலம் பெறும் முத்தர் ஆனவர்கள் | தன்மயமாக சாக்ஷாத் கரித்தவர்களே ஆனந்தரூப மோக்ஷாமிர்தர்களாவார்கள். |

[இந்தப் பிரகாரம் சுவான்மத்தன்மையால் உபதேசிக்கப்பட்ட பிரஹ்மத்தின் ஞானசமயத்தில் சீடனுடைய (நான் என்னைப் பிரஹ்மமாக அறிகின்றேன் என்னும் கர்மகர்த்து

---

(2) தருக்கம்

* தருக்கித்துப் பேசுதல் தருக்கமாம்; அஃதாவது அநிஷ்டத்தை (இஷ்டமாகாததை)க் கூறுதலாம். தருக்க சங்கிரகம் ''தருக்கம் வியாப்பியத்தை ஆரோபித்தலால், வியாபகத்தை ஆரோபிப்பது; அது தீயில்லையாயின் புகையுமில்லையாதல் வேண்டும் என்பது'' என்று தருக்கத்தினியல்பை உதாரணத்துடன் கூறுவதறிக. இதன் விரிவை நியாயப்பிரகாசம் 6-வது பரிச்சேதத்திலும் தருக்க பரிபாஷையின் குறிப்புரையிலுமறிக. இத் தருக்கத்தால் அதிஷ்டானமான பிரஹ்மமின்றாயின், ஆரோபமாகிய மாயாப் பிரபஞ்சமு மில்லையாம். ஆரோபமாகிய மாயாப் பிரபஞ்ச மிருத்தலின், அதற்கு அதிஷ்டானமாயுள்ள பிரஹ்மம் இன்றியமையாதிருத்தல் வேண்டுமென்பது பெறப்படுவதாம்.

ருபாவ இலக்கணமான) பேத ஞானத்திற்குப் பிராந்தி ஞான விஷயத்தன்மையைச் சொல்லும்பொருட்டும்) அவ்வித பேதம் விடுபட்டு தான் அகண்டைகரச பிரஹ்மான்ம தத்துவ சொரூபப் பிரகாசத்தாலே அறியத்தக்கதென்று தெரிவிக்கும் பொருட்டும், குரு சீடர்களால் செய்யப்பட்ட கேள்வி மறு மொழிகளால் சுருதியில் நன்ருய் அறிந்தேனென அபிப்பி ராயம் கொள்வாயானல் நிச்சயமாக அற்பமாய்விடும் பிரஹ்மசொரூபமென நீ அறி'' என்பது குரு வாக்கியமும், நன்ருய் அறியப்பட்டதாகவும், அறியப்படாததாகவும், நான் அபிப்பிராயப்படவில்லை'' என்பது சீடன் வசனமுமாம். அவ்விருவித வாக்கியங்களின் அபிப்பிராயப் பொருளை ஐந்து செய்யுள்களால் சங்கிரகித்துப் பிரஹ்மதேவர் கூறுகின்ருர்.]

| | |
|---|---|
| அந்தத் தத்பரம் ஊனம் அற்று விளங்க உணர்ந்திடப்பட்டது என்று உணரில் | அந்தப் பரவஸ்துவானது தோஷ மின்றி நன்கு அறியப்பட்டது என்று (நீங்கள்) நினைப்பீர்களானுல் |
| அனைத்தினுக்கும் சாக்ஷியாம் பிரமம்தான் அறிபொருளும் ஆய் அசத்தும் ஆம் | சாக்ஷி யாகிய பிரஹ்மம் சர்வ சாக்ஷி யாகிய பரப்பிரஹ்மம் தனக்கு விஷயமான திரிசியமாய் (அதனல்) அசத்தும் (ஜடமும்) ஆம் |

(தான் – அசை) உம்மை பிரித்துக் கூட்டப்பட்டது)　8

தனக்குமெய்ப் பிரமம் விடயமா யிராமல்
　தானது சாட்சியா யிராமற்
றனிற்பிறி தறத்தா ஞகவப் பரத்தை
　யறிந்தவன் ருனறிந் திலனுந்
தனிற்பிறிந் தறியா தவனறிந் தவனும்
　அறிந்தவன் ருனறிந் திலனும்
உனற்கரும் பிரம முணர்ந்தவர்க் குணர்வின்
　றுணர்வுருர் தமக்குணர்ந் ததுவாம்.　9

(இ – ள்)

தனக்கு　– (அதிகாரியான) தனது ஞானத் திற்கு

மெய்ப் பிரமம் – உண்மையான பிரஹ்ம சொரூபத்தை

விடயமாய் இராமல் – விஷயரூப கருமமா யறியாமலும்

தான் அதன் சாட்சி யாய் இராமல் } தான் அந்த ஞானத்திற்கு கர்த்தாவாகாமலும்

தனில் பிறிது அற அப் பரத்தைத் தானுக அறிந்தவன் அறிந்த வனும் } தன்னிலும் வேறின்றி அந்தப் பிரஹ்ம சொரூபத்தை தனதாத் மாவாக அறிந்தவனே (ஞானகர்த் துருத்வமின்றியவன்) அறிந்தவனு கும்

தனில் பிறிந்து அறி யாதவன் அறிந்தவ னும் } எவன் தன்னிலும் வேருய் (மன தால் சுட்டி) அறியாதவனே (அவன் அதைத்தானுக) அறிந்தவ னும் (பிரஹ்மவித்தாம்)

அறிந்தவன் அறிந்தில னும் } எவன் மனதால் சுட்டி) அறிந்த தாக நினைக்கின்ருனே (அவன்) அறியாதவனே

உனற்கு அரும் பிரமம் – கருதற்கரிய பிரஹ்ம சொரூபத்தை

உணர்ந்தவர்க்கு உணர்வுஇன்ரும் } புத்தி விருத்தி விசிட்டமாக அறிந்த வர்க்கு அறியப்பட்டதன்று

உனர்வு உருர்தமக்கு உணர்ந்ததுவாம் } புத்திவிஷயமாயறியாது சொப்பிர காசத்தால் சாக்ஷாத் கரித்தவர் கட்கு அறியப்பட்டதாம். 9

(இரண்டிடத்தும் தான் அசைகள்)

(வி-ரை) இந்திரியத்துக்கும், கடத்துக்கும் சம்பந்த முண்டாகும்போது இந்திரியத் துவாரத்தால் புறம்போந்து உருக்கி அச்சில் விடப்பட்ட தராச்சலம்போலக் கடாகாரத் துக்குச் சமாணுகாரத்தையடையும் அந்தக்கரணத்தின் பரி ணுமத்தை விருத்தியென்பர். அந்தக்கரணம் சத்துவ குண காரியமாய்ச் சொச்சமாகலின் அதில் சேதனத்திணுபாச மிருப் பது போலச் சொச்சமான அந்தக்கரணத்தின் காரியமான விருத்தியிலும் சேதனத்திணுபாசமுண்டு விஷயமாகிய கடம் தமோகுண காரியமாதலால் சொரூபமாகவே சடமாம்; ஆக லின், அஞ்ஞானமும் அதனது ஆவரணமும் உண்டெனல் கூடாது. விசார திருஷ்டியில் நோக்கில் அஞ்ஞானமும்,

அதனுவரணமும் சேதனத்தின்கண் உண்டேயல்லாமல் கடத்தின்கண் இல்லை. அஞ்ஞானம் சேதனத்தி னுசிரித மாய்ச் சேதனத்தையே விஷயம் பண்ணு(மறைக்)கின்றதென் பது வேதாந்த சித்தாந்தம். ஆயினும், கடாதிகளின் அதிஷ்டான சேதனுசிரிதமான அஞ்ஞானமும் சேதனத்தை ஆச்சாதித்துச் சுபாவமாக ஆவிருதமான (மறைந்திருக் கின்ற) கடாதிகளையும் மறைத்திருக்கிறது உலகப்பிரசித்தம். அவ்வஞ்ஞானத்தால் ஆவிருதமான கடத்தை விஷயமாக வுடைய அந்தக்கரணத்தின் ஆபாச சகிதமான கடாகார விருத்தியின்கண் விருத்திபாகமோ கடத்தின் மறைப்பை நீக்குகின்றது. விருத்தியின்கண்ணுள்ள ஆபாசபாகம் கடத்தை விளக்கஞ் செய்கின்றது. இவ்வாற்ருல் பாகிய பதார்த்தத்தில் விருத்தி, ஆபாசம் இரண்டிற்கும் உபயோக முண்டு. உதாரணம்: இருளில் குடத்தினுல் ஒரு பொருளை மூடி வைத்திருக்க, தடியால் அக்குடத்தை உடைத்தும் பின் னர் விளக்கில்லாமல் மறைப்பின்றிய பொருளும் விளங்கா மல் விளக்கினுல் விளங்குவதுபோல அஞ்ஞானத்தால் ஆவிருதமான கடத்தின் ஆவரணத்தை விருத்தியானது நாசஞ்செய்தும் அக்கடம் விளங்காது என்னை? கடமோ சொரூபமாக சடம்; விருத்தியும் சடம் விருத்திக்கு ஆவரண நாச மாத்திரம் பிரயோஜனமாம். அதனுல் கடம் விளங்க மாட்டாது ஆனதால் கடத்தை விளக்குவது ஆபாசமாம். இது நேத்திரப் பிரத்யட்ச ஞானத்தின் தன்மையாம். மற்ற சுரோத்திர முதலிய இந்திரியப் பிரத்யட்சத்திலும் இவ் விதமே அறியவும்.

இவ்விதம் ஆபாசத்தினுல் கடத்தை இதுவென்று சுட்டி அறிவதுபோல் பிரஹ்மத்தை அறியாமல், எப்படி சூரியனை வேறு பிரகாசமான விளக்கால் அறியாமல் கண் மாத்திரத் தால் கண்டறிவதுபோல் குருவினுல் உபதேசித்த தத்துவமசி மகாவாக்கியத்தால் சமதமாதி சாதனங்களோடு கூடிய அதிகாரிக்கு அகம் பிரஹ்மாஸ்மி என்று உண்டாகும் பிரஹ்மாகார விருத்தியால் சுவாசிரிய சுவவிஷயமாகிய (தன்னையே ஆசிரயித்து தன்னையே மறைத்தலாகிய) ஆவர ணம் நீங்கவும். பிரஹ்மம் தனது சொரூபமாகவே விளங்கு

மென்பதாம். விசேடமாக அறிய விரும்புவோர் பஞ்சதசி விசாரசாகரம் நான்காம்தரங்கம் கைவல்லிய நவநீதம் சந்தேகம்தெளிதற் படலம் பாலபோதம் விருத்திப்பிரபாகரம் தத்துவானு சந்தானம் முதலிய நூல்களில் காணலாம்.

பித்தா ஞானம் கடஞானம் பிரம ஞான மெனுமிவற்றின்
கர்த்தாவன்று பரப்பிரமம் கன்மங் தானு மன்றுவெறுஞ்
சித்தாமிதனைத் தெரியாமற் கர்த்தா வாகச் சிந்தித்தல்
பித்தா மகர்த்தா வாயறியப் பெற்றானறியப் பெற்றானும் 10

(இ – ள்)

| | |
|---|---|
| பித்தாம் ஞானம் | இப்பிவெள்ளியாதி பிராதிபாசிக விஷயத்தை அறிகின்ற பிராந்தி ஞானமும் |
| கடஞானம் | கடபடாதி வியவகார விஷயத்தை அறிகின்ற ஞானமும் |
| பிரம ஞானம் | பாரமார்த்த வஸ்துவை உணர்கின்ற ஞானமும் |
| எனும் இவற்றின் | – என்று கூறிய இந்த ஞானங்கட்கு |
| பரப்பிரமம்கர்த்தா அன்று கன்மமும் அன்று | மேலான பிரஹ்மானது ஆசிரயமுமன்று – விஷயமுமன்று |
| வெறும் சித்தாம் இதனைத் தெரியாமல் | கேவலம் சேதனமான இவ் வஸ்துவை (அகர்த்தா அகர்ம ரூபமாக) அறியாமல் |
| கர்த்தாவாக சிந்தித்தல் பித்தாம் | கர்த்தா (கரும ரூபமாக) அறிவனேல் *பிராந்தியேயாம் |
| அகர்த்தாவாய் அறியப் பெற்றான் அறியப் பெற்றான் ஆம் | அகர்த்தா (அகர்ம ரூபமாக) அறிந்த வித்வான் (பிரத்யக்வடிவமாய்) அறிந்து அமைந்தவனும் (தான் – அசை) 10 |

* காரண அத்தியாசம் — காரிய அத்தியாசம்.
அதிஷ்டானத்தின் (கயிற்றின்) விஷம (வேறாய) சத்தின்
(பாம்பின்) அவபாசம் (தோற்றம்) அத்தியாசமாம்; அல்லது (பாம்பு)
தனது அபாவ அதிகரணத்தில் (கயிற்றில்) அவபாசம் அத்தியாச
மாம். இது காரணத்தியாசம், காரியாத்தியாச மென விருவகைத்
தாம். (1) பிரபஞ்சத்திற்கு உபாதான (முதற்) காரணமாய மாயை

சுத்தசேதனத்தில் (சிவத்தில்) தான் அத்தியாசமா யிருத்தற்குத் தானே காரணமாயிருப்பதாம்; அதனல், அது காரணுத்தியாசமெனப்படுகின்றது. இது விளக்குத் தனது பிரகாசத்திற்கும் பிறவற்றினது பிரகாசத்திற்கும் தானே காரணமாயிருப்பது போல்வதாம் (2) அக்காரணத்தியாச வுடிவமாயையால் பிரபஞ்சம் சுத்த சேதனத்தில் அத்தியஸ்த (கற்பித) மாயிருத்தல் காரியாத்தியாசமாம் ஒன்றன் கண் பிறிதொன்றனது தோற்றம் அத்தியாசமாம். அல்லது சத்தியவஸ்துவும் மித்தியாவஸ்துவும் சேர்ந்து தோன்றுவது அத்தியாசமாமென்பது காரணுத்தியாசத்திற்கும் காரியாத்தியாசத்திற்கும் பொது விலக்கணமாம்.

### கேவல சம்பந்தாத்தியாசம் முதலியன.

"பிராந்தி (மயக்க) ஞானத்திற்கு விஷயமாகிய மித்தியாவஸ்துவிற்கும் (கயிற்றிற் றேன்றிய பாம்பிற்கும்) அதனது பிராந்தி ஞானத்திற்கும் அத்தியாசமென்று பெயராம். இவ் வத்தியாசம் அர்த்தாத்தியாசம், *ஞானுத்தியாசம் என இரண்டு வகைப்படும். கயிற்றிற் றேன்றிய பாம்பு அர்த்தாத்தியாசமாம். அதன் ஞானம் அபரோட்ச ஞானுத்தியாசமாம். இவ் விரண்டினுள், அர்த்தாத்தியாசம்: (1) கேவல சம்பந்தாத்தியாசம், (2) சம்பந்தசகித சம்பந்தியத்தியாசம், (3) கேவல தர்மாத்தியாசம், (4) தர்மசகித தர்மியத்தியாசம், (5) அன்னியோன்னியாத்தியாசம், (6) அன்னியதராத்தியாசம் என்றறுவகையாம்,

### 1. கேவல சம்பந்தாத்தியாசம்.

வெள்ளியில் கிளிஞ்சலின் தாதாத்மிய சம்பந்தாத்தியாச முண்டாவது போல, அநான்மாவி (ஜடலத்தி)ல் ஆன்மாவின் அத்தியாச முண்டாகின்றது. ஆண்டு அநான்மாவில் ஆன்மாவின் சொரூபம் அத்தியஸ்தமாகாது அதனது தாதான்மிய (ஒற்றுமை வடிவ) சம்பந்தம் அத்தியஸ்தமாம்; ஆகவே அநான்மாவில் ஆன்மாவின் சம்பந்தம் கேவல சம்பந்தாத்தியாசமாம் (அநான்மாவில் ஆன்மாவின் சம்பந்தம் இருப்பதாக தோன்றுதல் மயக்கத்தாலாவதன்றி உண்மையிலின்றென்பதிதன் கருத்தாம்) வான வளாவில் வானத்தின் சம்பந்தமிருக்கின்றதென்பது மிதற் குதாரணமாம்.

### 2. சம்பந்த சகித சம்பந்தியத்தியாசம்.

கயிற்றினிடத்து (அதிற்றேன்றிய) பாம்பின் சம்பந்தமும் அதன் (பாம்பின்) சொரூபமாகிய இரண்டும் அத்தியஸ்தமாதல் பொய்யாய்த் தோன்றுதல் போல் ஆன்மாவில் அநான்மாவின் சம்பந்தமும் அதன் சொரூபமுமாகிய இரண்டும் அத்தியாசமாகின்றன. ஆதலால் ஆன்மாவில் அநான்மாவின் (தேகாதிகளின்) சம்பந்த சகித சம்பந்தியின் அத்தியாசம் உண்டாகின்றது சம்பந்தத்தை உடையது சம்பந்தியாம்.

---

* பரோட்ச ஞானுத்தியாசம் காவேரிக்கும் திருச்சித் தாயுமான சுவாமி கோயிலுக்குந் தெற்கு ஸ்ரீரங்கம் என்றுணர்தலாம்.

### 3. கேவல தர்மாத்தியாசம்.

நான் வெளுத்தேன் நானிளைத்தேன் என்னு மிடத்து தூல தேகத்தின் வெண்மை முதலியனவும் நான் பார்த்தேன் நான் கேட்டேன் என்னுமிடத்து சூட்சும தேகத்தின் பார்வை முதலிய தர்மங்கள் ஆத்மாவில் அத்தியஸ்தமாகின்றன; நான் தேகம் இந்திரியங்கள் என அத் தேகேந்திரியங்களின் சொரூபம் அத்தியாசமாவதில்லை. ஆதலால் ஸ்தூல சூட்சும தேகங்களின் கேவல தர்மத்தினத்தியாசம் உண்டாகின்றது. வேறொன்றை பற்றுக் கோடாய் சுதந்தரமின்றி யிருப்பது தர்மமெனப்படும்.

### 4. தர்ம சகித தர்மி அத்தியாசம்.

நான் கர்த்தா நான் போக்தா வென்னுமிடத்து கர்த்தாவாந் தன்மையும் போகத்தை அநுபவிக்கும் தன்மையும் ஆத்மாவின் தர்மமாயிராது அந்தக் கரணத்தின் தர்மமா யிருக்கின்றன ஆத்மா நிர்விகாரமாயிருத்தலால், அதன் கண் யாதொரு விகாரமு மின்ரும், ஆயினும் அந்தக்கரணத்தின் கர்த்துருத்துவாதி தர்மங்களும் அதன் சொரூபமாகிய இரண்டும் ஆத்மாவில். (கிளிஞ்சிலில் வெள்ளி தன்மை தர்மமும் அதன் சொரூபமும் கற்பனையாயிருப்பது போல) பொய்யாயிருக்கின்றன. ஆதலால் ஆத்மாவில் அந்தக்கரணத்தின் தர்மசகித தர்மியின் அத்தியாசம் உண்டாகின்றது தர்மத்தையுடையது தர்மியெனப்படும்.

### 5. அன்னியோன்னியாத்தியாசம்

காச்சிய இரும்பில் உருட்சி நீட்சி முதலிய இரும்பின் தன்மை அக்கினியிலும் சுடுதல் பிரகாசம் முதலிய அக்கினியின் தன்மை இரும்பிலும் இருத்தல் போல ஆத்மாவில் அநாத்மாவின் அத்தியாசமும் அநாத்மாவில் ஆத்மாவின் அத்தியாசமும் இருத்தல் அன்னியோன்னியாத்தியாசமாம். பரஸ்பர அத்தியாசமென்பதாம்.

அஃதெங்ஙனமெனில் அநான்மாவின் விசேடங்களான துக்கமும் துவிதத்துவமும், ஆத்மாவின் ஆனந்தத்தையும், அத்வைதத்தையும் மறைக்கின்றன. அதனுல் ஆத்மாவில் நான் ஆனந்தரூபனுயும், அத்வைதரூபனுயுமிருக்கின்றேன் என்னும் ஞானமுண்டாகாமல் நான் துக்கியாயும் ஈசுவராதிகளினும் வேருனவனுயுமிருக்கின்றேன் என்னும் ஞானமுண்டாகின்றது. ஆன்மாவின் விசேடங்களான சத்தும் சித்தும் அநான்மாவின் அசத்துத் தன்மையையும், ஜடத்தன்மையையும் மறைக்கின்றன. அதனுல் அநான்மாவாகிய தேகேந்திரியாதிகளிடத்தில் இஃது அசத்தாயும் ஜடமாயுமிருக்கின்றது என்னும் ஞானமுண்டாகாமல் இருக்கிறது விளங்குகிறது என்னும் ஞானமுண்டாகின்றது. இவ்வாறு ஆன்மாஞன்மாக்களுக்குப் பரஸ்பரம் அத்தியாசம் இருக்கின்றமை காண்க. இருத்தலென்பது சத்து; விளங்குதலென்ப சித்து.

## 6. அன்னிய தராத்தியாசம்

இரண்டில் ஒன்றனது அத்தியாசம் அன்னியதராத்தியாசம். (அன்னியதரம் — இரண்டிலொன்று) சற்பத்தில் கயிற்றின் சொரூபம் அத்தியஸ்தமாகாமல் கயிற்றில் சற்பத்தின் சொரூபம் அத்தியஸ்தமாதல் போல, அநான்மாவில் ஆன்மாவின் சொரூபம் அத்தியஸ்தமாகாமல் ஆன்மாவில் அநான்மாவின் சொரூபம் அத்தியஸ்தமாதல் அன்னியதராத்தியாசமாம். இங்கு கூறிய அறுவகை அத்தியாசங்களும் சொரூபாத்தியாசம் சம்சர்க்காத்தியாசம் என்னும் இரண்டினுள் அடங்கும்.

அஃதெங்ஙனமெனின் ஞானத்தால் பொய்யென்று நிச்சயிக்கத் தக்க வஸ்து (பாம்பு) அதிஷ்டானத்தில் (கயிற்றில்) அத்தியஸ்தமா (கற்பனையா)யிருக்கின்றது. தேகாதிப் பிரபஞ்சமாகிய அநான்மாவிற்கு, அதிஷ்டான (ஆன்ம) ஞானத்தால் பாதம் (பொய்யென்ற நிச்சயம்) உண்டாதலால், ஆன்மாவில் அதன் சொரூபாத்தியாசம் உண்டாகின்றது ஒன்றன் முழுவடிவமும் மற்றென்றில் அத்தியஸ்தமாதல் சொரூபாத்தியாசமாம்.

### சம்சர்க்காத்தியாசம்

பாதிக்க (பொய்யென்று நிச்சயிக்க)த்தகாத வஸ்துவின் சொரூபம் அத்தியஸ்தமாவதின்று; ஆனால் அதன் சம்பந்தம் அத்தியஸ்தமாம். ஆதலால் அநான்மாவில் ஆத்மாவின் சம்சர்க்காத்தியாசம் உண்டாகிறது. சம்சார்க்கம் — சம்பந்தம்.

(1) கேவல தர்மாத்தியாசம் (2) தர்மசகித தர்மாயத்தியாசம் (3) அந்நியதராத்தியாசம் என்னும் இம்மூன்றும் சொரூபத்தியாசத்திலடங்கும் (4) கேவல சம்பந்தாத்தியாசம் சம்சர்க்காத்தியாசமேயாம் (5) சம்பந்த சகித சம்பந்தியத்தியாசம் சம்சர்க்காத்தியாச சகித சொரூபாத்தியாசமாம் (6) அன்னியோன்னியாசத்தில் சம்சர்க்காத்தியாசம் சொரூபாத்தியாசமென்னும் இரண்டும் உளவாம் ஏனெனின் ஆத்மாவின் சொரூபம் சத்தியமாகலின் (பாதிக்கப்படாதாகலின்) அஃதத்தியஸ்தமாவதின்று; ஆனல் இது இப்பியென்றறியும்போது இதந்தாம்சத்திற்கும் இப்பியென்னும் விசேடம்சத்திற்குமுள்ள தாதான்மியம், இது வெள்ளியென்று அறியும்போது இதென்னும் சாமானியாம்சத்திற்கும் வெள்ளியென்னும் கற்பித விசேட அம்சத்திற்கும் சம்பந்தம் அத்தியாசமாவதுபோல நான் அல்லது இருக்கிறது என்னும் ஆத்மாவின் சாமானிய அம்சத்திற்கும் சத்து சித்து ஆனந்தம் என்ற ஆத்மாவின் விசேட அம்சத்திற்கும் நான் சத்து நான் சித்து நான் ஆனந்தம் அல்லது சத்து இருக்கிறது. சித்து இருக்கிறது ஆனந்தமிருக்கிறது என்றுண்டாம். தாதான்மி சம்பந்தம் நான் மனுசியன் நான் புத்திமான் நான் அஞ்ஞன் என்றும் அல்லது கடம் இருக்கிறது படமிருக்கிறது என்றுண்டாம். அதன்

தக்க மானந் தானொழியத்தானா யுள்ள பேரொளியை
மிக்க கர்த்தா வாகுதலும் விடயமாகு தலுமொழியப்
பொக்க மறவே றறக்கண்ட பொழுது புரைதீர் பொருளான
தக்க பிரம தத்துவத்தைக் கண்டா னாகுந்தானாக. 11

(இ – ள்)

| | |
|---|---|
| தானாய் உள்ள பேர் ஒளியை | சுவாத்மாவா யுள்ள சொப்பிரகாச பிரஹ்மத்தை |
| தக்க மானம் ஒழிய | பிரமாண தர்க்கங்களால் அறிதல் விடுத்து |
| மிக்க கர்த்தாவாகுதலும் விடயம் ஆகுதலும் ஒழிய | கருத்துரு (அறிபவன்) கர்ம (அறிபடுபொருள் என்ற) பாவங்களை விடுத்து |
| பொக்கம் அறவேறு அறக்கண்ட பொழுது | எதார்த்தமாய் அபேதமாக சுவானுபூதியினாலும் சாக்ஷாத்கரித்த ஞான்றே |
| புரைதீர் பொருள் ஆன – | நிர் தோஷவஸ்துவான |
| தக்கபிரமதத்துவத்தை – | மேன்மையான பிரஹ்மத்தை |
| தானாகக் கண்டான் ஆகும் | சுவாத்மாவாக தெரிசித்தவனாகும். (தான் – அசை) 11 |

நோக்கு றாதமெய்ஞ் ஞானமுங் காட்சியாய் நோக்கவும் பட்டுத்தான்
சாக்கி யாயறிந் திடுபவ னெங்கனே தத்துவ வித்தானான்
றாக்கி லாப்பர விச்சையும் சனிக்குமேற் சடமதாங்கடம்போலப்
பார்க்கி லந்தவிச் சையின்புணர்ப் பாலுணர் பொருள தாம் பரன்றானும் 12

(இ – ள்)

| | |
|---|---|
| நோக்கு உறாத மெய்ஞ் ஞானம் காட்சியாயும் நோக்கப்பட்டு | மனோ வாக்குகளுக்கு) அதீதமான உண்மை ஞானத்தை அறிபொருளாக அறிந்து |

தாதாத்மிய சம்பந்தம் அநாத்மாவில் அத்தியஸ்தமாம் ஆனதால்
அதன் சம்சர்க்காத்தியாசம் உண்டாகின்றது. அநான்மாவின் சொரூபம் மித்தையானதால் அஃதாத்மாவில் அத்தியஸ்தமாகின்றது ஆனதால் அதன் சொரூபாத்தியாசம் உண்டாகின்றது. அன்றியும் எல்லா அத்தியாசங்களும் அன்னியோன்னியாத்தியாசத்தில் அடங்கலாம். விரிவாய் அறிய விரும்புவோர் விருத்தி ரத்தினாவலி விருத்திப்பிரபாகரம் முதலிய நூல்களில் காண்க.

| | |
|---|---|
| தான் சாக்கியாயும் அறிந்திடுபவன் | தன்னைச் சாக்ஷியாகவும் அறிபவன் |
| எங்ஙனம் தத்துவ வித்து ஆனுன் | எவ்வாறு பிரஹ்ம வித்து ஆவான் |
| தாக்கு இலாப் பரவிச் சையும் சனிக்கு மேல் கடம்போல் சடமதாம் | அசங்க பிரஹ்மவடிவ ஞானமும் உற்பன்னமாமேல் கடாதிகளைப் போன்று ஜடமேயாம் |
| பார்க்கில் அந்த விச் சையின் புணர்ப்பால் பரன் உணர் பொருளதாம் | ஆராயுங்கால் அந்த ஞானத்தின் சம்பந்தத்தால்பரமாத்மாவும் திருசியமேயாம். (தான் – அசை) 12 |

(அ – கை) வித்யா சம்பந்தத்தால் சவிசேஷமாகும் (விசேடத்தோடு கூடியதாகும்) பிரஹ்மம். அவ்வாறு அறிந்தவன் பிரஹ்ம வித்தாகான் எனவும் பிரஹ்மம் வித்தைக்கு ஆசிரயமும் விடயமுமாயிரா தெனவும் கூறுகின்ருர்.

**விச்சை யுள்ளவன் விசேட வானும்பர தத்துவ மவிசேடம்**
**விச்சை யுள்ளவனுதலாற் தத்துவ வித்தலன் விச்சைக்கண்**
**டுச்ச முற்றுள தாகுதல் விடயமாய்த் தோன்றுதல் செய்யாது**
**சச்சி தானந்த மப்படி யிராதெனிற் றற்பர மாமோதான்** 13

(இ – ள்)

| | |
|---|---|
| விச்சை உள்ளவன் விசேட வானும் | ஞான முடையவன் (எவனோஅவன் விசேடத்தோடு கூடியவனும் |
| பரதத்துவம் அவி சேடம் ஆதலால் | பரப் பிரஹ்மம் நிர் விசேட சொரூபமானபடியால் |
| விச்சை உள்ளவன் தத்துவ வித்து அலன் | ஞானமுடையவன் பிரஹ்மவித்து ஆகான் |
| விச்சைக்கண் | – (அந்தப் பிரஹ்மம்) ஞானத்திற்கு |
| துச்சம் உற்று உளதா குதல் விடயமாய்த் தோன்றுதல் செய்யாது | அற்பமாகிய ஆசிரயமாகவும், விஷயமாகவும் தோன்றுதலும் ஆகாதே |
| அப்படி இராது எனில் சச்சிதானந்தம் தற்பரம் ஆமோ | (பிரமைக்கு) நிராசிரயமாய் நிர் விஷயமாய் இராதெனில் அது சத்தியக் ஞானனந்த சொரூபப் பிரஹ்மமாமோ. |

(தான் அசை) விச்சைக்கண் என்றது உருபுயக்கம்)

ஆதலால் விச்சை யாலறி வுறுதற்
காவதன் ருகிலப் பரம்தான்
ஏதினு லறியப் படுமறி வுறுதற்
கேவனு லாமிமை யவர்காள்
காதலாற் பரத்திற் கற்பித மாயை
கழியுமேற் பரம்பரன் கண்ணோர்
ஏதமா மாயை யில்லையுண் டாகில்
இருக்குமோ விரவிமுன் பிருடான் 14

(இ – ள்)

| | |
|---|---|
| ஆதலால் இமையவர்காள் | ஆசிரய ரூபத்தாலாவது விஷய ரூபத்தாலாவது வித்தைக்கு பிரஹ்மத்தோடு சம்பந்தமில்லை ஆகையால் தேவர்களே |
| விச்சையால் அறிவுறுதற்கு ஆவது அன்ருகில் | ஞானத்தினுல் அறிவதற்கசக்கிய மென்ருல் |
| அப்பரம்தான் ஏதினுல் அறியப்படும் | அப் பரமாத்மாவை எச்சாதனங் கொண்டு அறிவதற்கியலும் |
| அறிவுறுதற்கு ஏவனுல் ஆம் | தெரிந்துகொள்வதற்கு எவன்ருன் சமர்த்தனுவான் |

[சொப்பிரகாச பிரஹ்மத்தின்கண் இவ்வாறு வித்தைக்கு பிரகாச ஜெனகத்வம் இல்லாவிடினும் ஆவரணரூப அவித்யா நிவர்த்தி ஜெனகத்துவாரமாக அச்சம்பந்தம் கூறக்கூடுமே என்று சங்கித்து நிராகரிக்கின்ருர்.]

| | |
|---|---|
| காதலால் பரத்தில் கற்பித மாயை கழியுமேல் | (முமூட்சுக்கள்) விருப்பத்தோடும் (ஆவிர்த்தியா நின்ற அகண்டப் பிரஹ்மாகார விருத்திரூப ஞானத்தால்) பரமாத்மாவில் அத்தியஸ்தமான அஞ்ஞானம் நீங்குமானுல் |
| பரம்பரன்கண் ஓர் ஏதம் ஆம் மாயை இல்லை | அப் பரமாத்மாவினிடத்தில் தோஷம் பொருந்திய அஞ்ஞானமென்பதொன்றில்லையாம் |

| | |
|---|---|
| உண்டாகில் இரவி முன்பு இருள் இருக்குமோ | அங்ஙனமிருக்குமேல் சூரியபகவான் முன் அந்தகாரம் இருக்குமோ. (இராதென்றபடி) |
| | தான் - அசை. 14 |

(அ - கை.) முற்கூறிய அர்த்தத்தையே உறுதிபடுத்துகின்றார்.]

ஆதலான் மாயை தர்க்கமா னத்தால்
    ஆநுபா வத்தினுற் றுனே
சோதிஞ னச்சிற் கனச்சுடர் முன்னர்
    தோன்றிடா தவிச்சைவிச் சைகடாம்
ஓதுமாத் திரமா முலகுரை வழக்கத்
    துள்ளன வுண்மையி லில்லை
யேதமா முலக வழக்கமு மொளியா
    யிலங்கலா லபேதமே யென்றும் 15

(இ-ள்)

| | |
|---|---|
| ஆதலால் மாயை தக்க மானத்தால் ஆநுபவத்தினுல் | ஆலோக (பிரகாச) விரோதமான அந்தகாரம்போல சொப்பிரகாச ஆன்ம விரோதியாதலால் மாயையானது தர்க்க பிரமாணுனுபவங்களால் |
| சோதி ஞானசிற்கன சுடர் முன்னர் தோன்றிடாது | ஞானப்பிரகாச சிற்கனசேதன பரமான்மாவின் முன்பு நிற்க மாட்டாது |
| அவிச்சை விச்சைகள் | - அவித்தை வித்தையென்னுமிரண்டும் |
| ஓது மாத்திரம் ஆம் உலகு உரை வழக்கத்து உள்ளன | சொல் மாத்திரமே யாகிய உலக வியவகாரத்துள்ளனவாம் |
| உண்மையில் இல்லை | - பாரமார்த்த திருஷ்டியிலில்லை |
| ஏதம் ஆம் உலக வழக்கமும் | தோஷம் ஆகிய வியவகார திருஷ்டியும் (அரோபம் அதிஷ்டான வடிவமாய்) |
| ஒளியாய் இலங்கலால் | - சொப்பிரகாசமாய் விளங்குதலால் |
| என்றும் அபேதமே | - எப்பொழுதும் அத்வைதமேயாம் |
| | (தான் . ஏ . தான் - அசைகள்) 15 |

(அ-கை.) அத்விதமென்பதும், துவித நிஷேதமென்னும் விசேஷமுடையதாதலால் பிரஹ்மம் நிர்விசேஷம் என்பது எங்ஙனம் சித்திக்குமென்று சங்கித்துக் கூறுகின்றூர்.

வேறிலத் துவிதம் என்பது மொளியில்
வேறிலா மையிலுள தொளியே
கூறலற் றிடலே யிப்பொருள் கூடில்
கூடுவ தளவையி னுலும்
ஊறிறர்க் கத்தான் மறைகளாற் குரவன்
உபதேசத் தாலிறை யருளால்
ஈறின்மா தவத்தாற் காலபா கத்தால்
அப்பொருள் புருடனுக் கெய்தும் 16

(இ – ள்)

| | |
|---|---|
| வேறு இல் அத்து விதம் என்பது ஓளியில் வேறு இலாமையில் | துவிதமில்லாதது அத்வைதமென்பதும் சொப்பிரகாசத்திற்கு பின்னமாயில்லாதபடியால் |
| உளது ஓளியே | அந்த துவித நிஷேதமும் சொப்பிரகாசமே |

[இந்தப் பிரகாரம் வாக்கு மனங்கள் மாயை அவித்தை உபாதியோடு கூடி அறிவிக்கின்றதாகலின் நிருபாதிக பிரஹ்மம் அதிகாரிக்கு மௌனமாத்திர சாத்தியமென உபசங்கரிக்கின்றூர்.]

| | |
|---|---|
| கூறல் அற்றிடலே இப்பொருள் கூடில் | மௌன நிலேயே இந்தப் பிரஹ்மப் பிராப்தியில் (உபாயமாம்) |

[பிரஹ்மப் பிராப்தியின் உபாயம் மௌன மாத்திரமாயின் யாவருமந்த தூஷிணீம்ஸ்திதியாகிய மௌன நிலேயை அடைவது சுலப மாகலின் மோக்ஷ அடைவின் பொருட்டு ஒருவருக்கும் சாதனம் பிரயத்தனம் முதலானவை வேண்டுவதில்லேயே எனில் கூறுகின்றூர்.]

| | |
|---|---|
| கூடுவது | (அந்தப்) பிரஹ்மப்பிராப்தி யானது |
| அளவையினுலும் | – பிரமாணங்களினுலும் |
| ஊறு இல் தர்க்கத்தால் | – குற்றமற்ற சுதர்க்கத்தினுலும் |

| | |
|---|---|
| மறைகளால் | வேதாத்தியயன வேதாந்த விசாரத்தினுலும் |
| குரவன் உபதேசத்தால் | ஆசாரியருபதேசத்தாலும் |
| இறை அருளால் | - பரமேஸ்வரன் திருவருளினுலும் |
| ஈறுஇல்மாதவத்தால் | அளவற்ற மாட்சிமை பொருந்திய தவங்களாலும் |
| கால பாகத்தால் | - காலபரி பாகத்தினுலும் |
| அப்பொருள் | - அந்தப் பிரஹ்ம வஸ்துவானது |
| புருடனுக்கு எய்தும் | - அதிகாரிக்குப் பிராப்தமாம் 16 |

(அ - கை) சுருதியில் அமிர்தத்வம் அடையப் படுகின்றதென்பன முதலியவற்ருல் வித்தைக்கு அன்னிய சாதனுந்தரா பேக்ஷை யின்றி சாக்ஷாத் அமிர்தப் பிராப்தியின் ஏகத்துவங் கூறப்படுகிறது அதைச் சங்கிரக்கின்ருர்.

ஓதும் இப்பரம் பெரும்பொரு ளுணர்ந்தவன் செய்வ
தேது மில்லை ஞானமுமிலை யிரண்டிலா மையினுல்
நீதி வன்னவாச் சிரமமு நிடேதமும்விதியும்
சாது நல்வினை தீவினை சகலமு மிலதே. 17

(இ - ள்)

| | |
|---|---|
| ஓதும் இப்பரம் பெரும் பொருள் உணர்ந்தவன் | சொல்லா நின்ற இம் மகத்தாகிய பிரஹ்ம வஸ்துவை (தானுய்) அறிந்த வித்வானுக்கு |
| இரண்டு இலாமையினுல் | ஞான கர்மங்களின் சாதனமான அன்னிய வஸ்துப் பிரதீதி யின்றி அத்வி தீய பிரஹ்ம சொரூப மாக விளங்குதலால் |
| செய்வது ஏதும்இலை | இகலோக பரலோக கிருத்தியங்கள் யாதுமில்லை. |

[இவ்வளவே யன்றிப் பேதப் பிரதீதி ரூபமான சர்வ விவகாரங்களும் அவனுக்கு இன்றெனக் கூறுகின்ருர்.]

| | |
|---|---|
| நீதி வன்ன ஆச்சிரமமும் | ஒழுங்கான வருணுச்சிரமங்களும் |

| | |
|---|---|
| நிடேதமும் விதியும் | நிஷேத கர்மங்களும் விகித கர்மங்களும் |
| சாது நல் விளை | மேன்மை பொருந்திய புண்ணிய கருமமும் |
| தீவிளை சகலமும் இலது | பாவ கருமமும் மற்றி யாதும் (அவனுக்கு) இன்று. (ஏ–அசை) 17 |

(அ – கை) வித்வான் வித்தையினுல் பிரகாசிக்கப்படுகிற ஆத்மாவினுல் அஞ்ஞான தற்காரியத்தை யடக்குதல் வடிவ வீரியத்தை அடைகின்ருன் என்று சுருதியிற் கூறுகின்றது அதைக் கூறுகின்ருர்.

இந்தப் பரமாம் பொருளிறைவன் அருளால் யாவன்
பெறுமவன்ருன்
அந்தப் பரம னேயென்றென் னறிவிற் றிகழ்வ தவன் பெருமை
சிந்தி டவொண் ணுதென்ணுற் செய்யப் படுமத் தேவர்களால்
சந்தப் படுமா லரனயனுல் சாற்றுந் தன்மை சாராதால். 18

(இ – ள்)

| | |
|---|---|
| இந்தப் பரமாம் பொருள்யாவன் இறைவன் அருளால்பெறும் | இந்த மேலான பிரஹ்ம வஸ்துவை எந்தப் புருஷன் பரமேஸ்வரன் பிரசாதத்தினுல் அடைகின்ருனே |
| அவன் அந்தப் பரமனே என்று என் அறிவில் திகழ்வது | அந்த மகான் அப்பரமாத்மாவே என்பதாக எனது புத்தியினுல் நிச்சயிக்கப்படுகிறது |
| அவன் பெருமை என்னுல் சிந்திட ஓண்ணுது | அவ்வித்வானது நிரதிசயரூபமான வீரியத்தை என்ஞல் நினைக்கவுமியலாது |
| செய்யப்படும் அத்தேவர்களால் | சிருஷ்டிக்கப்பட்ட அந்தத் தேவர்களாலும் |
| சந்தப்படுமாலால் அரனுல் சாற்றும் தன்மை சாராது | அழகிய விஷ்ணுவாலும் உருத்திர மூர்த்தியாலும் சொல்லவும் முடியாது. 18<br>(தான் – அசை) ஆல் பிரித்துக் கூட்டப்பட்டது |

(அ - கை) மோக்ஷ சாதனமான வித்தை சுகிர்த விசேஷத்தால் அடையத்தக்கது சரீரமிருக்கும் போதே பிர யத்தனத்தால் அதைச் சம்பாதிக்கத்தக்கது எனக் கூறுகின் ருர்.

இந்த வாக்கையி லியம்பிய பரம்பொரு ளறியின்
அந்த மாநுடன் மெய்யதா யபேதமா கியநிர்த்
தொந்த மாம்பர மடைந்திடுந் தோன்றிடா தாகிற்
பந்த மாம்பவக் கடற்படும் பரகதி யடையான். 19

(இ - ள்)

| | |
|---|---|
| இந்த ஆக்கையில் . | – (வித்யாதி காரமுடை) இச்சரீரத்தில் |
| இயம்பிய பரம்பொருள் அறியின் | சத்தியாதி லக்ஷண முடையதாகக் கூறிய பிரஹ்ம வஸ்துவை சாக்ஷாத் கரிக்கில் |
| அந்த மாநுடன் | – அந்த அதிகாரியானவன் |
| மெய்யதாய் அபேத மாகிய நிர்த்தொந்த மாம்பரம் அடைந்திடும் | சத்தியமாயும் அத்வைதமாயும் நிர்வாணமாயும் உள்ள பரம புருஷார்த்தத்தையடைவன். |

[கூறிய அர்த்தத்தை வியதிரேக முகத்தாற் கூறுகின்ருர்]

| | |
|---|---|
| தோன்றிடாது ஆகில் | (ஆலசியத்தால் சிரவாணுதிகளை செய்திலனுய் முத்திரூப பிரஹ் மத்தை) அடையானுகில் |
| பந்தமாம் பவக்கடல் படும் பரகதி அடையான் | பரம புருஷார்த்தஹானியடைந்த வனுய்) பந்தரூபமான ஜென்ம சாகரத்தில் அழுந்துவன் மோக்ஷமடைய மாட்டான். |

19

(அ - கை) இந்தப் பிரகாரம் அன்வய வியதிரேகங் களால் முமூட்சு சரீரத்தில் வித்தையின் சுலபத் தன்மையைக் கூறி அதன் பலத்தை சுருதி கூறுகின்றது அதைக் கூறுகின்ருர்.

தங்க ளியாக்கையிற் சகலயாக் கையினிலுந்தத்துவ மதுதானே
எங்கு மொன்றெனக் காண்பவ ரியாவரிங் கிறந்திடார்
பிறவாராற்
பங்கு பட்டறிந் தவனறி யாதவன் பந்தமுத் தமதென்றே
இங்கொ ருத்தனே நிகழ்பவன் சேதன னிவைகன
வியல் பொக்கும். 20

(இ - ள்)

| | |
|---|---|
| தங்கள் ஆக்கையில் சகல ஆக்கையினிலும் எங்கும் தத்துவம் அதுதான் | தமது சரீரத்திலும் சர்வ சரீரங்களிலும் எல்லா விடங்களிலும் பிரஹ்மான்ம தத்துவமானது |
| ஒன்று எனக் காண்பவர் யாவர் | ஏகமே என்று சாக்ஷாத் கரித்த தீரர்கள் எவர்களோ அவர்கள் |
| இங்கு பிறவார் இறந்திடார் | இவ்விடத்து ஜெனியார் மரியார் (அமிதர்களாகின்றார்கள்) |

[ஏகனாகிய ஆன்மா தனது சரீரத்திலும் இதரமான சகல சரீரங்களிலும் சமமாக விருந்தால் பெத்த முத்தி விவஸ்தை எவ்விதஞ் சித்திக்குமெனச் சங்கித்துச் சொப்பன திருஷ்டாந்தத்தால் அது கூடுமென்று கூறுகின்றார்]

| | |
|---|---|
| பங்குபட்டு அறிந்தவன் அறியாதவன் | பிறித்தறியும் மகா வித்வானும் (அங்ஙனம்) அறியாத அவித்வானாகவும் |
| பந்தம் முத்தம் என்றே இங்கு சேதனன் ஒருத்தனே நிகழ்பவன் | பெத்தன் முத்தன் என்று இம் மாயாவுபாதி வசத்தால் ஆத்மா ஒருவனே விளங்கா நிற்பன் |
| இவை கனவு இயல்பு ஒக்கும் | இத்தன்மைய தோற்றம் சொப்பனத்தில் தைஜச ஆத்மா வொருவனே சர்வான்மகமாக விளங்குவது போலுமென்க. 20 |

(அ - கை) ஆன்மா ஏகமாயின் அதிற் கற்பிதமான ஜீவர்களுள் ஒரு ஜீவனது வித்தையால் அவித்தை நீங்கப் பெறின் சர்வ ஜீவர்களும் பிரயத்தன மின்றியே ஞானவான் ளாக வேண்டுமே யெனிற் கூறுகின்றார்.

தன்னில் வேறிலா மையிற்பர முத்தியிற் றனதுபுத் தியினுலே
அன்னி யங்களாய்த் தோற்றுமா பாசற்கும் பரபத மறிகின்ருன்
முன்ன மெப்படி மூடமாந்தசையிற்றன் மோகத்தா லெலாம்
பெத்தம்
என்ன வுற்றனன் முத்தியு மப்பரி சிருக்கும தியல்பே யாம், 21

(இ – ள்)

| | |
|---|---|
| தன்னில் வேறு | (வித்வானுக்கு) ஆத்மாவில் பேதமின்மையால் |
| பரமுத்தியில் அன்னியங்களாய் தோற்றும் ஆபாசர்க்கும் | (ஆத்மா ஏகமாவதால்) மேலான முத்திதசையில் தனது புத்தி விருத்தியில் கற்பிதமாய் பின்னமாய் தோற்றுகின்ற ஜீவர்களுக்கும் |
| தனது புத்தியினுல் பரபதம் அறிகின்ருன் | தனது தெளிந்த புத்தியால் முத்திதசையை அறிகின்ருன் |
| முன்னம்மூடம் ஆம் தசையில் தன் மோகத்தால் | பூர்வம் அஞ்ஞான காலத்தில் தனது பிராந்தியினுல் |
| எப்படி எல்லாம் பெத்தம் என்ன உற்றனன் | எவ்வாறு யாவரையும் பந்தமுடையவர்களென்றுஉணர்ந்திருந்தானே |
| அப்பரிசு முத்தியும் இருக்கும் | அவ்வாறே முத்தி காலத்திலும் முத்தர்களென்றறிகின்ருன் |
| அது இயல் பேயாம் (ஏ - அசை) | அவ்வாறு அறிதல் (ஞானி அஞ்ஞானிகளின்) சுபாவமேயாம். 21 |

(அ – கை) அவித்வானுக்கு அவித்யா சம்பந்தமிருக்கிறபடியால் செகத்தோற்றம் கூடும் வித்வானுக்கு அது இன்மையால் ஜெகத் பிரதீதி கூடாதேயெனிற் கூறுகின்ருர்.

ஒருகால முன்செய்வினை யளவும் யோகி
யுயிருலகா தியைக்காண்பா ஞெருகாற் காணுன்
ஒருகாலிற் ரேற்றமெலாம் பரமாய்க் காணும்
உளபரிசே யாயொருகா லொன்றுங் காணுன்

றுரிசான செகருபந்தோன்றும் போது
துக்கசுகங் களுமாபா தித்துத் தோன்றும்
பரமாகத் தோன்றுபொழு தாபா தித்துத்
தோன்ருது துக்கசுகம் பரமே தோன்றும். 22

(இ - ள்)

| | |
|---|---|
| யோகி முன்செய் வினை அளவும் ஒரு காலம் உயிர் உலகு ஆதியைக் காண்பான் | ஞானியானவன் பிராரத்தகன்ம பரியந்தம் கருமபலபோக சமயத்தில் ஜீவஜெகதாதிகளைக் காண்பான் |
| ஒருகால் காணுன் | *அத்விதீய பிரஹ்மாநுபவ சமயத்தில் அவற்றைப் பாரான் |

[அது அஞ்ஞானிக்கும் இயல்பே யெனிற் கூறுகின்ருர்]

| | |
|---|---|
| ஒரு காலில் | – கருமபலபோக சமயத்தில் |
| தோற்றம் எலாம் பரம் ஆய்க் காணும் | (விவகரிக்கினும் பிரத்யகான்மாவான பிரஹ்மத்தில்) ஜெகமனைத்தும் (விசாரத்தால் கற்பிதமானது பற்றி) அதிஷ்டான பிரஹ்மமாகவே அறிகின்ருன். |
| ஒருகால் உளபரிசே ஆய் ஒன்றும் காணுன் | சமாதி சமயத்தில் (அதிஷ்டான பிரஹ்ம ஞானத்தினுல் ஆரோபித ஜெகம் வியாபிக்கப்பட்டது பற்றி நிஷ்பிரபஞ்சமான) ஆத்ம சொரூப மாத்திரமாக விளங்குவதனுல் பிரபஞ்சத்தை யறியமாட்டான். |

[இவ்வாற்ருல் அவித்வான் வித்வான்களுக்கு பேதமிருக்கினும், அவித்வானுக்குப் போல வித்வானுக்கும் சுகதுக்கங்கள் தோற்றுகிறபடியால் அவித்வானிலும் வித்வானுக்கு யாதுவிசேஷ முளதெனிற் கூறுகின்ருர்]

| | |
|---|---|
| துரிசு ஆன சகரூபம் தோன்றும் போதும் | தோஷரூப (வாதிக்கத்தக்க போக்துரு போக்யாதி வடிவ) பிரபஞ்சாகாரமாக பிரஹ்மம் தோற்றுங் காலத்தில் |

* சுழுத்தி, உதாசீனகாலம், விருத்திகளின் சந்திகளில், நனவாதி அவஸ்தைகளின் சந்திகளில், தோன்றுமானந்தம் இருவர்க்கும் பொதுவென்பதாம்.

| | |
|---|---|
| துக்க சுகங்களும் ஆபாதித்துத் தோன்றும் | * சுகதுக்காதி போகங்களும் ஆபாசமாகவே தோன்றும் (ஆத்ம வடிவமாகிய தன்னைப் பாதிக்கும் வஸ்துவாகத் தோற்றாது) |
| பரம் ஆகத்தோன்றும் பொழுது | திரிபுடியில்லாத சொரூப மாத்திர விளக்கமான சமாதியவஸ்தையில் |
| துக்க சுகம் ஆபாதித்துத் தோன்றாது பரமே தோன்றும் | ஆபாச சுகதுக்கங்களும் தோன்றாது பரமாத்ம சொரூபமே விளங்கும். 22 |

(அ – கை) அற்றேல் அவித்வானைப் போல வித்வானும் சகல ஜெகத் பதார்த்தங்களும் குறைவின்றி அனுபவிக்கப் படுவதாகப் பார்க்கின்றான் அவனைக் குறித்து ஜெகத்து ஆபாத ரூபத்வ மெப்படி யென்னு மிடத்துக் கூறுகின்றார்.

தத்துவ ஞானி காணினுஞ் சகத்தைக்
கண்டிலன் தத்துவமே கண்டான்
வத்துவே யாக வல்லவே யாக
மற்றொரு பொருளிலை யானால்
இத்தில்வே றொன்றை யெங்ஙனங் காண்பான்
இயாதொரு படிசெகத் தாகத்
தொத்தர வில்லாத் தோற்றமெப் படியோ
வப்படி நிகழ்வது பரந்தான். 23

(இ – ள்)

| | |
|---|---|
| தத்துவ ஞானி சகத்தைக்காணினும் கண்டிலன் | பிரஹ்ம வித்தானவன் உலகத்தை கண்டிருந்துங் காணாதவனும் |
| தத்துவமே கண்டான் | அதிஷ்டான பிரஹ்மத்தையே பார்க்கின்றான். |

[இந்தப் பிரகாரம் அன்னிய வஸ்துவின் தோற்றமின்மையை வித்வானுக்கு உபாதானம் பண்ணுகின்றார்]

| | |
|---|---|
| வத்துவே ஆக அல்லவே ஆக மற்று ஒரு பொருள் இலை ஆனால் | பாரமார்த்திக மாயாவது வியாவகாரீகமாயாவது தனக்குப் பின்னமாக அன்னிய வஸ்து வின்மையால் |
| இத்தில் வேறு ஒன்றை எங்ஙனம் காண்பான் | பிரஹ்மத்தினும் பின்னமாகவொரு பொருளை எவ்வாறு பார்ப்பான் |

* சுவானுபவத்தினால் அலையசைந்தாலும் கடலின்கண் அடித்தண்ணீர் அசையாது போலென்க.

[அதனுல் சர்வதா பிரஹ்மமே விளங்குகின்றதெனக் கூறுகின்ருர்]

| | |
|---|---|
| சகத்தாக யாதொருபடி எப்படி தோற்றுமோ அப்படி தொத்தரவு இல்லா பரம்தான் நிகழ்வது | அதிஷ்டான பிரஹ்மாகாரமாயாவது ஆரோபித போக்துரு போக்கிய ரூபப் பிரபஞ்ச ரூப மாயாவது எந்தப்பிரகாரம் வித்வானுக்கு பிரதிபாதனம் (ஞான) முண்டாகிறதோ அந்தப்பிரகாரம் அசங்க சைதன்யமே அவனுக்கு விளங்குகிறது. 23 |

(அ – கை) கூறிய நீதியால் சர்வ ஜெகத்தும் பிரஹ்மமாக விளங்குவதால் வித்வானுக்குச் சமாதியவஸ்தையைக் காட்டினும் விசேடமின்று ஆதலின் அதுவும் சமாதியே எனக் கூறுகின்ருர்.

எப்படி யெப்படித் தோற்றமப் படியா
யிலங்குவ துண்மையே யோகிக்
கப்படி யப்படி யுண்மை யாக
வறிவதே யான்மவே தனந்தான்
செப்புநா மத்தால் உண்மையா யெல்லாத்
திகழ்வுமா தேவனே யாகில்
இப்படி யறிந்த ஞானிகைக் கொள்வான்
எத்தையன் றெனவெதை விடுவான். 24

(இ – ள்)

| | |
|---|---|
| யோகிக்கு எப்படி எப்படி தோற்றம் | தத்துவ ஞானிக்கு (செகத்து) எந்த எந்தவிதமாகத் தோற்றுகின்ருதோ |
| அப்படியாய் இலங்குவது உண்மையே | அந்தந்த வடிவமாக விளங்குவது சச்சிதானந்த வடிவமாகிய பிரஹ்மமே |
| அப்படி அப்படி உண்மையே ஆக அறிவதே ஆன்மவேதனம் | அவ்வத் தோற்றத்தை பிரஹ்மமாக வறிவதே ஆன்ம ஞானமாம் |

[மகாதேவ சப்தார்த்த பரியாலோசனையாலும் வித்வானுக்குத் தன்னினும் அன்னியமாக அற்பமேனும் கொள்ளத் தக்கத்தள்ளத்தக்கதாவது சம்பவியாது எனக் கூறுகின்ருர்]

| | |
|---|---|
| செப்பு நாமத்தால் உண்மையால் | கூறு நின்ற நாமமாகவும் ரூபமாகவும் விளங்கா நின்ற |
| எல்லாத் திகழ்வும் மகா தேவனே ஆகில் | சகல விளக்கமும் (திரிவித பரிச்சேத ரகித சொப்பிரகாசப்) பிரஹ்மமேயானுல் |
| இப்படி அறிந்த ஞானி எத்தகைக் கொள்வான் | இவ்வாறு சர்வத்தையும் பிரஹ்ம வடிவமே எனச் சாக்ஷாத்கரித்த ஞானவான் எப்பதார்த்தத்தை நன்றெனப்பற்றுவான் |
| எத்தை அன்று என விடுவான் | எப்பதார்த்தத்தை தீதென்று நீக்குவான். (சகலமும்தனதுவடிவமானதால் கூடாதாம்) 24 |

(அ – கை.) மகாதேவனுக்கு அன்னியமாக யாதேனுமிருப்பதாக ஒப்பிடில் அவன் மகத்வத்திற்கு ஆனியாமெனக் கூறுகின்றுர்.

அன்னிய மாக விடுதல்பற் றுதலுண்
டாகுமேற் பூரண ணுகப்
பன்னிய பெருமைக் கானியா மந்தப்
பரமன தியல்பழு துருதே
தன்னில்வே றின்மை யான்மகத் துவந்தன்
மமதிலேத் தன்மதன் மிகளாம்
பின்னவா சகமு மிப்பரம் பொருளிற்
பேதமுண் டாகிலே பிறக்கும் 25

(இ – ள்)

| | |
|---|---|
| விடுதல் பற்றுதல் அன்னியமாக உண்டாகுமேல் | தள்ளத்தக்க கொள்ளத்தக்க பதார்த்தங்கள் மகாதேவனுக்கன்னியமாகவிருக்குமேல் |
| பூரணன் ஆக பன்னிய பெருமைக்கு ஆனியாம் | திரிவித பரிச்சேத ரகிதனுகச் சுருதிகள் கூறிய மகத்வத்துக்குக் குறைவாம் |

[பிரத்யக்ஷானுபவ ஜெகத்தைப் பாதித்தலினும் அவனது மகத்வம் குறைதல் எமக்கிஷ்டமாம் என்னும் சங்கையை நிராகரிக்கின்றுர்.]

| | |
|---|---|
| அந்தப் பரமனது இயல் பழுது உருதே | அம்மகத்துவம் மகாதேவனது சொரூபமாகலின் குறைவடையாது |
| தன்னில் வேறு இன்மையால் மகத்து வம் தன்மமது இலே | தன்னினும் பின்னமாக இல்லாத படியினுல் மகத்துவமானது தர்மமாகுமா (ஆகாது) |
| இப் பரம்பொருளில் தன்ம தன்மிகள் ஆம் பின்ன வாசகமும் பேதம் உண்டாகிலே பிறக்கும் | இந்த மகாதேவனிடத்தில் பேதத் தன்மை யிருந்தாலன்றே தர்ம தர்மிகளாகச் சொல்லுகின்ற பேத வார்த்தை உண்டாகும் |

(எவ்வஸ்துவினிடத்தில் வியாபகபேத மிருக்கின்றதோ அதனிடத்தில் "ஏகம் ஏவ அத்விதீயம்" என்னும் சுருதி யால் சுவகதாதிபேதம் நிராகரிக்கப்பட்டிருத்தலின் தனக்குத் தானே தருமமாயிருத்தல் கூடாமையின் பேதமின்று. வியாப் பியமாகிய தர்மா தர்மி பாவங்கள் தோன்றும் வியாபகமாகிய பேதமேயின்மையில் வியாப்ய பேதமாகிய தர்மமுமின்ரும்.) 25

(அ-கை.) எவ்விதத்தினும் ஆன்மாவுக்குப் பேதமானது இல்லையாயின் திரிசியப் பிரபஞ்சத்தின் தாதான்மிய லக்ஷண மான அபேதமானது அடையப்படுகின்ற[illegible] படவே பிரஹ் மத்துக்கு சவிசேஷத்துவம் பிராப்தியாமேயெனச் சங்கித்துக் கூறுகின்ருர்.

பேதமு மபேதந்தானும் பேதாபே தமுமுண் டல்ல
வோதிலப் பரத்துக் கென்று முள்ளது பிரமந் தானே
யேதாகு மென்று கொள்வா னேதாகாதென்று நீப்பான்
தீதாக நன்றே யாகச் சிவனலா தில்லை ஞானி 26

(இ – ள்)

| | |
|---|---|
| ஓதில் அப்பரத்துக்கு | கூறுமிடத்து அப்பிரஹ்மாத்துமா வுக்கு |
| பேதமும் அபேதமும் பேதாபேதமும் உண்டல்ல | துவைதமும் அத்வைதமும் துவிதாத்வைதமும் என்னும் மூன்றுமில்லையாம் |
| என்றும் உள்ளது பிரமமே | முக்காலத்தும் சதோதயமா யிருப்பது பிரமமே |

தீது ஆக நன்றே ஆக —சத்தாகவாவது அசத்தாகவாவது

| | |
|---|---|
| சிவன் அலாது இல்லை | பரமாத்துமாவின் பின்னமாக வில்லையாயின் |
| ஞானி ஏது ஆகும் என்று கொள்வான் | பிரஹ்மவித்தானவன் எவ்வஸ்துவை உசிதமெனக் கைக்கொள்வான் |
| ஏது ஆகாது என்று நீப்பான் | எதை அநுசிதம் எனத் தள்ளுவான் 26 |

(இரண்டிடத்தும் தான் அசை)

(அ—கை.) சொரூப திருஷ்டியால் பிரபஞ்சமில்லையாயினும் சதசத்விலக்ஷண அநிர்வசனீயமாயையால் உளதாகலாமல்லவா என்ற சங்கைக்குச் சமாதானம் கூறுகின்றார்.

எப்பொருளு மாயையினு லெனச்சிலவர் இயம்புவர்கண்
மெய்ப்பரமன் றனையொழிய வேறொருமா யையுமில்லை
யொப்பரிய பரனெழிய வொருமாயை யுண்டாகில்
அப்பரமன் றன்பெருமைக் கதுநேரே யழிவன்றே. 27

(இ—ள்)

| | |
|---|---|
| சிலவர் எப்பொருளும் மாயையினால் என இயம்புவர்கள் | வேதாந்தானுசாரிகளுள் சிலர் எவ்வகைப் பதார்த்தங்களும் மாயையினதீனமாகவேயிருக்கின்றதென்று கூறுவார்கள் (அது விருத்தமாம்) |

[மாயையின் சத்பாவத்தை மறுத்துக் கூறுகின்றார்]

| | |
|---|---|
| மெய்ப்பரமன்தனை ஒழிய வேறு ஒரு மாயையும் இல்லை | சத்துரூப பிரஹ்மத்தைத் தவிர பின்னமாக ஒரு மாயை என்பதில்லையாம் |
| ஒப்பு அறிய பரன் ஒழிய | சமானமின்றிய பிரஹ்மத்தைத் தவிர |
| ஒரு மாயை உண்டாகில் | மாயையென்று ஒரு பதார்த்த மிருக்குமானால் |
| அப்பரமன் பெருமைக்கு | அப்பிரஹ்மாத்மாவின் மகத்வத்திற்கு |
| அதுநேரே அழிவு அன்றே | அது சாக்ஷாத் நாசகாரணமன்றே? 27 |

(அ – கை.) மகத்வத்தில் குறைவுண்டாகமாட்டாதாத லின் திரிவித பரிச்சேத ரகிதமாய் பிரம்மமேயுள்ளதெனக் கூறுகின்ருர்.

பெருமையினிற் சங்கோசம் பிறவாது பிறக்குமெனில்
அருமறைவாக் கியம்பொய்யாம் அப்பிரமா ணமுமாகும்
பொருவில்பரா னந்தபரி பூரணமெய்ச் சுடராகும்
தெரிவருமா தேவனல்லாற் றிகழ்வதொரு சிறிதுமிலை 28

(இ - ள்)

| | |
|---|---|
| பெருமையினில் சங்கோசம் பிறவாது பிறக்கும் எனில் | மகத்வத்திற் குறைவேற்படாது. மகத்வமானது (ஆகாசாதிகளுக்குப் போல இதரத்தை அபேக்ஷித்து) உண்டாக்குமெனில் |
| பொய்யாம் அருமறை வாக்கியம் அப்பிரமாணமும் ஆகும் | அனந்தம் (தேசகாலவஸ்து பரிச்சேதரகிதம்) சுவகதாதிபேதரகிதமென்று கூறும் சத்தியார்த்தவாதினியாகிய வேதம் பிரமாணமாகாது அசத்தியமாகும் |
| பொருவு இல் பரானந்த பரிபூரண மெய்ச்சுடர் ஆகும் | சமான ரகிதப் பரமானந்த பரிபூரண சத்திய சிற்கனமாகிய |
| தெரிவு அரும் மாதேவன் அல்லால் ஒரு சிறிதும் திகழ்வது இல்லை | அறிதற்கரிய மகா தேவனல்லாது கிஞ்சின் மாத்திரமும் விளங்கத் தக்கதில்லை 28 |

(அ – கை) வைதிக அவைதிக சாஸ்திரங்களிலும் புராண இதிகாசங்களிலும் இந்தப் பரமாத்வைதமே கூறப் படுகின்றதெனக் கூறுகின்ருர்.

இதுவே முடிந்த நிலமெல்லாத் தர்க்கங் களுக்குங் காட்சியே
மூதலாம் பிரமா ணங்களுக்கு மொழியுங் வேதாங் தங்களுக்கும்
விதமாம் புராண மனைத்தினுக்கு மிருதி களுக்கும் வேதத்தின்
மதமாம் விச்சை யனைத்தினுக்கு மன்னு மாபா ரதத்துக்கும் 29

(இ – ள்)

எல்லாத்தர்க்களுக்கும் – சகலவித தர்க்கங்களுக்கும்

| | |
|---|---|
| காட்சியே முதல் ஆம் பிரமாணங்களுக்கும் | பிரத்யக்ஷம் சத்தம் அனுமானம் உபமானம் அர்தாபத்தி அனுபல பத்தியாதி பிரமாணங்கட்கும் |
| மொழியும் வேதாந்த அங்கங்களுக்கும் | (ஆருகக்) கூறும் (வியாகரணுதி) வேதாங்களுக்கும் (இருக்காதிவேத) வேதாந்தங்களுக்கும் |
| விதமாம் புராணம் அனைத்தினுக்கும் | நாநாவிதமானஸ்காந்த முதலிய புராண வுபபுராணங்களனைத்தி னுக்கும் |
| மிருதிகளுக்கும் வேதத்தின் மதமாம் விச்சை அனைத்தினுக்கு | மனுவாதி ஸ்மிருதிகளுக்கும் வேத சம்மதமான சர்வ வித்தைகளுக்கும் |
| மன்னுமா பாரதத்துக்கும் | நிலைபெற்ற மகாபாரதத்திற்கும் 29 |

(இது குளகம்)

ஐயன் சைவா கமங்கட்கும் அரியா கமத்துக் குமெனது
பொய்யின் றியவா கமத்துக்கும் புத்தா கமங்கட் குமருகன்
செய்யு மாக மத்துக்குஞ் சித்த ரியக்கர் கந்தருவர்
உய்யும் பரிசு மற்றுள்ளோர் உரைத்த வாக மங்கட்கும். 30

(இ – ள்)

| | |
|---|---|
| ஐயன் சைவாகங்களுக்கும் | சிவாகமங்களிருபத்தெட்டிற்கும் |
| அரி ஆகமத்திற்கும் | பாஞ்சராத்ரம் முனித்திரிய முதலிய விஷ்ணுவாகமத்திற்கும் |
| பொய்யின்றிய எனது ஆகமத்திற்கும் | சத்தியமான அர்த்தத்தைப் பிரதி பாதிப்பதான என்னுடைய ஆகமத்திற்கும் |
| புத்தாகமங்களுக்கும் அருகன் செய்யும் ஆகமத்துக்கும் | புத்தர்களது ஆகமங்களுக்கும் செய்த அருகர்களது ஆகமங் களுக்கும் |

| | |
|---|---|
| சித்தர் இயக்கர் கந் தருவர் மற்று உள் ளோர் உய்யும் பரிசு உரைத்த ஆகமங் களுக்கும் | சித்தர்களும் இயக்கர்களும் தந்தரு வர்களும் சொல்லா தொழிந்த ஏனையோர்களும் மோக்ஷ ஏது வாகக்கூறிய ஆகமங்களனைந் திற்கும் |
| இதுவே முடிந்த நிலமாம் | இந்தப் பரமாத்வைதமே பரியவ சான பூமியாம் |

(மற்றுளோர் உரைத்த ஆகமங்கட்கும் இதுவே முடிந்த நிலமாம். என ஒட்டுக) 30

(அ - கை) இவ்வித பரமாதவைத ஞானம் தேவ மநு சியர்கட்கு இயல்பாகச் சித்தியாது பரமசிவை சிவத்துக்கே யியல்பாகவுள்ளது உமாபரமேஸ்வரர்களது திருவருளா ளேயே ஏனையோர்க்கு இந்த ஞானம் உண்டாம் என்று நான்கு செய்யுளாற் கூறுகின்றார்.

உவமையிற் பரமாத் துவிதமா மிந்த
வொண்பொரு ளுலகின்மா நுடரில்
எவரிது பெற்றார் அன்றிவிண் ணவரி
லேவரே பெற்றவ ருடையான்
சிவனொரு வனுமிப் பரம்பொருள் சுபாவ
சித்தமாஞ் சிவனுக்குஞ் சிவைக்கும்
அவரரு ளாலே யரிக்குமிப் பொருளுண்
டப்படி யெனக்குமுண் டருளால் 31

(இ - ள்)

| | |
|---|---|
| உவமையில் ஒண் பொருள் ஆம் இந்த பரமாத்துவிதம் | சமான ரகிதமான அழகிய வஸ்து வாம் இந்த மேலான அத்வைத விஞ்ஞானமானது |
| உலகில் மாநுடரில் எவர் இது பெற்றார் | இவ்வுலகத்தில் மநுசியர்களுக் குள்ளே எவர்கள் இதை அடைந் தார்கள் |
| அன்றி விண்ணவரில் ஏவரே பெற்றவர் | அல்லாமலும் தேவர்களுக்குள்ளே யாவர்கள் (இதனைப்) பெற்றார்கள் |
| உடையான் சிவன் ஒருவனும் | இறைவனாகிய சிவபெருமானுக்கே |

| | |
|---|---|
| இப்பரம்பொருள் சித்தம் | இந்தப் பரமாத்வைத ஞானமியல்பாம் |
| சிவனுக்கும் சிவைக்கும் சுபாவ சித்தமாம் | ருத்திரனுக்கும் உமாதேவிக்கும் (இப்பரமாத்வைத ஞானம்) இயல்பாயுள்ளதாம் |
| அவர் அருளாலே அரிக்கும் அப்பொருள் உண்டு | அவ்வுமா மகேஸ்வரர்களது கிருபையினுல் விஷ்ணுவுக்கு மிந்த ஞான முண்டு |
| அப்படி அருளால் எனக்கும் உண்டு | அவ்வித திருவருளால் பிரஹ்மதேவனுகிய எனக்கு முண்டு. 31 |

சாற்றிடப் பட்ட விராட்டுடன் சுராட்டு
சம்மிராட் டெனுமிவை யிவர்க்கும்
ஏற்றம துடைய தேவரா முமக்கும்
இயக்கரோ டரக்கர்கங் தருவர்
சீற்றமில் சித்தர் இவர்முத லான
தேவசா திகளனை வர்க்கும்
தோற்றிய மநுடர் விலங்குசா திகட்கும்
அருளினுல் இப்பொருள் தோன்றும். 32

(இ-ள்)

| | |
|---|---|
| விராட்டு | பிரமாண்டத்தினுள் ளடங்கிய சமஷ்டி தூலசரீராபிமானி |
| சுராட்டு | அப்பிரமாண்டத்தினுள்ளடங்கிய சமஷ்டி சூக்ஷுமசரீராபிமானி |
| சம்ராட்டு | அப்பிரமாண்டத்தினுள்ளடங்கிய காரண சரீராபிமானி. 32 மற்ற பொருள் வெளி |

பரமனத ருளுண் டாயிடிம் கிடம்
பதங்கமா நுடவரோ டசுரர்
சுரரனை வர்க்கும் ஞானமுண் டவனே
சுடர்மிகு ஞானமிங் களிப்பான்
அரியினு லென்னு லவனரு ளொழிய
வளித்திடப் படாதொரு பொருளும்
சுரர்களே தரவும் வாங்கவும் நாங்கள்
சுதந்தர ரன்றுமெய் சொல்லில் 33

(இ - ள்)

| | |
|---|---|
| பரமனது அருள் உண்டாயிடில் கீடம் பதங்கம் மாநுடவர் ஒடு அசுரர் சுரர் அனைவர்க்கும் ஞானம் உண்டு | பரமேஸ்வரன் திருவருள் பெற்றால் புழு விட்டில் மாநுடர் அசுரர் தேவர் முதலான சகல ஜீவராசிகளுக்கும் பிரஹ்மான்மைக்கிய ஞானமுண்டாம் |
| அவனே சுடர்மிகு ஞானம் இங்கு அளிப்பான் | (ஞானிகளுக் கபரோக்ஷமாக விளங்கும்) அப்பரனே சீவர்களுக்கு பிரகாச மிகுந்த ஞானத்தைக் இவ்வுலகில் முத்திபெறக் கொடுக்கின்றார் |
| அரியினால் என்னால் | விஷ்ணுவினாலும் பிரஹ்மாவாகிய என்னாலும் |
| அவன் அருள் ஒழிய ஒரு பொருளும் அளித்திடப்பாடாது | (அஞ்ஞானிகளுக்கென்றும் பரோக்ஷமாக விளங்கு) மந்தப் பரசிவன் திருவருளில்லாமல் யாதொரு பொருளையும் கொடுத்தற்கியலாது |
| மெய்சொல்லில் சுரர்களே ஒரு பொருளும் தரவும் வாங்கவும் நாங்கள் சுதந்தரர் அன்று | உண்மையைச் சொன்னால் தேவர்களே எதையும் கொடுக்கவோ வாங்கவோ நாங்கள் சுதந்தரமுடையவர்களாக இல்லை என்பதாம் 33 |

சுதந்தரன் சிவனே யிவனன்றோ பிறவிச்
சூழனின் றெடுப்பவ னவன்றன்
பதங்களா லன்றி யெங்களா லெடுக்கப்
படாதொரு செந்துவு மெங்கண்
மதங்களா லொழிய வருளினாற் பிறவி
மாற்றவும் வல்லமற் றொருவன்
றிதம்பெற வழங்கும் போதுதான் வழக்கம்
செய்யுமத் தருவியே போல. 34

(இ - ள்)

| | |
|---|---|
| சிவனே சுதந்தரன் | சிவபெருமானே சுதந்தரமுடையவன் |
| பிறவிச்சூழலில் நின்றும் எடுப்பவன் இவன் அன்றோ | சம்சாரத்தினின்று மெடுத்தலாகிய உத்தாரணம் பண்ணுபவனல்லவா |

| | |
|---|---|
| அவன் தன் பதங்களால் அன்றி எங்களால் ஒரு செந்துவும் எடுக்கப் படாது | அவனது பதாம்புஜப் பிரசாதத்தல்லாமல் பிரஹ்மா விஷ்ணுக்களாகிய எங்களால் எச்சீவர்களையும் உத்தாரணம் செய்தற்கியலாது |

எங்கள் மதங்கள் ஒழிய– எங்கள் சுதந்தரத்தாலல்லாமல்

| | |
|---|---|
| அருளினல் பிறவி மாற்றவும் வல்லம் | இறைவன் திருவருளால் ஜெனன விமோசனம் செய்யவும் சமத்துடையராவோம் |

[அது எதுபோலும் எனிற் கூறுகின்ருர்]

| | |
|---|---|
| ஒருவன் திதம் பெற வழங்கும் போது | ஓர் சமயற்காரன் பரிமாறும்போது நிலைபெறும்படியாக |
| தான் வழக்கம் செய்யும் அத்தருவியே போல | தானும் பரிமாறுதல் செய்யும் அச்சட்டுவமே போலாம். (ஆல் . மற்று . அசைகள்)  34 |

(அ – கை.) பரசிவத்தினது மகத்துவத்தை அவனது திருவருளாலன்றி மகத்துக்களாலும் அறியவொண்ணுதெனக் கூறுகின்ருர்]

தேவ தேவன் சிவன்பெருமை தானு மவன்றன் றிருவுருவு
மேவ ரறிவார் தானுத லில்லை யாகிற் றவறுதலே
யாவ ரருளா லன்றியவிர் பெரியோர்தமக்கு மறிவரியோன்
கோவி னறிதற் கருமைத்தான் கூற மிகவுங் குறிக்கொண்மின்35

(இ – ள்)

| | |
|---|---|
| தேவதேவன் சிவன் பெருமையும் அவன் தன் திருவுருவும் | மகாதேவனுகிய பரமேஸ்வரனது வைபவத்தையும் அவனது அழகிய சொரூபத்தையும் |
| தானுதல் இல்லை ஆகில் | (அவனே அறிவனே அறியானே) அவன் அறியாவிடில் |
| ஏவர் அறிவார் | எவர்களால் அறிவதற்கியலும் (இயலாதென்றபடி) |
| தவறுதலே ஆவர் | அறிய முயலுபவரேல் குற்றத்தையே அடைவர்கள் |

| | |
|---|---|
| அருளால் அன்றி அவிர் பெரியோர் தமக்கும் அறிவரியோன் | அவனுடைய அநுக்கிரகத்தாலல்லாமல் அறிவுமிக்க மகான்களுக்கும் அறிவதற்கரியனும் |
| கோவின் அறிதற்கு அருமையன் கூற மிகவும் குறிக் கொண் மின் | பரமேஸ்வரனது அறிதற்கரிய தாகிய தன்மையை யாம் உபதே சித்ததை நீங்கள் தாரணஞ் செய் யுங்கள் (தானிரண்டுமசை) 35 |

(அ - கை.) சுராசுர யுத்தம் சுருதியிற் கூறப்பட்டிருக் கின்றது. அதனைக் கூறுகின்றார்.

கலக்குறு மோகத் தாலிமை யவரும்
 கடுந்திற லசுரரும் பகைத்து
விலக்கரும் பூசன் முன்பொரு காலம்
 விளைந்துவிண் ணவர்தலை சாயப்
பெலத்தினன் மிக்க வசுரர்கள் வெல்லப்
 பெருகிய வருளின லிறைவன்
நலத்தகு மிமையோர் வெல்லவு மசுரர்
 நசிக்கவுந் திருவரு ணயந்தான். 36

(இ - ள்)

| | |
|---|---|
| முன்பு ஒருகாலம் கலக் குறும் மோகத்தால் | முன்னொரு காலத்தில் கலங்கச் செய்கின்ற மகா மோகத்தினல் |
| இமையவரும் கடுந்திறல் அசுரரும் பகைத்து | தேவர்களும் கொடுமையும் வீரத்தையுமுடைய அசுரர்களும் விரோதமுற்று (அதனல்) |
| விலக்கரும் பூசல் விளைந்து விண்ணவர் தலைசாய | மாற்றுதற்கரிய யுத்தம் செய்ததால் தேவர்கள் (தோல்வியுற்று) தலைவணங்கும்படி |
| பெலத்தினல் மிக்க அசுரர் வெல்ல | வலி மிகுந்த தானவர் வெற்றிபெற |
| பெருகிய அருள் உடைய இறைவன் நலம் தரும் இமை யோர் வெல்லவும் | மிகுந்த கருணையுற்ற பரமேஸ் வரன் நன்மைக்குறிய தேவர்கள் வெற்றி பெறவும் |
| அசுரர் நசிக்கவும் திரு வருள் நயந்தான் | தானவர் தோல்வியுற்று அழியவும் தனது திருவருளைப்பாவித்தான். 36 |

திருவரு ளதனுல் அசுரரைத் தேவர்
செயித்துமா தேவன்றன் செயலென்
ருெருவரு மறியா ரும்பர்தா னவரை
யோட்டினுர் தாமென வுவந்து
பெருகிய வகந்தை செய்திடத் தேவர்
பிழைக்கவும் பிரான்றனே யறிதற்
கருமையு மறிய வியக்கரு பங்கொண்
டமலனங் கருளினு னின்ருன். 37

(இ - ள்)

| | |
|---|---|
| திருவருள் அதனுல் | – மகா தேவனது பிரசாதத்தினுலே |
| தேவர்கள் அசுரை செயித்து | அமரர் தானவரை வென்று (அவ்வெற்றியை) |
| மகா தேவன் தன் செய்லென்று | மகா தேவனது திருவருளென் பதாக |
| உம்பர் ஒருவரும் அறியார் | (அத்) தேவர்களிலொருவரு மறிந்தாரில்லே |
| தானவரை ஓட்டினுர் | அசுரரை வெற்றிட்டோடும்படி செய்தவர்கள் |
| தாம் என உவந்து | – தாங்களென்றுவகையுற்று |
| பெருகிய அகந்தை செய்திட | மிக்க வகம்பாவ முற்றனர் |
| தேவர்கள்பிழைக்கவும் | – அவ்வானேர்கள் உய்ந்திடவும் |
| பிரான்தனே அறிதற்கு அருமையும் அறிய | கடவுளாகிய தன்னே பிரர் அறிதற்க சக்கியமாந்தன்மையை யாவரு மறியவும் |
| அமலன் அருளினுல் அங்கு இயக்க ரூபம் கொண்டு நின்ருன் | மகா தேவன் (தனது) கிருபையி னுல் அந்தத் தேவலோகத்தில் ஓர் யட்சரூபங்கொண்டருளினுர். 37 |

இயக்க ரூபனு மிறையவன் றன்னேக்கண் டிமையவ ரினங்கூடி
வியக்க வுற்றது வேதனத் தங்களில் விசாரித்து விளங்காமல்
மயக்க மற்றிட வறிந்தெமக் குறையென வன்னியை விடுத்தார்கள்
நயக்க வுற்றது தன்னியல் பறிந்துநா னவிலுவ னெனச்
சென்ருன். 38

(இ - ள்)

| | |
|---|---|
| இயக்க ரூபனும் இறை வன் தன்னைக் கண்டு | யட்ச ரூபனுகிய மகா தேவனைப் பார்த்து |
| இமையவர் இனம்கூடி | தேவர்களனைவரும் (ஏகமாய்ச்) சேர்ந்து |
| வியக்க வுற்றது ஏது என தங்களில் விசா ரித்து விளங்காமல் | நம்மனைவர்க்கும் வியப்புண்டாகும் படி வந்திருப்பது யாதென்று தங் களுக்குளாராய்ந்தறியாமல் |
| எமக்கு மயக்கம் அற் றிட அறிந்து உரை என வன்னியை விடுத் தார்கள் | எங்கட் கைய மகலும்படி தெரிந்து சொல்லென்று அக்கினி தேவனை யனுப்பினர்கள் |
| நயக்க உற்று நான் இது தன் இயல்பு அறிந்து நவிலுவன் எனச் சென்ருன் | (அவனும்) நலமுறச் சென்று நானி தனியற்கை யறிந்து கூறுவே னென்று (அவ்வெட்சரூப பரமேஸ் வரனிருக்குமிடம்) போனுன். 38 |

அனலனைக்குறித் தியக்கனு மிறைவனு ரென்று
வினவ வங்கிரா னென்றவற் குறித்தவன் விளம்ப
வுனது வீரிய மேதென விறையவ னுரைப்ப
வெனது பூமியி லுளதெலாஞ் சுடுமியல் பென்ருன். 39

(இ - ள்)

| | |
|---|---|
| அனலனைக் குறித்து | தன்னிடத்துற்ற) அக்கினி தேவனைப் பார்த்து |
| இயக்கன் ஆம் இறை வன் யார்என்று வினவ | யட்சரூபனுகிய பரமேஸ்வரன் நீ யாவன் எனக் கேட்க |
| நான் அங்கி என்று அவற்குறித்து அவன் விளம்ப | நான் அக்கினி தேவன் என்றம் மகா தேவனை நோக்கி அவ் வக்கினி தேவன் கூற |
| இறைவன் உனது வீரியம் ஏது என உரைப்ப | பரமேஸ்வரன் (அக்கினியை நோக்கி) உனது வல்லபம் யாதென்று திருவாய் மலர்ந்தருள |
| பூமியில் உளது எலாம் சுடும் இயல்பு எனது என்ருன் | உலகிலுள்ள யாவற்றையும் எரிக் கும் இயற்கை யென்னுடையதென (அக்கினிதேவன்) கூறினன். 39 |

அத்த னங்கொரு திரணத்தை யெடுத்தன லவனே
இத்தை நீதகி யெனக்குறு முறுவல் கொண் டிசைப்ப
யெத்தன் வேகமும் கொண்டது சுடவெரி யவனும்
சத்த னன்றிநா ணிப்பயந் தமரரைச் சார்ந்தான். 40

(இ - ள்)

| | |
|---|---|
| அத்தன் அங்கொரு திரணத்தை எடுத்து | (அப்போது) பரமேஸ்வரன் அவ்விடத்தோர் துரும்பை யெடுத்துக் கொண்டு |
| அனலனே இத்தை நீதகி என புன்முறுவல்கொண்டு இசைப்ப | அக்கினியை இத்துரும்பை நீயெரிப்பாயென்று புன்சிரிப்புடன் திருவாய் மலர்ந்தருள |
| எத்தன் வேகமும் கொண்டு அது சுட | தனக்கெத்தகை வலிமையுண்டோ அவ்யாவற்றையும் கொண்டத் துரும்பை யெரிப்பதற்கு |
| எரியவனும் சத்தன் இன்றி நாணிப்பயந்து அமரரைச் சார்ந்தான் | அக்கினி தேவனும் ஆற்றலற்றவனுகி வெட்கமும் அச்சமும் கொண்டு தேவர்களிடம்சென்ருன். |

40

அவன தியல்பை யென்னுலிங் கறிதற் கரிதென் றனல்சொல்ல
பவன னறியென் றிமையவர்கள் பகர வவனு மப்பரிசே
சிவனு லபசெ யப்பட்டுத் தேவர் தம்பால் செல்லுதலும்
அவனே நானே யறிகுவனென் றகந்தை யுற்ரு னமரேசன். 41

(இ - ள்)

| | |
|---|---|
| அவனது இயல்பை என்னுல் இங்கு அறிதற்கு அரிது என்று அனல் சொல்ல | அவ்வெட்சனது சுவாவத்தை யென்னுல் இவ்விடத்தறிவதற்கு துர்லபமாயிருக்கின்றதென்று - அக்கினி கூற |
| பவனன் அறி என்று | - வாயுவே நீ சென்றறிவா யென |
| அப்பரிசே அவனும் | அக்கினியைப் போலவே அத்துரும்பை அசைக்க வலியற்ற வாயுவும் |
| சிவனுல் அபசெயப் பட்டு | சிவபெருமானிடத்திற் ருேல்வியுற்று |

| | |
|---|---|
| தேவர்தம்பால் செல்லுதலும் | தேவர்களிடம் மீண்டும் சென்றவுடன் |
| அமரேசன் அவனே நானே அறிகுவன் என்று அகந்தை உற்றான் | தேவராஜனானவன் அவ்வெட்சனை யானே சென்று அறிவேனென்று செருக்குற்றனன் 41 |

புரந்தரன் அறியச் சென்றிடும் பொழுதிற்
போக்கற வவ்விடந் தனிலே
கரந்திட மிகவும் கலங்கியுள் வெதும்பிக்
கருதுபு கருணையே வடிவாய்
வரந்தரு விஞ்சா வல்லியா முமையை
வைதிக நெறியினால் வழுத்தா
அரந்தைதீர் வுறவே புகழ்ந்தனன் புகழ்ந்த
வளவிலங் களவிலா வருளால் 42

(இ – ள்)

| | |
|---|---|
| புரந்தரன் அறியச் சென்றிடும் பொழுதில் | இந்திரனானவன் அவ்வியக்க ரூபத்தை அறியச்சென்ற காலத்தில் |
| போக்குஅற அவ்விடம் தன்னிலே கரந்திட | (அலை அப்பானதுபோல் பரமேஸ்வரன் வேறிடம்) செல்லாமல் அவ்விடத்தந்திரித்தானமாயினர் |
| மிகவும் கலங்கி உள் வெதும்பி கருதுபு | (அப்போதிந்திரன்) மிகக் கலக்க முற்றவனாய் மனவாட்டத்துடன் சிந்தித்து |
| கருணையே வடிவாய் வரந்தரும் விஞ்சா வல்லியாம் உமையை | ஜீவகாருண்யமே ஓர் திருவுருவமாகி வரப்பிரசாதம் அருளுகின்ற பிரஹ்மவித்யா சொரூபியாகிய உமாமகேஸ்வரியை |
| வைதிக நெறியினால் வழுத்தா | (லௌகிக முறையாயும்) வேத முறையாயும் துதித்து |
| அரந்தை தீர்வுறவே புகழ்ந்தனன் | துன்பம் நீங்கும்படித் தோத்திரம் செய்தனன் |
| புகழ்ந்த அளவில் | – அவ்விதந் தோத்திரஞ் செய்யவும் |
| அங்கு அளவு இலா அருளால் | அத்தலத்தில் எல்லையற்ற திருவருளால் 42 |

(அ - கை) அகங்காரமற்றவர்க்கே திருவருளால் இம்மை மறுமைப் பேறடையப் பெறுமென்பதை தேவர்களுக் குத் தோன்றும்படி மிகக் கலங்கித் தோத்திரஞ் செய்யா நின்ற இந்திரன் முன்பு தேவி பிரத்யக்ஷமானது முதலியவற்றை சுருதியிற் கூறியதைக் கூறுகின்ருர்.

அங்கவே தத்தின் மயமதாய்ச் சிவனுக்
கபிஃனயா யானந்த மாகிச்
சங்கரன் றனக்குத் தானளித் தின்பங்
கருணையா லுயிர்க்கெலாந் தாயாய்த்
துங்கமால் வரையி லிச்சையாற் றேன்றுந்
தோகையீ சனதுவல் லபமும்
அங்கவ னறிதற் கருமையுந் தோன்றத்
தோன்றினு ளவ்விடந் தனிலே. 43

(இ - ள்)

அங்கவேதத்தின் மயமதாய்ச் } ஆறங்கங்களுடைய நான்கு வேதங்களின் வடிவமாயும்

சிவனுக்கு அபிஃனயாய்– பரசிவத்திற் கபின்ன சத்தியாயும்

ஆனந்தம் ஆகி – சர்வானந்த சொரூபியாயும்

சங்கரன் தனக்கு } (யாவர்க்கும் சுகமளிக்கும்) சிவபெருமானுக்கு

தான் இன்பம்அளித்து – தானே யானந்தங் கொடுத்து

கருணையால் உயிர்க்கு எலாம் தாய் ஆய் } தனதருளினல் சர்வஜீவர்களுக்கும் மாதாவாயும் (விளங்குபவள்)

துங்கமால் வரையில் இச்சையால் தோன் றும் தோகை } உயர்ச்சியும் பெருமையும் பொருந் திய விமயத்தில் தன்னிச்சையாலுற் பவித்த மயிலின் சாயலுற்றபார்வதி தேவியானவள்

ஈசனது வல்லபமும் } (தன் றஃலவனுகிய) பரமேஸ்வரனு டைய அரும்பெரும் செயஃலயும்

அங்கு அவன் அறி தற்கு அருமையும் தோன்ற } அவ்விடத்தம்மகாதேவரது அறிதற்கரியதான தகைமையும் விளங்கும்படி

அவ்விடந்தனில் தோன்றினுள் } அவ்விடத்திற் பிரத்யக்ஷ மாயினுள் 43

உமையையர்ச் சித்தங் கும்பர்கோ னியக்க
ரூபமா யவ்விடத் துண்டாய்
எமதுகட் புலத்துற் றிவ்விடந் தனிலே
மறைந்ததீ தென்னேயென் றியம்ப
மமதிருக் கொழுன னருளினுற் றேன்றி
மறைந்தனன் மாலுக்கு மயர்க்கும்
இமையவ ரெவர்க்கு முனக்குமா தேவன்
இயல்பறி யப்படா தென்றும். 44

| | |
|---|---|
| உமையை உம்பர் கோன் அங்கு அர்ச்சித்து | (அவ்விடத்தாவிர்ப்பவித்த) உமா மகேஸ்வரியை வானோர் தலைவனுய விந்திரன் அவ்விடந்தனிற் பூஜித்து |
| இயக்க ரூபமாய் இவ் விடத்து உண்டாய் எமது கட்புலத்து உற்று | யட்ச ரூபமாய் இவ்விடத்திற் றேன்றி எங்களுடைய கண்காண வந்து |
| இவ்விடந்தனிலே மறைந்தது ஈது என்னே என்று இயம்ப | இத்தலத்திற் றனே மறைந்து போனது இது என்னெனப் பணிந்து வினவ (அதற்குமைய வள்) |
| மமதிருக்கொழுனன் அருளினுல் தோன்றி மறைந்தனன் | எமது தலைவனுகிய பிரஹ்ம சொரூ பமே தம் கிருபையினுலேயே பிரத் யக்ஷமாய் அந்தர்தான மாயினர் |
| மாலுக்கும் அயர்க்கும் இமையவர் எவர்க்கும் உனக்கும் | மாயவனுக்கும் மலரவனுக்கும் வானேரெவர்க்கும் இந்திரனுய உனக்கும் |
| மகா தேவன் இயல்பு என்றும் அறியப் படாது | (எமது நாதனுகிய) மகாதேவனது (கர்த்ருத்வம் அகர்த்ருத்வம் அன் னியதா கர்த்ருத்வத்) தன்மையை எப்போது மறிவதற்கசக்கியமாம். 44 |

தன்னேயறி தற்கருமை தன்னேயறி வித்தற்
குன்னிகழ் வுற்றது மொழித்ததுவு மும்பன்
வென்னதற வானவரு நீயும்விச யத்தே
மன்னவவ னேயசுரர் மாயவருள் செய்தான். 45

(இ – ள்)

| | |
|---|---|
| தன்னை அறிதற்கு அருமை தன்னை | சர்வசாக்ஷியாயும் சர்வக்ஞத்வாதி கல்யாண குணங்களோடு கூடிய தன்னை எவரும் அறிதற்கரிதாந் தகைமையை |
| அறிவித்தற்கு உன்னி | தெரிவிக்க வேண்டுமெனத் திருவுளத்தெண்ணி |
| நிகழ் உற்றதும் ஒளித்ததும் உம்பன் | உருவெளித் தோன்றினதும் மறைவுற்றதும் அம்மகா தேவனேயாகும் |
| வானவரும் நீயும் வென்னது அற விசயத்தே மன்ன | தேவர்களு மிந்திரனாய நீயும் புறமுதுகிட்டோடாமல் யுத்தத்தில் வெற்றிபெற்று நிலைபெறவும் |
| அசுரர் மாய அவனே அருள்செய்தான் | தானவரழியவும் அந்தமகா தேவனே திருவருள்புரிந்தான் 45 |

அத்தனே சரண மாக வடையுமென் றருளிச் செய்து
பத்தர்கள் பாசந் தீர்க்கும் பரமகா ருணிகை யாகி
சித்துரு வாகிச் சான்றாய்த் திகழ்ந்திடுந் தேவி யுந்தன்
சுத்தமாஞ் சொரூபந் தன்னிற் கரந்தன டோன்றா வண்ணம் 46

(இ – ள்)

| | |
|---|---|
| அத்தனே சரணம் ஆக அடையும் என்று அருளிச் செய்து | ஆனதால் அப்பரமேஸ்வரனையே சரணாகதியாக அடைவீர்களென்று திருவாய் மலர்ந்தருளிச் செய்து |
| பக்தர்கள் பாசம் தீர்க்கும் பரம காருணிகை ஆகி | அடியவருடைய அறியாமையை நீக்கும் பரமகிருபாலுவாயுள்ளவளும் |
| சித்து உருவு ஆகிச் சான்றாய் திகழ்ந்திடும் தேவியும் | சிற்சொரூபமாயும், சர்வசாக்ஷியாயும் விளங்காநின்ற உமா மகேஸ்வரியும் |
| தன் சுத்தமாம் சொரூபம் தன்னில் தோன்றா வண்ணம் கரந்தனள் | தனது நின்மலமான பிரஹ்ம சொரூபத்தில் எவர்க்கும் வெளிப்படாமல் மறைந்தருளினாள் |

46

(அ - கை) பரசிவத்தின் திருவருளின் பெருமையைக் கூறுகின்ருர்.

அன்றுமா லொழிந்திங் கிமையவ ரீசன்
அறிகிற வருமையு மருளும்
துன்றுபுந் தியுநன் முத்தியு மளிக்குஞ்
சுதந்தரந் தன்னேயுந் துணிந்து
நன்றியே யுற்ருர் அருள்பெறி லெளியன்
நாதனிங் கறிவுறு மருடான்
இன்றியே யொளியி லொருவரா லுந்தன்
னியல்பறி யப்படா தென்றும். 47

(இ - ள்)

| | |
|---|---|
| அன்று அங்கு இமையவர் மால் ஒழிந்து | (அவ்வாறு பரசிவனும் வித்யா சொரூபியாகிய தேவியும் திருவருள் புரிந்தருளிய) அப்போது அவ் விடத்திந்திராதி தேவர்கள் முன்னிருந்த மயக்கம்நீங்கி(அகங்காரத்தை விட்டு) |
| ஈசன் அறிவதற் அருமையும் அருளும் துன்றுபுந்தியும் | பரசிவனறிதற் கசக்கியனென்பதையும் காருண்யத்தையும் நெருங்கிய போகத்தையும் |
| நன்முத்தியும் அளிக்கும் | ஆனந்தவடிவ மோக்ஷத்தையுங் கொடுக்கும் |
| சுதந்தரம் தன்னேயும் துணிந்து நன்றியே உற்ருர் | சுதந்தரத்தன்மையும் (நன்ருகத்) தெரிந்து நன்மையே அடைந்தார்கள் |
| அருள்பெறில் எளியன் நாதன் இங்கு அறிவுறும் | அவனது திருவருள் பிரசாதம் பெற்றவர்க்கு எளியவனுகிய சிவ பெருமான் இவ்விடத்திலே (சுயமாகவே) அறியப்படுவான் |
| அருள்தான் இன்றியே ஒழியில் | அவனது திருவருளில்லாது நீங்குமாளுல் |
| ஒருவராலும் தன் இயல்பு என்றும் அறியப்படாது | யாரொருவராலும் அச்சிவபெருமானுடைய சுபாவத்தை எக்காலத்திலும் அறியமுடியாது 47 |

சம்புவி னருளா லன்றிமா லியானுஞ்
    சகலதே வதைகளு மந்த
வும்பனே யுணரோம் அருள்பெறும் பொருட்டே
    யோதிய யாவையு முளதாஞ்
செம்பொரு டன்னே யருளினு லொழியத்
    தெரிவினுற் றெளிகுவ ராக
நம்புமா நுடவர் கையினு னுற்றம்
    அறிவரோ நாசியா லொழிய. 48

(இ - ள்)

| | |
|---|---|
| சம்புவின் அருளால் அன்றி | பரசிவ கிருபையாலல்லாமல் (ஒரு மாநுடனுலும் திருவருட் பிரசாத மின்றி அறியமுடியாது) |
| மால் யானும் சகல தேவதைகளும் அந்த உம்பனே உணரோம் | விஷ்ணுவும் பிரஹ்மாவாகியயானும் சகலமான இந்திராதி தேவர்களும் அந்தப் பரமேஸ்வரனே யறியோம் |
| ஓதிய யாவையும் | கூறிய சர்வ சாதனங்களும் |
| அருள் பெறும் பொருட்டே உளதாம் | அப்பரமேஸ்வரனுடைய திருவருளே யடையும் பொருட்டே யிருக்கின்றனவாம் |
| செம்பொருள் தன்னே | அச்சிறந்த பரசிவ வஸ்துவை |
| அருளினுல் ஒழிய தெரிவினுல் தெளிகுவர் ஆக நம்பும் மாநுடவர் | அவனருளல்லாமல் புத்தியினுல் அறியும்படி நம்பியிருக்கும் மநுடர்கள் |
| நாசியால் ஒழியக் கையினுல் நாற்றம் அறிவரோ | மூக்கினுலன்றி வாசனையை கையைக் கொண்டறிவார்களோ (அறியாரென்பதாம்) |

48

(அவனேயடைவதற்கு அவனருளே சாதனம் வேறின் றென்பதாம்)

(அ - கை.) சிவப்பிரகாசத்தின் சொருபத்தைக் கூறுகின்ருர்.

ஒழிவிலா விறைவன் அருளுரு வுணரில்
ஒத்திடும் வினையினிற் குரவன்
விழியினால் விளையப் படுவதா யுளதோர்
மிக்கதோ ரதிசய மதனை
மொழியுமா றென்னான் முகுந்தனா லரனான்
முடிந்திடா கண்முகப் படாதே
அழிவிலாச் சிவற்குஞ் சிவைக்குமாற் கெனக்கும்
அறிவதுஞ் சிலவறி குறியால் 49

(இ - ள்)

| | |
|---|---|
| இறைவன் ஒழிவு இலா அருள் உரு உணரில் | நீக்கமின்றி நிறைந்திருக்கின்ற பரசிவத்தினது அருட்பிரசாதத் தன்மை யாதென்று விசாரிக்குமிடத்து |
| ஒத்திடும் வினையினில் குரவன் விழியினால் விளையப்படுவதாய் உளது | கருமசாமிப்பியத்தினாலும் ஆசாரியனது கிருபாவீக்ஷண்யத்தினாலும் உண்டாவதாயுள்ளது |
| ஓர் மிக்கதோர் அதிசயம் அதனை மொழியும் ஆறு | மிகவும் சிரேஷ்டமான அதிசயமொன்றுண்டு அதை இவ்விதமென்று கூறற்கு (கற்பகோடி காலத்தாலும்) |
| என்னால் முகுந்தனால் அரனால் முடிந்திடா | பிரஹ்மாவாகிய என்னாலும் விஷ்ணுவாலும் உருத்திரனாலும் முடியாது |
| கண்முகப்படாது | (ஏனெனில்) பிரத்யட்சமாகத் தெரியாது (என்பதனாலாம்) |
| அழிவு இலாச் சிவற்கும் சிவைக்கும் மாற்கும் எனக்கும் சில அறிகுறியால் அறிவுறும் | நாசரகித பரசிவத்திற்கும் அவனது அருட்சத்திக்கும் விஷ்ணுவுக்கும் பிரஹ்மாவாகிய எனக்கும் சில அடையாளங்களால் அறியப்படும். |

(தருமாதருமம் போகத்தால் க்ஷீணமடைதல் அல்லது இருவினைகளையும் சமமாகப் பார்த்தல் கரும சாமிப்பியமாம்) 49
"இருவினை ஒப்புமலபரிபாகம்" என்றார் பிறரும்

(அ – கை) அருட்பிரசாதத்தை யறிதற்கு உரிய சின்னங்கள் இவை யெனக் கூறுகின்ருர்.

மொழியுமக் குறிதான் மிக்கபே ருவகை
  மொழிதழுத் தழுகையங் கத்தும்
விழியிலும் விகாரம் பிறக்கைதம் பிக்கை
  மெய்விதிர்த் திருக்கைமெய் விழுகை
சுழல்கைமற் றெழுகை வானிலே யிருத்தல்
  சுடரொளி யாகியே தோன்றல்
ஒழியுமிவ் வுடலங் கண்டிடா திருத்தல்
  உம்பர்தே காந்தரத் துறைதல். 50

(இ – ள்)

| | |
|---|---|
| மொழியும் அக் குறிதான் | சொல்லாநின்ற பரசிவ அருட்பிரசாதத்தை தெரிவிக்கும் சின்னமானது |
| மிக்க பேர் உவகை மொழிதழுதழுத் தழுகை | மிகுந்த சந்தோஷமும் வாக்கானது குழறி யழுதலும் |
| அங்கத்தும் விழியிலும் விகாரம் பிறக்கை | தூலசரீரத்திலும் நேத்திரத்திலும் மயிர்கூச்சும் ஆனந்த பாட்பமும் உண்டாதலும் |
| தம்பிக்கை மெய் விதிர்த்திருக்கை | ஸ்தம்பமாயிருத்தலும் சரீர நடுக்கமும் |
| மெய்விழுகை சுழல்கை – | சரீரம் கீழே விழுதலும் சுற்றுதலும் |
| மற்றும் எழுகை வானிலே இருத்தல் சுடர் ஒளி ஆகிய தோன்றல் | மேலும் (பிரமிப்பதும்) மேற் கிளம்புவதும் ஆகாசத்திலே யிருத்தலும் பிரகாசம் தோற்று தலும் |
| ஒழியும் இவ்வுடலம் கண்டிடாது இருத்தல் உம்பர் தேகாந்தரத்து உறைதல் | நைசுரமாகுமிவ்வுடம்பு ஒருவர்க்கும் தோன்ருதிருத்தலும் மேலான பரகாயப் பிரவேசஞ் செய்தலும் |

50

ஓதிடா துணர்தல் கலைமலை முதலா
வுள்ளபே தனந்தெற லுணர்த்தல்
ஆதியாங் குறிகள் இறைவனா ரருளுக்
கறிகுறி யாவன வருடன்
னீதிதா னெவர்க்கு மொருபடித் தாகி
நிகழ்வுரு தந்தநின் மலன்றன்
பாதமே யுறுவார் பக்குவந் தோறும்
படுதர மாகியே நிகழும். 51

(இ - ள்)

| | |
|---|---|
| கலை ஓதிடாது உணர்தல் | அப்பியாசமில்லாது சாஸ்திரார்த்தமுணர்தலும் |
| மலை முதலாக உள்ள பேதனம் | மலை முதலிய கடின பதார்த்தங்களை சாதனாந்தரமின்றி பேதித்துச் செல்லுதலும் |
| தெறல் உணர்த்தல் | நிக்கிரகித்தலும் அனுக்கிரகித்தலும் |
| ஆதியாம் குறிகள் | – ஆகிய இவை முதலிய சின்னங்கள் |
| இறைவனார் அருளுக்கு அறி குறி ஆவன | பரமேஸ்வரனுடைய பிரசாதம் பத்தர்களிடத்துத் தங்கியிருப்பதை தெரிவிக்கும் சின்னங்களாம் |
| அருள் தன் நீதிதான் | அந்தப் பிரசாதத்தின் முறைமையானது |
| எவர்க்கும் ஒருபடித்து ஆகி நிகழ்வுருது | சர்வத்தராளுக்கும் ஒரே பிரகாரமாய் விளங்காது |
| அந்த நின்மலன் தன் பாதமே உறுவார் | அப் பரிசுத்த பரமேஸ்வரனது பாதார விந்தத்தை யடைந்தவர்களது |
| பக்குவம் தோறும் படுதரம் ஆகியே நிகழும் | பரிபக்குவத்தை யனுசரித்து அதிகம் அதிக தரமாகவே விளங்கும். |

51

செப்பிய விந்த வருள்சிவ னாலும்
சிவையினா லுஞ்செயப் படுவ
தப்பெருந் தன்மை யரியினா லென்னல்
ஒருவரா லளிக்கலா காதே

இப்பவந் தனிலே முத்தியிச் சிப்பான்
இயம்புமெத் தேவையும் விட்டு
சிற்பர ஞகுஞ் சிவஞெரு வனுமே
சரணெனச் சென்றுசேர் வுறுவான். 52

(இ – ள்)

| | |
|---|---|
| செப்பிய இந்த அருள் சிவனுலும் சிவையினு லும் செயப்படுவது | முற்கூறிய விக்கிருபையானது சிவபெருமானுலும் சிவசத்தியாலும் (அறிந்து) கொடுக்கப்படுவது |
| அப்பெருந்தன்மை அரியினுல் என்னுல் ஒருவரால் அளிக்கல் ஆகாது | அவ்வித மகத்துவ முடைய திருவருளானது விஷ்ணுவாலும் என்னுலும் இன்னும் மற்றவர்களாலும் கொடுக்க முடியாது |
| இப்பவம் தனிலே முத்தி இச்சிப்பான் | இந்த ஜென்மத்திலேயே இவ்வுலகத்திலேயே இப்போதே முத்தியை விரும்பும் அதிகாரி |
| இயம்பும் எத்தேவையும் விட்டு | சுதந்தர ஹீனமாகக் கூறும் சகல தெய்வங்களேயும் ஆராதித்தலே விடுத்து |
| சிற்பரன் ஆகும் சிவன் ஒருவனேயே சரண் எனச் சென்று சேர்வுறுவான் | சிற்சொருபனுகிய சிவபிரானேயே * சரணுகதியென்று அடையத் தக்கது |

52

பரகதி சிவன்பால் வைத்திடப் பட்ட
பத்தியா லுறுமது வன்றி
உரகணே துயில்வோன் பாலுமென் பாலும்
உற்றபத்தியிலுள தாக
திரமுறு சிவபத் தன்றனு கத்துத்
திருவரு ளொளிமிகத் திகழும்
பரிசரி பத்தர்க் கெனதுபத் தர்க்கும்
பரமுற ஙிகழ்வுறப் படாதால். 53

* சரணுகதி: 3. பரமேஸ்வர சம்பந்தியே நான் என்பது மிருதுவாம். இப்பரமேஸ்வரர் என்னவரே. என்பது மத்திமமாம். அப்பரமேஸ்வரர் யானே என்பது அதிமாத்திரமாம். இதை அறிய விரும்பினுல், பகவற்கீதை கூடார்த்ததீபிகை. 66 ஆம் சுலோகம் வியாக்கியானத்திற் பார்க்கவும்.

(இ – ள்)

| | |
|---|---|
| பரகதி சிவன்பால் வைத்திடப் பட்ட பத்தியால் உறும் | பரமோக்ஷமானது பரசிவனிடத்தில் வைக்கும் பத்தியினாலேயே அடையப்படும் |
| அது அன்றி | – அத்தச் சிவபத்தியல்லாமல் |
| உரகணைத்துயில் வோன்பாலும் என்பாலும் உற்ற பத்தியால் உண்டாகா | சேஷசாயியாகிய விஷ்ணுவின்பாலும், என்னிடத்தும் வைக்கப்பட்ட பத்தியினாலும் ஒருவருக்கும் மோக்ஷமுண்டாகாது |
| திரம்உறு சிவபத்தன் தன்ஆகத்துதிருவருள் ஒளி மிகத் திகழும் பரிசு | உறுதியாகப் பொருந்திய சிவபத்தரது சரீரத்தில் அழகிய அருட்பிரசாதம் விளங்குந் தன்மை போல |
| அரிபத்தர்க்கு(ம்) எனது பத்தர்க்கும் பரம்உற நிகழ்வு உறப்படாது | நாராயண பத்தர்களுக்குமெனது பத்தர்களும் சரீரத்தில் நன்றாக விளங்கமாட்டாது 53 |

ஆத லாலரியை யென்னை யாதரவு
செய்தி டாதரன்ம கேசனைக்
காத லாலடைகை முத்தி சித்திகடு
கக்கிடைக்குமரு ளெய்துமப்
போதி லேயரிய னாகி லுந்தனது
பூரணப் புரண மானசிற்
சோதி யேமுழுது மாகி நின்றபடி
தோன்று மாறுவெளி தோன்றுமால் 54

(இ – ள்)

| | |
|---|---|
| ஆதலால் அரியை என்னை ஆதரவு செய்திடாது அரன்மகேசனை காதலால் அடைக | இங்ஙனமிருத்தலின் (அதிகாரி மோக்ஷநிமித்தம்) விஷ்ணுவையும் என்னையும்பத்தி செய்யாமல் மகேஸ்வரனாகிய உருத்திரமூர்த்தியை பிரியத்தோடு சரணாகதியடைதலால் |
| முத்தி சித்தி கடுகக் கிடைக்கும் | மோக்ஷமானது சீக்கிரங் கிடைக்கும் |

| | |
|---|---|
| அரியன் ஆகிலும் அருள் எய்தும் அப்போது | சாதாரணமாயறிதற்கு துர்லபனுயினும் அவர் பிரசாதம் கிடைக்குமச் சமயத்திலே |
| தனது பூரணப் புரணமான சிற்சோதியே | தனது பரிபூரண விளக்கமாகிய சிற்சோதி சொருபமே |
| முழுதும் ஆகி நின்ற படி தோன்றும் ஆறு வெளி தோன்றும் (ஆல் – அசை) | சர்வசரீரங்களிலும் பிரத்யகாத்ம வடிவமாகவிருக்குந் தன்மை அபரோக்ஷமாகும்படி பிரத்யக்ஷமாகும் 54 |

(அ-கை) பரமாத்ம விஞ்ஞானமே முடிந்த நிலமென்றும் இதற்கு வேருய் அறிந்தவன் பசுவென்றும் கூறுகின்ருர்.

சாக்கியா மெல்லாப் பொருட்குமீ சனேயெப்
பொருள்களுஞ் சாக்கிமாத் திரமாய்
நோக்கினு னியாவன் நோக்கத னுலே
நோக்கலா மிதுமறை யந்த
நீக்கிலாப் பரமாத் துவிதநிட் டையுமிந்
நிலமொன்றே முடிவிதிற் பேதம்
ஆக்கினு னறிவா லறிவிலா தொழிவால்
அவனலா தார்பசு வாவார். 55

(இ – ள்)

| | |
|---|---|
| ஈசனே எல்லாப் பொருள்கும் சாக்கியாம் | ஆத்மாவை சர்வ பதார்த்தங்களுக்கும் சாக்ஷிமாத்திரமாயறிந்தும் |
| எப்பொருள்களும் சாக்கி மாத்திரமாய் | சர்வபதார்த்தங்களும் (ஆத்மாவிற் கற்பிதமாதலின்) அச்சாக்ஷி வடிவமேயென்றும் |
| யாவன் நோக்கினுன் | – எவன் பார்க்கின்ருனே |
| (அவன்) நோக்கு அதனுலே | அவனது ஞானதிருஷ்டியினுலே |
| இது நோக்கலாம் | – இப்பரமாத்ம வஸ்து வறியப்படும் |

| | |
|---|---|
| நீக்கிலாப் பரமாத்து வித நிட்டையும் இந் நிலம் என்றே மறை அந்த முடிவு | பரிபூரண பரமாத்துவைத பிரஹ்ம நிஷ்டையும் இந்த * பூமியென்றே வேதாந்த சித்தாந்தமாம் |
| அறிவு இலாது ஒழிவு அறிவால் இதில் பேதம் ஆக்கினுன் | பிராந்தியோடு கூடிய புத்தியினுல் இதில் பேதபுத்தியைச் செய்தவன் (எவனோ) |
| அவன் அலாது ஆர் பசு ஆவார் (ஆல் – அசை) | அவனையன்றி இவ்வுலகத்தில் பசுவெனப் பகரத்தக்கவர்கள் யாவர் |

---

* பூமி யென்பது மனோ நிலைகளாம் அதுவும் அஞ்ஞான பூமி 7, ஞானபூமி 7 யென இருவகையாம். அவற்றில் அஞ்ஞான பூமிகள் (1) நித்திரையினின் றெழுந்த காலத்தில் அல்லது சிருஷ்டி காலத்தில் சிதாபாசனோடு கூடிய மாயை அல்லது அவித்யாவிசிட்ட சேதனம் கேவலம் நானென்று விளங்கும் சாமானிய அகங்காரமே பீஜசாக்கிரமாம். (2) தேகாபிமானமுற்று நான் மனிதன் என்ற விசேஷ அகங்காரமே சாக்கிரமாம். (3) நானெனதென்னும் அபிமானம் மிகதிடமாய் பாவபுண்ணியத்திற் கேதுவாகிய பிரவிர்த்தியே மகாசாக்கிரமாம். (4) (வாசிட்டத்தில் லவணன் செய்த மனோராச்சியம்போல்) மனோராச்சியம் செய்தல் சாக்கிர சொப்பனமாம். (5) சாக்கிரத்தை மறந்து நித்ரா மோகத்தால் மனோராச்சியம் செய்தல் சொப்பனமாம். (6) சொப்பனத்திற் கண்டதை சாக்கிரத்தில் சொப்பனம் (அரிச்சந்திரனைப்போல்) பார்ப்பது சொப்பன சாக்கிரமாம் (7) சாக்கிர சொப்பனுவஸ்தைகள் தோற்றுமல் இருள் மயமாயிருத்தல் சுழுத்தியாம். இவ் வேழும் மித்தையாகவும் சம்சாரபந்த ஏதுவாகவும் இருப்பதால் அவற்றை பொய்யென்று விடத்தக்கதாம்.

இனி ஞான பூமிகள். (1) விவேக வைராக்கிய சட்சம் பத்தி வாயிலாய் உண்டாம் மோட்ச இச்சையே சுபேட்சையாம். (2) சற்குருவை யடைந்து சிரவண மனனமாகிய

சதாசாரம் பழகலே விசாரமாம். (3) நிதித்தியாசனப் பழக்கத்தால் மனம் ரஜோதமோ குணமிறந்து பிரஹ்மான்ம ஐக்கிய சாக்ஷாத்கார யோக்கியமான சூட்சுமத் தன்மை அடைதலே தனுமாநசியாம். (4) அச் சுத்த மனத்தில் பிரத்யக பின்ன பிரஹ்ம சாக்ஷாத் காரம் உண்டாதலே சத்துவா பத்தியாம். (5) முற்கூறிய நான்கு பூமிகளின் அப்பியாசவலியால் நிரதிசயானந்த நித்தியாபரோக்ஷ பிரஹ்மான்ம சொரூபத்தில் மனதழுந்தி அஞ்ஞானம் அதன் காரியங்களனைத்தும் மறந்திருத்தலே அசம்சத்தியாம். (6) ஐந்து பூமிகளின் அப்பியாச வலியால் அத்வைதானந்தமானது மேலிடவே பாகியாந்தரமான திரிபுடிரூப பதார்த்தங்கள் தோன்றுதிருத்தலே பதார்த்தாபாவனையாம். (7) பிரஹ்மாத்மாவில் மனம் இருந்தபடியே இருக்கும் மவுன சுபாவமே துரியமாம். இதில் மூன்று பூமி பரியந்தம் பேதம் தோற்றுவதால் சாக்கிரமாம், இது ஞான சாதனமாம். நான்காம் பூமியில் சொப்பனத்திலிருந்து விழித்தவன் போன்றிருத்தலால் அது சொப்பனமாம். அது ஞான வடிவமாம் ஐந்தாம் பூமி வாசனு நாசத்தின் வடிவமாய் சுழுத்தியாகும், ஆறும் பூமி திரிபுடி தோன்றுத நான்காம் அவஸ்தையான கனசுழுத்தி அல்லது துரியமென்றியம்புவர். ஏழாம் பூமி அதற்குமேல் சத் அசத்தாய யாதொரு கற்பனைகளுக்கும் எட்டாத துரியம் அல்லது துரியாதீதம் எனக் கூறப்படும் இதனையே பரமாத்வைத நிஷ்டையெனக் கூறினரென்க. இந்த பூமிகளை விசேஷமாய் அறிய விரும்புவோர் கைவல்லிய நவநீதம் சந்தேகம் தெளிதற் படலத்தில் 146-ம் பாட்டிலிருந்து 156-ம் பாடல் வரையிலும் பகவற்கீதை கூடார்த்த தீபிகை உரையில் மூன்றும் அத்தியாயம் 18-ம் சுலோகம் வியாக்கியானத்திலும் வாசிட்டம் உற்பத்திப் பிரகரணம் இதோபதேசத்தில் 41-ம் பாட்டிலிருந்து 50-ம் பாடல் வரையிலும். நிர்வாணப் பிரகரணம் இக்குவாகு கதையில் 34 முதல் 40-ம் பாடல் வரையிலும், இதோபதேசத்தில் 7-ம் பாட்டிலிருந்து 46-ம் பாடல் வரையிலும் வேதாந்த சூடாமணியிலும், விசார சந்திரோதயம் ஞான சப்த பூமியிலும், உபநிடதங்களிலும் காணலாம் )

(அ – கை.) பரமாத்வைத ஞானியே பரதேவதையென் பதையும் அப்பரமாத்வைதத்தில் துவேஷமுண்டாவதில் காரணத்தையும் கூறுகின்றூர்.

பரமாத் துவித ஞானியே பரதே வதைதான் அவனேயித்
திரமா முத்தி யானிங்குச் செப்பும் பொருள்செய் வினையாலும்
உரமாந் ததீசி கௌதமனு லுண்டாஞ் சாப வுரையாலும்
கரமா மநுடர் நெஞ்சதனில் காதல் செய்யா தொருக்காலும் 56

(இ – ள்)

| | |
|---|---|
| பரமாத்துவித ஞானியே பரதேவதை | மேலான அத்வைதப் பிரஹ்மத்தை யறிந்த ஞானியானவன் (தெய்வங் களுக்கெல்லாம்) தெய்வமாவன் |
| அவனே இத்திரமாம் முத்தி | அந்த ஞானியே இந்த நிலைபெற்ற மோட்ச சொரூபனுமாவன் |
| யான் இங்கு செப்பும் பொருள் | நானிவ்விடத்திற் கூறிய (பரமாத்து வித தாற்பரியத்தை |
| செய் வினையாலும் | – பூர்வம் செய்த பாவத்தினுலும் |
| உரம்ஆம் ததீசி கௌ தமனுல் உண்டாம் சாப உரையாலும் | ஞான திடம் பொருந்திய ததீசி கௌதமராகிய இவர்களது சாப வாக்கியத்தாலும் |
| கரம்ஆம் மனிதர் நெஞ் சதனில் ஒருக்காலும் காதல் செய்யாது | கர்த்தபசமான மநுடர் தம் மனத் தில் எப்போதும் அமிர்த விஷய வஸ்துவாகிய விஞ்ஞானத்தை யடைய இச்சியார்கள் |

ஆரணத்தன் னியமில்லாச் சிவன்றன் பாலும்
அத்துவித வேதனத்து மடைதற் குள்ள
காரணமாஞ் சிவலிங்கார்ச் சனத்துஞ் சாலக்
காய்வதுவு மேயன்றி யுருத்தி ராக்கத்
தாரணத்துந் திரிபுண்டர தார ணத்தும்
சர்வாங்கோத் தூளநத்துந் தாமே காய்வர்
சீரிணக்குஞ் சிவனென்னு முரையுந் தங்கள்
செவியாலுங் கேளார்செய் வினையாற் றீயோர் 57

(இ - ள்)

| | |
|---|---|
| தீயோர் செய்வினையால் | கொடிய நடத்தையுடைய அந்தப் பாவிகள் தாங்கள் செய்துள்ள பாவகருமத்தால் |
| ஆரணத்து அன்னியம் இல்லா சிவன்தன் பாலும் | வேதப் பிரதிபாத்தியமான சிவபெருமானிடத்திலும் |
| அத்துவித வேதனத்தும் | வேதஜன்னியமான பரமாத்துவித ஞானத்திலும் |
| அடைதற்கு உள்ள காரணம்ஆம் சிவலிங் கார்ச் சனத்தும் | அந்தச் சிவனை யடைதற்குள்ள சாதனமான சிவலிங்க பூசையிலும் |
| சாலக்காய்வதும் அன்றி | மிகவும் துவேசிப்பதுமல்லாமல் |
| உருத்திராக்க தாரணத்தும் | ருத்திராட்சத்தாரணத்திலும் |
| திரிபுண்டரதாரணத் தும் | விபூதியைத் திரிபுண்டரந் தரித்துக் கொள்வதிலும் |
| சார்வாங்கோத்தூளத் தும் தாமே காய்வர் | விபூதியைக் குழையாமல் உடல் முழுவதும் தரிப்பதிலும் தாங்களே துவேசிப்பர் |
| சீர் இணக்கும் சிவன் என்னும் உரையும் தங்கள் செவியால் கேளார் | சர்வ சிறப்புக்களையும் உச்சரித்த மாத்திரத்தில் கொடுக்கும் சிவா வென்னும் சப்தத்தையும் தங்கள் காதால் கேட்கமாட்டார்கள் |

(வாக்கினுல் வசனிக்கமாட்டார்களென்பதைச் சொல்லவும் வேண்டுமோ என்பதாம்)

57

(அ - கை) அநேக ஜன்ம சுகிர்தங்களால் சுருதி ஸ்மிருதிகளின்படி நடப்பவர்களுக்கே பரமாத்துவித ஞானமுண்டாகும் எனவும் அவ்வித ஞானியும் திரிமூர்த்திகளாலும் பூஜிக்கத்தக்கவன் எனவும் கூறுகின்ருர்.

தொல்லைநல் வினையாற் சுருதிநன் மிருதி
சொன்னவா துணிந்தவத் தூயோர்
ஒல்லையிற் பரமாத் துவிதவே தனத்தை
யுள்ளவா றுணரவே யுணர்வர்
நல்லவிப் பரமாத் துவிதஞா னியை நா
ராயண னுருத் திரனும்
எல்லையி லெல்லாத் தேவரும் பூசித்
தேத்தவும் படுமிவ னென்றும். 58

(இ - ள்)

தொல்லை சுருதி மிருதி — அநாதியான வேதமும்ஸ்மிருதியும்

| | |
|---|---|
| சொன்னவா நல்வினை யால் துணிந்த அத் தூயோர் | விதித்த கருமங்களை (அதாவது ஸ்ரவ்தாஸ்மார்த்த கருமங்களை அனந்த ஜென்மங்களில் நிச்சயித்து அனுஷ்டித்து வந்த பரிசுத்தவான்களே |
| ஒல்லையில் பரமாத்துவித வேதனத்தை உள்ளவாறு உணரவே உணர்வர் | பழமையான பரமாத்துமாவின் ஞானத்தை யுள்ளபடியே அறிவார்கள் |
| நல்பரமாத்துவித ஞானியை | பிரதிபந்தமின்றி நன்ருக அறிந்த பரமாத்துவித ஞானவானை |
| நாராயணன் நான் உருத்திரன் எல்லையில் எல்லாத் தேவரும் | விஷ்ணுவும் நானும் உருத்திரனும் அளவற்ற சகல தேவதைகளும் |
| இவண் என்றும் பூசித்து ஏத்தவும் படும் | இவ்வுலகின் கண் எப்போதும் ஆராதித்து துதி செய்வோம் (இவ் வித்வானு மெங்களைத் துதிப்பன்). 58 |

(அ — கை) பரமாத்துவித ஞானியின் பெருமையை கூறுகின்ருர்.

ஈசனும் ஞானி யிருந்துள விடத்தே
யிருப்பது முத்தி தா னந்தத்
தேசிகன் ஏவல் செய்பவன் காலென்
சென்னியி லிருப்பது மன்னி

மாசிலாப் பரம ஞானியாம் முனிக்கு
மகேசனு மொப்பலன் மதிக்கில்
ஆசிலா வரியும் ஒப்பிலன் நானு
மொப்பலன் ஏவரொப் பாரே. 59

(இ - ள்)

| | |
|---|---|
| ஈசன் ஆம் ஞானி இருந்து உளவிடத்து இருப்பது முத்தி | பரமேஸ்வர சொரூபமாகிய ஞானி வசிக்கு மிடத்து வசிப்பதுவே மோக்ஷ சாதனமாம் |
| அந்தத்தேசிகன் ஏவல் | அந்த ஞானியினது ஏவற்பணி விடைகளை |
| செய்பவன் கால் என் சென்னியில் இருப்பது மன்னி | செய்பவனது பாதம் எனது சிரத்தில் நிலைபெற்றிருக்கட்டும் |
| மதிக்கில் மாசிலாபரம ஞானியாம் முனிக்கு | விசாரிக்கு மிடத்து தோஷ ரகிதமான மேலான ஞானியாகிய மனன சீலனுக்கு |
| மகேசனும் ஒப்பு அலன் | உருத்திர மூர்த்தியும் சமானல்லன் |
| ஆசிலா அரியும் ஒப்பு அலன் | குற்றமற்ற விஷ்ணு மூர்த்தியும் சமானல்லன் |
| நானும் ஒப்பு அலன் | பிரஹ்மாவாய நானும் சமானமல்லன் (ஆனால்) |
| ஏவர் ஒப்பு ஆர் | (எங்களையொழிந்த) எவர்கள் சமனுவர்கள். |

(ஞானி பிரஹ்ம சொரூப மாதலின் அவனுக்கு நிகர் அவனேயாம்)
59

(அ - கை) பரமாத்துவித ஞானிக்கு உடல் பொருள் ஆவியாமிவை மூன்றினையும் தத்தஞ் செய்யில் பிறவி நீங்கத் தக்க ஞான முண்டாகுமெனக் கூறுகின்ருர்.

ஒப்பறும் பரமாத் துவிதஞா னத்தை
யுணர்ந்துள பரமயோ கிக்குக்
கைப்பொரு ளாவி காயமுங் கொடுப்பான்
காதலா லவைகொடுத் திடவே

இப்பவ மறுக்கு ஞானம்வந் துதித்தற்
கேதுவா மதுவிது வொழிய
உற்பவந் துடைக்கு முணர்வுபெற் றுய்தற்
கிலதிதி லையுறே லொன்றும். 60

(இ - ள்)

| | |
|---|---|
| ஒப்பு அறும் பரமாத்து வித ஞானத்தை உணர்ந்து உள பரம யோகிக்கு | (முமூச்சுவானவன்) சமான ரகித மான பரமாத்துவித ஞானத்தை சாக்ஷாத்கரித்துள மேலான ஞானிக்கு |
| கைப்பொருள் ஆவி காயமும் காதலால் கொடுப்பான் | தனது பொருள் பிராணன் உடல் (ஆகிய இவைகளை முத்தியை விரும் பின அதிகாரி) மிகுந்த அன்பினுற் கொடுக்கத்தக்கது |
| அவை கொடுத்திடவே | இங்ஙன மிப்பதார்த்தங்களைக் (சிரத்தையோடு) கொடுப்பதுவே |
| இப்பவம் அறுக்கும் ஞானம் வந்து உதித் தற்கு அது ஏதுவாம் | இப்பிறப்பைக் கெடுக்கும் ஞானம் வந்துற்பன்ன மாதற்கு அது காரணமாகும் |
| இது ஒழிய உற்பவம் துடைக்கும் உணர்வு பெற்று உய்வதற்கு இலது | இஃது அன்றி சென்ம நிவர்த்தக மான ஞான முண்டாகி மோக்ஷ மடைந்துயிர் வாழ்வதற்கு வேறு மார்க்கமிலதாம் |
| இதில் ஒன்றும் ஐயுறேல் | இதில் ஒருவித சமுசயமுமிலது |

(இவ்விஷயத்தில் எவ்வித சந்தேகமும் வேண்டா மென் பதாம்) 60

(அ - கை) பரமாத்துவித ஞானத்திற்கு விரோதிகளி வையென தெரிசிப்பிக்கின்ருர்.

சதுர்மறை யொழிந்த வாதனை பொல்லாத்
தர்க்கவா தனையுல கத்தின்
மதமுறு சமய வாதனை தார
மக்கள்சுற் றத்தின்வா தனையும்

இதமுறு பொருளில் வாதனை தேகேந்
தியமனம் புத்திநற் பிராணன்
முதலவா தனையும் வித்தைவா தனையு
முடிவில்போ கத்தின்வா தனையும் 61

(இ – ள்)

| | |
|---|---|
| சதுர்மறை ஒழிந்த மதம் உறு வாதனை | வேதத்திற்குப் புறம்பான தாந்திரிய சாஸ்திர வாசனையும் |
| பொல்லாத் தர்க்க வாதனை | கொடிய குதற்க (வேதபிரமாணத்தைக் கடந்து பேசும்) வாசனையும் |
| உலகத்தின் வாசனை | (யாவரும் புகழ வேண்டுமென்பதாம்) லோகவாசனையும் |
| சமயவாசனை | (சைவ முதலிய) சமயங்களின் (எமது மதமே உயர்ந்தென்னும்) வாசனையும் |
| தாரம் மக்கள் சுற்றத்தின் வா[illegible]னையும் | மனைவி புத்திரர் மித்திரர் (மனை நிலம் முதலியவைகளில் எனதென்னும்) வாசனையும் |
| இதம்உறும் பொருளில் வாதனையும் | (அவிவேகிகளின் திருஷ்டியால்) நன்மைபோன்று தோற்றுகின்ற பொருளின் வாசனையும் |
| தேகேந்தியம் புத்தி மனம் நல்பிராணன் முதல வாதனையும் | தூலதேகம் ஞானகர்மேந்திரியங்கள் (நிச்சயரூப)புத்தி (சங்கற்பரூப) மனம் நல்ல பிராணன் முதலியவைகளில் (எனதென்னும்) வாசனையும் |
| வித்தை வாதனையும் | (கர்மகாண்டமான) சாஸ்திர வாசனையும் |
| முடிவுஇல் போகத்தின் வாதனையும் | அளவற்ற போகங்களின் வாசனையும் |

61

ஏறுடைச் சிவனைத் திருநெடு மாலை
யிகழும் வாதனையும்வே தத்திற்
கூறிடு ஞான சாதன மாகக்
கொள்ளுமுத் தூளபுண் டரத்தை
மாறுட னிகழும் வாதனை பாவ
வாதனை யாவுமா நுடர்க்கு
வேறடும் பரமாத் துவிதஞா னத்தை
விலக்கிடும் விரோதிவிண் ணவரே. 62

(இ – ள்)

| | |
|---|---|
| ஏறுஉடைச் சிவனை திருநெடுமாலை இகழும் வாதனையும் | ரிஷபாரூடரான சிவபெருமானை யும் திருமகளையுடைய மகாவிஷ்ணு வையும் ஆகிய இவர்களை நிந்திக்கும் வாசனையும் |
| வேதத்தில் கூறிடும் ஞானசாதனமாகக் கொள்ளும் | வேதத்திற் பிறதிபாதித்து ஞான சாதனமாகக் கொள்ளாநின்ற |
| உத்தூள (ன) புண்ட ரத்தை மாறுடன் இகழும் வாதனையும் | பஸ்மமுத்தூளன புண்டரத்தையும் புறம்பாக நிந்திக்கும் வாசனையும் |
| பாவ வாதனை | பஞ்சமா பாதகங்களுக்குக் காரணமான வாசனையும் |
| யாவும் விண்ணவரே– | இவை யாவும் தேவர்களே |
| மநுடர்க்கு வேறு அடும் பரமாத்து வைத ஞானத்தை | மனிதர்களுக்குப் பேதத்தை அடி யோடு நீக்கும் மேலான அத்வைத ஞானத்தை |
| விலக்கும் விரோதி | வராமல் பிரதிபந்திக்கும் சத்துருவாம் 62 |

(அ-கை) முமூட்சுவானவன் ஞானப்பிரதிபந்தவாசனையை நீக்கி பரமாத்துவித ஞானியாவன் எனவும் இந்த அத்வைத ஞான சொரூபத்தின் மகிமையை என்னால் உரைக்க வொண்ணாதெனவுங் கூறுகின்றார்.

ஆதலால் வீடதனில் ஆசை யுள்ளோன்
அதின்மிகவும் தாற்பரிய னாகி முன்னம்
ஓதுவா தனைகளெல்லா மிகந்தெப் போதும்
உற்றபரமாத்துவித ஞானி யாவன்
வேதவே தாந்தங்க ளுரைக்கப்பட்ட
மேலான வத்துவித ஞான மாகும்
நாதனும் பிரமத்தை நவில லாமோ
நாமௌனத் திருப்பதலால் நாகத் தீரே. 63

(இ - ள்)

| | |
|---|---|
| ஆதலால் | முற்கூறியவைகள் *மோக்ஷ ஞானப் பிரதி பந்தமாதலின் |
| வீடதனில் ஆசையுள்ளோன் அதில் மிகவும் தாற்பரியன் ஆகி | மோக்ஷ விருப்புற்ற அதிகாரிகள் அம் மோக்ஷவீட்டின்கண்ணே தீவிரமான இச்சையையுடையவர்களாய் |
| முன்னம் ஓது வாதனைகள் எல்லாம் இகந்து எப்போதும் உற்ற பரமாத்துவித ஞானியாவன் | முன்னர் பதினேழு விதமாகச் சொன்ன சர்வ வாசனைகளையும் நீக்கி எஞ்ஞான்றும் சுகவேதுவாக பொருந்திய பரமாத்துவித நிட்டாபரனுக இருக்கத்தக்கது |
| வேத வேதாந்தங்கள் உரைக்கப்பட்ட | கர்மபாக வேதங்களாலும்ஞானபாக வேதாந்தங்களாலும் பிரதிபாதிக்கப்பட்ட |
| மேலான நாதன் ஆம் பிரமம் ஆகும் | மேலான இறைவனுயும் பிரஹ்மமாயும் இராநின்ற |
| அத்துவித ஞானத்தை | அத்வைத ஞானமாகிய அநுபவத்தை |
| நாகத்தீரே நாம் மௌனத்து இருப்பது அல்லால் நவிலல் ஆமோ | தேவர்களே நாம் மௌனமாயிருந்து அறிவதன்றி வாக்கினுல் வசனித்தற்கியலாது ஆதலால் சும்மாவிருக்கவேண்டியதுதான் 63 |

(அ - கை) துவிதமற்ற தன்மையாகிய பாரமார்த்திக சுத்தசொரூப ஞானமாகிய இதனைப் பிரஹ்ம நிஷ்டையுடைய களங்கமில்லாத வேத வேதாந்தியர்களே சுத்த சித்தமுடையவர்களுக்கே உபதேசிக்க வேண்டுமெனக் கூறுகின்றுர்.

ஓதிய தோட மெல்லா மொழிந்துள ராகி யுற்ற
வேதவே தாந்தந் தன்னில் மிகநிட்டை யுடைய நல்லோர்
இயாதுந்தம் மிதயத் துள்ளாய் இரண்டலா ஞான மத்தைப்
போதகஞ் செய்யத் தக்கோ ராவர்கள் புரையற் றோர்க்கே 64

* பூதப்பிரதி பந்தம் வர்த்தமானப் பிரதிபந்தம் ஆகாமியப்பிரதி பந்தம் இது3ம் ஞானப்பிரதிபந்தமாம். ஒருவன் மோக்ஷத்தை விரும்பி எல்லாவற்றையும் விடுத்துச் சற்குருவை அடைந்து சிரவணுதிகளைச் செய்தும் அவன் முன்னர் குடும்பத்தில் அனுபவித்த தாரபுத்ராதி

(இ – ள்)

ஓதியதோடம் எல்லாம் – முற்கூறிய சர்வ தோஷங்களும்

| | |
|---|---|
| ஒழிந்து உணர் ஆகி உற்ற | நீங்கினவராயிருக்கின்ற |
| வேத வேதாந்தம் தன்னில் | வேதம் வேதாந்தங்களில் |
| மிக நிட்டை உடைய நல்லோர் | மிகவும் நிட்டாபரராகிய மகான்கள் |
| இயாதும் தம் இதயத் துள்ளாய் இரண்டு அலா ஞானம் அத்தை | அத்தியஸ்தமாகிய சர்வ பதார்த்தங்களையும் அதிஷ்டானமாகிய தான் தரித்திருந்தும் அதனால் துவித மடையாத பிரஹ்ம ஞானத்தை. |

---

சிற்றின்ப வாசனையின் பலத்தால் (இறந்த போன எருமையைச் சிந்திக்கும் சந்நியாசியைப் போல) தினமும் வந்து சுக துக்கத்தைத் தருவதால் அவனுக்கு மனச் சஞ்சலத்தால் ஆத்மஞான முண்டாகா திருத்தலே பூத (இறந்த கால) ப் பிரதிபந்தமாம். அதன் நிவர்த்தி, அவனுக்குப் பிரியமான வஸ்துவையே தியானிக்கும்படி செய்துபின் நாம ரூபத்தை விடுத்துச் சச்சிதானந்த சொரூபத்தை தியானித்துச் சாக்ஷாத்காரமுண்டாகும்படி செய்வதாம். அது எருமையின் நாம ரூபத்தைவிடுத்து அதன் அதிஷ்டான சேதனமான சச்சிதானந்த வடிவத்தை தியானிக்கச் செய்து அதுவே நீயென்று அறிவித்தது போலாம்.

ஒருவன் தத்துவவிசாரம் செய்திருந்தும் சோம்பல், சிற்றின்பத்திலிச்சை, குதர்க்கம், கீழ்மக்களைச் சேரல், புத்தி மந்தம், முதலியன தோன்றி அவனுக்கு ஆத்ம சாக்ஷாத்கார முண்டாகாதபடி செய்தலே வர்த்தமான (நிகழ்கால) ப் பிரதிபந்தம் அதன் நிவர்த்தி, தோஷ திருஷ்டியும் சிரவணாதிகளுமாம்.

ஒருவன் சற்சங்கத் துற்றுச் சாஸ்திரவிசாரம் செய்திருந்தும் பிரஹ்மலோக இச்சை அல்லது பிராரத்த சேஷம் (ஜடபரதர் வாமதேவர் போல) இருப்பது ஆகாமிய (எதிர்கால) ப் பிரதிபந்தமாம். அதன் நிவர்த்தி வைராக்கியத்தால் பிரஹ்மலோக இச்சை நீங்கலாம். பிராரத்த சேஷம் அனுபவித்தே தீருமென்க.

அஞ்ஞான சந்தேகம் விவரீதம்மூன்றும் மோக்ஷப் பிரதிபந்தம்.

விவேக சூடாமணியில் 137, 138-ஆம் பாட்டிலும் திருவாரூர் வேதாந்த நாநாசீவவாதக் கட்டளை அத்தியாரோப நிருபகம் 155 முதல் 196 தத்துவ விவேசனம் நிருபகம் 49 முதல் 60 ஆம் வினாவிடையிலும் கைவல்லிய நவநீதம் தத்துவ விளக்கப் படலத்திலும் காண்க.

(அல்லது சர்வ பதார்த்தங்களையும் மித்தையென்னுந் தன்மையால் தன்னிடத்திலடக்கிக்கொண்டு சர்வ பேதமு மற்றதாயுமிரா நின்ற ஞானத்தை. அல்லது தனதிருதயத் தின் கண் இருப்பதாயும் சர்வ பேதமற்றதாயுமிரா நின்ற எந்த ஞானமுண்டோ அந்த ஞானத்தை.

| | |
|---|---|
| புரையற்றோர்க்கு போதகம் செய்யத்தக் கோர் ஆவர்கள் | சுத்தாந்தக்கரணத்தையுடைய அதிகாரிகளுக்கு உபதேசிக்கத் தக்கவர் ஆவார்கள் 64 |

(அ – கை) குருநாதன் மனமிரங்கி திருவருளால் ஒரு தரம் பார்த்த போதே சகல துக்கங்களும் தாமாகவே நீங்கு மாறு உண்டாகும் பரமாத்துவித ஞான மகிமையை உள் ளது உள்ளவாறு நான் உங்களுக்கு உபதேசித்தேன் எனக் கூறுகின்றார்.

சுரரிலுத் தமரே யெல்லாத் துக்கமுந் தொலைப்ப தாகிப்
பரிவொடொண் குரவன் பார்த்த பொழுதிலே பரமா னந்தப்
பொருவிலாச் சிவரூ பத்தை யடைவித்துப் புரண மாக்கும்
பெரியவத் துவித ஞான முங்கட்குப் பேச லானேம். 65

(இ – ள்)

| | |
|---|---|
| சுரரில் உத்தமரே | தேவர்களுக்குள்ளே சிரேஷ்டர் களே |
| பரிவொடு ஒண்குரவன் பார்த்த பொழுதிலே | மிகுந்த பிரியத்தோடு *எழிற்குரு வானவர் ஈக்ஷித்த போது (உண் டாவதாயும்) |
| எல்லாத்துக்கமும் தொலைப்பது ஆகி | சகல துக்கங்களையும் நிவர்த்திக் கக்கூடியதாயும் |
| பரமானந்தப் பொரு விலாச் சிவரூபத்தை | மேலான ஆனத்தமாயும் சமான ரகிதமாயுமிரா நின்ற பிரஹ்ம ரூபத்தை |
| அடைவித்துப் புரணம் ஆக்கும் | அடையும்படி செய்வது அதி காரியை பரிபூரணமாகச் செய்யும் படியுள்ள |
| பெரிய அத்துவித ஞானம் | மகத்தாகிய அத்வைத ஞானத்தை |
| உங்கட்குப் பேசல் ஆனேம் | உங்களுக்கு உபதேசித்தேன் |

65

நான்காவது கேனோப நிஷத சாரமுரைத்த அத்தியாயம் சம்பூரணம். ஆகத்திருவிருத்தம் (174)

* மைத்திரி — (நட்பு) கருணை, முதிதை, உபேட்சை இவை நாலும் எழில்.

## ஐந்தாவது சாந்நோக்கிய உபநிஷத் தாற்பரிய முரைத்த அத்தியாயம் மூலம் ஆருவது அத்தியாயம் உபதேச அர்த்தமாகும்.

(அ – கை) பூர்வம் சாமவேத ஜைமினி சாகையில் அந்தர்கதமான கேனுேபநிஷத்திற்கும் பிரஹ்மான்ம வைக்கியத்துவம் காண்பிக்கப்பட்டது அந்தப்படியே சாந்தோக்கிய உபநிஷத்திற்கும் பிரஹ்மான்ம வைக்கியத்துவத்தை பிரஹ்மாவானவர் இரண்டத்தியாயங்களால் கூறுபவராய் இவ்வத்தியாயத்தில் நிஷ்பிரபஞ்ச அத்வைதமான பிரஹ்மத்தைப் பிரத்யகான்ம சொரூபமாக உபதேசித்ததற்கு சர்வ காரியப் பிரபஞ்சத்திற்கு காரணமான பிரஹ்மத்தினும் அன்னியத்தன்மை யின்மையால் ஏகவிஞ்ஞானத்தால் சர்வ விஞ்ஞானம் பவிக்கு (உண்டாகு)மென்று பிரதிஞ்சை செய்து திருஷ்டாந்த பூர்வகம் பிரதிபாதிக்கப்பட்டிருக்கின்ற சுருதியைத் தாற்பரியத்தாற் சங்கிரகிக்கின்ருர்.

மறைப்பதாய் மிகவும் முன்னுேர் மடிவிலாப் பொருளைக்காட்டும்
சிறப்புடை யுபதே சத்தைச் செப்புவ னுங்கட் கெல்லாம்
இறப்பிலா தரத்தி னேடு மிசைந்திது கேண்மினென்ருன்
பிறப்பன முழுதுஞ் செய்யும் பீடுடை மலரின் மேலோன். 1

(இ – ள்)

| | |
|---|---|
| முழுதும் பிறப்பன செய்யும் | சர்வ பௌதீகப் பிரபஞ்சத்தையும் சிருஷ்டிக்கின்ற |
| பீடுடை மலரின் மேலோன் | பெருமை பொருந்திய பதுமபீடவாசியாகிய பிரஹ்மதேவர் |
| முன்னுேர் மிகவும் மறைப்பு அதாய் | புராதன பெரியோர்கள் அதிரகசியமாய் வைத்திருப்பதாயும் |
| மடிவு இலாப் பொருளைக் காட்டும் | நித்தியமான பிரஹ்ம சொரூபத்தை தெரிவிப்பதாயுமுள்ள |
| சிறப்பு உடை உபதேசத்தை உங்கட்கு எல்லாம் செப்புவன் | மேலான பிரஹ்மோபதேசத்தை உங்களனைவர்க்கும் யானுபதேசிக்கின்றேன் |

| | |
|---|---|
| இறப்பு இல், ஆதரத்தி னோடும், இதுஇசைந்து கேண்மின் என்ருன் | கெடாத பிரியத்தோடும் இதனை ஏகாக்கிர சித்தத்தோடும் கேளுங்களென்ருன். 1 |

(அ – கை) அவ்வுபதேசத்தை ஏக விஞ்ஞானத்தால் எல்லாம் அறியப்படும் என்று உறுதியாய் விசேஷித்துக் கூறுகின்ருர்.

யாதொன் றிருந்த படிகேட்கக் கேளா முழுதுங் கேட்டனவாம்
யாதொன் றிருந்த படிபார்க்க பார வெவையும் பார்த்தனவாம்
யாதொன் றிருந்த படியறிய வறியா வெல்லா மறிந்தனவாம்
யாதொன் றிந்த உபதேசம் அறிக வறிவு மிகவுடையீர். 2

(இ – ள்)

| | |
|---|---|
| யாது ஒன்று | யாதொரு காரண பூதமான சத்ரூப பிரஹ்மத்தை |
| இருந்தபடி கேட்க, கேளா முழுதும் கேட்டனவாம் | உள்ளபடி சிரவணிக்க சிரவணிக் கப்படாத வனைத்தும் சிரவணிக் கப்பட்டதாமோ |
| யாது ஒன்று இருந்த படி பார்க்க பாரா எவையும் பார்த்தன ஆம் | யாதொரு பிரஹ்மத்தை யிருந்த வண்ணம் மனனஞ் செய்ய மன னஞ் செய்யப்படாதன வனைத்தும் மனனஞ் செய்யப்பட்டனவாமோ |
| யாது ஒன்று, இருந்த படி அறிய,அறியா எல் லாம், அறிந்தன ஆம் | யாதொரு பிரஹ்மத்தை யிருந்த படி நிச்சயிக்க நிச்சயிக்கப்படாதன வனைத்தும் நிச்சயிக்கப்பட்டன வாமோ |
| யாது, ஒன்று, இந்த உபதேசம், அறிவு, மிக உடையார், அறிக | அத்தன்மைய யாதொரு இவ்வுப தேசரூப பிரஹ்மமுண்டோ (அதனை) மிகுந்த பிரஞ்சையுடைய தேவர்காள் அறியுங்கள். 2 |

(அ – கை) ஒன்றை யறிந்தால் எப்படி அன்னியங்கள னைத்தும் அறியக்கூடும் என்ருசங்கித்து காரண பூதமான பிரஹ்மத்திற்குக் காரிய ஜகத்தின் அனன்னியத் தன்மையை திருஷ்டாந்தங்களால் கூறுகின்ருர்.

மண்ணதோர் திரளைக் காண வனைந்தகா ரியங்க ளந்த
மண்ணில்வே றிலாதெக் காலும் வருதலே யாத லால்வே
றெண்ணிடு நாம ரூப மிசைந்திலே யாகு மென்று
மண்ணிதே யுள்ள தென்று வானவர்க் கயன்முன் சொன்னான். 3

(இ - ள்)

| | |
|---|---|
| வனைந்த காரியங்கள் | கடசராவாதியாகச் செய்யப்பட்ட மண்ணின் காரியங்கள் |
| அந்த மண்ணின் வேறு இலாது எக்காலும்வருதலே ஆதலால் | அம் மண்ணினும் பின்ன மாகவே எக்காலத்திலும் தோன்றுகின்ற படியினால் |
| எண்ணிடும் நாமரூபம் வேறு இசைந்திலை யாகும் என்று | கருதா நின்ற நாமரூபங்கள் (அம் மண்ணினும்) பின்னமாகப் பொருந்தவில்லை யென்றும் |
| மண்ணிதே உள்ளது என்றும் | மண்ணேயவற்றின் யதார்த்த சொரூப மென்று (கருதி) |

ஓர் மண்திரளைக்காண - ஓர் மண் பிண்டதத்தைப் பார்க்க

(வி - ரை) எவ்வாறு அம்மண்ணின் காரியங்களனைத்தும் அறியப்பட்டனவாமோ அவ்வாறு காரண ரூப பிரஹ்மத்தைத் தரிசிக்கில் காரிய ரூப பிரபஞ்ச முழுவதும் (அனன்னிய மாதலால்) அறியப்பட்டனவா மென்று.

| | |
|---|---|
| முன் அயன் வானவர்க்குச் சொன்னான் | பூர்வ காலத்தில் பிரஹ்மாவானவர் தேவர்களுக்குச் சொல்லலானார். (அதுபகுதிப்பொருள் விகுதி) 3 |

(அ - கை) முற்கூறியதையே வேறு திருஷ்டாந்தத்தால் கூறுகின்றார்.

உலகமோர் மணியி ரும்பா முகிர்சிவி யென்று காண
உலகமெல் லாமு மாய வுருவமு மிரும்பு மஃதே
யலகில்கா ரணத்தி னோடு காரியம்வேறி லாமை
பலபட வறியும் வண்ணம் பகர்ந்தனன் படைக்கு நாதன். 4

(இ ள்)

| | |
|---|---|
| உலகம் ஓர் மணி | சொர்ண விகாரமாகிய ஓர் மணியையும் |
| இரும்பு ஆம் உகிர்சிவி ஒன்று காண | அயவிகார (இரும்புமய) மாகிய நகம் செதுக்கும்கத்தி யொன்றையும் முறையேயவற்றின் உபாதானமான அயசொர்ண வடிவமாக வறிய |
| உலகம் ஆய எல்லா உருவமும், இரும்பும், அஃதே | சொர்ண விகார மாகிய சர்வாபர ணங்களும் அயவிகாரமாகிய சர் வாயுதங்களும் அவற்றின் உபா தானமான சொர்ண அயவடிவமாம் |
| அலகில் காரணத்தி னேடு காரியம் வேறு இலாமை | என்றும் நாசமின்றிய காரணத் தோடும் காரியத்திற்குள்ள அனன் னியத்தன்மையை |
| அறியும் வண்ணம் படைக்கும் நாதன் பல படப் பகர்ந்தனன் | தேவர்கள் அறியும்படி சிருஷ்டி கர்த்தாவாகிய பிரஹ்மதேவர் நாநாப் பிரகாரத்தாற் கூறினுர். 4 |

(அ - கை) காரணமான பிரஹ்மத்திற்குக் காரியமாகிய சகம் அனன்னியமானுல் அதற்குச் சவிசேஷத்வம் வருமாத லின் அவசியம் செகத்தானது பிரஹ்மாபின்னமென்று அங்கீகரிக்க வேண்டு மென்று சங்கித்துக் கூறுகின்ருர்.

காரிய மெல்லா முள்ள காரணம் வேறு மன்று
காரிய மொருகால் வேருய் வேறன்றி யிருப்ப தன்று
காரியங் கார ணத்தின் வேறென்று கருதி லந்தக்
காரிய மசத்தோ சத்தோ சதசத்தாய் வேருே வென்ருன். 5

(இ - ள்)

| | |
|---|---|
| காரியம் எல்லாம் உள்ள காரணம் | காரிய ஜகமனைத்தும் உபாதான காரணமாயுள்ள பிரஹ்மமே |
| காரியம் ஒருகால் வேறும் அன்று, வேருய் வேறு அன்றி இருப்பது அன்று | காரியங்கள் ஓர் போதும் பின்ன மன்று பின்ன பின்னமுமன்று |

[பின்ன மன்றென்று பிரதிஞ்சை செய்த அர்த்தத்தைச் சாதித்தற்காக, அக்காரியம் பின்னமெனில் சத்தாகவா அசத்தாகவா சதசத்தாகவா என்று விகற்பித்துக் கூறுகின்ருர்]

| | |
|---|---|
| காரியம் காரணத்தின் வேறு என்று கருதில் | காரிய ரூப பிரபஞ்சம் காரண ரூப பிரஹ்மத்தினும் பின்னமென்று கூறில் |
| அந்தக்காரியம் சத்தோ அசத்தோ சதசத்தாய் வேருே என்ருன் | அந்தக் காரியம் சத்தாய் பின்னமா அசத்தாய் பின்னமா சதசத்தாய் பின்னமா வென்று கூறினர். 5 |

(அ – கை) சத்தாக பின்னமென்னில் அக்காரியத்தின் சத்தை காரணத்தின் சத்தையா அல்லது அதினின்றும் பின்னப்படத்தக்க வேரு என விகற்பித்துக் கூறுகின்ருர்.

சத்தாயே வேற தென்னிற் காரண முடைய தொன்றே
பொய்த்தாய காரியத்தின் சத்தையோ புகலுங் காலே
யொத்தாகி நின்ற தன்றே யுரைத்தன னுலக மெலல்லாம்
வைத்தாயு மறைக ளோது மலர்மிசை மன்னு மேலோன் 6

(இ – ள்)

| | |
|---|---|
| சத்து ஆயே வேறு அது என்னில் | சத்தாக பின்னமென்று கூறில் |
| பொய்த்து ஆய காரி யத்தின் சத்தை புகலுங்கால் | மித்தையான காரியத்தினுடைய சத்தையைச் சொல்லுமிடத்து |
| காரணம் உடையது ஒன்றையோ | காரண கதமான சத்தையோ |
| ஒத்து ஆகி நின்றது அன்றே | காரண கதமான சத்தையினும் விலட்சண சத்தையா (என்று) |
| உலகம் எல்லாம் வைத்து | சர்வ பிரபஞ்சங்களையும் சிருஷ்டித்து |
| ஆயும் மறைகள் ஓதும் | ஆராயத்தக்க வேதங்களை உபதேசித்தும் |
| மலர் மிசை மன்னும் வாஞேன் உரைத்தனன் | பத்மாசனத்திலிருக்கும் பிரஹ்மா மானவர் விகற்பித்தனர் 6 |

(அ – கை) இங்ஙனம் விகற்பித்ததில் காரணசத்தையே காரிய சத்தை என்ற பிரதமபட்சத்தில் காரியம் அசத்துவமேயாகின்றது எனப்பிரதிபாதிக்கின்ருர்.

காரண சத்தை தானே யென்றிடில் வேறு சொன்ன
காரிய சத்தை யில்லை யாயிடும் முன்பு சொன்ன
காரண சத்தை யொன்றே யானபின் னந்தச் சத்தைக்
கோதொரு பேத முண்டாம் படியெங்கன் உரையு மென்ருன். 7

(இ – ள்)

| | |
|---|---|
| காரண சத்தை தானே என்றிடில் | காரியத்திற்குள்ள சத்தையானது காரண சத்தைதா னென்ருல் |
| வேறு சொன்ன காரிய சத்தை இல்லைஆயிடும் | பின்னமாகக் கூறிய காரியத்திற்குச் சத்தையின்ருய் விடும் |
| முன்பு சொன்ன காரண சத்தை ஒன்றே ஆனபின் | பூர்வங் கூறிய காரிய சத்தை யானது காரண சத்தையாகவே சித்தித்தபின் |
| அந்தச் சத்தைக்கு ஓது ஒரு பேதம் உண் டாம்படி எங்ஙன் உரைமின் என்ருன் | அந்தக் காரிய சத்தைக்கு சொல்லா நின்ற பின்னத்வமு முண்டாகும் விதம் எவ்வாறு சொல்லுங்க ளென்று கூறினன். |

7

(அ – கை) இந்தப்படி சத்துஏக மாயினும் காரணத்தினும் காரியம் வேருக அனுபவிக்கப் படுகின்றதெனுஞ் சங்கயை யனுவித்து. காரண சத்தையே காரிய சத்தையென அங்கீகரித்ததனுல் தன்னியல்பாலேயே காரியம் அசத்தாகும் ஆதலால் காரியம் பின்னமாகிச் சத்தென்பது வாக்குமாத்திரம் தானென்று கூறுகின்ருர்.

சத்தைதா னென்ருய் நின்ற தாயினுங் காரியங்கள்
ஒத்தபேர் வேறு பாட்டால் உள்ளகா ரணத்தில் வேறே
இத்தகைத் தென்ற வார்த்தை யியம்புபே ரளவே யானல்
வைத்தகா ரியமுண் டென்னும் வார்த்தையு மசத்தேயாகும். 8

(இ - ள்)

| | |
|---|---|
| சத்தை தான் ஒன்றாய் நின்றது ஆயினும் | காரிய காரணங்களின் சத்தை ஏகத் தன்மையாக விருப்பினும் |
| காரியங்கள் ஒத்த பேர் வேறு பாட்டால் | காரியங்களிற் பொருந்திய பெயர் வேற்றுமையால் |
| உள்ள காரணத்தில் வேறே என்று இயம்பு ஆனால் | இயல்பாயுள்ள காரணத்தினும் பின்னமென்பீர்களாயின் |
| இத்தகை வார்த்தை பேர்அளவே ஆனால் | இத்தன்மைய உங்கள் சொல்லானது வாக்குமாத்திரமேயா மாகையால் |
| வைத்த காரியங்கள் உண்டு என்னும் வார்த்தையும் அசத்தே ஆகும் | காரணத்தினும்காரியம்வேறென்று நீங்கள் அபிப்பிராயம் வைத்துக் கூறிய காரியம்பின்னமென்றவார்த் தையும் அர்த்தமற்றதே யாம். 8 |

(அ - கை) மேலும் இந்த அசத்தே உபபாதிக்கப்படுகின்றது.

சத்தையில் லாத போது காரியம் இல்லை யாகும்
இத்தன் மைக் காரி யத்துக் கிலாமையே யிசைவ தென்னும்
அத்தன்மை யசத்தி னுக்கே காரியம் பிறந்த தென் றிங்
கொத்தொவ்வா துரைத்த வார்த்தை யென்றுமின் றாகு
மென்றே. 9

(இ - ள்)

| | |
|---|---|
| சத்தைஇல்லாதபோது காரியம் இல்லை ஆகும் | தனக்குச் சத்தை யில்லாதபோது காரியம் அசத்தே யாகும் |
| இத்தன்மைக் காரியத் திற்கு என்றும் இலா மையே இசைவது | இத்தன்மைய சத்தாஹீனமான காரியத்திற்குச் சர்வ காலத்திலும் அசத்துவமே யுக்தமாம் |
| அத்தன்மை அசத்தி னுக்குக் காரியம் பிறந்தது என்றும் | அவ்விதமான அசத்தினைக் காரிய மென்றும் பின்னமாக ஜனித்த தென்றும் |
| இங்கு ஒத்து | – இவ்விடத்து நீங்கள் சம்மதித்து |

| | |
|---|---|
| ஒவ்வாது உரைத்த வார்த்தை | சுருதி யுக்தியநுபவங்கட்கு சம்மதமாகாததாகக் கூறிய கூற்றானது |

என்றும் இன்றாகும் – எப்போதும் உண்மை யாகாது.

(அன்று ஏ. அசைகள்) அசத்தினை - அசத்தினுக்கு என்றது உருபு மயக்கு)
9

(அ – கை) இங்ஙனமாயின் காரண சத்தையினும் காரிய சத்தை யன்னியமே யென்னும் துவிதீய பட்சத்தைக் கண்டிக்க வேண்டி அச்சத்தை வேறெனில் சத்தாக வேறா அசத்தாக வேறா என்னும் வினாவை கற்பித்து அவற்றை விகற்பிக் கின்றார்.

காரண சத்தை யேயக் காரியதத்தை யின்று
வேறொரு சத்தை யுண்டே யென்றிடில் வேறு சொன்ன
காரிய சத்தை யுள்ள காரண சத்தை யோடு
கூறிய சத்தாய்க் கொண்டோ வசத்தாயோ நிற்ப தென்றான்.

(இ – ள்) 10

| | |
|---|---|
| காரண சத்தையே அக் காரிய சத்தை இன்று | காரண சத்தை தானுள்ளது காரியத்திற்குச் சத்தையென்பதில்லையாம் |
| வேறு ஒரு சத்தை உண்டே என்றிடில் | காரியத்திற்குக் காரண சத்தையினும் வேறாக ஓர் சத்தையிருக்கிறதென்று கூறிடில் |
| காரியத்தின் சொன்ன வேறு சத்தை | காரியத்திற்குக் கூறிய வேறு சத்தை யானது |
| உள்ள காரண சத்தை ஓடு | இயல்பாயுள்ள காரண சத்தையுடன் |
| கூறிய சத்தாய்க் கொண்டோ | சொல்கின்ற சத்ரூப மாகவோ |
| அசத்தாயோ நிற்பது என்றான் | அசத்ரூப மாகவோ பொருந்தியிருக்கிறதென்று விகற்பித்தான், |

10

(அ – கை) பிரதம விகற்பத்தை சத்து ரூபமாகப் பின்ன மெனில் சத்தாகிய சொரூபம் இரண்டு சத்தைக்கும் ஏகமாயிருப்பதனுல் பேதமில்லாதனவாகி இரண்டுமொரு சத்தையே யாகுமென நிராகரிக்கின்ருர்.

சத்தாய்க் கொண்டே வேறென்னில் ஒன்றே சத்தை
யிரண்டாகா
தசத்தாய்க் கொண்டு காரணத்தோ டாகி வேறு நிற்குமெனில்
அசத்தா மிதுதா னிலாமையினு லசத்தே யாகுங் காரியத்தே
இசைத்தே லுளதாய்ச் செயமாட்டா தென்று மலடி மகன்
போல. 11

(இ – ள்)

| | |
|---|---|
| சத்தாய்க் கொண்டே வேறு என்னில் | காரியத்தின் சத்தை காரண சத்தை யோடு சத்தாகவே பின்ன மென்று கூறில் |
| சத்தை ஒன்றே இரண்டு ஆகாது | (லக்ஷண பேதமின்மையால் உப யசத்தைகளும் ஏகமே (அன்றி) பின்ன மாகாது |

[இரண்டாம் பக்ஷத்தை யனுவதித்து அசத்து ரூப மாகவே வேறென்னில் அசத்தானது பற்றி சத்தையே யாகாது என்று சத்காரிய பக்ஷத்தை தூஷிக்கின்ருர்]

| | |
|---|---|
| காரணத்தோடு அசத் தாய்க் கொண்டு வேருகிநிற்கும்எனில் | காரண சத்தையோடு காரியசத்தை அசத்தாகவே பின்னமாக விருக்கிற தென்று கூறில் |
| இதுதான் இலாமை யினுல் அசத்தாம் | இக்காரிய சத்தை சத்தாக வின்மை யினுல் அசத்தேயாம் (முயல் கொம்பு போல்) |

[இவ்விதம் காரியம் சத்தென்னும் பக்ஷத்தை நிராக ரித்து அசத்தாகவே காரியம் காரணத்தினும் பின்னமென் னும் பக்ஷத்தை நிராகரிக்கின்ருர்]

| | |
|---|---|
| காரியத்தை அசத்தே ஆகும் (என்று) இசைத்தேல் | காரியம் அசத்தாக பின்னமென்று கூறில் |
| மலடி மகன் போல் என்றும் உளதாய் செயமாட்டா | வந்திய சுதனைப் போல ஓர் போதும் காரியமாக மாட்டாது. |

11

12, 13ம் பாடல் குளகம்) (அ – கை) பிரத்வம்சாபாவம் போல் அசத்திற்குக் காரியத்வம் ஏன் கூடாது எனச் சங்கித்து பிரத்வம்சாபாவமும் காரியமாகாதென்று கூறுகின்ருர்)

காரிய மொருகா லுண்டாம் ஒன்றினு லழிவ தில்லை
காரியந் தனக்குற் பத்தி யிலாமையா லில்லா வொன்ருங்
காரியந்தானென்ருேடே நண்ணுமென் றுரைத்தல் கூடா
பாருமின் என்று வானோர்க் குரைத்தனன் பதும மேலோன். 12

இன்னதோர் படியிருக்கு மெனப்படா திலாமை யேபோல்
அன்னதே யாத லாலே யாவது மிலதே யாகும்
சொன்னவிக் காரி யந்தா னசத்தெனத் தோன்றினுலும்
பின்னையும் விசேட மொன்றுண் டென்னவே பேசுவீரேல். 13

( இ – ள் )

| | |
|---|---|
| ஒருகால் உண்டாம் ஒன்றினல் அழிவது இல்லை காரியம் | ஓர் காலுற்பன்னமாவதும் ஒன்றினுலும் மழியாதது மாகிய பிரத்வம்சாபாவத்திற்குப்போல அசத்திற்கு காரியத்தவம் கூடுமென்னில் அப்பிரத்வம்சாபாவத்திற்குக் காரியத்வங் கூடாது |
| காரியம் தனக்கு உற்பத்தி இல்லாமையால் | அப் பிரத்வம்சாபாவத்திற்கு உற்பத்தி சம்பவியாமையால் |

[உற்பத்தி அசம்பவம் பிரதிபாதிக்கின்ருர்]

| | |
|---|---|
| இல்லா ஒன்ரும் காரியந்தான் | இல்லாத ஓர் பொருளான பிரத்வம்சா பாவமானது. |
| ஒன்ருேடே நண்ணும் என்று உரைத்தல் கூடா | ஓர்காரகத்தோடு பொருந்துமென்று கூறுதல் கூடாது. |

| | |
|---|---|
| இன்னதோர்படி இருக்கும் எனப்படாது இலாமையே போல் | இவ்விதமிருக்குமென்று நிரூபிக்க முடியாத சூனியத்தைப்போல |

அன்னதே ஆதலாலே – அப்பிரத்வம்சாபாவமுமாதலால்

| | |
|---|---|
| ஆவதும் இலதே ஆகும் பாருமின் என்று பதுமமேலோன் | (அக்காரக சம்பந்தத்தை அபேக்ஷித்து வரும்) ஜெனிக்கிரிகையில்லை அதனுல் காரியத்வமில்லை இதனையாராய்ந்து பாருங்களென்று கமலாசனத்திலெழுந்தருளிய பிரஹ்மதேவர் |
| வானோர்க்கு உரைத்தனன் | தேவர்களுக்குபதேசித்தருளினர் |

[வி – ரை] கர்த்தா கரண காரகாதி சம்பந்தமுடைய கடாதிகட்கே ஜனிக்கிரிகை காணப்படுகின்றது சஷவிஷாணம் போன்ற நிர்தர்மகவஸ்துவாகிய பித்வம்சாபாவத்துக்கு, காரகசம்பந்தம் கூடாமையால் ஜனிக்கிரியை கூடாது அதனுல் காரியத்வமே யில்லையென்பது பொருள்)

[காரியத்திற்கு காரக சம்பந்த ஜனிக்கிரிகையின்றிய அசத்வமிருந்தாலும் விசேடமிருப்பதனுல் காரியத்வ முண்டு என்றுள்ள சங்கையையும் அனுவதித்து நிராகரிக்கின்ருர் ]

| | |
|---|---|
| சொன்ன இக் காரியம் தான் | முற்கூறிய விக்காரியமானது |
| அசத்து எனத் தோன்றினும் | (இவ்விடத்) தசத்தைப் போற் காணப்பட்டாலும் |
| பின்னையும் விசேடம் ஒன்று உண்டு என்னவே பேசுவீரேல் | மேலும் ஓர் விசேடத் தன்மையுள்ளதாயிருக்கின்றது என்று கூறுவீர்களாயின் 13 |

இதுவும் குளகம்

(அ - கை) நீங்கள் கூறும் விசேடமானது காரக சம்பந்தமா அல்லது ஜனிக்கிரியாசிரயத்வ சத்தா சம்பந்தமா என்னையென விகற்பித்துப் பிரதம பக்ஷத்தை நிராகரிக்கின்ருர் ]

இதற்குநீர் சொன்ன வேறே தியைந்திடு சம்பந்தந்தான்
அதற்கொரு காரகத்தால் என்னில்வே றமைவதில்லை
யொதுக்கமில்லாத தொன்றே விசேடமாயிருக்குமென்றும்
அதற்குவே றென்றுமில்லை யாதலாற் கூடாதென்றும் 14

(இ - ள்)

| | |
|---|---|
| நீர் இதற்கு சொன்ன வேறு ஏது | நீங்கள் அசத்தாகிய காரியத்திற்குக் கூறின விசேஷத்துவம் யாது |
| அதற்கு ஒரு காரகத்தால் இயைந்திடும் சம்பந்தந்தான் என்னில் | அக்காரியத்திற்கு ஒரு காரகத்தால் வந்து பொருந்திய சம்பந்தமே விசேஷமா மென்று கூறில் |
| வேறு அமைவது இல்லை | (சவிசேஷமான பதார்த்தங்கட்கே காரகசம்பந்தங்கூடும் நிர்விசேஷமானவதற்குக் காரக சம்பந்தமாகிய) விசேஷம் பொருந்தாது |
| ஒதுக்கம் இல்லாதது ஒன்றே விசேடமாய் இருக்கும் என்னில் | அக்காரக சம்பந்தமே விசேஷமாயிருக்குமென்று கூறுவீரேல் |

[வி - ரை] தன்னிடத்திற் தானிருத்தலாகிய ஆன்மாசிரயதோஷம் உண்டாம் அதை நீக்குதற்கு வேறொரு விசேஷத்தை அங்கீகரிக்கில் ஆத்மாசிரயதோஷத்தோடு அன்னியோன்னியாசிரய தோஷமுண்டாம் அதை நீக்குதற்கு மூன்றுவது விசேஷத்தை அங்கீகரித்து நான்காவது அங்கீகரியாவிடின் சக்கிரியா தோஷமுண்டாம் நான்காவது அங்கீகரித்தால் அனவஸ்தா தோஷமுண்டாம் ஆதலால்]

| | |
|---|---|
| அதற்கு வேறு ஒன்றும் இல்லை ஆதலால் என்றும் கூடாது | அக்காரியத்திற்கு விசேஷணம் ஒன்றும் கிடையாது ஆகையால் காரக சம்பந்த விஷேசமென்பது கூடாது |

14

(அ - கை) காரணத்தோடு கூடல் வேறெனில் அது தன்னிலும் காரணந்தானேயாகுமென்று கூறியது கவிநாயகரது அபிமதம்

காரணத்தோடு கூடல் வேறெனி லதுதன் ஞலும்
காரணந்தானே யாகு மிதினின்றுங் கருதிச்சொன்ன
காரியம் பிறக்கு மென்ற விதுகொண்டு வேறு சொல்லிற்
பாருள குற்றம் முன்போற் பரிகரிப் பாரு மில்லை 15

( இ - ள் )

| | |
|---|---|
| காரணத்தோடு கூடல் வேறு எனில் | அசத்தாகிய காரியத்திற்கு காரணத்தோடு கூடுந் தன்மைச் சம்பந்தமே விசேஷமென்று கூறில் |
| காரணம் அதுவும் | காரணத்தோடு கூடுவதாகிய சம்பந்தமும் |

(சவிசேஷமாகில் பொருந்தும் அதன் விசேஷம் யாது. அச்சம்பந்தமே எனில்)

| | |
|---|---|
| தன்ஞல்தானே ஆகும் | அது ஆத்மாசிரய தோஷமாம் |

[ஜனிக்கிரியைக்கு ஆசிரயமாயிருத்தலே விசேடமெனினும் முற்கூறிய தூஷணமனைத்தும் நேரிடும் அவற்றை ஒருவராலும் பரிகரிக்கக்கூடாது என துவிதீய பட்சத்தை நிராகரிக்கின்ருர்]

| | |
|---|---|
| இதில் நின்றும் | இக் காரணத்தோடு கூடுந் தன்மையினின்றும் வேருக |
| கருதிச் சொன்னபிறக்கும் என்ற இது கொண்டு | ஆலோசித்துக் கூறிய ஜனிக்கிரியாசிரயத்வ விகற்பத்தைக்கொண்டு |
| காரியம் வேறு சொல்லில் | காரியத்திற்கு விசேஷங் கூறில் |
| முன்போல் உள குற்றம்பார் பரிகரிப்பாரும் இல்லை | பூர்வம் போலுள்ள தோஷத்தை உலகத்தில் நிவர்த்திப்பவரில்லை 15 |

(அ - சை) முற்கூறிய தோஷம் வருதலால் சத்தா சம்பந்த லக்ஷணமே விசேஷமென்கிற மூன்றும் விகற்பத்தையும் யுக்தமல்ல வென்று சொல்லுகின்ருர்.

இரண்டுக்கு மொன்றே சத்தை யெனுமிது வேறே யென்னில்
திரண்டிடுங் குற்ற மெல்லாஞ் செறிதனிச் சயமெப் போதும்
திரண்டகா ரியம சத்தே யாதலாற் சதசத் தென்னில்
இரண்டுக்கு முரைத்த குற்ற மிசைந்திடு மியல்பி ஞலே. 16

(இ - ள்)

| | |
|---|---|
| இரண்டுக்கும் ஒன்றே சத்தை எனும் இது வேறு என்னில் | சத்தா சம்பந்தமே இந்த அசத்திற்கு விசேஷமென்று நீங்கள் கூறுவீர்களாயின் |

(அதாவது காரணத்தோடு கூடல் என்னும் விசேஷம் அசத்திற்கு சித்தியாது என்ருலும் வந்தியா சுதாதிகளின்றும் விலக்ஷணமாக்கும் பெருட்டு கூறில்

| | |
|---|---|
| திரண்டிடும் குற்றம் எல்லாம் செறிதல் நிச்சயம் | கூட்டமாகிய ஆன்மாசிரயமாதி தோஷமனைத்தும் பொருந்துதல் திண்ணமாம் |

(பிரதிபாதித்துவந்த அசத்திற்குக் காரியத்வம் அசம்பவ மென்பதை உபசம்மரிக்கின்ருர்)

| | |
|---|---|
| அசத்திற்கு எப் போதும் திரண்ட காரியம் அசத்தே | ஆகையால் அசத்திற்குச் சர்வகாலத்திலும் கூடிய காரியத்வ மின்ரும். |

(காரியம் சதசத்தான்மகமென்கிற மூன்ரும் விகற்பத்தை நிராகரிக்கின்ருர்)

| | |
|---|---|
| சத்அசத்து என்னில் | (காரியம்) சதசத்தாக பின்ன மென்னில் |
| இரண்டுக்கும் உரைத்தகுற்றம் இயல்பினுல் இசைந்திடும் | சத்தசத்துக்களுக்குக் கூறிய குற்றங்கள் சுபாவமாகவே பொருந்தியிருக்கும். 16 |

(அ - கை) இவ்வாறு பின்ன பக்ஷம் மூன்று விதமாக விகற்பித்துக் கண்டித்து இனிமேல் பேதா பேதத்தை அங்கீகரிக்கில்வரும் தோஷத்தைக் கூறுகின்ருர்.

உண்மையிற் பேத மின்றி யிருந்தேயும் பேத மென்னில்
வெண்மையே செய்த ரூப வியாபாரந் தோற்றங் கேடு
பண்வயின் இவற்ருற் கொள்ளும் பயனும ரூபம் வேறு
முண்மையி லெல்லாம் பொய்யா லுண்டாகு மனேத்து மன்றே. 17

(இ – ள்)

| | |
|---|---|
| உண்மையில் பேதம் இன்றி இருந்தேயும் | பாரமார்த்மாகக் காரியம் காரணத்தினும் அபின்னமாகவேயிருந்தும் |
| பேதம் என்னில் வெண்மையே | பேதா பேதம் என்று கூறில் அறியாமையே |

[ காரியம் காரணத்திற்கு அனன்யமாயின் பேதப் பிரதீதிக்குக் கதியென்னவென்று சங்கித்துக் கூறுகின்றார் ]

| | |
|---|---|
| செய்த ரூபவியாபாரம் | காரியகாரண பேதமும் காரக வியாபாரமும் |
| தோற்றம் கேடு பண்வயின் | உற்பத்தி நாசம் செய்யுமிடத்து |
| இவற்றால் கொள்ளும் பயன் | இவைகளால் உண்டாம் பிரயோஜனம் |
| எல்லா நாம ரூபம் | – சர்வநாம ரூபங்களும் |
| வேறும் அனைத்தும் | விசேஷங்களும் ஆகிய இவைகளனைத்தும் |
| உண்மையில் பொய்யால் உண்டாகும் | எதார்த்தமாயில்லாமல் (அவித்தையால்) பிராந்தியாகத் தோற்றுகிறது. (அன்று ஏ. அசைகள்) 17 |

(அ – கை) இந்தப்பிரகாரம் காரியம் காரணமாத்திரம் என்று சாதித்து இவ்வர்த்தத்தில் சுருதியைக் கூறுகின்றார்.

எல்லா விகாரங்களும் வாக்கால் என்றுமுண்டென்
றுரைப்பதுவும்
சொல்லா மளவே யெவ்விடத்துந் தோன்று மென்ற
துண்மையதே
யல்லா விகார மறவொழிய வனைத்தும் பொய்யே விகாரத்துக்
கில்லா தாகு முண்மைபிறி தில்லாதாகு மாதலினால் 18

(இ – ள்)

| | |
|---|---|
| ஆதலால் எல்லா விகாரங்களும் | முற்கூறிய பிரதிபாசமானது பிராந்தியாதலால் சர்வகாரியங்களும் |
| வாக்கால் உண்டு என்று உரைப்பதுவும் என்றும் சொல்லாம் அளவே | வாக்கினால் கேவலம் இருக்கிறதென்று கூறப்படுவதும் எக்காலத்தும் நாமதேய மாத்திரமே. |

[ இந்தக் கிரமமாய் விகாரமானது நாம மாத்திரமென்னவே அசத்வமென்ருயிற்று ஆகவே காரணபூதமான சத் பிரஹ்மத்தோடு அன்னியத்வமெங்ஙனம் சத்தசத்துக்களுக்கு பரஸ்பரம் விரோதத்தினுல் என்று சங்கித்துக் கூறுகின்ருர் ]

| | |
|---|---|
| எவ்விடத்தும் தோன்றும் என்றது | எவ்விடத்திலும் பிராதீதிகம் என்னும் ரூபத்தால் |
| (உய்த்து உணரில்) உண்மையதே அல்லா விகாரம் அனைத்தும் பொய் | ஆராய்ந்தறியும்போது எதார்த்தமாக இல்லாத காரிய வடிவங்களனைத்தும் மித்தையேயாம் |
| அறிவு ஒழிய இல்லாது ஆகும் | சேதனரூப பிரஹ்மத்தைவிடவேறு இல்லாததாகும் |
| விகாரத்துக்கு உண்மை பிறிது இல்லாது ஆகும் ஆதலினுல் | காரியத்திற்குச் சத்யத்வம் வேருராகாரமாகாது காரணமே தனக்கு ஆதாரமாயுள்ள அவ்வேதுவினுல் (காரியம் காரணத்திற்கு அனன்யமாம்) |

18

[வி - ரை] காரியத்திற்கு பிராதீதிக (கடாகார) ரூபமென்றும் காரியானுகத காரண (மண்வடிவ) மென்றும் இரண்டு வடிவங்களுளது அவற்றுள் பிராதீதிக ரூபத்தால் அசத்வமிருந்தாலும் காரியானுகத காரணவடிவத்தால் காரியம் காரணத்தோடு அபின்னமென்பது பொருள்)

(அ - கை) இந்தப் பிரகாரம் காரிய சம்பந்தியான காரண ரூபம் ஏகம். காரணம் அன்னிய மென்னில் அத்வைத காரணத்தன்மைக்கு விரோதம் வருமே யென்று சங்கித்துக் கூறுகின்ருர்.)

காரண மதனு லன்றி காரிய முளதாய்த் தோன்ருக்
காரண மொழியவேறு காரிய மின்மை யாலே
காரிய மனைத்தி னுக்குங் காரண மதுவே யுண்மை
யேர்தர விரண்டும் வேறென் றியம்பிட லியல்பின் ருமால். 19

(இ - ள்)

| | |
|---|---|
| காரியம் காரணம் ஒழிய வேறும் இன்மையால் | காரியானுகத காரணம் முதற்காரணத்தைவிட்டு பின்னமாக இல்லாமையால் |

| | |
|---|---|
| காரியம் உளவாய்த் தோன்று | காரியானுகத காரணம் வேருகாது |

[ காரணமாத்திரசத்யத்வம் பிரதிபாதியாநின்றதெனக் கூறுகின்ருர். ]

| | |
|---|---|
| காரியம் அனைத்தினுக்கும் காரணம் அதுவே உண்மை | காரியங்களெல்லாவற்றிற்கும் காரணவடிவமே சத்தியம் (ஆதலால்) |
| ஏர்தர இரண்டும் வேறு என்று இயம்பிடல் இயல்பு இன்ரும் | உயர்வு பொருந்தும்படி காரிய காரணமென்னுமிரண்டும் பின்னமாமென்று கூறுதல் முறையேயின்ரும். (ஆல், ஏ, அசை) 19 |

ஆமன்றென நினைவீரல தன்பின்வழி யறிவீர்
நாமுன்சொன மதற்காரண மறியம்முழு தறிவாம்
சேமம்பட மிகவுந்தெளி வுறுவீரிது வேறே
தாமந்தரு மலர்மேலுறை தலைவன் னுரை தருமால். 20

(இ-ள்)

| | |
|---|---|
| ஆம் அன்று என நினைவீர் | இவ்வர்த்தம் யுக்தமா? யுக்தமன்ரு என்று உங்கள் புத்தியினுல் விசாரித்தறியுங்கள். |
| அலது அன்பின் வழி அறிவீர் | அல்லது என் வாக்கியத்திலுள்ள சிரத்தையினுல் உண்மையென்று அறியுங்கள். |

[ பிரதிபாதித்த வார்த்தையை நிச்சயமாகக் கூறுகின்ருர் ]

| | |
|---|---|
| நாம் முன் சொன்ன முதல்காரணம் அறிய முழுதும் அறிவு ஆம் | யாம் பூர்வம் கூறிய சர்வ ஜெகத் காரண சத்ருப பிரஹ்மக் ஞானத்தால் அதன் காரிய மனைத்தும் காரணமாத்திரமாகவே அறியப்படவே யாம் என்பது சித்தமாம். |
| இது சேமம்பட மிகவும் தெளிவுறுவீர் | இவ்வர்த்தத்தை யுங்களுக்கு க்ஷேமமுண்டாகும்படி நன்கு விசாரித்தரியுங்கள் (என்று) |
| தாமம் தருமலர்மேல் உறை தலைவன் வேறு உரைதரும் | வாசனை பொருந்திய தாமரை மலரில் எழுந்தருளியிருக்கும் பிரஹ்ம தேவர் வேறு அர்த்தத்தைக் கூறுவாராயினர் (ஆல் ஏ அசை) 20 |

(அ-கை) காரியங்கள் காரண ஞானத்தால் அறியப் படினும் காரண மனேக மாதலால் ஏக காரண ஞானத்தால் அறியக் கூடாததனுல் எங்ஙனமேக விஞ்ஞானத்தால் சகல விஞ்ஞானமாமென்று சங்கித்துக் கூறுகின்ருர்.]

கூறும்பொருள் விரிவென்றிவை யறியாமையின் முழுதும்
வேறும்மல வேருேடட ஞய்நின்றது மலதான்
றேறும்படி யுளகாரண மொன்றேயுள தெனலால்
வேறென்றிடு பேதம்மில தாமெங்கணும் வினையாம். 21

(இ-ள்)

| | |
|---|---|
| பொருள் விரிவு என்று கூறிடும் இவை | காரணவஸ்து அநேகமென்று கூறும் இக்கூற்று |
| முழுதும் அறியாமை யின் | பூரண விசாரமின்மையினுலாம். |
| தேறும்படி உள காரணம் ஒன்றே உளது எனலால் | நிச்சயத்தற்குரிய காரணம் ஒன்றே இருக்கின்றதென்று சுருதி கூறு தலால் |
| தான் வேறும் அல வேருேடு உடனுய் நின்றதும் அல | காரணம் பின்னமுமன்று பின்னு பின்னமு மன்று |

[கடத்தினும் படம் பின்னமென்னும் பேதமானது பிரத்யட்சமாக அனுபவிக்கப்படுகின்றது என்று சங்கித்துக் கூறுகின்ருர்.]

| | |
|---|---|
| வேறு என்றிடும்பேதம் எங்கணும் இலதாம் வினையாம் | தருமியாதி நிரூபிக்ககூடாமையால் காரியங்கள் பின்னமென்று கூறும் பேதம் எவ்விடத்தும் இல்லையாம் (காரியங்கட்குப் பரஸ்பரம் பேதம் கூறில்) தோஷமாம் 21 |

அயலொன்றிடு பொருளுமதன் பிறிவும்மறி வறிதாம்
இயல்பின்கண தறியும்பொழு திவைதான்மிக வேரும்
அயலொன்றிவை யறியில்லறி வறியாமைதன் னியல்பாம்
முயலும்பல பேதம்மென முடியும்வினை முழுதும். 22

(இ-ள்)

| | |
|---|---|
| அயல் ஒன்றிடும் பொருளும் அதன் பிறிவும் | பேதத்தைப் பொருந்திய தர்மிப் பிரதியோகிப் பொருளும் அப் பொருள்களின் பேதமும் |
| இயல்பின்கண் அறிவரிதாம் | சுபாவமாக வறிதற்கசக்கியமாம் |

அது அறியும்பொழுது — அப்பேதத்தை யறிகின்ற காலத்தில்

| | |
|---|---|
| இவைதான் மிக வேறும் | தர்மிப் பிரதியோகி ரூபமான பொருள்கள் அறியப்பட்டனவாம் |
| அயல் ஒன்று இவை அறியில் அறிவு | தர்மிப் பிரதியோகி ரூபமான வஸ்துக்களை யறியும்பொழுது அவற்றின்பேதம் அறியப்பட்டதாம். (ஆதலால்) |
| முழுதும் வினை | அன்னியோன்யாசிரய தோஷமுடையதாம் |
| அறியாமைதன் இயல்பால் | அஞ்ஞானம் தனது சுபாவத்தினுல் |
| பலபேதம் முயலும் என முடியும் | நாநாபேதப் பிரதியோகியைத் தோற்றுவிக்குமென்பது திண்ணம் 22 |

(அ-கை) பேதமின்றி பேதாபேதமின்றி எப்பொழுதும் எவ்விடத்தும் அழிவில்லாத காரணமொன்றேதானிருக்கின்றதெனக் கூறுகிறுர்.)

பேதங்நெறி யோரில்லில தாகும்மத னுலே
பேதம்மொட பேதம்மது பேசல்பிழை யேயாம்
ஏதம்மில தாயெங்கணு மொன்ருயொழி வில்லா
தியாதொன்றது முதற்காரண மெனுமாமலர் மிசையோன். 23

(இ-ள்)

| | |
|---|---|
| நெறி ஓரில் பேதம் இல்து ஆகும் அதனுலே | சுருதியனுசாரமான யுக்தியினுல் ஆராயில் காரணபேதம் நிரூபிக்க முடியாததனுல் |
| பேதம்மொடு அபேதம் அதுபேசல் பிழையாம் | (காரணத்தினும் காரியம்) பின்னு பின்னம் என்று கூறுதல் தோஷமாகும். |

| | |
|---|---|
| ஏதம் இலது ஆய் எங்கனும் ஒன்றாய் ஒழிவு இல்லாது யாது ஒன்று | தோஷமின்றியதாய் சர்வ காலத்திலும் *(சஜாதி விஜாதி சுவகத பேதமின்றி) ஏகமாயும் நாசமில்லாதது எதுவோ. |
| அதுமுதல் காரணம் எனும் மாமலர் மிசையோன் | அதுவே முதற் காரணமென்று பெருமை பொருந்திய தாமரை மலர் வாசியாகிய பிரஹ்மதேவர் கூறினார். 23 |

(அ-கை) உலகத்தில் கடாதி காரியங்களின் உபாதான நிமித்தம் என்னுமிரண்டு காரணங்களும் வேறாகக் காணப்படுகிறது. அப்படி அத்விதீயமான சத்வஸ்துவானது நிமித்தமாகில் நிருபாதிகமானதால் காரியமுண்டாக மாட்டாது அது உபாதானமாயின் அநிமித்தத்வப் பிரசங்கம் வருமென்று சங்கித்து அதற்கு உபயரூபமும் கூறுகின்றார்.

மண்ணும்வனை வானும்வனை பவையும்பிறி தாயே
யெண்ணும்மள வறிவின்செய லிவனைப்பெற விசையும்
கண்ணென்றிட வருகாரண மொன்றேயம லமதாய்
எண்ணும்மறி வுருவையிசை யாநிற்பதெவ் விடமும். 24

(இ-ள்)

| | |
|---|---|
| மண்ணும் வனைவானும் வனைபவையும் | உபாதானகாரணமான மண்ணும் நிமித்த காரணனான குலாலனும் கடாதிகளும் |
| பிரிது ஆயே எண்ணும் அளவு | வேறு வேறாகக் கருதும் போது (உபாதான காரணமாகிய மண் |
| அறிவின் செயல் இவனைப் பெற இசையும் | ஞான கிரியையோடு கூடிய குலாலனை நிமித்த காரணமாக வடைதலையபேக்ஷிக்கும் |
| கண் என்றிட வரு காரணம் | திருக்கென்று சொல்லும்படி வருகின்ற காரணம் |

* ஒரு மரத்திற்கும் அதனது அவயவமாகிய இலை பழம் முதலியன வேறாயிருத்தலே சுவகத பேதம். அம்மரம் அதுபோன்ற வேறோர் மரத்திற்கும் வேறாதலே சஜாதீய பேதமாம். அம்மரத்திற்கு வேறாய சுபாவமுடைய கல் மண் முதலியன அதற்கு வேறாயிருத்தலே விஜாதீய பேதமாம்.

| | |
|---|---|
| ஒன்றே அமலமதால் | அத்வைதமாயும் சுத்தமாயு மிருத்தலால் |
| எண்ணும் அறிவுருவை | நிமித்த காரணமாகக் கருதுகின்ற சேதனவடிவத்தை 24 |

( இதுவுமது )

வனேகின்றவன் ஒரு காரணம் வரசேதனம்வேறு
நினையும்படி யிலதாதலி னிலையாயுள தறிவில்
அனகாரண மறிவாயினும் வனேவானிக ரன்றும்
நினே மண்ணொடு நிகரானவை தனேயேகொடு செயுமால். 25

(இ - ள்)

| | |
|---|---|
| (ஆதலின்) வனேகின்ற வன் ஒரு காரணம் | ஆதலால் கடசராவாதி காரியங் களேச் செய்கின்ற சேதன குலால னை நிமித்த காரணனேப் போன்ற |
| வரசேதனம் வேறு நினையும்படி இலது | மேலான சேதனரூப நிமித்தத்தை அன்னியமாக நினைக்கும்படி யில்லை |
| அறிவில் நிலையாய் உளது | ஞான சொரூபமான முதற் கார ணத்திலே அந்நிமித்தத் தன்மை நிலைத்திருக்கின்றது |
| அனகாரணம் அறிவு ஆயினும் வனேவான் நிகர் அன்றும் | அந்தக்காரணம் சேதன வடிவ மாயினும் குலாலனுக்குச் சமான மாவதின்றும் |
| நினே மண்ணொடு நிகர் ஆன தனேயே கொடு அவை செயும் (ஆல்-அசை) | உபாதானமாகக் கருதுகின்ற மண் ணிற்குச் சமானமான தன்னேயே உபாதான காரணமாகக் கொண்டு காரியங்களேயுண்டாக்கும். 25 |

(அ - கை) அவிக்கிரியமாய் அசங்கமாய் சத்ரூப மாகிய பிரஹ்ம வஸ்துவிற்கு இவ்வித காரணத்வம் எப்படிக் கூடும் மாயை யாலென்னில் அதனல் துவிதப்பிரசித்தி வருமென்று சங்கித்துக் கூறுகின்ருர்.

தோன்றலா லசித்து மாகித் தமத்தொடு கலந்து நின்றே
யான்றவம் மூ னிகள் பண்ணும் மனனத்தால் அளப்பொ
ணுதாய்ச்
சான்றதாய் எங்கு நின்ற சங்கர னுடைத்தா யொன்றும்
ஈன்றிடு மறிய வெல்லா மித் தன்மைத் தெனவொன் றுண்டு 26

(இ - ள்)

| | |
|---|---|
| தோன்றலால் அசித்தும் ஆகி தமத்தொடு கலந்து நின்றே | பிரதீதி மாத்திரத்தால் ஜடமதாகி தமசைப் பொருந்தி நிற்பதாயும் |
| ஆன்ற அம்முனிகள் | மிகுந்த அறிவினையுடைய வித்துவான்கள் |
| பண்ணும் மனனத்தால் | செய்கின்ற சதசத் விசாரத்தால் |
| அளப்பொணுதாய் | - நிச்சயிக்க முடியாத தாயும் |
| ஒன்ருய் சான்றதாய் எங்கும் நின்ற சங்கரன் உடைத்தாய் | அத்வைதமாயும் சர்வ சீவர்களின் அந்தக் கரணத்தில் சாக்ஷியாயும் சர்வ வியாபியாயு மிருக்கின்ற சேதன சம்பந்தமுடையதாய் |
| அறிய எல்லாம்ஈன்றிடும் இத்தன்மைத்து என ஒன்று உண்டு | செய்தற்கரிய வனைத்தையும் உற்பத்தி செய்கின்றதாய் இத்தன்மை வாய்ந்தவோர் சத்தி யுண்டு. 26 |

காரண மேவி மாயை படைத்தளித் தழிப்ப தாகும்
காரணஞ் சத்தாஞ் சித்தா யிருத்தலா லென்றுங் கொண்டே
பூரண மாகி யுள்ள பொருளினைச் சுரர்கள் கேட்ப
ஆரண முரைத்த வாதி யருளினன் அறியும் வண்ணம். 27

(இ - ள்)

| | |
|---|---|
| மாயை காரணம் மேவி | அம்மாயை ஜெகத் காரணமாகியப் பிரஹ்மத்தைப் பொருந்தி |
| படைத்து அளித்து அழிப்பது ஆகும் | (சத்வ ரஜோ தமோ குணபேதத்தால்) சிருஷ்டி திதி சம்மாரங்களைச் செய்யும் |

[இந்தப் பிரகாரம் அத்விதீயத்தைச் சாதித்து விஞ்ஞான மானந்த செரூப முடையது பிரஹ்மமென்ற சுருதியினல் சத்ரூபத்வம் சாதிக்கின்ருர்]

| | |
|---|---|
| காரணம் சித்தாயிருத்தலால் சத்தாம் | ஜெகத் காரண ரூப பிரஹ்மமானது சேதன வடிவமாகவே யிருத்தலால் சத்ரூபமாம் |

| | | |
|---|---|---|
| என்று கொண்டு | } | என்னும் அபிப்பிராயத்தை கொண்டு |
| பூரணமாகி உள்ள பொருளினைச் சுரர்கள் கேட்ப | } | பரிபூரணமாகிய வஸ்துவினை தேவர்கள் வினவினர் |
| ஆரணம் உரைத்த ஆதி அறியும் வண் ணம் அருளினன் | } | வேதங்களை கூறிய பிரஹ்ம தேவர் தேவர்கட்கு நன்கு விளங்குமாறு உபதேசித்தனர். (ஏ – அசை) 27 |

(அ – கை) இவ்விஷயத்தில் வியாப்தியைக் கூறுகின்றார்.

உண்மை சித் தினுக்கே யுள்ள தசித்தெனும் பழுதைப் பாம்பிங்
கெண்மையி னிலாத வண்ண மிசையுமுங்கட்கு மேற்கக்
கண்ணென முழுது நின்ற காரண மொன்றே சத்தாய்
எண்ணிடி லென்று முண்டா யிருப்பதென் றியம்ப லுற்றான். 28

(இ – ள்)

| | | |
|---|---|---|
| சித்தினுக்கே உண்மை உள்ளது | } | சித்ரூபத்திற்கு சத்தியத்வம் உளது |

[சத்ரூபத்திற்கும் ஏன் அசத்யத்வம் கூடாதெனச் சங் கித்துக் கூறுகின்றார்]

| | | |
|---|---|---|
| இங்கு எண்மையில் | – | ஈண்டாராயுங்கால் |
| அசித்து எனும் பழு தைப் பாம்பு இலாத வண்ணம் உங்கட்கும் ஏற்க இசையும் | } | ஜடமாகிய ரட்சு சர்பம் அசம்பவமா மென்பது உங்களுக்கு மனத்திற் குப் பொருந்த சம்மதமேயாம் |

[பிரதி பாதித்த இந்த அர்த்தத்தில் சத்தாகவே இந்தச் சகத்து முன்னே யிருந்தது ஏகமேவாத் வதீயம் என்னும் சுருதியைக் கூறுகின்றார்]

| | | |
|---|---|---|
| எண்ணிடில் கண் ணென முழுதும் நின்ற காரணம் ஒன்றே | } | ஆராயில் திருக்கு ரூபமாயும் சர் வான்மகமாயும் இருக்கின்ற சகத் காரண வஸ்து ஒன்றே |
| சத்தாய் என்றும் உண் டாய் இருப்பது என்று இயம்பல் உற்றான் | } | சத்தியமாயும் சர்வகதமாயு மிருக் கின்றது என்று பிரஹ்ம தேவர் கூறினர், 28 |

(அ - கை) இந்தப் பிரகாரம் சத்காரண வாதத்தைத் துதித்து அதையுறுதிப்படுத்தும் நிமித்தம் சூனியவாதி யபி மதமான அசத் காரண பட்சத்தைக் கூறி அதனை அஃதொன்றே யல்லவா என்றது முதல் எங்ஙனமசத்தில் நின்றும் சத்துண்டாகும் என்றதுவரை மக்கட் படைப்புக் குக் காரணம் மலடி மகன் ஆகான் என்றது வரைக்குமுள்ள வாக்கியத்தாற் கண்டிக்கும் சுருதியின் அபிப்பிராயததையும் கூறுகின்றூர்.

அறியாதா ரசத்தாய் முன்பு காரணமுளதாய்த் தென்பர்
நெறியாலிவ் வசத்துண் டாக்குங் காரணமாகா தென்பர்
பிறிதாய காரியங்க ளிதினின்றும் பிறக்கு மென்னில்
வறிதாய மலடி மைந்தன் காரண மக்கட் கெல்லாம். 29

(இ - ள்)

| | |
|---|---|
| அறியாதார் முன்பு அசத்தாய்க் காரணம் உளதாய்த்து என்பர் | சுருதியபிப்பிராயம் அறியாத சூனிய வாதிகள் சிருஷ்டிக்குப் பூர்வம் அசத்தாகவே காரணமிருக்கிற தென்று கூறு நிர்பர் |
| நெறியால் இவ்வசத்து என்றும் உண்டாகும் காரணம் ஆகாது | உண்மையாக விசாரிக்குமிடத்து இவ்வசத்தானது எக்காலத்தும் உற்பத்திசெய்யும் காரணமாக மாட்டாது. |
| பிறிது ஆய காரியங் கள் இதில் நின்றும் பிறக்கும் என்னில் | வெவ்வேருகிய காரியங்கள் இவ் வசத்தில் நின்றுமுண்டாகுமென்று கூறில் |
| வறிது ஆயமலடி மைந் தன் மக்கட்கு எல்லாம் காரணம் | அசத்தாகிய வந்தியா புத்திரன் சர்வகாரியங்களுக்கும் காரணமாம் 29 |

(அது எப்படி கூடாதோ அப்படி இதுவும் கூடாதென்பதாம்)

(அ - கை) ஜகத்திற்கு மூலகாரணமானது அசத்தாயி னும் தன் சத்தி வசத்தால் காரணத்வங் கூடுமென்னும் சங்கையைத் தூஷிக்க வேண்டி அனுவதிக்கின்றூர்]

அசத்துத்தன் சத்தியாலே யாவுக்கு முதலா மென்னில்
அசத்துக்குச் சத்தி கூடா தாமசத் தாதலாலே
அசத்தலா வித்திலென்று மங்குர தோன்றுமனுல்
அசத்தசத் தாகுஞ் சத்தே யாவையுமாவ தென்றும் 30

(இ – ள்)

| | |
|---|---|
| அசத்துத்தன் சத்தி யாலே யாவுக்கும் முதலாம் என்னில் | அசத்தானது தன் சத்திவசத்தால் சர்வகாரியத்திற்கும் காரணமாம் என்று கூறில் |
| அசத்திற்குச் சத்தி கூடாதாம் | அசத்தினிடத்தில் சத்தியிருத்தல் சம்பவியாதாம் |
| அசத்து ஆதலால் | – அபாவ ரூபமாதலின் |
| அசத்து அலாவித்தில் என்றும் அங்குரம் தோன்றும் ஆனல் | சத்ரூபமான பீஜத்தினின்றும் எக்காலத்தும் முளைதோன்றுமென்பது உலகப் பிரசித்தமாதலால் |
| அசத்து அசத்து ஆகும் | அசத்து காரணமாகுமென்ற வார்த்தை அசத்தியமே யாகும் |
| என்றும் சத்தே யாவையும் ஆவது | எக் காலத்தும் சத்தே சர்வகாரியங் களாகவும் பவிக்கும் (ஏ – அசை) 30 |

(அ – கை) விகற்பத்தை சகியாமையால் மூன்றுவிதமாய் விகற்பித்துத் தூஷிக்கின்றுர்.

அசத்தின்க ணுளதாஞ் சத்தி சத்தாயோ வசத்தாய்க் கொண்டோ
அசத்துடன் சத்தாய்க் கொண்டோ வாய்நின்றவாற தென்னை
அசத்தினை யுளதாஞ் சத்தி யாசரித் திடுவ தென்னில்
அசத்தாய மலடிமைந்தன் இயாவையு மாக்குமன்றே 31

(இ – ள்)

| | |
|---|---|
| அசத்தின்கண் உள தாம் சத்தி | அசத்தினிடத்திலுள்ள சத்தி யானது |
| சத்தாயோ அசத் தாய்க் கொண்டோ அசத்துடன் சத்தாய்க் கொண்டோ என்னை ஆய்நின்ற ஆறு | சத்தாகவோ (அல்லது) அதத் தாகவோ (அல்லது) சதசத் தாகவோ (இம் மூன்றனுள்) எத்தன்மையைப் பொருந்தி யிருக்கின்றது |

| | |
|---|---|
| அசத்து உளதாம் சத்தியினை ஆசரித்திடுவது என்னில் | அசத்தாகிய காரணம் சத்ரூபமாயுள்ள சத்தியினைப் பொருந்தி காரியோற்பத்தி செய்கின்றதென்று கூறில் |
| அசத்துஆய மலடி மைந்தன் இயாவையும் ஆக்கும் (அன்று - ஏ = அசைகள் | அசத்து ரூபமான வந்தியா புத்திரனும் சர்வ காரியங்களையும் தோற்றுவிப்பன் அது பகுதிப் பொருள் விகுதி) |

அசத்தின்றன் சத்தி தானு மசத்தாயே நிற்பதென்னில்
இசைத்திடுங் காரி யங்கள் இயாவையு மியற்ருதென்றும்
அசத்தோடே மலடி மைந்தன் ஆக்குவ திலாமை யேபோல்
அசத்தோடே சத்தேயென்னி லாயிடுமிரண்டு குற்றம். 32

(இ - ள்)

| | |
|---|---|
| அசத்தின் தன் சத்தி தானும் அசத்தாயே நிற்பது என்னில் | அசத்தினுடைய சத்தியானது அசத்தாகவே நிற்பதென்று கூறில் |
| அசத்தோடு மலடி மைந்தன் ஆக்குவது இலாமையேபோல் | அசத்தோடு கூடியவந்தியா (மலடி) சுதனும் (மகனும்) காரியோற்பத்தி செய்யாதது போல் |
| இசைத்திடும் காரியங்கள் | சொல்லா நின்ற காரியோற்பத்தி |
| இயாவையும் என்றும் இயற்ருது | எதையும் எக்காலத்தினும் செய்ய மாட்டாது |
| அசத்தோடு சத்து என்னில் | அந்தச் சத்தி சதசத்தாகிப் பொருத்தியிருக்கிறதென்று கூறில் |
| இரண்டின் குற்றம் ஆயிடும் (மூன்றிடத்தும் ஏ - அசைகள்) | சத்து அசத்துச் சத்திகளுக்குக் கூறிய குற்றம் பொருந்தும் |

32

அசத்துத்தன் சத்தியாலும் காரண மாகாதானல்
அசத்துமுன் புளதென்ருேதற் கருத்தமு மில்லையேயாம்
அசத்தலா தாகு மென்றே யனைத்திற்கு முதலதாகும்
அசத்துளதாகு மென்ற லழிந்திடு வார்த்தையாகும் 33

(இ – ள்)

அசத்துத் தன் சத்தி யாலும் } அசத்தானது தன்னுடைய சக்தி வசத்தாலும்

காரணம் ஆகாது ஆனல் } காரணமாகாதென்று பெறப் பட்டதனல்

முன்பு அசத்து உளது என்று } சிருஷ்டிக்கு முன் அசத்தாகவே யிருந்ததென்று

ஓதற்கு அருத்தமும் இல்லையே யாம் } சூனியவாதி கூறிய கூற்றுனது அர்த்தமற்றதேயாம்

[இந்தப் பிரகாரம் அசத்காரண வாதத்திற்கு அயுக்தத் தன்மையால் சுருதியில் "தூ" சப்தத்தால் அதை நிராகரித்து யாதொரு பிரகிருத (ஆரம்பித்த) சத்காரணவாதம் நிகமன மாகிய ((சௌமிய இது முன்சத்தாகவே யிருந்தது)) ஏகமே வாத்வதீயம்)) என அதை தெரிசிப்பிக்கின்ருர்]

அசத்து அலாது ஆகும் ஒன்றே } சத்ரூபமாகிய அத்வைத பிரஹ்மமே

அனைத்திற்கும் முதலது ஆகும் } சர்வத்திற்கும் பூர்வம் உள்ளதாம்

அசத்து உளதாகும் என்றல் அழிந்திடும் வார்த்தை } சிருஷ்டிக்குப் பூர்வம் அசத்தே யிருந்தது என்று கூறும் வார்த்தை மித்தையாகிய சொல்லாம். (அன்று. ஏ—அசைகள்) 33

பூதத்தா லுளதா யுள்ள புவனங்க ளுயிர்கள் முன்போன்
ரூதத்தா னறிய சத்தா லுதித்ததென் றுணரும் வண்ணம்
வேதத்தான் முழுதுஞ் சொன்ன வடிவினை விளங்கு மாற்ரு
லோதத்தான் ருெடங்க லுற்ரு னுயர்தரு சுரர்கட் கெல்லாம். 34

பூதத்தால் உளதாய் } பஞ்ச பூதங்களாலுற்பன்ன மாகியுள்ள

புவனங்கள் உயிர்கள் முன் போன்று } உலகங்கள் சீவர்கள் எல்லாம் பூர்வ கற்பம் போன்று

ஓத அறிய சத்தால் உதித்தது என்று உணரும் வண்ணம் } சொல்லுதற்கரிய சத்ரூப பிரஹ்மத் தில் நின்றும் உண்டாகிய தென்று தேவர்கள் அறியும் வண்ணம்

முழுதும் வேதத்தாலும் சொன்ன வடிவினை } சர்வ வேதங்களாலும் பிரபாதிக்கப் பட்டிருக்கிருக்கின்ற சொரூபத்தினை

விளங்கும் ஆற்றால் - நன்றாக விளங்கும்படியாக

உயர்தரு சுரர்கட்கு எல்லாம் ஓதத் தொடங்கலுற்றான் } உக்கிருஷ்டமான தேவர்கட்கு பிரஹ்ம தேவர் சொல்லத் தொடங் கினார். (தான். தான். அசை) 34

எல்லாமுண் டாவதற்கு முன்னே தோன்றி
யித்தனைக்கு காரணமாஞ் சத்தை யாகும்
இல்லாத முதன்முடிவை யுடைத்தா யொன்றாய்
இருக்குமிது வெனலாகு மியல்பிற் றாகி
நில்லாத உலகனைத்து முன்பு செய்த
நெறியதனை யுடைத்தாகி நிமல மாகிச்
சொல்லாலு மளப்பரிதா மிதன்றன் னுண்மை
சுருதிமுடி வதனாலுந் தொடரொ ணாதால், 35

(இ-ள்)

எல்லாம் உண்டாவ தற்கு முன்னே தோன்றி இத்தனைக் கும் காரணமாம் சத்தை ஆகும் } சர்வ ஜகத்தும் உற்பத்திக்கு பூர் வம் பிரதீதி யாகின்ற நாம ரூபங் களனைத்திற்கும் காரண ரூபமான சத்வடிவ பிரஹ்மமே யிருந்தது.

[இந்தப் பிரகாரம் ஏக விஞ்ஞானத்தால் சர்வ விஞ் ஞானத்தைப் பிரதிஞ்ஞை செய்து அதனைக் கூறும்பொருட்டு மண் முதலிய திருஷ்டாந்தங்களால் காரியத்திற்கு காரண அனன்யத்வத்தைச் சாதித்து அவ்வேக வஸ்து யாது அதன் விஞ்ஞானத்தால் எல்லாமறியப்பட்டதாம் என்னு மாசங்கை யானது உண்டானபோது)) சௌமியனே இது முன்சத்தா கவே இருந்தது)) என சத்தாகிய அத்துவித பிரஹ்மம் உப தேசிக்கப்பட்டது. ஜகத்திற்கு பிரஹ்ம காரியத்தன்மை யிருத்தலின் அந்தக் காரண விஞ்ஞானத்தால் அறியப்பட்ட தென்னும் தன்மையாம் என்று அபிப்ராயம் செய்து அதன் காரியத்வத்தைப் பிரதிபாதிக்கும் பொருட்டு அதனின்றும் சிருஷ்டி கூறப்பட்டது) அது அநேகமாவேனென்று பார்த்

தது) என்பது முதலியவற்ருல் அந்தச் சிருஷ்டியை சுருதியின் அபிப்பிராயத்தைக் கூறுதல் வாயிலாகச் சங்கிரகித்துக் கூறுகின்ருர்]

| | |
|---|---|
| இல்லாத முதல் வடிவை உடைத்தாய் | அந்தக் காரணமானது ஆதியும் அந்தமு மில்லாத தன்மையை யுடையதாயும் |
| ஒன்ருய் இருக்கும் இது எனல் ஆகும் இயல்பு இற்று ஆகி | அத்வைதமாயும் சத்தாயும் இது வென்று சுட்டு மியல் பில்லாத தாயும் |

[அத்விதீயமும் சத்ரூபமுமான ஏகவிதமாம் பிரஹ்மத்தில் நின்றும் அநேகவிதமான பிரபஞ்சோற்பத்தி எங்ஙனம் உளதாம் என்று சங்கித்துச் சொல்லுகின்ருர்]

| | |
|---|---|
| முன்பு செய்த இல்லாத உலகனைத்தும் நெறிய தனை உடைத்து ஆகி | அதீத கற்பத்தில் தோன்றி யொடுங்குதல் செய்த அநித்திய மாகிய பிரபஞ்ச வாசனையும் அதன் அனுபவ ஜனித சமஸ்காரத்தையும் உடையதாயுள்ளதும் |
| நிமலமாகிச் சொல்லாலும் அளப்பரிது ஆம் இதன் தன் உண்மை | மலரகிதமாயும் வாக்குக் கெட்டாத தாயும் உள்ளதுமான இவ்வஸ்துவினது யதார்த்த சொரூபத்தை |
| சுருதி முடிவதனுலும் தொடரொணுது | வேதாந்தங்களாலும் (சத்திவிருத்தியால்) கோசரிக்கக் கூடாது. (ஆல்-அசை) 35 |

காலமுங் கன்மங் தானும் பரிபாக மான வாறே
ஞாலமுண் டாக நல்ல குணத்தினைக் கலந்து நிற்கும்
பாலதொன் றில்லா விந்தச் சத்திமான் படைத்தற் காக
வேலவே யெல்லா மாவோ மென்றுகொண் டிசைந்து
பார்த்தான். 36

(இ - ள்)

| | |
|---|---|
| காலமும் கன்மம் தானும் பரிபாகம் ஆனவாறே | சிருஷ்டிக்கிரியை காலமும் பிராணிகளின் புண்ணிய பாவ கன்மங்களும் பரிபக்குவமானபடியினுல் |
| ஞாலம் உண்டாக நல்ல குணத்தினை கலந்து நிற்கும் | பிரபஞ்ச முண்டாம் வண்ணம் சுத்தசத்வ விருத்தியைப் பொருந்தி யிருப்பவனும் |

| | |
|---|---|
| பாலது ஒன்று இல்லா இந்தச் சத்தி மான் | பாரபக்ஷ மில்லாதவனுமாகிய முற்கூறிய சத்வ ரஜோ தமோகுண வடிவ சத்தியோடு கூடிய பரமேஸ்வரன் |
| படைத்தற்கு ஆக | - சிருஷ்டி செய்வதற்காக |
| ஏலவே எல்லாம் ஆவோம் என்று கொண்டு இசைந்து பார்த்தான் | முன்னமே ஏகனாகிய நாமே அநேகமாக பவிப்போமென்று பரியாலோசனை செய்து (பிரகிருதியை) பொருந்த ஈக்ஷித்தான் (அருளால் நோக்கினன்) |

36

(அ - கை) சந்தோக சாகையில் தேயுமுதலியவற்றின் உற்பத்தி கூறப்பட்டது ஆகாசத்திற்கும் வாயுவுக்கும் உற்பத்தி கூறவில்லை யாயினும் தைத்திரீயத்தில் அவைகளுக்கு உற்பத்தி கூறப்பட்டிருக்கிறது அதனால் குணோபசம்கார (பூர்வம் சொல்லியிருக்கின்றதைக் குறைந்த விடத்தில் எடுத்துக் கூட்டிச் சொல்லும்) நியாயத்தால் அதனை யிவ்விடத்தில் சேர்த்து சிருஷ்டியை நிருபிக்கின்றார்.

பார்த்தபின் முன்னா காயம் வாயுவைப் படைத்துப் பின்பு
தீத்தனை யப்பைச் செய்தே யனமெனச் சொல்லப் பட்ட
பூத்தனை யுளதாய்ச் செய்த காரண மாக வீசன்
வாய்த்தநுண் பூத மைந்தால் வகுத்தவா றியம்பக் கேண்மின். 37

| | |
|---|---|
| பார்த்தபின் | இவ்வாறு பரசிவன் ஈக்ஷித்த பின்னர் |
| முன் ஆகாயம் வாயுவை படைத்து | முதலில் ஆகாயத்தையும் வாயுவையும் சிருஷ்டித்து |
| பின்பு தீத்தனை அப்பைச் செய்தது | பின்னர் அக்கினியையும் ஜலத்தையும் உண்டுபண்ணி |
| அனம் எனச் சொல்லப் பட்ட பூத்தனை உளதாய்ச் செய்த | அன்னமென்று சுருதிகளிற் கூறியுள்ள பிருதிவியை படைத்த |
| காரணமாக ஈசன் | - காரணமாகிய பரமேஸ்வரன் |
| வாய்த்த நுண்பூதம் ஐந்தால் | கிரமமாகப் பொருந்திய சூட்சும பூதங்கள் ஒவ்வொன்றையும் ஐந்தைந்தாக |

| | | |
|---|---|---|
| வகுத்தவாறு இயம்பக் கேண்மின் | } | பஞ்சீகரணம் பண்ணின முறையைக் கூறக் கேளுங்கள் (ஏ-அசை) 37 |

(அ – கை) சுருதியில் தேஜஸ் அப்பு அன்னங்களின் சிருஷ்டியின் பின்னர் யாதொரு திரிவித்கரணம் (மூன்று பூதத்தின் சேர்க்கை) சொல்லப்பட்டதோ அது பூத சிருஷ்டியில் ஆகாயவாயு சிருஷ்டிகளைச் சேர்த்துக் கூறுதலால் பஞ்சீகரணத்திற்கு உபலக்ஷணமென அதை தரிசிப்பிக்கின்ருர்.

தன்மாத் திரைகளைந்தினையு மோரொன்றிரண்டாய்ப்பகுத்
தொன்றை
நன்ரு லாக்கித் தன்பாதி யொழிந்த நாலினுடன் கூட்டி
யின்னே யல்லா தவைநான்கி லியல்பிற்கூட்ட வானுதி
பின்னே தூல பூதமெனப் பிறக்குமெனவே பெயர்த்
துரைத்தான். 38

(இ - ள்)

| | | |
|---|---|---|
| தன் மாத்திரைகள் ஐந்தினையும் ஓரொன்று | } | தன்மாத்திராவடிவமான (சூட்சும) பூதங்களைந்தினுள் ஒவ்வொரு சூட்சும பூதத்தினையும் |
| இரண்டாய் பகுத்து | – | இரண்டிரண்டாய் பிரித்து |
| ஒன்றை நன்ருல் ஆக்கி | } | அதிலொன்றை நான்கு பாகங்களாகச் செய்து |
| தன் பாதி ஒழிந்த நாலின் உடன் கூட்டி | } | தன்னுடைய அரைப்பாகத்தை விடுத்து ஏனைய நான்கு பூதங்களுடைய அரைப்பாகத்தோடு சேர்த்து |
| இன்னே அல்லா தவை நான்கில் இயபில் கூட்ட | } | இந்தப்பிரகாரம் ஏனைய நான்கு பூதங்களையும் முறையே சேர்க்க |
| பின்னே வானுதி தூல பூதம் என பிறக்கும் எனவே பெயர்த்து உரைத்தான் | } | பின்னர் ஆகாய முதலிய தூல பூதமென்று சொல்லும்படி யுண்டாமென்று கூறி பின்னருங் கூறுவாருயினர். 38 |

(அ – கை) பஞ்சீ கரணத்தின் பின்பு செய்யுஞ் சிருஷ்டியைக் கூறுகின்ருர்)

அறியாமை வடிவா யுள்ள புவனங்க ளமைத்துப் பின்பு
பிறியாத கன்மந் தன்னின் வசத்தினு லுயிர்கட் கெல்லாம்
செறிவாய கால பாக மானபி னீசன் ருனே
பிறிவாகு நான்கு யோனி பிறந்திடும் வகையே செய்யும் 39

(இ - ள்)

| | |
|---|---|
| ஈசன் தானே பின்பு | காரணரூப பிரஹ்மமே பஞ்சீகரணஞ்செய்த பின்னர் |
| அறியாமைவடிவாய் உள்ள புவனங்கள் அமைத்து | (அஞ்ஞானத்தின் காரியமாகலின்) அறியாமையே வடிவமாயிருக்கின்ற பிரம்மாண்ட புவனங்களைச் சிருஷ்டித்து |
| செறிவாய காலபரி பாகம் ஆனபின் உயிர் கட்கு எல்லாம் | நெருங்கிய கால பரிபாகத்தின் பின்னர் ஜீவர்களனைவர்க்கும் |
| பிரியாத கன்மம் தன்னின் வசத்தினுல் நான்கு பிறிவு ஆகும் யோனி | *அநுபவித்தாலன்றி நீங்காத கர்ம வசத்தால் நாலு பிரகாரமான சரீரங்கள் |
| பிறந்திடும் வகையே செய்யும் | உண்டாம் வண்ணமே சிருஷ்டிப்பான் |

(அ - கை) அந்தத் தேவதை இந்த மூன்று தேவதைகளையும் சீவான்மா சொரூபத்தாற் புகுந்து நாம ரூபங்களைச் செய்தது என்ற சுருதியின் பொருளைக் கூறுகின்ருர்.)

ஈசனும் இறைவ னுைத்த வறிவினு லெங்கு மாகிப்
பேசிடும் நாம ரூப முன்புபோ லுண்டாய்ப் பேணும்
மாசிலா சகத்துத் தானே யுளதுபோ லசைந்திட் டாலும்
ஈசனை யொழிய வேறு நிற்பதொன் றில்லை யென்றும் 40

* மனோ வாக்கு காயங்களால் செய்த கிரியையினுல் அதிஷ்டம் வாசனையென்று இரண்டு முண்டாம். அதிஷ்டம் பலன் கொடுக்கும். ஈசுவரனிடத்திலும். வாசனை பலன் அனுபவிக்கும் சீவனிடத்திலும், சேர்வதாம். அவ் வதிஷ்டமாகிய கர்ம பலமானது அனுகூலத்தை அடையவும் பிரதிகூலத்தை நீக்கவும், பிராயச் சித்தம் செய்தல் அல்லது ஆத்மஞானத்தை அடைதல் இல்லையெனில் அனுபவியாமல் நீங்கா தென்பதாம்.

(இ – ள்)

| | |
|---|---|
| ஈசனும் இறைவன் எங்கும் ஒத்த அறிவி னுல் ஆகி | ஜகத் காரணபிரஹ்மம் (ஜலதரங்க புற்புதாதிகளில் சூரியப் பிரதிபிம்பம் போல) சர்வ உபாதிகளிலும் சின் மாத்திர ரூபத்தால் பிரவேசித்து |
| பேசிடும் நாம ரூபம் முன்பு போல் உண் டாய்ப் பேணும் | பேதமாகச் சொல்லா நின்ற நாம ரூபங்களைப் பூர்வ கற்பம்போல சிருஷ்டி செய்பவர். |
| ஆசிலாத சகத்துத் தானே உளது போல் அசைந்திட்டாலும் | பூதகாரியமான குற்றமற்ற ஜகத் தானது சத்தியம்போல் தோற்றி னுலும் |
| ஈசனை ஒழிய வேறு ஒன்றும் என்றும் நிற் பது இல்லை | காரண சூட்சும பூதவிசிட்டனுக்குப் பின்னமாக யாதொன்றும் எக் காலத்துமில்லை |

[ வி – ரை ] ஈதொன்றும் இல்லை என்றும் என்பது மண்முதலிய திருஷ்டாந்தங்களால் பூர்வம் காரியப் பிரபஞ் சம் காரணனன்யமென்று கூறியதை மீண்டும் திடஞ் செய் யத் தக்கதாக திரிவித்கிருதபூதகாரியப் பிரபஞ்சத்திற்கு அதிரிவித்கிருத காரணபூத தேயு அப்பு அன்ன மாத்திரத் வம் அக்கினி ஆதித்யாதி உதாரணங்களால் சுருதியில் தரி சிப்பிக்கப்படுகிறது. இப் பஞ்சீகிருத காரிய சர்வஜகத்தும் பரமார்த்தம்போல தோன்றினுலும் காரண சூட்சும பூத வியதிரேகமாக (அன்னிய) இல்லையென்பதாம்.]

(அ – கை) அது எப்படியென்னிற் கூறுகின்ருர்.

அனலினிற் சிவந்த மேனி யானதவ் வொளியே யாகும்
அனல்வயின் வெண்மை யப்பாங் கருமைபூ மியின்றன் கூறும்
எனவிவை மூன்று மின்றி யீண்டன லென்ப தில்லை
அனலெனும் விகாரம் வார்த்தை யாவதே யன்றி யில்லை. 41

(இ – ள்)

| | |
|---|---|
| அனலினில் சிவந்த மேனி ஆனது அவ் வொளியே ஆகும் | (திரிவிர்க்கிருத பூதகாரியமான) அக்கினியிடத்துள்ள (லோகித சுக் கில கிருஷ்ண மென்னும் மூன்று வருணங்களுள்) சிவப்பு வருண மானது (அதிரிவிர்க்கிருத பூத மான) அக்கினியினதேயாம் |
| அனல் வயின் வெண்மை அப்பாம் | அவ்வக்கினியிடத்துள்ள சுக்கில (வெண்ணிற) மானது அதிரி விர்க் கிருத அப்புவினதாம் |

| | |
|---|---|
| கருமை பூமியின்தன் கூறும் | அவ்வக்கினியிடத்துள்ள கிருஷ்ண (கருப்பு) வர்ண மானது அதிரி விர்க்கிருத பிருதிவியினதாம் |

[இந்த வருணங்களுக்கு அன்னியதீயத்வமே சுபாவ மாயினும் அக்கினியென்னும் தருமி ஏன் சித்திக்க மாட்டாது எனிற் கூறுகின்றார்.]

| | |
|---|---|
| என இவை மூன்றும் அன்றி ஈண்டு அனல் என்பது இல்லை | லோகித (சிவப்பு) சுக்கில கிருஷ்ண மெனக் கூறிய இவை மூன்றினும் பின்னமாக இவ்விடத்தில் அக்கினி யென்று ஓர் பொருளில்லை. |

[தாகபாகாதி சமர்த்தமாக அநுபவிக்கப்படுகிற அக் கினி பதார்த்த மானது பேதத்திரய,பின்னமாயில்லையென்று எங்ஙனம் நிஷேதிக்கக் கூடு மெனிற் கூறுகின்றார்]

| | |
|---|---|
| அனல் எனும் விகாரம் வார்த்தை ஆவதே அன்றி இல்லை | அக்கினி யென்று கூறப்பட்ட காரிய மானது சொல்மாத்திர மாமே யன்றி காரண பின்னமாக இல்லை |

41

(அ – கை) ஆதித்தன் சந்திரன் மின்னல்கள் அம் மூன்று வருணங்களைக் காட்டிலும் வேறு காணுததனுல் சூட் சும பூதத்தைத் தவிர இல்லையென்று இரண்டு செய்யுளால் கூறுகின்றார்.

ஆதித்தனி ரத்த வன்ன மானதவ் வொளியே யாகும்
ஆதித்த னிடத்து வெண்மை யப்பின தாகு நின்று
பேதித்த கறுப்புப் பூமி யுடையதிம் மூன்று மன்றி
ஆதித்த னென்று வேறிங் கில்லையென்றறிமினென்றும். 42

(இ – ள்)

| | |
|---|---|
| ஆதித்தன் இரத்தவன் னம் ஆனது அவ் வொளியே ஆகும் | திரிவிர்க்கிருத பூதகாரியமான சூரியனிடத்திலுள்ள லோகித வர்ணமானது அதிரிவிர்க்கிருத பூதமான அக்கினியினதேயாம் |
| ஆதித்தன் இடத்து வெண்மை அப்பினது ஆகும் | சூரியனிடத்துள்ள சுக்கிலவர்ண மானது அதிரிவிர்க்கிருத பூதமான அப்புவினதேயாம் |

| | |
|---|---|
| நின்று பேதித்த கறுப்பு பூமி உடையது | சூரியனிடத்துள்ள சுக்கில லோகிதங்களினின்றும் பின்னமான கிருஷ்ணமானது அதிரிவிர்க்கிருத பூதமான பிருதிவியினதேயாம் |
| இம்மூன்றும் அன்றி ஆதித்தன் என்று | லோகித சுக்கில கிருஷ்ண மென்னுமிம்மூன்றுமே யல்லாமற் சூரியனென்று ஓர் வஸ்து |
| வேறு இங்கு என்றும் இல்லைஎன்று அறிமின் | பின்னமாக ஈண்டு எக்காலத்துமின்றென்று அறியுங்கள். 42 |

அறிவொடு விவேக மில்லா தாதலா லவர்க ளாலே
பிறிதர விரவீ யென்று பேசிடப் பட்ட தென்றும்
அறிகனல் பிருது வீநீ ரானவிம் மூன்று மன்றிப்
பிறிதுசந் திரனை மின்னைப் பேசிடற் பிழையே யன்றே. 43

(இ - ள்)

| | |
|---|---|
| ஆதலால் விவேக அறிவு இல்லாத அவர்களாலே | ஆகையினால் விவேக ஞான மில்லாத பிராந்தர்களாலே |
| பிறிதர இரவி என்று பேசிடப்பட்டது | பின்னமாக சூரியனென்று சொல்லப்பட்டது |
| அறிகனல் பிருதுவி நீர் ஆன இம் மூன்றும் அன்றி | காரண ரூபமாக அறியா நின்ற அக்கினி பூமி யப்புவென்ற விம்மூன்று மன்றி |
| சந்திரனை மின்னை பிறிது பேசிடல் என்றும் பிழையே | சந்திரனையும் மின்னலையும் பின்னமாகக் கூறுதல் எக்காலத்திலும் குற்றமே (ஓடு. இசைநிறை. அன்று, ஏ. அசைகள்) 43 |

[அம்மூன்று பூதங்களின் உருவமே மற்ற விஷயங்களுமென்ற சுருதியின் பொருளைக் கூறுகிறார்]

பூதம் புவனம் சுவர்வே றுகுடம் போலும் பொருளா யுளவா தலெலாம்
பேதம் பிரம மொழிய விலையாற் பேர்வின் றிடநின் றதுதா னதுவே
யோதுஞ் சனனம் பலவா தனையா லுடலம்முதலா கியவெளி யினிலே
பேதம் படரா னெனவே யறியும் பெயரா மயலா யிடுமெங் கணுமே. 44

(இ - ள்)

| | |
|---|---|
| பூதம் புவனம் சுவர் வேறு குடம்போலும் பொருள் ஆய் உள ஆதல் | பூதங்கள் புவனங்கள் குட்டியங்களிவற்றின் பின்னமான கடம் போன்ற பதார்த்தங்களாயுள்ள தாகிய |
| பேதம் எலாம் பிரமம் ஒழிய இலே | பேத மனைத்தும் பிரம்ம பின்னமாக இல்லை |
| அதுவே பேர்வு இன்றிட நின்றது | அப்பிரஹ்மமே நீக்கமின்றி நிலைத்திருக்கின்றது |

[பிரஹ்மமானது பரமார்த்தமாயில் தத்துவமசி யென்று அவ்வடிவத் தன்மையால் பின் உபதேசிக்கிற ஜீவனும் பரமார்த்தமாம் அந்த ஏக விஷயமான அகம் பிரத்யயமானது அசத்திய தேகாதிகளில் நான் மநுஷியன் என்று எப்படி யுண்டாகலாம் என்று சங்கித்துக் கூறுகின்ருர்]

| | |
|---|---|
| ஓதும் பல சனன வாதனையால் | கூரு நின்ற அநேக ஜன்ம சமஸ்காரத்தால் |
| உடலம் முதலாகிய வெளிதனிலே | தேகேந்திரியாதி திரிசியங்களிலே |
| பேதம் பட நான் என அறியும் | பின்னமாக நானென்றறிகின்ற |
| பெயராமயல் எங்கணும் ஆயிடும் | நீங்காத மயக்கமானது யாண்டு முளதாம். |

(ஆல். தான். ஏ. அசைகள்) 44

(அ - கை) "புஜித்த அன்னமானது)) என்றுதொடங்கி)) தயிரில் நின்றும் சௌமியனே)) என்று முடிந்த சுருதியினுல் மனம் வாக்கு பிராணன் மாம்சம் இரத்தம் மஜ்ஜை முதலிய சரீரமானது ஜடமான பூதத் திரயங்களின் இவை மானபடியால் ஜடமாகுமது சைதன்ய கோசரமாகிய காரிய பிரத்தியயத்திற்கு விஷயமாகாது எனக் கூறப்பட்டிருக் அகம் கின்றது அதனைச் சங்கிரகித்துக் கூறுகின்ருர்]

ஊனிந் திரியா திகளா னவெலா மோருங் கணிஞ னெனலா
வானம் முதலா கியபூ தமதால் வரவின் படியே வளர்வும் கியிடா
ஆனம் மணிஞ லமையுஞ் சுவர்தா மாகும் மணுநீர் முளதால்
ஊனுங் கரணங் களுமுண் பவையா லுளதாய் வளரும் மெனவே கொடளித் திடல்போல் யுணர்மின். 45

(இ – ள்)

| | |
|---|---|
| ஊன் இந்திரியாதிகள் ஆன எலாம் ஓரும் கணில் நான் எனல் ஆகி இடா | தேகேந்திரியாதிகளனைத்தும் விசார திருஷ்டியில் அகம் விருத்திக்கு விஷயமாகாது |
| வானம் முதலாகிய பூதம் அதால் வரவின் படியே வளர்வும் உளதால் | காரண மாகிய ஆகாய முதலிய பூதங்களால் உற்பவித்த வண்ணமே இரக்ஷிப்பும் உண்டாதலால் |

[தேகாதிகளுக்கு விருத்தியானது அன்னாதிகளால் காணப்படுகின்றது அதனாலேயே அதனுடைய வுற்பத்தியும் அதனாலேயே என்னும் இதில் திருஷ்டாந்தம் கூறுகின்றார்]

| | |
|---|---|
| ஆன அம்மண்ணில் அமையும் சுவர் தான் | காரணமான நீர் மண்களால் அமைந்த சுவரானது |
| ஆகும் மணும் நீர் கொடுஅளித்தல்போல் | காரண மாகிய மண் ஜலங்களைக் கொண்டுஇரக்ஷிக்கப்படுவது போல் |
| ஊனும் கரணங் களும் உண்பவையால் உளதாய் வளரும் | தேகேந்திரியங்களும் (தந்தை தாய் இருவரும்) புசித்த நெய் நீர் அன்னமான பூத காரியங்களால் உண்டாய் (அவைகளின் தூல மத்திம சூட்சுமாம்சங்களால்) விருத்தியாகும் |

எனவே உணர்மின் – என்பதாக நீங்களறியுங்கள். 45

(அ – கை) பிரதிபாதித்த சுருதியின் பலிதார்த்தத்தைக் கூறுகின்றார்.

ஊனு திகளா யதிரட் சியிலே யொழியா வணநா னெனதென்
றுகொடே
நானே நுகர்வே னெவையென் றுணரு நானு வறிவா னவை
விட் டிவையிற்
றானே முதல்கண் டிவையித் தனையிற் சலியா வறிவா கியதன்
மையிலே
நானே யதுவென் றிடுநல் லறிவோர் நாடார் பிறிதென் பதுநா
டொறுமே. 46

| | |
|---|---|
| ஊன் ஆதிகள் ஆய திரட்சி யிலே ஒழியா வணம் நான் எனது என்று கொடே | தேகேந்திரியாதி சங்காதங்களில் நீங்காத வண்ணம் யானென தென்று அபிமானித்துக் கொண்டு |
| எவை(யும்) நானே நுகர்வேன் என்று உணரும் | அச் சங்காத போகங்களனைத்தும் நானே அனுபவிக்கின்றேனென்ற றிகின்ற |
| நா நா அறிவானவை விட்டு | பேதரூப அபிமான விருத்தியை (நினைவை) விடுத்து |
| இவையில் தானே முதல் கண்டு | இச்சங்காதங்களினுள்ளே இவற்றிற் கதிஷ்டானமான ஆன் மாவை தரிசித்து |
| இவை இத்தனையில் சலியா அறிவு ஆகிய தன்மையிலே | சலன ரூபமான இச்சங்காதங்களுள் சலனமின்றியிருக்கின்ற சாக்ஷி ஆகியசச்சிதானந்தசுபாவத்தினுல் |
| அது நானே என்றிடு நல்லறிவோர் பிறிது என்பது நாள்தொறும் நாடார் | அந்தப் பிரஹ்மசைதன்யமான சாக்ஷியேநான் என்றறிந்த ஞான வான்கள் தேகேந்திரியாதிகளில் அகம்புத்தியை எக்காலத்திலும் வையார்கள் (ஏ – அசை) |

(அ – கை) தேஜோபன்ன (தீ, நீர், மண்) விலக்ஷணங் களாகக் காணப்படுகின்ற தேகேந்திரியமன பிராணுதிகட்கு பூத காரியத்வம் எங்ஙனம் கூடுமெனச் சங்கிப்பாயாகில் எப் படி தயிரில்விலக்ஷணமான கிருதத்திற்கு நெய்க்கு) தயிரின் காரியத்வம் என்று சுருதியில் உதாகரிக்கப் பட்டிருக்கின்றது அதை ஸ்பஷ்டமாகக் கூறுகின்ருர்.

கடையப்படு தயிரிற்றிர ணெய்போன்மன முதலாம்
இடையிற்செயு மியல்வேறிலே யுளபூதம இடையே
அடையத்திர ளுருவிற்செலு மதிவிட்டறி வுருவாம்
அடையப்பிறி திலமெய்ப்பொரு ளதுதானென அறிவீர். 47

(இ – ள்)

| | |
|---|---|
| கடையப்படு தயிரில் திரள் நெய்போல் | மதனஞ் செய்கின்ற ததியினிடத் தில் திரண்ட கிருதத்தைப்போல் |

| | |
|---|---|
| உள பூதமதிடையே மன முதலாம் | காரணமாயுள்ள தேயு அப்பு அன்னங்களினின்றும் ஜாடராக்கினி ஜெனிதமான பாகவிசேஷத்தால் தேகேந்திரியபிராணமனே பரிணுமமுண்டாம் |
| இடையில் செயும் இயல் வேறு இலே | மத்தியில் இவைகளை இரட்சிக்கும் காரணம் வேறென்றில்லை |
| அடையத் திரள் உருவில் செலும் மதிவிட்டு | முற்கூறிய பூத காரியமான தேகேந்திரியாகி சர்வ சங்காதங்களிலுள்ள அபிமான விருத்தியை விடுத்து |
| அடைய அறி உருவு ஆம்பிறிது இல | சர்வமும் பிரஹ்மமெனவும் பின்னமின்றெனவும் |
| மெய்ப் பொருள் அது தான் என அறிவீர் | சத்தியமான வஸ்துவாகிய அதுவே தனது வடிவெனவுமறியுங்கள். |

(அ – கை) வாக்குப் பிராணன்களாகிய காரியங்களுக்கு பௌதீகத்வம் பவிக் (உண்டா) கட்டும் மனம் நித்தியமென்றும் வைசேடிகர்கள் கூறுவதனுல் அது எங்ஙனம் பௌதீகமாகும் என்னும் சுவேதகேதுவென்னும் புத்திரனது சங்கைக்குப் உத்தாலகரென்னும் பிதாவினது உத்தரம் (சோடச 16 கலை) என்பது முதலியவை சோடசதின பரியந்தம் அன்னமுண்ணுதபடியால் மனஞ்சுருங்கியதனுல் அப்பியசித்த வேதங்கள் விளங்காமல் பின்பு அன்னமுண்பதினுல் அதன் விருத்தியுண்டாய் அவை விளங்கியதால் மனம் அன்னமயம் என்று உபதேசித்த பிதாவின் தார்ப்பரியத்தைச் சங்கிரகித்து நான்கு செய்யுள்களால் உபதேசிக்கின்ருர்.

அன்னத்தா னிறைவி லானுக் கறிவுதோன் ருமை யாலும்
அன்னகாரியமே புத்தி யாதனிச் சயம தானுல்
அன்னத்தா லுண்டா மந்தப் புத்தியைத் தவிர்ந்து நாளும்
உன்னுவா னெங்குங் காணு மறிவுரா னென்றெப் போதும் 48

(இ – ள்)

| | |
|---|---|
| அன்னத்தால் நிறைவு இலானுக்கு | பதினறு நாள் பரியந்தம் போஜனம் செய்யா மலிருந்த சுவேத கேதுவுக்கு |

| | |
|---|---|
| அறிவு தோன்ருமை யானும் | பூர்வம் அத்தியயனஞ் செய்த வேதங்களின் ஞானம் விளங்காமை யானும் போஜனம் செய்தபின் விளங்கினமையாலும் |
| புத்தி அன்ன காரியமே ஆதல் நிச்சயம் ஆனல் | மனம் அன்னத்தின் காரியமென் பது துணிபு ஆதலால் |
| அன்னத்தால் உண் டாம் அந்தப் புத்தி யைத் தவிர்ந்து | அன்ன காரிய மாகிய மனத்தின் கண் உள்ள அகம் புத்தியை விடுத்து |
| எங்கும காணும் அறிவு தான் என்று நாளும் எப்போதும் உன்னு வான் | சர்வ சாக்ஷியே நானென்றுநெடுங் காலம் நிரந்தரம் (நேசத்தோடு) அநுசந்திக்கக்கடவன். (அது பகு திப்பொருள் விகுதி) 48 |

தேகேந் திரியா திகளாகுந் திரட்சி யினைநா னெனதென்றே
போகா நின்ற புந்தியினை விட்டுத் தானு யிருந்துளதாய்
ஆகா தெல்லா மாகியிடு மறிவாஞ் சித்தி லியாதொருகால்
ஏகா வொன்ருய் அடங்கியிடு மவன்றனியல்பை யியம்பிடுவாம். 49

(இ - ள்)

| | |
|---|---|
| தேகேந்திரிய ஆதிகள் ஆகும் திரட்சி யினை | தனு கரணுதிகளாகிய சங்காத (கூட்ட) த்தில் |
| நான் எனது என்றே - | யானெனதென்று அபிமானித்து |
| போகா நின்ற புத்தி யினை விட்டு | விஷயஞ் செய்வதாகச் சொல்லா நின்ற புத்திவிருத்தியினை விடுத்து |
| தானய் இருந்து உளதாய் | தான் மாத்திர மிருப்பாய் |
| ஆகாது எல்லாம் ஆகி யிடும் அறிவாம் சித்தில் | பரமார்த்தத்தில் தானொன்று மாகா மல் விவகாரத்தில் எல்லாமாயிருக் கின்ற சேதன ஆன்மாவின் கண் |
| யாதொருகால் ஏகா ஒன்ருய் அடங்கி இடும் | எவன் யாதொரு காலத்திற்சென்று ஏகமாய் நிலைத்திருப்பானே (தாதான்மியமாய் பொருந்திலய மடைந்திருப்பானே) |
| அவன் தன் இயல்பை இயம்பிடுவாம் | அவனது சுபாவத்தைக் கூறுவாம். 49 |

அப்போது சுகதுக் கங்கள் ஆதியாய்ச் சொல்லப் பட்டிங்
கெய்ப்பாய விகார மெல்லாம் அறியாது தன்னைத் தானே
மெய்ப்பாடா யறியா நின்றேன் விளங்கவவ் விடத்தே காணுந்
தப்பாது தானாய் நின்ற சுகத்தினைத் தடையொன் றின்றி. 50

(இ – ள்)

| | |
|---|---|
| அப்போது சுகதுக்கங்கள் ஆதியாம் சொல்லப்பட்டு | சர்வ சாக்ஷியாய் நிலைத்தவப்போது சுகதுக்கங்களாதியாகக் கூறப்பட்ட |
| இங்கு எய்ப்பு ஆய விகாரம் எல்லாம் அறியாது | இவ்விடத்து துன்ப வேதுவாயுள்ளமனோ வேறுபாடுகளனைத்தும் ஸ்மரியாமல் (நினைத்தறியாமல்) |
| தன்னைத் தானே மெய்ப்பாடாய் அறியா நின்றேன் | (எவ்விடத்தில்) ஆன்மாவை சுயமே உண்மையாக சாக்ஷாத்கரித்தனனே |
| அவ்விடத்தே தப்பாது தானாய் நின்ற சுகத்தினை | அவ்விடத்திலேயே குற்றமின்றித் தனது வடிவமாயுள்ளதோ அவ்வானந்தத்தினை |
| தடை ஒன்று இன்றி விளங்கக் காணும் | பிரதிபந்தங்களொன்றுமின்றி நன்றாக அனுபவிப்பவன் ஆகின்றான் 50 |

ஆதலா லறிவுள் ளோர்கள் அழிந்திடு முடலே யாதி
சேர்தரு புத்தி தன்னைச் செலவிட்டுத் தெளியும் வண்ணம்
தீதிலா தெவையுங் காணுந் திகழ்தரு சித்தின் கண்ணே
யேதிலா மதியை நானென் றிடுமின்க ளிசைந்தெப் போதும்

(இ – ள்)

| | |
|---|---|
| ஆதலால் அறிவுள்ளோர்கள் | ஆன்ம நிஷ்டை சொரூப சுகானுபவ ஏதுவாதலால் அறிஞர்களே |
| அழிந்திடும் உடலே ஆதி | அழியத்தக்கதான தேகாதி சங்காதங்களில் |
| சேர்தரு புத்தி தன்னைச் செலவிட்டு | (யானெனதென்று) பொருந்திய அபிமான விருத்தியை விடுத்து |
| தீது இலாது எவையும் காணும் திகழ்தரு சித்தின் கண்ணே | தோஷமற்ற சர்வசாக்ஷியாய் விளங்கா நின்ற சிதாத்மாவினிடத்தே |

| | |
|---|---|
| தெளியும் வண்ணம் | அவ்வாத்மவஸ்து அபரோக்ஷமாக விளங்கும்படி |
| ஏதிலாமதியை எப்போதும் நானென்று இசைந்திடும் மின்கள் | குற்றமற்ற புத்திவிருத்தியினைச் சதா காலமும் நானென்று சேர்த்து வையுங்கள் (அநுசந்தியுங்களென்பதாம்) |

(அ – கை) அத்துவிதபிரஹ்மமொன்றே யுள்ளதென்று பிரதிஞ்ஞை செய்து தேஜோபன்னம் (தீ, நீர், மண்) என்னும் பூதத்திரயங்களும் அவைகளினின்று முற்பின்னமாய பௌதிகங்களுமான போக்கிய வஸ்துவும் போகாயதனமான சரீரங்களும் போகோபகரணங்களான இந்திரியங்களும் அதன் காரியமானது பற்றி வாக்கை யாரம்பமாகவுடைய தன்மையால் அதைப் பிரதியோகியாகவுடைய பேதமில்லாத தனுல் அத்வைதப் பிரபிக்ஞா பங்கமில்லையென்னும் அத்தியாயத்தின் பூர்வபாக அர்த்தம் வியாக்யானம் செய்யப்பட்டது. அங்ஙனமாயினும் புஜிக்கின்ற ஆன்மாக்கள் நித்தியர்களாதலால் அதைப் பிரதியோகியாகவுடைய பேதத்தால் அத்வைத பிரதிக்ஞா பங்கம் வருமென்ற சங்கையை நிராகரிப்பதற்கு உத்திரபாகமானது)) உத்தால கோஹாருணி)) என்றது முதலான சுருதிகளால் போக்கிய வஸ்து ஆயினும் அதைப் பிரதியோகியாகவுடைய பேதத்தால் அத்வைதப் பிரதிக்ஞாபங்கம் நேரிடாது அவன் பிரஹ்ம சொரூபமானது பற்றி பேதமில்லாததனுல் என்று கூறப்பட்டது)) இவன் சூட்சுமன், இவன் மயமே இவ்வுலகனைத்தும் அது சத்தியம் அவனே ஆன்மா, அது நீயாகின்ருய் சுவேதகேது)) என்பவைகளாம் அவற்றின் பொருளைத் தெரியக் கூறுகின்ருர்.]

காண்பவன் ருனே யாகுங் காண்பவை யென்ற யாவும்
காண்பவன் றன்னில் வேருென் றின்மையிற் றனேயே காணும்
பூண்பதொன் றின்றி நின்ற பூரண மதுநீ யென்ற
மாண்டவார்த் தைக்கு முள்ள பொருளிது மற்ருென் றில்லை. 52

(இ – ள்)

| | |
|---|---|
| காண்பவை என்ற யாவும் காண்பவன் தானே யாகும் | திரிசியங்களனைத்தும் திருக்கு ரூபமே அது சத்தியம் |
| காண்பவன் தன்னில் வேறு ஒன்றும் இன்மையால் | திருஷ்டாவாகிய புருஷன் தன்னிலும் பின்னமாக யாதொரு சத்திய பதார்த்தமு மில்லாததனால் |
| தனையே காணும் | (யாண்டும்) தன்னையே அறியா நிற்பன் (சொப்பனம் போல) |
| நீ என்ற மாண்ட வார்த்தைக்கும் உள்ள பொருள் இது | துவமென்ற மாக்ஷிமை பொருந்திய வாசகத்தினர்த்தமாயுள்ள இந்த ஜீவனானவன் |
| பூண்பது ஒன்று இன்றி நின்ற பூரணம் அது மற்று ஒன்றும் இல்லை | அசங்கவடிவமா யிருக்கின்ற பரிபூரணப் பிரஹ்மமே வேறொன்றாக இல்லையாம். (உம்மை பதபூர்த்தி) 52 |

(அ – கை) துவம் சப்தம் பராக்கர்த்த வாசகமாயும் அகம் சப்தம் பிரத்யக்கர்த்த வாசகமாயும் பரஸ்பரம் ஹ்ரு. ஸ்வ தீர்க்க (குறில்நெடில்) சப்தங்கள் போல விருத்தங் களையுடையவை அகம் பிரஹ்மாஸ்மி பிரத்யக்கு பிரஹ்மத் வம் மற்றொரு சுருதியில் கூறியிருக்க ஈண்டு தத்துவ மசி யென்று பராக் வஸ்துவிற்குப் பிரஹ்மத்வம் எங்ஙனங் கூறக் கூடும் என்று சங்கித்துச் சொல்லுகின்றார்.

நீயென்கின்ற வார்த்தைக்குப் பொருளா யென்று நிற்பதுவே
நானென்கின்ற வாசகத்தின் பொருளாய் நின்று நாடுவது
நானென்கின்ற வாசகத்தின் பொருளாய் நாடி நிற்பதுவே
நீயென்கின்ற வாசகத்தி னிற்கும் பொருளு நிலைபெறவே. 53

(இ – ள்)

| | |
|---|---|
| நீ என்கின்ற வார்த்தைக்குப் பொருளாய் என்றும் நிற்பதுவே | துவம் சப்தத்தின் அர்த்த ரூபமாய் நாளுமிருப்பதெதுவோ அதுவே |
| நான் என்கின்ற வாசகத்தின் பொருளாய் நின்று நாடுவது | அகம் சப்தத்தின் அர்த்த ரூபமாய் அவஸ்தாதிரயங்களிலு மிருந்தறிவது |

| | |
|---|---|
| நான் என்கின்ற வாசகத்தின் பொருளாய் நாடி நிற்பதுவே | அகம் சப்தத்தின் அர்த்த ரூபமாய் அவஸ்தா திரயங்களையும் அறிவதெதுவோ அதுவே |
| நீ என்கின்ற வாசகத்தில் நிலைபெறவே நிற்கும் பொருள் | துவம் சப்தத்திலும் நிலைபெற்று நிற்கும் வஸ்துவாம். (ஏ – அசை) 53 |

(அ – கை) இந்தப் பிரகாரம் தத்துவமசி அகம் பிரஹ்மாஸ்மி என்பவை பரஸ்பரம் விரோதமுடைய தாகாதேனும் துவம் அகம் சப்தங்களில் அஞ்ஞனாய் சம்சாரியாயுள்ள ஜீவன் பிரதி பாதிக்கப்படுகின்றான், ஆதலால் அந்த ஜீவனுக்கு ஈசுவரனோடு எங்ஙனம் தாதான்மியம் கூடும் என்னும் சங்கையைச் சொல்கின்றார்.

சொல்லிய விரண்டி னாலும் சுட்டிடப் பட்டு மேலா
யெல்லையிற் பொருள்க ளான தியாவுக்கு முன்னே தோன்றி
நல்லதோ ரறிவாயுள்ள திதொன்ற தென்னும் வார்த்தைக்
கெல்லையாம் பொருளுந் தானே யெனுமிடம் பார்க்க
வேண்டாம். 54

(இ – ள்)

| | |
|---|---|
| சொல்லிய இரண்டினாலும் சுட்டிடப் பட்டு | துவம் அகம் என்று கூறிய இரண்டு பதங்களாலும் இலக்ஷிக்கப் பட்டு |
| மேல் ஆய் எல்லை இல் பொருள்கள் ஆனது இயாவுக்கும் முன்னே தோன்றி | சர்வோத்திருஷ்டமாய் அளவற்ற பதார்த்தங்களனைத்திற்கும் முதலில் விளங்குவதாய் |
| நல்லதோர் அறிவு ஆய் உள்ளது யாது ஒன்றுதானே | சுத்த சித் ரூபமாயுள்ளது எதுவோ அவ்வாத்மாவே |
| அது எனும் வார்த்தைக்கும் எல்லை ஆம் பொருள் | அது வென்னும் சப்தத்தின் முடிவான இலக்ஷியார்த்தமாம் |
| எனும் இடம் பார்க்க வேண்டாம் | என்று சுருதிகள் கூறாநிற்கும் இதில் விசாரம் வேண்டாம். 54 |

(அ – கை) சிதாம்சத்தில் தாதான்மிய விரோதமில்லா விடினும் துவம் அகம் சப்தவாச்சியத்திற் தற்பத வாச்சியர்த்

த்தோடு தாதான்மிய விரோதமுளதெனில் அது சத்தியம் ஆயினும் இந்தஸ்தலத்தில் அவ்வித வாச்சியார்த்தங்கட்கும் ஏகத்துவம் சொல்லப்படவில்லை யென்று கூறுகின்றார்.

உடம்பா திகளில் வேருகி நீநா னென்னு முரையாலே
திடம்பா டாகச் சொலுமிந்தச் சித்தா யுள்ள பொருளினையே
அடங்கா ததுவென் றிடும்வார்த்தை யிதினின் றுண்டாய்த் தெனச்சுருதி
தொடர்ந்தே தத்தொ மசியென்றே சொல்லு கின்ற தெனவுரைத்தான். 55

(இ – ள்)

| | |
|---|---|
| நீ நான் என்னும் உரையாலே திடம் பாடாகச் சொல்லும் | துவம் அகம் சப்தங்களால் திடமாகக் கூரு நிற்பது |
| உடம்பாதிகளில் வேருகி | தேகாதிகளில் பின்னமாயுள்ள |
| இந்தச் சத்தாய் உள்ள பொருளினையே | இந்தச் சேதன வடிவமான கூடஸ்தனையே என்று கொண்டு |
| இதில் நின்று | இந்தப் பிரத்யகாத்மாவை முன்னிட்டு |
| அடங்காத அது என் றிடும் வார்த்தை உண் டாய்த்து என | அபரிச்சின்னமான தது வென்னும் பதத்தெழுந்த தென்று (எண்ணி) |
| சுருதி தொடர்ந்தே தத்தொமசி என்று சொல்லுகின்றது என உரைத்தான் | சுருதிகள் முறையாக தத்துவமசி என்று தத் துவம் பதார்த்தங்கட்கு ஏகத்துவம் கூறுகின்றதன்றி துவம் அகம் சப்தவாச்சியமாகிய தேகாதிகளை முன்னிட்டு அபேதங் கூறவில்லையென்று பிரஹ்மதேவர் கூறினர். 55 |

(அ – கை) துவம் சப்தத்தால் சம்சாரித்துவம் முதலியவை கூருததற்குக் காரணங் கூறுகின்றார்.

தற்பதப் பொருளா யுள்ள வறிவொடே கூடு தற்கு
நிற்பதொன் றிலையாச் சொல்லப் பட்டகா யாதி விட்டு
மெய்ப்பட துரியத் தோடே யுடனுகி வேறி லாத
சிற்பொரு டனையே தத்தொ மசியெனச் செப்பு மன்றே. 56

(இ – ள்)

| | |
|---|---|
| தற்பதப் பொருள் ஆய் உள்ள அறிவு ஒடு கூடுதற்கு | (துவம் பதவாச்சியத்திலிருக்கும் கூடஸ்தன்) தற்பதத்தின் அர்த்த ரூபமாயுள்ள சைதன்யத்தோடு அபேதமாதற்கு |
| நிற்பது ஒன்று இலையாய்ச் சொல்லப் பட்ட காயாதி விட்டு | பொருத்த மில்லாததாய்க் கூறப் பட்ட தேகாதி விரோதம்சங்களை விடுத்து |
| மெய்ப்படதுரியத் தோடே உடன் ஆகி வேறு இலாத சிற் பொருள் தனையே | பரமார்த்தமாயுள்ள பிரஹ்மத் தோடு அபேதமாய் அவிரோத மான பிரத்யகான்மாவையே இலக்ஷியமாகக் கொண்டு |
| தத்தொமசி எனச் செப்பும் | சுருதியானது தத்துவமசியென்று ஐக்கியம் கூறும். 56 |

(அன்று. ஏ. அசைகள்)

(அ – கை) துவம் அகம் சப்தத்தினால் கூறப்பட்ட பொருளை தத் என்னும் சப்தார்த்திலும் பொருந்தும்படி கூறுகின்றார்.

அதுவென் றுரைசெய் பொருளா மதிலும்
நீயென் றுரைசெய் பொருளா மிதிலும்
மதிபண் ணிடவே றதுவா கியிடு
மறிவா திகள்கா ரணமன் றியிலே
எதுமொன் றுமிலா தவையா வையுமே
மிவையென் றிடுகே வலசித் தினையே
யதுநீ யெனுவாய் மொழியா மதனால்
அறியும் படிசொன் னதிவ்வா ரணமே. 57

(இ – ள்)

| | |
|---|---|
| அது என்று உரை செய்பொருள் ஆம் அதிலும் | தத்பதத்தினது வாக்கியார்த்த மாகிய அதனையும் |
| நீ என்று உரைசெய் பொருள் ஆம் இதிலும் | துவம் பதத்தினது வாக்கியார்த்த மாகிய இதனோடும் |
| மதி பண்ணிட | – அபேதமாக அறிவதற்கு |

| | |
|---|---|
| வேறது ஆகி இடும் அறிவாதிகள் காரணம் அன்றியிலே | விரோத தர்மங்களாயுள்ள சர்வஞ்ஞத்வ சர்வ காரணத்வாதியும் (கிஞ்சிங்கத்வ காரியத்வாதியுமாகிய மாயை அவித்தை) உபாதிகளை தர்மத்தோடு விடுத்து |
| ஏதும் ஒன்றும் இலாது | பாரமார்த்தமாக யாதொன்றுமாகாது |
| அவை இவை யாவையும் ஆம் என்றிடு கேவல சித்தினையே | விவகாரத்தில்பரோக்ஷ அபரோக்ஷமாகிய சர்வ வடிவமாகவு முள்ளது என்கின்ற சுத்த சேதனத்தையே இலக்ஷியமாகக் கொண்டு |
| அது நீ எனும் வாய்மொழி ஆம் அதனல் இவ்வாரணம் அறியும்படி சொன்னது | இச்சாந்தோக்கிய சுருதியானது தத்துவமசி எனும் மகாவாக்கியத்தால் தத்பத துவம் பதங்களின் அர்த்தாபேதத்தை அறியும் வண்ணம் கூறுகின்றது. 57 |

(ஏ - அசை)

(அ - கை) இங்ஙனம் தத் துவம் பதார்த்தங்களினது விருத்தாம்சங்களை பரிகரிக்குங்கால் வாக்கியார்த்தம் சம்பவிப்பதைத் தரிசிப்பிக்கின்ருர்.

தத்துவ மென்ற வார்த்தை யிரண்டுக்கும் பொருள தாகிச்
சித்துமெய் யாகி நின்ற திகழ்பரம் ஒன்ருந் தன்மை
தற்பரந் தன்னி ஞலே சித்திக்கு மென்ப தேயிங்
கப்படி வாக்கி யத்தி னருத்தமே யாகு மன்றே. 58

(இ - ள்)

| | |
|---|---|
| தத்துவம் என்ற வார்த்தை இரண்டுக்கும் பொருள தாகி | தத்துவ மென்னு மிருபதங்களின் இலக்ஷியார்த்த மாய் |
| சித்துமெய் ஆகிநின்ற திகழ்பரம் ஒன்று ஆம் தன்மை | சித்து ரூபமாய் விளங்கா நின்ற மேலான ஏகத்வமானது |
| தற்பரம் தன்னலே சித்திக்கும் என்பதே | பிரஹ்மத்தினது சுவாபமாகச் சித்திக்கு மென்பதுவே |
| இங்கு அப்படி வாக்கியத்தின் | ஈண்டு அந்த மகாவாக்கியத்தின் |

அர்த்தமே ஆகும் - பொருளாவதாம். 58
(அன்று. ஏ - அசைகள்)

(அ - கை) பரமார்த்தமாகப் பின்னனுயும் சம்சாரியாயும் இருக்கின்ற ஜீவனுக்கு ரசசம்பந்தத்தால் செம்பிற்குச் சுவர்ணத் தன்மை வருவது போல ஈசுவரானுக்கிரகத்தால் தாதான்மியம் சம்பவிக்கிறதனுல் அப்படிப்பட்ட அந்தத் தாதான்மியம் பரத்வம் வாக்கியத்துக்கு ஏன் இல்லையெனச் சங்கித்துக் கூறுகின்ருர்.

இப்படி யின்றி வேரு யிருந்துள பொருடா னீதொன்
றப்பொருள் வாக்கி யத்தின் அருத்தமன் ருகு மொன்ரு
மெய்ப்படு பொருளின் ஞான முளதாகா வாக்கி யத்தாற்
செப்பிடு வார்த்தை தன்னில் அறிவின்மை சிதைத்தல்
செய்யும். 58

(இ - ள்)

| | |
|---|---|
| இப்படி அன்றி வேருய் இருந்து உள பொருள்தான் யாது | முற்கூறிய வண்ணம் சுபாவ சித்தமாக ஏகத்வமா குவதே யன்றி வேறு பிரகாரத்தால் ஜீவப் பிரஹ்மங்களுக்குச் *சம்சர்க்கா ரூப மாயாவது விசிட்டைக்கிய ரூப மாயாவது சொல்லும் பொருள் யாதோ |
| அப்பொருள் வாக்கியத்தின் அர்த்தம் அன்ருகும் | அவ்வர்த்தம் மகா வாக்கியத்தின் அர்த்தமாக மாட்டாது |

---

* துவிதவாதிகள், மகாவாக்கியத்தை ததிவ துவம் அசியென்பது, தத்துவமசி யெனவும் இதன் பொருள் தத் (பரம்) இவ (போல) துவம் (நீ) அசி (ஆனுய்) (பரம்போல நீ யானுய் எனவும்) இவ் வாக்கியத்தில், இவ வென்னும் உவம உருபு தொக்கு நின்றதெனவும் சீவனுக்குப் பிரகிருதியின் குணங்களால் உண்டான சம்சாரதுக்கும் ஈசுவரபத்தியால் கர்மநிவர்த்தி வாயிலாக ஈசுவரனைப்போலிருப்பதாகிய முத்தியடைவதெனவும் கூறினர். விசிட்டாத்வைத வாதிகள் மகாவாக்கியத்தை தத் (தஸ்ய) துவம் (பாவ: அசியென்பதே தத்துவமசி எனவும் இதன் பொருள் தஸ்ய (பரத்தின்) பாவ: (தர்மமாக) அசி (ஆனுய்) பரத்தின் தர்மமாக ஆனுய் எனவும், இவ்வாக்கியத்திலுள்ள துவமென்னும் பதம் தருமத்தை விளக்கியதெனவும் பொருள் கொண்டுளர் விசிட்டம் விசேஷங்களோடு கூடியது அத்துவிதம் இரண்டற்று ஒன்ருயிருப்பது. ஒரு பொருள் தன் குணங்களோடு

[சொப்பிரகாச பிரஹ்மத்தினுடைய சொரூப பூதமான ஏகத்வமும் அவ்விதமென்று வாக்கியத்தால் போதிக்கப்படு மாகில் அதற்குச் சொப்பிரகாசத்துவ பங்கம் வருமென்று சங்கித்துக் கூறுகின்ருர்]

| | |
|---|---|
| மெய்ப்படு ஒன்ரும் பொருள் ஞானம் வாக்கியத்தால் உளது ஆகா | பரமார்த்தமான அத்வைதவஸ்துவின் ஏகத்துவ ஞானம் மகா வாக்கியத்தால் உண்டாக மாட்டாது |

[வாக்கியமானது ஏகத்துவ விஷயமான ஞானத்தையுண்டு பண்ணுது என்ருல் அப்போது அதற்கு நிஷ்பிரயோஜனத்தும் உண்டாகு மென்று சங்கித்துக் கூறுகின்ருர்]

| | |
|---|---|
| செப்பிடும் வார்த்தை | சொல்லா நின்ற மகா வாக்கியமானது |
| தன்னில் அறிவின்மை சிதைத்தல் செய்யும் | தன்னுலுண்டாகிய வித்தையினுல் அஞ்ஞானத்தை நிவர்த்தி செய்கின்றது. (ஆதலால் மகா வாக்கியத்திற்கு நிஷ்பிரயோஜனத்வமுண்டாகாது) 59 |

அறியா மையினை யழிவித்துக் கொண்டே யிந்த வாக்கியந்தான்
அறியா தொன்ரு மறிவினையுண் டாக்கா தென்று பேசுங்காற்
பிறியா வுண்மை யுருவாகுஞ் சித்தி னொளியைத் தவிர்த்
செறிவா யுண்மை யுருவாகுஞ் சித்தி னொளியைத் தவிர்த் தொன்ரும்
அறியா மையதொன் றெனவில்லை யாகு முண்மை யறியுங்கால். 60

(இ - ள்)

இந்த வாக்கியந்தான் - இம் மகா வாக்கிய மானது

| | |
|---|---|
| அறியாமையினை அழிவித்துக் கொண்டு | அஞ்ஞானத்தினை நாசஞ் செய்து கொண்டு |

சேர்ந்து ஒன்ருயிருப்பதுபோல ஈசுவரன் சீவன் பிரகிருதிகளாகிய விசேடங்களோடு சேர்ந்து ஒன்ருயிருப்பதென்னும் கொள்கை விசிட்டாத்வைத சித்தாந்தமாம் அத்வைதம் அகண்டம் நிர்குண நிர்விசேடம் எனவும் அதுவே சத்தாகிய ஆத்மா என்று கூறும் சுருதிகளுக்கு இவ்விரண்டுமே விரோதமென அறியவும் இதை விசேடமாய் அறிய விரும்புவோர் திருவாரூர் நா நா சீவவாதக் கட்டளையில் தத்துவ விவேசன நிருபகம் 97 முதல் 106 வரை வினு விடையில் காணவும்.

| | |
|---|---|
| பிறியாது ஒன்றும் அறிவினை உண்டாக்காது என்று பேசுங்கால் | அபேத ரூபமான ஏகத்துவத்தை விஷயமாக வுடைய ஞானத்தினை உண்டு பண்ணுது என்று கூறுமிடத்து |

[பிரமாணத்திற்கு விஷயமாகாததால் அதற்கு நரவிஷாணம் (மநுடக் கொம்பு) போல அசத்தியத்துவமுண்டாமென்னின்]

(மூலத்திலிருந்து மொழி பெயர்க்காமல் விட்டுப் போன 84 ஆம் சுலோகார்த்தம்) ஏகத்துவமானது சுயமே எப்போதும் விளங்குகின்றது அன்னியத்தாலில்லை ஆதலால் வாக்கியமானது ஏகத்துவ ஞானத்தை உண்டு பண்ணுது அஞ்ஞானத்தின் நிவர்த்தியை உண்டு பண்ணுகிறது)

(தாற்பரியம்)

(அன்னியத்தால் பிரகாசிக்கப் படுவதற்கே பிரமாணத்திற்கு விஷய மாகாத்தன்மை அசத்துவ நிமித்தமாம். கூறப்பட்ட ஏகத்துவமோ சொப்பிரகாச சித்தினும் அனன்ய தன்மையால் எப்போதும் விளங்குவதே ஆதலின் கூறப்பட்ட தோஷம் இல்லையென்பதாம்.)

[அற்றேல் அஞ்ஞானத்திற்கு அசத்வ மிருக்கின் நிவர்த்தி பொருந்தாமையின் பிரம்ம அபேதத்திலும் அதற்கு நிவர்த்திப் பிரசங்கத்தினும் வேருகக் கிஞ்சித்து அஞ்ஞானமென்னு நாம முண்டாம் என்று சங்கித்துக் கூறுகின்ருர்]

உண்மை அறியுங்கால் - உள்ளபடி விசாரிக்கு மிடத்து

| | |
|---|---|
| செறிவாய் உண்மை உருவு ஆகும் சித்தின் ஒளியை | பரிபூரண சத்து ரூபமான சித்ப்பிரகாசத்தை |
| தவிர்த்து உண்டாம் அறியாமையது ஒன்று என இல்லை ஆகும் | விரோதித்து இருப்பதாகிய அஞ்ஞான மென்பது ஓர் வஸ்துவாய் இல்லையாம். 60 |

**நோக்கு மிடத்து வாக்கியந்தா னுண்ணி தாய பரத்தொளியை**
**நீக்கி நிற்கு மறியாமை யென்பதில்லை யாதலினல்**
**ஆக்க மில்லா வறிவின்மை யழிப்ப தென்றுங் கூடாது**
**தாக்க தின்றி யொன்ருத றன்னுற் கூடுந் தன்மையதே. 61**

(இ - ள்)

| | |
|---|---|
| நோக்கும் இடத்து நுண்ணிது ஆய பரத்து ஒளியை நீக்கி நிற்கும் | விசாரிக்குங்கால் சூட்சுமமான பிரஹ்மத்தின் சொப்பிரகாசத்தை விரோதித்து நிற்பதாகிய |
| அறியாமை என்பது இல்லை ஆதலினுல் | அஞ்ஞன மென்பதோர் வஸ்து வில்லை யாதலினுல் |
| வாக்கியத்தால் ஆக்கம் இல்லா அறிவு இன்மை அழிப்பது என்றும் கூடாது | மகாவாக்கியத்தால் மேன்மை யில் லாத அஞ்ஞானத்தைக் கெடுப்ப தென்பது எந்நாளுமில்லை ஆதலின் |

(அ - கை) கடபடாதி விஷயமாக வுடைய அன்னிய விருத்திகள் அவைகளை விளக்குவது போல மகா வாக்கியத் தினுல் ஜெனித்த மனே விருத்தியானது பிரத்யக பின்ன பிரஹ்ம விஷயத்தை விளக்குவதில் ஏன் சாமர்த்திய முண் டாதாகாது எனிற் கூறுகின்ருர்.

| | |
|---|---|
| தாக்கது இன்றி ஒன்று ஆதல் தன்னுல் கூடும் தன்மையதே | அசங்க ஏகத்வமானது தனது சுபவதத்தால் சித்திப்பதேயாம். |

(மகா வாக்கியத்தால் பூர்வ பூர்வம் அத்யஸ்த அஞ்ஞா னமே நிவர்த்திக்கப்படுகிற தென்பது பொருள்) 61

(அ - கை) இதில் ஏதுவைக் கூறுகின்ருர்.

பிரமா ணங்கள் ஆனவைதான் பேத மில்லா தொருபொருளைத்
திரமா யிதுவென் றிடமாட்டா செல்லா தாமங் காதலினுல்
உரைமாத் திரமா யாவையினு முளவஞ் ஞான மதுதானும்
பரமா மொளியே யாகியிடும் பார்க்கில் உண்மைப்
பரிசிதுவே. 62

(இ - ள்)

| | |
|---|---|
| பிரமாணங்கள் ஆயவைதான் | சர்வப் பிரமாணங்களும் |
| பேதம் இல்லாது ஒரு பொருளை | அபேத ரூபமான வைக்கிய வஸ்துவை |
| திரமாய் இது என்றிட மாட்டா | உறுதியாக இது வென்று குறிக்க மாட்டாது |

| | |
|---|---|
| அங்கு செல்லாதாம் ஆதலினுல் | ஆண்டு செல்லாமல் மழுங்கின சக்தியுடையது ஆதலின். |

[வி – ரை] எந்தக் காரணத்தினுல் அந்தச் சொரூபத்தைப் பிரகாசஞ் செய்யும் பொருட்டுப் பிரவிர்த்தித்தவைகளாகிய பிரமாணங்கள் சாக்ஷிரூபமாக விருக்கும் பிரஹ்மத்தினுலேயே பிரகாசிக்கின்றனவோ (சூரியப் பிரகாசத்தினுல் தீபம்போல) அந்த சொப்பிரகாச சிததாத்மாவில் அந்தப் பிரமாணங்கள் மழுங்கின சக்தியுடையனவாகின்றனவாம்

| | |
|---|---|
| உரைமாத்திரமாய் யாவையினும் உளஅஞ் ஞானம் அது தானும் | விவகார மாத்திரமாய் சர்வ காரியத்தினும் உபாதானமாயுள்ள அஞ்ஞானமும். |
| பார்க்கில் பரமாம் ஒளியே ஆகியிடும் | விசாரிக்கு மிடத்து சொப்பிரகாச பிரஹ்மத்தின் சொரூபமேயாம் |
| உண்மைப் பரிசு இதுவே | உண்மையான தன்மை யிதுவேயாம். |

[வி – ரை] சுத்தி முதலியவைகளில் அத்யஸ்தமாகிய இரஜதாதிகளுக்குப் போல அஞ்ஞானத்திற்கும் பிரஹ்மத்தில் அத்யஸ்தத்தன்மையால் அதனினும் வேருக வில்லையென்பதாம். 62

(அ – கை) விவகார பலத்தால் அஞ்ஞானத்திற்கு சத்பாவமேன் அங்கீகரிக்கக் கூடாது எனில் கூறுகின்ருர்.

அறியாமை யென்று வேரு மதுதானு மறிவி னுண்மை
பிறியாது நுண்மை காணு மளவினி லுளது சத்தே
அறியாமை சத்த சத்தே யாகிய விரண்டின் மேலாம்
அறிவான தோன்ற ருனு மறிவின தொளியே யாமால். 63

(இ – ள்)

| | |
|---|---|
| வேறு அறியாமை என்றும் அது தானும் அறிவின் உண்மை பிறியாது | பிரஹ்ம பின்னமான தாயுள்ள அஞ்ஞானமும் பிரஹ்மத்தின் பின்னமின்றிய சத்துக்கே சத்பாவமுளது |

[கடமிருக்கிறது படமிருக்கிறது குட்டியமிருக்கிறது என்று சத்பாவம் அனுபவிக்கப்படுகின்றது என்னுமிடத்துக் கூறுகின்ருர்]

| | |
|---|---|
| நுண்மை காணும்அள வில் சத்தே உளது | சூட்சும திருஷ்டியால் பார்க்கு மிடத்து அதிஷ்டான சத்துவமே ஆரோப்பிய (மித்யா) பதார்த்தங் களின் சத்தாகத் தோற்றுகின்றது. |

[பிரதீதியும் நாசமும் வேறுவிதத்தால் பொருந்தாமை யால் சதசத்விலக்ஷணமாக அஞ்ஞான மிருக்கிற தென்னு மிடத்துக் கூறுகின்ருர்]

| | |
|---|---|
| அறியாமை சதசத்தே யாகிய இரண்டின் மேலாம் (எனில் | அஞ்ஞானமானது சதசத் விலக்ஷண மாக விளங்கு மென்னில் |
| அறிவான தோன்றல் தானும் அறிவினது ஒளியே ஆம் | அவ்விளக்க ரூபமான பானமும் சேதனத்தின் சித்பிரகாசமே யாம். 63 |

[வி-ரை] சதசத்விலக்ஷணத்தன்மைப்பிரதிபாதனமும்(அந் தப்பிரகார விசாரத்தைச் சகியாமையைப் பிரதிபாதனமா யுள்ளது) அப்பியாசிக்கு தோற்றுவதால், அசத் விலக்ஷண மென்றும் ஞானிகளின் திருஷ்டியில் தோற்ருதபடியால் சத் விலக்ஷண மென்று சொல்லப்பட்டதே யன்றி அவ்வவ்வித மாகிய அர்த்தத்தின் இருப்புத் தன்மையை பரமாயுள்ள தன்று ஆதலால் இவ்வித அர்த்த விளக்கத்தில் சதசத் விலக்ஷணம் அதுவென்னும் விவகாரமும் விளங்காது பான ரூபப் பிரஹ்மவஸ்துவே, அஞ்ஞானம் விடுபட்டதாக கேவலம் விளங்குகின்றது அஞ்ஞானத்திற்கு பானம் சம்பவிக்கிற தில்லை.)

(அ - கை) அஞ்ஞானத்திற்கு சுயம் பானம் வேண் டாம் பான ரூபப் பிரஹ்ம சம்பந்தத்தால் ஏன் விளங்காது என்னுமிடத்துக் கூறுகின்ருர்.

தோன்றுகூட் டரவி ஞலே தோன்றிடும் பொருள்கட் கெல்லாம்
ஊன்றிடு முண்மை யுண்டே லதுவுள்ள பரமே யாகும்
தோன்றுவ துளது பாரா தொழிதல்வே றுண்மை யென்னிற்
ருேன்றிய வுருவு முண்டாய்த் தோன்றலாற் பரமே யன்றே. 64

(இ - ள்)

| | |
|---|---|
| தோன்று கூட்டரவி ஞலே | பானரூபப் பிரஹ்ம சம்பந்த வசத்தினல் |

| | |
|---|---|
| தோன்றிடும் பொருள்கட்கு எல்லாம் தோன்றுவது உளதேல் | விளங்கா நின்ற பதார்த்தங்களனைத்திற்கும் பான முளதெனக் கூறில் |

[வி - ரை] சம்பந்தத்திற்கு இரண்டு சம்பந்திகளின் அபேக்ஷை யுடைய தன்மையால் பிரஹ்மத்திற்குப் போல அஞ்ஞானத்திற்கும் சொரூப சத்பாவமானது அவசியம் அங்கீகரிக்க வரும்.

| | |
|---|---|
| அது உள்ள பரமே ஆகும் | அந்த சம்பந்தி ரூப அஞ்ஞானமானது சத்ரூப பிரஹ்ம வடிவமேயாம் |

[பிரஹ்மத்திற்குப்போல அஞ்ஞானத்திற்குப் பாரமார்த்திக சத்பாவம் வேண்டாம் ஆரோபித சத்பாவமானது இருக்கிறது அதனுலேயே சம்பந்தமானது ஏன் கூடாது என்று சங்கித்துக் கூறுகின்ருர்.]

| | |
|---|---|
| பாராது ஒழிதல் வேறு உண்மை என்னில் | அநிரூபித (நிரூபிக்கக் கூடாத) சத்பாவமுள தென்ருல் |
| தோன்றிய உருவும் உண்டாய்த் தோன்றலால் பரமே | அவ்வநிரூபித சத்பாவமுமிருந்து விளங்குகின்ற படினுல் பிரஹ்மரூபமேயாம். அன்று. (ஏ-அசைகள்) |

64

(அ - கை) சத்பாவத் தன்மை பிரஹ்மத்திற்கே யன்றி மற்றதற்கில்லை எனக் கூறுகின்ருர்.

உருவமா யொளிர்வ துள்ள பிரமமே வேறென் றில்லை
உருவமா யுண்மை யின்மை யாதலின் வேறி னுக்கும்
உருவ முண் டென்று சொல்லப் பார்த்திடில் வேறென் ருய
வுருவத்தாற் றேன்று ரூப முண்மையிற் பரமே யாகும். 65

(இ - ள்)

| | |
|---|---|
| உருவமாய் ஒளிர்வது உள்ள பிரமமே | நிரூபிக்க யோக்கியமாய் சொரூபமாய் விளங்குவது சத்ரூப பிரஹ்மமே |
| வேறு ஒன்று இல்லை | அன்னியமாக யாதொன்று மில்லையாம் |

உருவமாய் உண்மை இன்மை ஆதலின் } அன்னியத்திநுக்கு சொரூபமாக சத்பாவ மில்லாத படினுல்

வேறினுக்கும் உருவம் உண்டு என்று சொல்லப் பார்த்திடில் } அன்னியத்திநுக்கு மநிரூபித வுருவமுண்டென்று கூறக் கருது வீரேல்

வேறு ஒன்ருய் உருவத்தால் தோன்று ரூபம் உண்மையில் பரமே ஆகும் } அநிரூபித வடிவத்தால் தோன்றும் ரூபம் ரூப ஏகத்துவத்தால் பிரஹ்மமேயாம். 65

(அ - கை) ஆயின் ரூப மாத்திர அபேதத்தினுல் இவ்வாருகுக பிரஹ்மத்திற்கு யாதொரு ரூப முண்டோ அதினின்றும் அன்னிய மாகிய ரூபத்தினுலேயே அஞ்ஞானத்திற்கு ரூபமுண்டென்ற சங்கையைக் கண்டிக்க வேண்டி மூன்று விதமாய் விகற்பித்துக் கூறுகின்ருர்.

அன்னியத் தினுக்குச் சொன்ன வுருவுவே றுருவி னுலா
மென்னிலப் பரந்தா னன்ரு மெனுமுரு வந்தான் ருனே
யுன்னிய பரத்தி னேடு பின்னமோ வபின்ன மாயோ
சொன்னவவ் விரண்டுங் கூடி யுள்ளதோ சொல்லு மென்ருன். 66

(இ - ள்)

அன்னியத் தினுக்குச் சொன்ன உருவு } பிரஹ்ம பின்னமான அஞ்ஞானத் தினுக்குக் கூறிய ரூபம்

வேறு உருவினுல் ஆம் என்னில் } பிரஹ்ம ரூபத்தினும் பின்னமான ரூபத்தால் ஆகியதா மென்று கூறில்

[ அவ்விதத்தை தூஷிக்கும் பொருட்டு விகற்பிக்கின்ருர். ]

அப்பரம்தான் அன்ரும் எனும் உருவம் தான் } அந்தப் பிரஹ்ம ரூபத்லும் பின்னமாகக் கூறிய ரூபமானது

உன்னிய பரத்திேைடு பின்னமோ } நிரூபிக்க யோக்கியமாகக் கருதிய சொரூபமுடைய பிரஹ்மத்தோடு பின்னமாக விருக்கிறதா

அபின்ன மாயோ - அபின்னமாக விருக்கிறதோ

| | |
|---|---|
| சொன்ன அவ்விரண்டும் கூடி உன்னதோ சொல்லும் என்ருன் | பின்னபின்னமாக விருக்கின்றதா கூறுங்களென்ருர். (தான். ஏ. அசை) 66 |

(அ - கை) முதலதன்றெனக் கூறுகின்ருர்.

பின்னமென் றுரைக்கு லந்த வுருவுவே ருகை யாலே
சொன்னவவ் வுருவே யாகுந் தற்பதஞ் சொல்லுங் காலே
பின்னமன் றென்னிற் ருனே யாயிடும் பின்ன பின்ன
மென்னின்முன் சொன்ன குற்ற மிரண்டுவந் திசையு மென்க.
67

(இ - ள்)

| | |
|---|---|
| பின்னம் என்று உரைக்கில் அந்த வுருவுவேறு ஆகையாலே | வேறுருவமாயிருக்கின்ற தென்று கூறில் அவ்வுருவமும் பின்னமே யாதலாலே |
| தற்பதம் சொல்லும் காலே சொன்ன அவ் வுருவே ஆகும் | அது பிரஹ்ம ரூபத்திலும் பின்ன ரூபமுடைய தெனக் கூறியது (மலடி மகன் போல்) சொல்மாத்திரமே யாம். |

[இரண்டாவது பக்ஷத்தில் பிரஹ்ம பின்னமான அஞ்ஞானத்திற்கு வேறு சொரூப லாபமில்லை யெனக் கூறுகின்ருர்.]

| | |
|---|---|
| பின்னம் அன்று என்னில் தானே ஆயிடும் | அபின்ன மென்ருல் பிரஹ்ம ரூபமேயாம் |

[மூன்ருவது விகல்பத்தைத் தூஷிக்கின்ருர்.]

| | |
|---|---|
| பின்ன பின்னம் என்னில் | பின்ன பின்ன மென்று கூறிடில் |
| முன் சொன்ன குற்றம் இரண்டுக்கும் வந்து இசையும் என்க | மேலே பின்னம் அபின்னம் இரண்டிலும் கூறிய தோஷமடைவுறு மென்க. 67 |

(அ - கை) அநிரூபித ரூபத்தால் சத் பாவ மென யாதொரு பிரதிக்ஞை செய்யப்பட்டதோ அது இந்த ரீதியால் வார்த்தை மாத்திரமாகவே அவசேஷித்த (மிஞ்சிய) தென்று நிகமனஞ் செய்கின்ருர்.

பாராத படியி ஞலே பரத்தினில் வேற தாக
நேராயொன் ருகித் தோன்று நெறிசொல வார்த்தை யேயாம்
ஏராயோர் பயனு மில்லஞ் ஞானமு மெக்கா லத்தும்
பேராது விளங்குகின்ற பிரமமே பிறிதொன்றில்லே. 68

(இ - ள்)

| | |
|---|---|
| பாராத படியினுலே பரத்தினில்வேறது ஆக | அநிரூபத் தன்மையால் பிரஹ்மத்தினும் பின்னமாக |
| நேராய் ஒன்று ஆகித் தோன்றும் நெறிசொல வார்த்தை யே ஆம் | உண்மையாய் ஒரு ரூப முளது என்னும் கிரமத்தைச் சொல்லுதல் வாக்கு மாத்திரமே யாம் |
| ஏராய் ஓர் பயனும் இல்லே | அழகாகவோர் பொருளு மில்லே |

[ இந்தப் பிரகாரம் அஞ்ஞானத்திற்கு வேறு சொரூபத் தன்மை யின்மையால் வியாவகாரிக அஞ்ஞானமும் வாஸ்தவ மாகப் பிரஹ்மமே யென்று யாதொன்று பிரதிக்ஞை செய்யப் பட்டதோ அது சித்தித்த தென்று நிகமனஞ் (தீர்ப்பு) செய் கின்ருர் ]

| | |
|---|---|
| ஆதலால்) அஞ்ஞானமும் எக்காலத்தும் பேராது விளங்குகின்ற பிரமமே பிறிது ஒன்று இல்லே | ஆகையால் அஞ்ஞனமும் எந்நாளும் பெயர்வின்றி விளங்குகின்ற பிரஹ்மமே அன்னியமாக யாதொன்று மில்லேயாம். 68 |

எல்லாமஞ் ஞானத் தாலே தோன்றிடு மென்ற ருனு
மில்லாதோ வென்னில் வேரு வறிவின்மை யிலாமை யாலே
யில்லாதஞ் ஞானஞ் ஞான காரிய மிரண்டு மூன
மில்லாத பிரமந் தானே யெனு மிதென் னறிவே யென்ருன். 69

(இ - ள்)

| | |
|---|---|
| எல்லாம் அஞ்ஞானத் தாலே தோன்றிடும் என்றல் தானும் | சர்வ காரியங்களும் அஞ்ஞானத்தின் நின்றும்உற்பன்னமாமென்று சுருதி யாதிகளில் கூரு நிற்பதும் |
| இல்லாதோ என்னில் | – அசத்தியமோ வென்ருல் |

| | |
|---|---|
| வேருய் அறிவின்மை இல்லாமை யாலே | பிரஹ்ம பின்னமாக அஞ்ஞான மென்பது ஒன்றில்லாமையால் |
| இல்லாத அஞ்ஞானம் அஞ்ஞான காரியம் இரண்டும் | அசத்து ரூப அஞ்ஞானமும் அவ் வஞ்ஞானத்தின் காரியமாகிய விரண்டும் |
| ஊனம் இல்லாத பிரமம்தானே எனும் இது என் அறிவே என்ருன் | தோஷமற்ற பிரஹ்ம வடிவமே என்னும் இதுவே எனது நிச்சய ரூபமான அனுபவமென்று கூறினுர். 69 |

(அ – கை) ஆதலால் அஞ்ஞானமும் அதன் காரியமும் பிரஹ்ம சொரூபமே அன்னியமாகவில்லை யென்று கூறப் பட்ட அர்த்தத்தில் சுருதியைக் கூறுகின்ருர்.

இப்படி யெல்லாம் ஆகி யிருந்ததே பரமே யென்ன
மெய்ப்படியேயா யுள்ள சுருதிதான் விளங்கச் சொன்ன
அப்பொரு டற்பா வத்தா லாவதே யென்று கொண்டு
செப்பிடுஞ்சுரர்கட் கெல்லாங் திகழொளி மலரின் மேலோன். 70

(இ – ள்)

| | |
|---|---|
| இப்படி எல்லாம் ஆகி இருந்ததே பரமே என்ன | இவ்வாறு சர்வான்மகமாய் இருப்பது பிரஹ்மமே யென்று |
| மெய்ப்படியே ஆய் உள்ள சுருதிதான் விளங்கச் சொன்ன | சத்தியார்த்தவாதினியாகிய வேதமானது விளங்குமாறு கூறினது |

[கிரியாகாரகா பல ரூபமான பிரபஞ்ச (நாநாவிதமாகத் தோன்றுமுலக)த்தினுடைய பேதத்தையும் சுருதி பிரதி பாதிக்கிறது. "ஆன்மாவினின்றும் ஆகாசமுண்டாயிற்று" துறக்கம் வேண்டினோன் ஜோதிஷ்டோமத்தால் எஜிக்கக் கடவன் என்பன முதலியவற்ருல் அவ்வனைத்திற்கும் எப்படி பிரஹ்ம ரூபத்துவம் என்னுமிடத்துக் கூறுகின்ருர்.]

அப்பொருள் – (இவன்மயமே இவ்வனைத்தும் என்னும்) சுருதியினர்த்தம்

| | |
|---|---|
| தற்பாவத்தால் ஆவதே என்று கொண்டு | (சாக்ஷாத் அர்த்தம்,) சுபாவத்தால் சிந்தித்துள்ளதாமென்று கருதி சுருதி பிரவிர்த்தித்ததென்று |
| திகழ் ஒளி மலரின் மேலோன் சுரர்கட்கு எல்லாம் செப்பிடும் | மிக விளங்கா நின்ற பதுமாசனன் தேவர்களுக்கு சர்வார்த்தங்களையும் கூறினர். 70 |

கேட்பவனுடைய சித்தம் பரிபாக மிலாதே கொண்டு
மீட்சியாய் வசமதின்றி வேதமோர் இடத்திலோர்காற்
காட்சிய துள்ளகால பரத்தினை யொழிந்து வேறு
மாட்சியி லொன்றுண்டாக வகுத்துரை செய்ததன்றே. 71

(இ – ள்)

| | |
|---|---|
| கேட்பவன் உடைய சித்தம் பரிபாகம் இலாதே கொண்டு | அதிகாரியினுடைய மனம் சுத்த மின்மையை முன்னிட்டு |
| வேதம் மீட்சியாய் வசமது இன்றி | வேதமானது திரும்பிய முகமுடைய தாய்ப் பரவசமாய் |
| ஓர் இடத்தில் ஓர்கால் – | ஓரோரிடத்தில் ஓரோர் காலத்தில் |
| காட்சியது உள்ள கால பரத்தினை ஒழிந்து | நித்தியாபரோக்ஷமாயுள்ள காலதத்துவமென்னும் பெயரினையுடைய பிரஹ்மத்தை விடுத்து |
| வேறு மாட்சியில் ஒன்று உண்டாக வகுத்து உரை செய்தது. | பின்னமாய் மாட்சிமையில்லாததாய் மாயா மயமாய் விவகார சித்தமாய் சித்தித்துள்ள ஓர் வஸ்து விருக்கிறதென்று பிரித்துக் கூறியது அன்று, ஏ – அசைகள்) 71 |

இத்தாலித்தைச் சாதிப்ப தென்ற நீர்த்த மாடென்ற
லொத்தொவ்வாது வேறுபடத் தோன்றுமுலக மென்றுரைத்தல்
வைத்தேபாவ புண்ணியமும் வர்ணாச் சிரமங்களுமிவற்றே
டொத்தே நின்றோர் சரிதைகளும் உரைக்கும்வேறு முள்ளனவும் 72

(இ – ள்)

| | |
|---|---|
| இத்தால் இத்தைச் சாதிப்பது என்றல் | * இந்தச் சாதனத்தினல் இந்தச் சாத்தியத்தை சாதிப்பதென்பதும். |

* தானம், தவம் முதலிய புண்ணிய கர்மங்களினல் இக பரலோகங்களிலுள்ள இஷ்ட பதார்த்தங்களை அடைவதாம்.

| | |
|---|---|
| தீர்த்தம் ஆடு என்றல் – | கங்கை முதலிய தீர்த்தங்களில் ஸ்நாநம் செய்யென்பதும் |
| உலகம் ஒத்து ஒவ்வாது வேறுபடத் தோன்றும் என்று உரைத்தல் | பிரபஞ்சமானது சமமாகவும் விஷம (வேறுவித) மாகவும் பின்னப்பட உண்டாமென்று கூறுதலும் |
| வைத்தபாவ புண்ணியமும் | செய்த பாவ புண்ணியங்களும் |
| வந்நாச்சிரமங்களும் – | வர்ணங்களும் ஆச்சிரமங்களும் |
| இவற்றேடு ஒத்தே நின்றேர் சரிதைகளும் | இவற்றேடு பொருந்தி நின்றவர்களது ஆசாரங்களும். |
| உரைக்கும் வேறும் உள்ளனவும் | சொல்லா நின்ற மற்றுமுள்ளவற்றைக் கூறுதலும். 72 |

சுகமொடு துக்கம்பூதம் பௌதிகம் இதுவே யென்றல்
சகமுடைத் தாயசத்தம் வேறினின் றகைமை தானும்
அகமறி வென்றுநின்ற வறிவினில் வேறியாவும்
தகவுள வுண்மையென்றே சாற்றிடுந் தன்மை தானும். 73

(இ – ள்)

| | |
|---|---|
| சுகம் துக்கம் பூதம் பௌதிகம் இதுவே என்றல் | இன்பம் துன்பம் பூதங்கள் அவற்றின் காரியங்கள் இதுவாகுமென்றலும் |
| சகம் உடைத்தாய சத்தம் வேறெனின் தகைமைதானும் | உலகின் கண்ணுள்ள சப்த வைச்சித்திரியத்தைக் கூறுதலும் |
| அகம் அறிவு நின்ற அறிவினில் வேறு யாவும் | யான் சேதனன் என்று நின்று அநுபவிக்கின்ற சைதன்யத்திநும் பின்னமாகிய யாவும் |
| தகவு உள உண்மை என்றே சாற்றிடும் தன்மைதானும் | மேன்மை பொருந்திய உண்மைப் பொருளென்று சொல்லுகின்ற தன்மையும். |

எல்லாம்பொய்யே என்பதுவும் மாயைக்குண்மை யியம்புவதும்
இல்லா மாயையிதனாலே யியலும் பந்தம் வீடுகளும்
எல்லாமாகும் குருமதமு மிவனையடைவோன் றன்மதமுஞ்
சொல்லா ரளப்பில் லாவிச்சை யிருக்கும்படிசொல் லுகை
தானும். 74

( இ – ள் )

| | |
|---|---|
| எல்லாம் பொய்யே என் பதுவும் மாயைக்கு உண்மை இயம்புவதும் | அனைத்துமித்தையெனக் கூறுவதும் மாயைக்குச் சத்தியத்துவத்தைக் கூறுவதும் |
| இல்லா மாயை இத ளுலே இயலும் பந்தம் வீடுகளும் | மித்தையான மாயையினுல் பொருந்தா நின்ற பந்த மோக்ஷங் களும் |
| எல்லாம் ஆகும் குரு மதமும் | சர்வான்மகமாக விளங்குகின்ற ஆசாரியனது தன்மையையும் |
| இவனை அடைவோன் தன் மதமும் | இவ்வாசிரியனை யடையும் சீடன் (மாணுக்கன்) உடையதன்மையும் |
| சொல்லார் அளப் பில்லாவிச்சை இருக் கும்படி சொல்லுகை தானும் | வாக்கால்பொருந்தியளவிடப்படாத வித்தையிருத்குந் தன்மையைச் சொல்லுதலும் 74 |

ஓதுகின்ற நூல்பலவும் உரைக்கும் தர்க்க முள்ளனவும்
பேதித் துளதா மிகவுமெனப் பேணிச் சுருங்கச் சொல்லுகையும்
ஏதமின்றி யித்தனையும் பரத்தில் வேறென் றியம்புவதும்
நீதியாகு முளவெவையு நின்றே நிகழ்த்து மாமறைதான். 75

(இ – ள்)

| | |
|---|---|
| ஓதுகின்ற நூல்பலவும்– | சொல்லா நின்ற பல சாஸ்திரங் களும் |
| உரைக்கும் தர்க்கம் உள்ளனவும் | கூறு நின்ற பலவிதமான தர்க்க (குதர்க்க பேதம்) முள்ளதும். |
| பேதித்து உளதாம் மிக வும் என பேணிச் சொல்லுகை சுருங்கச் யும் | மிகவும் விரிந்திருக்கின்றதென்று கருதிச் சுருங்கக் கூறுகையும் |
| இத்தனையும் ஏதம் இன்றி(ய) பரத்தில் வேறு என்று இயம்பு வதும் | இங்ஙனம் கூறிய யாவையும் தோஷ மின்றிய பிரஹ்த்திலும் பின்ன மென்றியம்புவதும் |

| | |
|---|---|
| நீதியாகும் உள எவை<br>யும் நின்றே நிகழ்த்<br>தும் மாமறைதான் | இம்முறையாகவுள்ள அனைத்தை<br>யும் அபிப்பிராயமில்லாமலே<br>பெருமை பொருந்திய வேதங்கள்<br>கூறினது 75 |

பரமா யுள்ள மறைதானே பாக மானோர் அறிவுக்குத்
தரமா யடையும் பரிசாகச் சாற்றி யவர்கட் கிதமாகத்
திரமா யுள்ள மழுங்கேயுஞ் சிறிதே யெல்லா விரதம்போல்
உரமாய்த் தாமிப் படியென்றே யுபதேசித்த துண்மையினால். 76

(இ - ள்)

| | |
|---|---|
| பரமாய் உள்ள மறை<br>தானே பாகம் ஆனோர்<br>அறிவுக்குத் தரமாய் | பரமப் பிரமாணமாயுள்ள வேத<br>மானது அதிகாரிகளின் புத்திக்குத்<br>தக்கபடி |
| எல்லாம் அடையும்<br>பரிசு ஆக திரமாய்<br>உள்ளம் அழுங்கேயும் | சர்வப் பிரயோஜனங்களையும்<br>அடையும் பொருட்டு மிகவும்<br>மனவருத்தமுற்று |
| அவர்கட்குச் சிறிதே<br>ஆக இதம் சாற்றி | பரிபாகமின்றியவர்க்கு கொஞ்சம்<br>கொஞ்சமாக இதமானவற்றைக்கூறி |
| இரதம் போல் உர<br>மாய்த் தாம் இப்படி<br>என்றே உண்மையி<br>னால் உபதேசித்தது | இன்பம் போல் திடமாய் பின்வரு<br>மாறு மெய்மையாகக் கூறியது<br>76 |

சாத னமாகுஞ் சதுட்டயங்கள் சமைந்த வத்தன்மையினோர்க்கு
நீதி யாக வருமறைதா னின்றே யிவர்க ளறியும்வணம்
பூத மாயும் புவனங்கள் பிறவு மாகி யிருந்ததுவும்
ஏத மில்லா தொன்றாய பரமே யென்றே யியம்பினதால். 77

(இ - ள்)

| | |
|---|---|
| சாதனம் ஆகும் சதுட்<br>டயங்கள் சமைந்த அத்<br>தன்மை யோர்க்கு | (விவேகாதி) சாதன நான் கினையும்<br>அவதி பரியந்தம் கைவரப்பெற்ற<br>பக்குவ அதிகாரிகளுக்கே |
| அருமறைதான் நீதி<br>ஆக நின்றே இவர்கள்<br>அறியும் வணம் | அறிதற்கரிய வேதமானது கிரம<br>மாகத் தனது அபிப்பிராயத்தோடு<br>நின்று இவர்களறியும்படி |

| | |
|---|---|
| பூதம் ஆயும் புவனங் கள் பிறவும் ஆகி இருந்ததும் | பூதங்களாகவும் புவனங்களாகவும் மற்றுமுள்ள பதார்த்தங்களாக யிருப்பதுவும் |
| ஏதம் இல்லாது ஒன் ருய பரமே என்று இயம்பினது | தோஷமற்ற அத்வைதப் பரப் பிரஹ்மமே என்று கூறினது. (ஏ. ஆல்-அசைகள்) 77 |

(அ – கை) அநுசந்தானக் கிரமத்தைக் கூறுகின்ருர்.

சகமொடு சீவன் ஈசன் சார்ந்துள விகார மின்றிச்
சுகமுடைச் சத்தாய்ச் சித்தாய்த் துகளின்றி நுண்ணி தாகி
யகமெனு முரைகட் குள்ளா யறிவரி தாகி யொன்ருந்
தகவுடைப் பரமந் தன்னி ஞெருமையை மறைகள் சாற்றும். 78

(இ – ள்)

| | |
|---|---|
| சகமொடு சீவன் ஈசன் சார்ந்து உள விகாரம் இன்றி | போக்கியம் போக்துரு போகத்தைத் தருமீசனெனப்பொருந்திய வேறுபாடுகளின்றி |
| சுகம் உடைச்சத்தாய்ச் சித்தாய்த் துகள் இன்றி நுண்ணிது ஆகி | ஆனந்தா பேதமாகியும் சத்தாகி யும் சித்தாகியும் நிர்தோஷமாகி யும் சூட்சும வடிவமாகியும் |
| அகம் எனும் உரை கட்கு உள்ளாய் | அகம் அகம் என்னும் உரைகளுக்கு உள்ளுரைப் பொருளாயும் (ஆந்தரார்த்தமாயும்) |
| அறிவரிது ஆகி ஒன் ரும் தகவுடைப் பரமந் தனின் ஒருமையை மறைகள் சாற்றும் | அநதிகாரிகளால் அறிதற்கரியதா யும் அத்வைதமாயும் சிரேஷ்டமா யும் உள்ள பிரஹ்மத்தினது ஏகத் துவத்தை வேதங்கள் பிரதி பாதிக் கின்றன. 78 |

ஈசன் சகமொடுளசீ வனதா மியாவும் பரரூ பமதென் றுகொடே
நேசம் மதனு லுளதா கியதன் னிறையும் மறிவா னதியா
ததுதான்
மாசொன் றதிலா தபரம் பொருளும் மயலொன் றறியா தவபே
தமது
மேதம் மொழிவே தனமா வதுவு மென்றம் மலரோனு மியம்
பினனுல் 79

(இ - ள்)

| | |
|---|---|
| ஈசன் சகமொடு உள<br>சீவன் தாம்யாவும் பர<br>ரூபமது என்று கொடு | ஈசுவரன் சகத்துடனுள்ள சீவர்கள்<br>முதலிய வனைத்தும் பிரஹ்ம<br>ரூபமென்று கொண்டு |
| நேசம் அதனல் உள<br>தாகிய தன்னிறையும்<br>அறிவானது யாது<br>அதுதான் | ஆதரவோடு மப்பியசிப்பதாலுள<br>தாய தனது பரிபூரணமான<br>ஞானமெதுவோ அதுவே |
| மாசு ஒன்று இலாத<br>பரம்பொருளும் மயல்<br>ஒன்றும் அறியாத<br>அபேதமதும் | தோஷமற்ற பரப்பிரஹ்மமும்<br>மயக்கமென்பதின்றிய பரமாத்<br>வைதமும் |
| ஏதம் ஒழி வேதனம்<br>ஆவதும் என்றும்<br>அம்மலரோன் இயம்<br>பினன் | குற்றமற்ற ஞானமுமாம் என்ப<br>தாக அப்பதுமாசனனுய பிரஹ்ம<br>தேவர் கூறியருளினர்,<br>ஏ, ஆல் - அசை. 79 |

இத்தன் மையொழிந் துளதா மறிவே
யாதொன் றறியாமையையெய் தியதே
மெய்த்தன் மையதா யறிபோ ததினும்.
வேரு யறிகின் றவிடந் தனிலும்
அத்தன் மையில்வே றுபடா ததிலோ
ரைய மிலையா சறநின் றதுதான்
சித்தொன் றியறிந் திடுமவ் வறிவே
சேர்தற் கரிதா யிடுமெங் கணுமே. 80

(இ - ள்)

| | |
|---|---|
| இத்தன்மை ஒழிந்து<br>உளதாம் அறிவு யாது<br>ஒன்று அறியாமையை<br>எய்தியது | இவ்வித அபேத ஞானத்திலும் பின்<br>னமாகவுளதாகும் (நான் அன்னியம்<br>என்னும்) ஞானம் யாதொன்<br>றுண்டோ அது அஞ்ஞானமாம். |
| மெய்த்தன்மையதாய்<br>அறிபோதும் அதின்<br>வேருய் அறிகின்ற<br>விடந்தனிலும் | (விசாரித்து அதனை) உள்ளபடி<br>யறிந்தபோதும் (அவ்விதம்<br>விசாரிக்காமல்) அசத்தியமாயறிந்த<br>போதும் (அவ்வஸ்து) |

| | |
|---|---|
| அத்தன்மையில் வேறு படாது | ஏகமான அந்தப் பிரஞ்ஞான சுபாவத்தினின்றும் மாறுபடாது |
| அதில் ஓர் ஐயம்இல்லை- | அவ்விஷயத்தில் யாதொரு சம்சயமுமில்லை |
| தான் ஆசு அற நின்றது | அதுவே தோஷமின்றி விளங்குகின்றது |
| சித்து ஒன்று அறிந்திடும் அவ்வறிவே | பிரஹ்மாபேதமாக அறியா நின்ற அந்தச் சம்பிரஞ்ஞையே |
| எங்கணும் சேர்தற்கு அரிது ஆகியிடும் | யாண்டும் அடைதற்கு அதிதுர்லபமாம் 80 |

(அ-கை) பானம் (விளக்கம்) யாவும் சிவசொரூபமென்று கூறுகின்றார்.

எப்படிப் பொருகளெல்லா மிதுவிது வென்றே யென்றுஞ்
செப்பிட வுண்மை யாகத் திகழ்தரும் வேறுபாட்டால்
அப்படிச் சிவனேயந்தப் பொருகளி னுண்மை யாகி
மெய்ப்பட விளங்குகின்றான் வேறொரு பொருளன் றாமால். 81

(இ-ள்)

| | |
|---|---|
| எப்படிப் பொருள்கள் எல்லாம் | எந்தெந்தப் பிரகாரம் அனன்மப் பொருள்களனைத்தும் |
| இது இது என்று வேறுபாட்டால் என்றும் செப்பிட | இதுகடம் இதுபடம் என்னும் (நாமரூப) வேறுபாட்டால் எந்நாளும் கூறும்படி |
| உண்மையாகத் திகழ் தரும் | சுபாவமாக விளங்குமோ |
| அப்படிச் சிவனே அந்தப்பொருள்களின் உண்மை ஆகி | அந்தப் பிரகாரம் (அதிஷ்டான வடிவ சித்துரூபம்) அவ்வப் பொருள்களின் சொரூபமாகி |
| மெய்ப்பட விளங்குகின்றான் | உண்மையாகிப் பிரகாசிக்கின்றான் |
| வேறு ஒரு பொருள் அன்றாம் | அன்னியமாகிய வஸ்துக்ககளொன்றுமில்லை. |

(ஆல் - அசை) 81

(அ-கை) இந்தப் பிரகாரம் பானமாத்திரத்திற்குச் சிவ சொரூபத்தன்மை கூறி அதனனு சந்தானப் பிரகாரத்தைக் கூறுகிருர்.

யாதொரு படியிற்போதம் பொருடொரும் விளங்கு மன்னேர்
தீதிலாச் சிவன்றன் சத்தி யாயதே பிறிதொன் றன்ருல்
ஏதமில் சத்தியின்னே யிசைந்திட வறிதலே யாம்
பேதமு மிறந்து தோன்றும் பொருளொன்ரு யறியும் வண்ணம். 82

( இ-ள் )

| | |
|---|---|
| யாதொரு படியில் போதம் பொருள்தொரும் விளங்கும் | யாதொருபடி சித்பிரகாசமானது கடம் விளங்குகிறது படம் விளங்குகிறது என்று கடபடாதி சகல பதார்த்தங்களிலும்* அநுசூதமாய்த் தோன்றுமோ |
| அந்நேர் தீதிலாச் சிவன் தன் சத்தியதே | அவ்விளக்கம் சாக்ஷாத் சர்வதோஷ வினிர்முத்தமாகிய சிவனுடைய விளக்கரூப சத்தியே |

பிறிது ஒன்று அன்று - அன்னியம் யாதொன்றுமில்லையாம்

| | |
|---|---|
| ஏதம் இல் சத்தி இன்னே இசைந்திட அறிதலே | குற்றமற்ற பானரூப சத்தியை இவ்வாறு விஷயாம்ச பிரகாரமாயறிவதே |
| பேதமும் இறந்து தோன்றும் பொருள் ஒன்ருய் அறியும் வண்ணம் | பேத ஞானமிறந்து தோன்ரு நிற்கும் அவ்வஸ்துவை ஏகமாக உணருந் தன்மையதாம் (ஆல் - அசை) |

(அ-கை) இந்தப் பிரகாரம் அனுசந்தானஞ் செய்பவனுடைய பாகிய சகல வியாபாரங்களும் பரமேஸ்வர பஜன ரூபமாகவே யாகிறதென்று கூறி அவ் விஷயங்களின் பான (விளக்க)த்தைச் சிவரூபமாகவே அறிய வேண்டுமெனவே கூறுகின்ருர்.

---

* மணிகளுள் நூல் நுழைந்திருப்பதுபோல் சர்வநாம ரூபப்பிரபஞ்சத்திலும் இருக்கிறது, விளங்குகிறது என பரமாத்மாவின் இருப்பு விளக்கமானது உள்ளீடாயுள்ளதாம்.

யாதொரு படியினுலே யாவையுந் தோன்றுமத்தை
யோதிய பரமேயாக வுண்மையா யறிந்தான் யாவன்
ஏதமில் ஈசன் தன்னே யியல்பிஞ லெளிதாம் வண்ணம்
பூதனு மவனே மிக்க பூசனே செய்யாநின்ருன் 83

(இ -ள்)

யாதொருபடினுலே – எந்தெந்தப் பிரகாரத்திஞல்

யாவையும் தோன்றும் } எவ்வெப்பதார்த்தங்கள் சக்ஷுஸ் சுரோத்ராதி பிரமாணங்களாலே தோன்று நிற்குமோ

அத்தை } அவ்வனேத்தையும் (விவகரிப்பவனு யிருந்தே அவைகளின் அநுகத மான விளக்கத்தை)

ஓதிய பரமே ஆக உண்மையாய் அறிந்தோன் யாவன் } சொல்லிய பரசிவனேயாக எதார்த்தமாயறிந்தவன் எவனே

பூதனும் அவனே – பரிசுத்தனுன அந்தயோகி புருஷனே

ஏதம் இல் ஈசன் தன்னே } நிர்தோஷபரமேஸ்வரனே

இயல்பிஞல் எளிதாம் வண்ணம் } சுபாவமாக பிரயத்தனமில்லாமலே

மிக்க பூசனே செய்யா நின்ருன் } மேலான ஆராதனே செய்பவனுவன் 83

(அ – கை) விருத்தியை விளக்க ரூபமாக அறிய வேண்டுமெனக் கூறுகின்ருர்

எப்படிப் பூதம் நாநா வுருவமா யிலங்குந் தன்னுள்
அப்படி யறிவேயாக வநுபவித் திடுதலேயாம்
செப்பிட லறிதா யுள்ள திகழொளியாகுந் தன்னே
மெய்ப்பட வேருென்றின்றி விளேந்திடும் பூசை தானே 84

(இ – ள்)

எப்படி தன்னுள் } எந்தெந்தப் பிரகாரம் புருஷனுடை புத்தியானது

| | |
|---|---|
| நாநா பூத உருவமாய் இலங்கும் அப்படி | கடபடாதி வடிவங்களில் சஞ்சரியா நிற்குமோ அந்தந்தப் பிரகாரத்தால் |
| அறிவே ஆக அநுபவித்திடுதலே | அவ்வனைத்தினு முள்ள பானத்தை சிவரூபமாக அநுசந்தானஞ் செய்தலே |
| செப்பிடல் அறிதாய் உள்ள திகழ் ஒளி ஆகும் தன்னை | சொல்லுதற் கருமையாயுள்ள சொப்பிரகாசமாகிய சிவனுக்கு |
| மெய்ப்பட வேறு ஒன்று இன்றி விளைந்திடும் பூசையாம் | எதார்த்தமாய் பூஜோபகரணா பேக்ஷயின்றி சுபாவமாகச் செய்யும் மானசபூசையாம் (தான் – அசை) |

(அ – கை) சர்வத்தையும் பானரூபமாக அறியக் கூறுகின்றார்.

போதம தாகித் தோன்றும் பொருளெலாஞ் சிவனேயாக
வேதமி லறிவாற் காண்பானெவனவ னுண்மை கண்டான்
தீதிலா சிவனன் றென்று சிறிதொன்றைச் சிந்தை செய்வோன்
பேதமா மருளின் மேய பித்தனென் றறிய லாவன் 85

(இ – ள்)

| | |
|---|---|
| போதமது ஆகத் தோன்றும் | விளக்க ரூபமாகத் தோன்றுகின்ற |
| பொருள் எலாம் சிவனே ஆக | பதார்த்தங்களனைத்தையும் சிவ ரூபமாக |
| ஏதம்இல் அறிவால் காண்பான் | நிர்தோஷ புத்தியினாலறிபவன் |
| எவன் அவன் உண்மை கண்டான் | எவனோ அவனே தத்துவ வித்தாவன் |
| தீது இலாச் சிவன் அன்று என்று சிறிது ஒன்றைச் சிந்தை செய்வோன் | குற்றமற்ற சிவபெருமானல்லவென்று ஓர் பொருளையேனும் எண்ணுகின்றவனாகிய பேதம் பார்த்தவன் |
| பேதம்ஆம் பொருளின் மேயபித்தன் என்று அறியல் ஆவன் | பேத ரூபமான மயக்கத்தோடு கூடிய பிராந்தனென்றறியத் தகுந்தவனும் |

சிவனிது வன்றே யென்று சிறிதொன்றைச் சிந்தை செய்யு
மவனறி வுடையோர் தம்பா லதமனென் றறியப்பட்டா
னுவமை யொன்றில்லா வீசன் றனையிகழ்ந் தொழுகு வானும்
பவமதி லென்று மேய பசுவெனப் படுகின் றானும் 86

(இ - ள்)

| | |
|---|---|
| இதுசிவன் அன்றே என்று | இப்பொருள் சிவரூபமல்லவென்று |
| சிறிதொன்றைச் சிந்தை செய்யும் அவன் | கிஞ்சித்தேனும் பேதரூபமாக ஓர் வஸ்துவையேனும் நினைப்பவன் |
| அறிவுடையோர் தம்பால் அதமன் என்றுஅறியப்பட்டான் | பேரறிவுடையோர்களால் இப்புருஷன் அதமனென அறியத்தக்கவனும் |
| உவமை ஒன்று இல்லாத ஈசன்தனை இகழ்ந்து ஒழுகுவானும் | சமான ரகிதமான பரமேஸ்வரனை நிந்தித்து ஒழுகுபவனும் |
| பவம் அதில் என்றும் மேவும் பசு எனப்படுகின்றானும் | பிறவிக்கடலின்கண் எப்பொழுதும் பொருந்தியிருக்கும் அஞ்ஞானென்று கூறப்படுபவனுமாவன் 86 |

எல்லாமுஞ் சிவரூப மாகித் தோன்று
மியாவனுக்குத் தன்னுடைத்தாய் அவனேமிக்க
சொல்லாலு மளப்பரியா னவன்றன் இச்சை
சுருதியினா றுணிந்துரைத்த சரிதை தானும்
பல்லோரு மவனையருச் சனைசெய் தேத்த
பரரூபந் தனக்கேற் பூசை யாகு
மில்லாத வவிச்சையினை நீங்கி யுள்ள
நிர்க்குணனு மிவனாகு நினையுங் காலே. 87

(இ - ள்)

| | |
|---|---|
| யாவனுக்கு எல்லாம் தன்னுடைத்தாய் சிவ ரூபம் ஆகித்தோன்றும் | எந்த தத்துவ வேத்தாவுக்கு சகல வஸ்துக்களும் இயல்பாக சிவரூப மாகவே தோன்றா நிற்குமோ |

| | | |
|---|---|---|
| அவனே மிக்க சொல்லாலும் அளப்ப அரியான் | அந்த மகாத்மாவே மிகுந்த வேத வாக்கியங்களாலும் அளவிடற்கரியவனும் | |
| அவன்தன் இச்சை சுருதியினால் துணிந்து உரைத்த சரிதை தானும் | அம்மகானுடைய ஆசாரமே வேத வேதாந்தங்களால் நிச்சயித்துச் சொல்லப்பட்ட ஆசாரமாம் | |
| பல்லோரும் அவனை அருச்சனை செய்து ஏத்த | பலரும் அம்மகாத்மாவை அர்ச்சனையாதிகள் செய்து போற்ற (அது) | |
| பரரூபம் தனக்கே நல்பூசை ஆகும் | பரமேஸ்வரனுக்குச் சொல்லா நின்ற நல்ல பூசையாவதாம் | |
| நினையும் கால்இவன் – | ஆராயுமிடத்து இம் மகாத்மா | |
| நில்லாத அவிச்சையினை நீங்கி உள்ள நிர்க்குணனும் ஆகும் | நிலையற்ற அஞ்ஞான தற்காரியங்களை கடந்துள்ள குணாதீதனுமாவான். (ஏ – அசை) | 87 |

எப்பொருள் களுந்தானாகி யிலங்கிடு மறிவா மீசன்
அப்படி விளங்குகின்ற தறிதலே யவன்றனக்கு
மெய்ப்படு பூசை வேறோர் செயலினா லன்று மெய்யே
இப்படி ஞானந் தன்னா லியம்பிடப் படுவான் ஈசன் 88

(இ – ள்)

| | | |
|---|---|---|
| அறிவாம் ஈசன் எப்பொருள்களும் தான்ஆகி இலங்கிடும் | சச்சிதானந்த வடிவ பரமேஸ்வரன் சர்வாத்தும வடிவமாகவே விளங்குகின்றான் | |
| அப்படி விளங்குகின்றது அறிதலே | அந்தப்பிரகாரம் சர்வாத்ம வடிவமாக விளங்குவதை யறிதலே | |
| அவன் தனக்கு மெய்ப்படு பூசை | அந்தப் பரமேஸ்வரனுக்கு உண்மையான பூஜையாகும் | |
| வேறோர் செயலினால் அன்று மெய்யே | ஏனைய உபகரணங்களினால் செய்யும் பூஜை யதார்த்தமான பூஜையன்று இது சத்தியம் | |
| ஈசன் இப்படி ஞானம் தன்னால் இறைஞ்சிடப் படுவான் | பரமேஸ்வரன் இவ்விதம் சர்வான்மக ஞானத்தாலேயே பூஜிக்கப்படுவன். | 88 |

(அ – கை) வேறொரு பிரகாரமாக அனுசந்தானத்தைக் கூறுகின்றார்.

சக்ருப மாய வதில்வே றிலாது விளையாடு தெய்வ மதுதான்
சுகருப மாய தனையே பகுத்து விளையாடி யுண்டலதனை
அகமாயை யின்றி யறிகின்ற போத முளதாகி நிற்கு மதுவே
தகநாளு மோது மறிவான தென்று சதுரான னன்சொ றருமால்

(இ – ள்)

| | |
|---|---|
| சகரூப மாய அதில் வேறு இலாது விளையாடு தெய்வம் அதுதான் | (தனது ஆசிரதமாய சத்துவத்தால்) ஜகத்ரூபமாகக் கிரீடிக்கின்ற ஆன்ம தேவதையானது |
| சுகரூப மாய தனையே பகுத்து விளையாடி உண்டல் அதனை | ஆனந்தரூபமாகிய தன்னையே (போக்த்துரு போக்கிய போகப் பிரதர் (போகமளிப்போன் ரூப மாக) வகுத்து கிரீடையினால் (போக்கிய ரூபமான ஆன்மாவை போக்துரு ரூபமான ஆன்மாவினால்) புசிப்பதை |
| அகம்மாயை இன்றி அறிகின்ற போதம் உளதாகி நிற்கும் | அந்தக்கரணத்தில் அஞ்ஞான மின்றி அறிகின்ற யாதொரு ஞானமுண்டோ |
| அதுவே தகநாளும் ஓதும் அறிவு ஆவது என்று சதுர் ஆனன் சொல் தரும் | அதுவே தகுதியுடையதாக வெந் நாளுங் கூறுகின்ற பரமாத்வைத வேதனமாமென்று நான்குமுகப் பிரஹ்மதேவர் கூறியருளினர். 89 |

ஆன தாகாத் தெய்வமதே யடையும் விடய மிந்தியமாய்த்
தானுமாகித் தனைத்தன்னாற் றானே நுகரும் தன்மையது
ஊன மாகு ஞானதாதி யொழிந்தே யுள்ள வறிவதனாற்
றானே யாகக் கண்டிடுதற் சத்தா யுள்ள பூசையதே. 90

(இ – ள்)

| | |
|---|---|
| ஆனது ஆகாத் தெய்வ மதே | விவகாரத்தில் சர்வான்மகமாயும் பரமார்த்தில் ஓர் விவகாரத்தையும் அடையாததாயும் உள்ள ஆன்ம தேவதையே |

| | |
|---|---|
| அடையும் விடயம் இந்தியம் ஆய் தானும் ஆகி | பொருந்தா நின்ற போகோபகரண போக்கிய போக்துரு ரூப மாயிருந்து |
| தனைத் தன்னுல் தானே நுகரும் தன்மையதே | போக்கிய மாகிய தன்னை போகோப கரணமாகிய தன்னுல் போக்தாவாகி தானே புஜிக்கின்ற தன்மையை யுடையது |
| ஊனம் ஆகும் ஞாதாதி ஒழிந்தே உள்ள அறிவதனுல் | அதனை தோஷம் பொருந்திய ஞாதுரு ஞானம் ஞேயரூப மான பேதஞானம் நீங்கியுள்ள பரமாத்வைத ஞானத்தால் |
| தானே ஆகக் கண்டிடுதல் சத்தாய் உள்ள பூசையதே | (விஷயாவச்சின்ன விருத்தியவச்சின்ன பானங்களின் அபேதத்தை) தான்மாத்திரமாக அறிதலே உண்மையான பூசையாம். 90 |

பிறப்பிறப் பாயதுக்கம் பிறித்திட லுளதா யென்றும்
இறப்பிலா வீசன் செய்யு மருளினு லிசைவ தாகி
மறப்புடை பாக வத்தின் வரும்பொரு ளன்ரு மேலா
யிறப்பதாம் பேத மோர்கா லியந்திடாப் பொருளி தன்றே. 91

(இ – ள்)

| | |
|---|---|
| பிறப்பு இறப்பு ஆய துக்கம் | ஜெனன மரண சம்சார துன்பத்தை |
| பிறித்திடல் உளது ஆய் | நிவர்த்திப் பதாகியும் |
| என்றும் இறப்பு இலா ஈசன் செய்யும் அருளினுல் இசைவது ஆகி | எக்காலத்தும் நாசமற்ற பரமேஸ்வரன் பாலியா நின்ற கிருபா கடாக்ஷாத்தினுல் பொருந்துவதாகியும் |
| மறப்பு உடை பாகவத்தின் வரும் பொருள் அன்ரும் | மறதியுடைய பாவனையினுல் ஜெனிக்கும் பொருள் அல்லாததாகியும் |
| மேலாய் இறப்பதாம் பேதம் ஓர் கால் இயைந்திடாப் பொருள் இது | உத்தமமாயும் அழிவதாகிய பேதம் ஒரு காலத்தும் பொருந்தாததாயும் உள்ள பரமாத்வைத விஞ்ஞானமிதுவே. (அன்ரு. ஏ. அசை) 91 |

(அ – கை) ஞானிக்கு விவகார சமயத்தினும் பிரஹ்ம வடிவத்தன்மை விளங்குமானுல் அன்னியர்களுக்கு ஏன் விளங்கவில்லை யென்னுமிடத்துக் கூறுகின்றார்.

ஆதித்தன் ஒளியை யந்த னறிந்துகண்டிடாமை யேபோல்
நீதிக்கண றியு நாட்ட மவிச்சையான் மறைந்து ளோர்க்கு
மேதக்கட் கிசையா தெங்கு மியாவையு மாகி நின்ற
சோதிக்கண் ணொளியு மாங்கே தோன்றிடா தாகு மன்றே 92

(இ – ள்)

| | |
|---|---|
| ஆதித்தன் ஒளியை அந்தன் அறிந்து கண்டிடாமையேபோல் | சூரியபகவானுடைய சகஸ்தர கிரணங்களோடு கூடிய பிரகாசத்தை பிறவிக்குருடன் கண்டு மறியாதது போல |
| நீதிக்கண் அறியும் நாட்டம் | ஆசாரிய வுப தேசக் கிரமத்தால் அறியத் தகுந்த பரமாத்வைத ஞானதிருஷ்டியானது |
| அவிச்சையால் மறைந்து உளோர்க்கு | அஞ்ஞானத்தின் ஆவரண சத்தியிஞல் மறைபட்டவர்களுக்கு |
| மேதக்கட்கு இசையாது | சர்ம சட்சுவிற்குக் காண அசக்கிய மாம் |
| எங்கும் யாவையும் ஆகி நின்ற | சர்வஸ்தலங்களிலும் சர்வான்மக மாயுமிருக்கின்ற |
| சோதிக்கண் ஒளியும் தோன்றிடாது ஆகும் | சோதிரூபப் பரமாத்வைத சேதனப் பிரகாசமும் விளங்காத தாகும். (ஆங்கு ஏ. அன்று–அசைகள்) 92 |

(அ – கை) ஞானிக்கு அதெவ்விதம் விளங்குமென்று சங்கித்துக் கூறுகின்றார்.

ஈசன்றன் அருளி ஞலும் இசைந்தவா தரத்தி ஞலும்
ஆசுதீர் நிலையி ஞலு மருள்பவன் பார்வை யாலும்
பேசிடும் பாவ கன்மம் புண்ணிய மிரண்டு மொத்தால்
பாசமாம் படலம் போக்கும் பரம்பொரு டிகழு மன்றே. 93

(இ – ள்)

| | |
|---|---|
| ஈசன்தன் அருளிஞலும் | பரமேஸ்வரனுடைய பரிபூரண கிருபையிஞலும் |

| | |
|---|---|
| இசைந்த ஆதரத்தி னலும் | (அதனுல்) பொருந்திய சிரத்தையினுலும் |
| அருள்பவன் பார்வை யாலும் | ஆசாரிய ஈக்ஷணத்தினுலும் |
| பேசிடும் பாவகன்மம் புண்ணிய (கன்ம) மிரண்டும் ஒத்தால் | கூறுநின்ற பாவ புண்ணி கர்மங் களிரண்டும் சாமியாவஸ்தையை (அநுபவித்து நாசம் அல்லது சமதிருஷ்டியை) அடைந்தால் |
| பாசம் ஆம்படலம் போக்கும்பரம் பொருள் திகழும் (அன்று.ஏ–அசைகள்) | (அகண்ட பிரஹ்மாகார விருத்தி யால்) அஞ்ஞானத்தைச் சேஷ மின்றிப் போக்கும் பிரஹ்ம வஸ்து விளங்கும். 93 |

சுத்தமா யென்று முள்ள சுருதிதா னருளி னுலே
யித்தன்மைத் தாகு ஞான மென்றுகொண் டிசையும் வண்ணம்
பத்தரா யுள்ளார்க் கேயப் பலபடி யாகப் பல்கால்
உய்த்து நோய் கழியும் வண்ணம் உள்ளவா றுரைத்த தன்றே. 94

(இ - ள்)

| | |
|---|---|
| சுத்தம் ஆய் என்றும் உள்ள சுருதிதான் அருளினுல் | பரிசுத்தமாயும் சநாதனமாயு முள்ள வேதமானது கிருபையினுல் |
| இசைந்த வண்ணம் ஞானம் இத்தன் மைத்து ஆகும் என்று கொண்டு | சம்சாரதுக்க நிவர்த்தி பொருந் தும் விதமான ஞானமானது இவ் விதமாகுமென்று கருதி |
| நோய் கழியும் வண் ணம் உய்த்து | சம்சார லக்ஷணமாக ஆயாசத்தை யடைந்த மநுஷியர்களின் துன் பத்தை நீக்குமாறு ஆராய்ந்து |
| பத்தர் ஆய் உள் ளோர்க்கு ஏயப் பல படி ஆகப் பல்கால் உள்ளவாறு உரைத் தது | சிரத்தையுடைய மநுஷியர்களுக்கு சம்மதமாகும்படி பலாத்காரமாகப் பன்முறை எதார்த்தமாகக் கூறியது (அன்று. ஏ. ஏ. அசைகள்) |

(கருத்துரை) பிரஹ்மான்ம ஏகத்வ லக்ஷணமுடைய வாக்கியப் பொருள் ஒரு முறை யுபன்னியாசஞ் செய்யப்பட் டிருப்பினும் இவ்வாக்கியப் பொருளையே திரும்பவும் அன்னை

போல் இதத்தைச் செய்கின்றதாகிய குற்றமில்லாத சாந்தோக்கிய சுருதியானது சம்சார லக்ஷணமான மகத்தான ஆயாசத்தை யடைந்து துன்புறுகின்ற மநுஷியர்களுக்கு அநேக விதங்களால் வருஞ் சங்கைகளை நிராகரித்து அடிக்கடி யுபதேசிக்கின்றது. அஃதெங்ஙனமெனில்? சுழுத்தி உக்கிராந்தி (நனவு சுழுத்தி மத்திகள்) முதலிய அவஸ்தைகளில் எந்த ரூபத்தை சீவனடைகின்றனே அச்சொரூபமான பிரஹ்மம் நீயாகின்றாய் என்று பிதாவினு லுபதேசிக்கப்பட்ட சுவேதகேது சங்கிக்கின்றான் - சுழுத்தியிற் சத்தையடைத்தவர்களான பிரஜைகள் அந்த பிரஹ்மான்மத் தன்மையை ஏனறிய வில்லையென வண்டுகளால் மதுவாகச் சேர்க்கப்பட்ட நாநா விருக்ஷ புட்பரச சமுதாயம் போல் பிரித்திடக் கூடாமையால் சுழுத்தி முதலிய்வற்றில் அடையப்பட்டிருந்திடினும் பிரஹ்மம் அறியப்படவில்லை, எழுந்தபின் பிரஹ்மத்தினின்றும் நான் எழுந்திருந்தேன் என்று ஏன் அறிகின்றனில்லை என்று சங்கிக்க, மேகங்களால் சமுத்திரத்தினின்றும் உண்டு பெய்ய வருவனவாயும் திரும்பவும் சமுத்திரத்தை யடைவனவாயுமுள்ள நதிகள் சுவையின் வேறுபாட்டால் சமுத்திரத்தினின்றும் வந்தனவென்றும், சமுத்திரத்தின் ஜலமென்றும் அறியப்படாதன போல். பிரஹ்மத்தினின்று மெழுந்த சம்சாரிகளும் பிரஹ்ம லக்ஷணத் தன்மை யிருப்பதனுல் நாம் பிரஹ்ம ரூபமாக விருந்தெழுந்திருந்தோம் என்று ஞானம் வரவில்லை யென்று பரிகரித்து முற்கூறிய வாக்கியமே உபதேசிக்கப்பட்டது சுழுத்தியில் சீவனுக்கு கரணுபாவப் பிராப்தியுண்டாகும் போது சமுத்திரத்தின் அலை முதலியனபோல் சீவனழிவானென்று சங்கிக்க மரமானது பரசு முதலியவைகளால் சேதிக்கப்படும்போது இரதம் பெருகுவது பற்றி சீவனேடுங் கூடின தெனக்கொள்வதுபோல் சுழுத்தியடைந்த தேகத்திலும் இரத்தம் காண்பதனுல் சீவனழியவில்லை யென்றதைப் பரிகரித்து முற்கூறிய பொருளே தாபிக்கப்பட நுட்பமாய பிரஹ்மத்தினின்றும் தூல சகத்தினுற்பத்தியெப்படி கூடும் என ? சூக்குமமான ஆலம் வித்தினின்றும் அம்மரத்தினுற்பத்திபோல் கூடுமென்று அதனை நிராகரிக்க - ஜகத்தின்

மூலகாரணமான பிரஹ்மம் எதனுல் காணப்படவில்லை யென? நீரிலிருக்கும் உப்பின் கனம் பார்வை பரிசம் இவைகளாலறியப்படாவிடினும் ரசனையால் உப்பினிருக்கை நிச்சயிக்கப்படுவது போல் கண் முதலியவற்றிற்குத் திரிசியப் படாவிடினும் காரிய லிங்கத்தினுலிருக்கின்றதென – பிரஹ்ம சாக்ஷாத்காரத்தில் எது உபாயம் என்று சங்கிக்க? காந்தார தேசத்தினின்றும் காட்டிற் திருடர்களால் கண்ணைக் கட்டி விடப்பட்ட புருஷனுக்கு நேத்திர பந்தத்தை நீக்கி காந்தார தேசத்தை அடையச் செய்யும் உபதேசம்போல ஆசாரியர் செய்யப்பட்ட உபதேசத்தால் பிரஹ்ம சாக்ஷாத்காரம் அவித்யா நிவர்த்தி யிரண்டுமுண்டாகுமென்று கூறப் பட்டது. அந்த வித்வான் எவ்விதமாய் பிரஹ்மத்தை யடைகின்ருன் என்னில் – மன முதலியவை லயித்திடுங்கால் ஞான தீபத்தால் பிரகாசிக்கப்பட்ட பிரஹ்மத்தையே அடை கின்ருனன்றி அர்ச்சிராதிமார்க்கங்களையபேக்ஷிக்கவில்லை அந்த வித்வான் வேறெரு தேகத்தையும் கிரகிக்கின்ரு னில்லை யென? இறப்பவனும் மோக்ஷத்தையடைபவனும் பிரஹ்மத்தை யடைபவர்களென்னில் வித்துவானும் அவித்து வானைப்போல ஏன் ஜனிக்கமாட்டான் என்று சங்கிக்க? திருடாதவன் திருடினவன் இருவர்களும் மழுவேந்தி சத் தியம் செய்யும்கால் இருவர் கையிலும் மழுவின் சம்பந்தம் சமமாயிருந்திடினும் திருடாதவன் தகிக்கப்படான் திருடின வன் தகிக்கப்படுகின்ருன் என இந்தப் பிரகாரம் ஒன்பது முறை பரியாயங்களால் ஆசங்கையை நிராகரித்து "அது நீயாகின்ருய்" என்ற வாக்கியத்தால் முற் கூறிய பிரஹ் மான்மஐக்கியமானது சுருதியினுல் நிலை செய்யப்பட்டது என்பதாம்

64

(அ – கை) அப்பியாசத்திற்கு தாற்பரியத் தன்மையால் அநேக முறை அப்பியசிக்கப்பட்ட பிரஹ்மான்ம ஏகத்வ இலக்கணமான அர்த்தமே சுருதியின் தாற்பரியமாக அறியத் தக்கது வேறில்லை யென்று நிகமனஞ் செய்கின்ருர்

சிவனே யுள்ளான் பிறிதில்லை யென்று திரமா யறிவதுவே
பவமே யொழிக்கு பரமார்த்தம் பகருநெறிதா னதுவாகும்
அவமே யிதனை யொழிந்துளதா மவைதா னிதனை யடைதற்கு
தவமே முதலாஞ் சரிதைகளை சாற்றுகின்ற தன்மையதே. 95

(இ – ள்)

| | |
|---|---|
| சிவனே உள்ளான் பிறிது இல்லை என்று திரமாய் அறிவதுவே | பரமேஸ்வரன் ஒருவனே இருக்கின்றான் அன்னியமில்லை யென்று திடமாக (உறுதியாக) அறியா நிற்பதுவே. |
| பவமே ஒழிக்கும் பரமார்த்தம்பகரும் நெறிதான் அது ஆகும் | ஜென்மத்தை நிவர்த்திக்கும் சிந்தாந்த ஞானத்தைச் சுருதி (தனது) அபிப்பிராயத்தோடு கூறு நிற்கு மார்க்கமுமதுவே யாகும் |
| அவமே இதனை ஒழிந்து உளது ஆம் அவைதான் | சாக்ஷாத் மோக்ஷரூப பிரயோஜன மற்றதாய் பரமாத்வைத ஞானத்தை நீங்கியுள்ள ஏனைய சுருதி வாக்கியங்கள் |
| இதனை அடைதற்கு | இவ்வபேத ஞானத்தை யடைவதற்கு (உபயோகமுள்ள) |
| தவமே முதலாம் சரிதைகளை சாற்றுகின்ற தன்மையவே | கிருச்ர சாந்திராயணாதி தவமுதலாகச் சொல்லப்பட்ட வொழுக்கங்களை கூறுகின்ற தன்மை யுடையனவாம் 65 |

(அ – கை) பிரத்யக பின்னபிரஹ்மமே யுளது என்ற சுருதியைப் போலத்தானே பிரமாண வடிவமாகிய சுபாநுபவ சித்தத் தன்மையினாலும் இதுவே சித்தாந்த மென்று சபதம் செய்கின்றார்.

ஆதர முடையீர் கேண்மின் அருமறைப் பொருளீ தென்றே
யோதலா லுவமை யில்லாப் பொருளிதி லையமுண்டேற்
றீதற மழுவைக் காய்ச்சி செங்கையி னிடுவே னென்றான்
நாதனு யுலக மெல்லாம் படைக்குநான் முகனுயுள்ளோன் 96

| | |
|---|---|
| அருமறை ஈது பொருள் என்றே ஓதலால் | அறிதற்கரிய வேதங்கள் இதுவே உண்மைப் பொருளென்று பிரதிபாதித்தலால் |
| ஆதரம் உடையீர் கேள்மின் | ஆஸ்தீகத்தன்மையை யுடைய தேவர்களே கேளுங்கள் |
| உவமை இல்லாப் பொருள் இதில் ஐயம் உண்டேல் | சமான ரகிதமான இவ்வஸ்து விடத்தில் சந்தேக மிருந்தால் |

| | |
|---|---|
| தீதுஅற மழுவைக் காய்ச்சிச் செங்கையில் இடுவேன் என்றான் | நன்றாக பரசாயுதத்தைக் காய வைத்து சிவந்த கரத்தில் தாங்குகின்றேன் என்று கூறினார் |
| நாதனாய் உலகம் எல்லாம் படைக்கும் நான்முகன் ஆய் உள்ளோன் | தலைவனாய் ஜகமனைத்தும் சிருஷ்டிக்கும் சதுர் முகனாயுள்ள பிரஹ்மதேவர் 96 |

(அ - கை) தேவர்கள் நம்பிக்கை கொள்ளும் பொருட்டு பிரஹ்ம தேவர் இன்னும் சபதம் செய்கின்றார்.

பத்தரா யுள்ளீர் கேண்மின் பகர்ந்தவே தத்தி னர்த்தம்
இத்தன்மைத் தாகு வேறொன் றில்லையா மிதனி லுங்கள்
சித்தநம் புதலுண் டாகச் செப்பினோ மாணை மூன்றோ
டத்தனார் பாதந் தொட்டே யென்றன னலரின் மேலோன் 97

(இ - ள்)

| | |
|---|---|
| பத்தர் ஆய் உள்ளீர் கேள்மின் பகர்ந்த வேதத்தின் அர்த்தம் | என்னிடத்தில் பத்தியுடைய தேவர்களே கேளுங்கள் யானிதுகாறும் கூறிய வேதார்த்த மானது |
| இத்தன்மைத்து ஆகும் வேறு ஒன்றும் இல்லையாம் | (முழுதும் பிரஹ்ம மென்னும்) இத்தன்மையாகிய இந்த அர்த்தத்திற்குப் பின்னமாக வேதத்திற்கு அர்த்தமின்று |
| இதனில் உங்கள் சித்தம் நம்புதல் உண்டாக | சர்வமும் பிரஹ்மமென்னும் வேதத்தாற்கூறப்பட்ட இவ்வர்த்தத்தில் உங்களுக்கு மனப்பூர்வமாக நிச்சயம் வரும் பொருட்டு |
| அத்தனார் பாதம் தொட்டே ஆணை மூன்றோடு செப்பினோம் | பரமேஸ்வரன் பாதத்திற் கை வைத்து சர்வமும் பிரஹ்ம மென்னும் இது பரமேஸ்வரன் மேல் ஆணைப்படி சத்தியம் |
| என்றனன் அலரின் மேலோன் | என்று இவ்விதம் பிரதிக்ஞை செய்தோம் என்று முண்டகாசனனாகிய பிரஹ்ம தேவர் கூறினார். 98 |

அன்பரா யுள்ளீர் கேண்மி னறிவித்த பொருள்மெய் யன்றே
லென்சிர மிற்று வீழ்வ தென்றன னிதுவு மன்றி
யின்பமே யளிக்கு மீச னிவ்விடந் தன்னில் வந்து
தன்பெருங் கருணை யாலுந் தளர்வறப் பண்ணு கின்றான். 98

(இ – ள்)

| | |
|---|---|
| அன்பர் ஆய் உள்ளீர் கேள்மின் | பத்தர்களா யிருக்கின்ற தேவர்களே கேளுங்கள் (உங்களுக்கு என்னால்) |
| அறிவித்த பொருள் மெய்யன்றேல் | அறிவிக்கப்பட்ட சர்வமும் பிரஹ்மமென்று கூறும் சுருதியினருத்தமானது உண்மையில்லா திருக்குமானால் |
| என் சிரம் இற்று வீழ்வது | எனது சிரங்களிங்கே யறுந்து விழட்டும் |
| இதுவும் அன்றி | (உங்களுக்குநம்பிக்கை யுண்டாகும்படி யான்) சபதம் செய்தது மன்றி |
| இன்பமே அளிக்கும் ஈசன் இவ்விடந் தன்னில் வந்து | தனையடைந்தோர்க்கு ஆனந்தமே கொடுக்கும் பரமேஸ்வரன் இவ்விடத்தில் ஆவிர்ப்பவித்து |
| தன்பெரும் கருணையாலும் தளர்வு அறப் பண்ணு கின்றான் | பக்தவத்லத் தன்மையாலும் சம்சயம் நீங்கும்படி உங்களுக்கு சிரத்தையை யுண்டு பண்ணுவார். 98 |

(அ – கை) சூதமகா முனிவர் வாக்கியம்.

இவ்வண முரைத்துப் பின்னை யாவர்க்கு மன்பா யுள்ளோன்
செய்வண மொழிந்தே யீசன் றிருவடி சிந்தை செய்து
மெய்வண மிழந்து தாழ்ந்து பணிந்துமெய்ப் பத்தி யாலே
யவ்வண மாகித் தன்னை யழிந்தன னயனு மையன். 99

(இ – ள்)

| | |
|---|---|
| இவ்வணம் உரைத்து | வேதத்தின் பரமதாற்பரியம் பரமாத்வைத ஞானத்திலேயே என்று சபதபூர்வகமாகக் கூறி |
| பின்னையாவர்க்கும் அன்பாய் உள்ளோன் | பின்னர் சர்வப் பிராணிகட்கும் இதத்தையே செய்பவனும் |

ஐயன் ஆம் அயன் } பகவனுகிய பிரஹ்ம தேவன் முற்
செய்வணம் ஒழிந்தே } கூறிய உபதேசத்தை விடுத்து

தாழ்ந்து பணிந்து } பூமியில் தண்டம்போல் வீழ்ந்து நமஸ்கரித்து

மெய்ப் பத்தியாலே — உண்மையாகிய பத்தியினுலே

மெய்வணம் இழந்து அவ்வணம் ஆகித் தன்னை அழிந்தனன் } தேகஸ்மரணமற்று உபாசிய பரமேஸ்வர வடிவமாகி பரவசனுயினுன். 99

அப்பொழு தளவி லாத வருளுரு வாய வீசன்
செப்பிடு மூவரேத்துந் திருவுரு வுடைய சோதி
யொப்பிலா மதியும் சூடி உமையொரு கூற ஞகி
யிப்படி வானோர் காணும் படியுள வியல்பின் வந்தான். 100

(இ — ள்)

அப்பொழுது அளவு இலாத அருள் உருவாய் } (பிரஹ்மாவானவர் சிவத்தியானத்தினுல் உபதேசத்தை விடுத்து பரவசமாய) அந்தச் சமயத்தில் அளவிட முடியாத கிருபா சொரூபியும்

செப்பிடும் மூவர் ஏத்தும் திருஉருவுடைய சோதி ஈசன் } (முக்குண மூர்த்திகளெனக்) கூறப்பட்ட திரிமூர்த்திகளால் உபாசிக்கத் தக்க அழகுடையச்சோதி சொருபனும் சர்வஞ்ஞனுமாகிய வீசன்

ஒப்பு இலா மதியும் சூடி } சமான ரகித சந்திர சேகரனுய்

உமைஒரு கூறன் ஆகி — உமா மகேஸ்வரி சகிதனுய்

இப்படி வானோர் காணும்படி உள இயல் பின் வந்தான் } இவ்வாறு தேவர்கள் தரிசிக்கும் படியாயுள்ள தன்மையோடு ஆவிர்ப்பவித்தான். 100

நீடொளி மணிகள் சேர்த்தி நிமலமா யோங்கி யெங்கும்
பீடுடை தாம நாற்றிப் பிறங்கரி மிசைய தாகி
யாடக மதனி னுலே யமரரா லமைக்கப் பட்ட
பீடம்வந் திட்ட தாங்கே யிருந்தனன் பெயரா தீசன். 101

(இ – ள்)

| | |
|---|---|
| நீடு ஒளி மணிகள் சேர்த்தி நிமலமாய் ஓங்கி | மிகப்பிரகாசந் தங்கிய ரத்தினங்களாலிழைத்துள்ளதாயும் நிமலமாயு முன்னதமாயும் |
| எங்கும் பீடுடை தாமம் நாற்றி | எவ்விடத்தும் பெருமை பொருந்திய மலர் மாலைகளைத் தூக்கியுள்ளதாயும் |
| பிறங்கரி மிசையது ஆகி | விளங்கா நின்ற சிம்மாசனத்தின் மேலிருப்பதாயும் |
| ஆடகம் அதனினுலே அமரரால் அமைக்கப் பட்டபீடம் வந்திட்டது | சுவர்ணத்தினுல் தேவர்களால் செய்யப்பட்டதும் சிவபெருமானுக்கே தகுந்ததாயுள்ள ஆசனம் வந்திடப்பட்டது |
| ஆங்கே பெயராது ஈசன் இருந்தனன் | அவ்வாசத்தில் பரமேஸ்வரன் நீங்காமல் அமர்ந்திருந்தனன் 101 |

அளவிலா வொளிய தாகி வரனெழுந் தருள லுன்னித்
துளவமா லுலகம் யாவு மளிப்பவ னுவகை யோடுங்
களமதார் கறைசேர் நாதன் கழலடி நினைந்தப் போதே
யுளநெகிழ்ந் துருகி யொல்லை வந்தன னுணர்வின் மிக்கோன் 102

(இ – ள்)

| | |
|---|---|
| அளவு இலா ஒளியது ஆய அரன் எழுந் தருளல் உன்னி | மிக்க பிரகாசமுடைய பரமேஸ்வரனது ஆவிர்ப் பாவத்தை நினைந்து |
| உலகம் யாவும் அளிப் பவன் உணர்வின் மிக்கோன் துளவமால் | சர்வலோகங்களையும் இரட்சிப்பவராயும் சர்வக்ஞராயுமுள்ளவரும் துளவ மாலையை யணிந்தவராயுமுள்ள விஷ்ணுவானவர் |
| களமது ஆர் கறை சேர் நாதன் | கண்டத்தில் பிரகாசம் பொருந்திய விஷத்தையுடைய பரமேஸ்வரனது |
| கழலடி நினைந்து உளம் நெகிழ்ந்து உருகி அப்போதே ஒல்லை வந்தனன் | வீரகண்டாமணி தரித்த திருவடிகளை தியானித்துள்ள மனமானது உருகும்படி பத்தியோடு கூடி அச்சமயத்தில் சீக்கிரமாக வந்தார் |

நித்தரா யுள்ள வானோர் நிறைமலர் மாரி மேன்மேல்
உய்த்தனர் மிக்க வன்பா லுரைத்தனர் துதிக ளெல்லாம்
பத்தர்வே தங்கள் சொன்ன படியிலே பணிந்து வாழ்த்தி
இத்தன்மைத் தாய வேறு செய்தனர் இறைவர் காண. 103

(இ - ள்)

| | |
|---|---|
| நித்தர் ஆய் உள்ள வானோர் நிறை மலர் மாரி மேல் உய்த்தனர் | கற்பபரியந்தம் நித்தியராயுள்ள தேவர்கள் நிறைந்த புட்பமழையை மேலும் மேலும் பொழிந்தார்கள் |
| மிக்க அன்பால் துதிகள் எல்லாம் உரைத்தனர் | மிகுந்த பத்தியினால் பலவிதமான தோத்திரங்களைச் செய்தனர் |
| பத்தர் வேதங்கள் சொன்னபடியிலே பணிந்து வாழ்த்தி | பக்தர்களாகிய தேவர்கள் வேதங்களிற் கூறிய முறைப்படி வணங்கித் துதித்து |
| இத்தன்மைத்து ஆய வேறும் இறைவர் காணச் செய்தனர் | இவை முதலிய மற்றவையும் பரமேஸ்வரனது சன்னிதானத்தில் செய்வாராயினர். 103 |

கடுகியு முயர்ந்து தாழ்ந்துங் காளங்கள் பலமுன் னூதப்
படகமோ டிடக்கை சல்லி மத்தளம் பலவா சிப்பத்
துடிகுழல் வீணை தாளம் வலம்புரி தொடர்ந்தே யார்ப்பக்
குடமுழா முரசு பேரிக் குசலரா யினர்கொண் டார்த்தார் 104

(இ - ள்)

| | |
|---|---|
| காளங்கள் பலகடுகியும் உயர்த்தும் தாழ்ந்தும் முன் ஊத | பல எக்காளங்கள் (திருச் சின்னங்கள்) தீவிரமாயும், உச்சமாயும், மந்தமாயும் சன்னிதானத்தின் முன்னர் ஊதவும் |
| படகம் இடக்கை சல்லி மத்தளம் பல வாசிப்ப | தம்பட்டம் இடக்கை சல்லரி தண்ணுமை முதலிய பல வாத்தியங்கள் முழங்கவும் |
| துடி குழல் வீணை தாளம் வலம்புரி குடமுழா முரசு பேரி தொடர்ந்தே ஆர்ப்ப | உடுக்கை, புல்லாங்குழல், வீணை, சாலரா, வலம்புரிச்சங்கம் குடமுழா முரசு, பேரி முதலியன தொடார்ந்து சப்திக்கும்படியும் |

| | |
|---|---|
| குசலர் ஆயினர் கொண்டு ஆர்த்தனர் | அந்தந்த வித்தையிற் றேர்ந்தோர்கள் கையிற்கொண்டு வாசித்தார்கள். 104 |

வானவர் பாடவாட மங்கையர் மறையி னீறுல்
ஆனவா கவிக ளாஞு ராசிதோத் திரங்கள் சொல்ல
வீனமி லீசன் பாத பங்கய நினைந்து நோக்கு
மோனமா யிருந்தார் வேறு முனிகளோர் செயல தின்றி 105

(இ – ள்)

| | |
|---|---|
| வானவர் பாட மங்கையர் ஆட | சில தேவர்கள் பாடவும் அப்ஸர ஸ்திரீகள் நிர்த்தனஞ் செய்யவும் |
| கவிகள் ஆனோர் மறையின் ஈறுல் ஆனவா ஆசி தோத்திரங்கள் சொல்ல | வித்வான்களான சில தேவர்கள் வேதத்தின் அந்தத்திலுள்ள வாக்கியங்களைக்கொண்டு சத்தியானுசாரம் ஆசீர்வாதங்களையுந் தோத்திரங்களையும் செய்யவும் |
| ஈனம் இல் ஈசன் பாத பங்கயம் நினைந்து நோக்கும் | தோஷரகித பரமேஸ்வரனது திருவடித் தாமரையை தியானத்திலிருந்து தரிசிக்கும் |
| வேறு முனிகள் ஓர் செயலது இன்றி மோனமாய் இருந்தார் | வேறு சில முனிவர்கள் ஒரு செய்கையும் தன்னிடத்திலில்லாமல் மௌனமாயிருந்தார்கள் 105 |

அன்பிலம் முனிக ளெல்லா மதிசய மாகி நின்றூர்
பின்புளோர் தலையி லாடும் பெருமையை யுடைய ராஞர்
என்புநைந் துருகி நெக்கங் கியாவருந் தாமே தம்மில்
வன்பெருங் கைக ளாலும் குத்தினர் வானோர் எல்லாம். 106

(இ – ள்)

| | |
|---|---|
| அன்பில் அம்முனிகள் எல்லாம் அதிசயம் ஆகி நின்றூர் | அன்பினுல் அந்த முனிவர்கள் எல்லோரும் விஸ்வமயத்தையடைந்திருந்தார்கள் |
| பின்பு உளோர் தலையில் ஆடும் பெருமையை உடையர் ஆஞர் | மற்றுமுள்ள சில தேவர்கள் தலையினுல் நிர்த்தனஞ் செய்யும் பெருமையை யுடையவர்களாயிருந்தார்கள் |

| | |
|---|---|
| என்பு நைந்து உருகி நெக்கு அங்கு யாவரும் | மெலிந்து கசிந்துருகும்படியான எலும்போடு கூடிய தேவர்களும், முனிவர்களும் |
| வானோர் எல்லாம் தாமே தம்மில் வன்பெரும் கைகளால் குத்தினர் | தேவர்களனைவரும் பரஸ்பரமாயும் பொருந்திய கரங்களால் முஷ்டி யுத்தம் செய்தார்கள். 106 |

தலையினுன் முட்டி மேலுந் தாள்களா லுதைத்துக் கைகள்
பலவினு லடித்துத் தண்டிற் கயிறது பூட்டி வானோர்
சிலவர்தாஞ் சிலவர் தம்மைச் சிவிகையிற் பொருத்தார் வேறு
குலவியோர் குதிரை தன்னிற் கொடுசென்று சிலர்மேல்
வைத்தார். 107

(இ - ள்)

(சிலர்) தலையினுல் முட்டி–சில தேவர்கள் தலையினுல் முட்டியும்

| | |
|---|---|
| மேலும் தாள்களால் உதைத்தும் கைகள் பலவினுல் அடித்து | வேறு சிலர் கால்களாலுதைத்தும் வேறு சிலர் கரங்களினுலடித்தும் |
| வானோர் சிலவர்தாம் சிலவர் தம்மை தண்டில் கயிறதுபூட்டி சிவிகையால் பொருத்தார் | தேவர்கள் சில பேர் சில பேர்களை தண்டத்திற் கயிற்றைக் கட்டி சிவிகை போலாக்கி சில தேவர்களை மேல் வைத்துச் சுமந்தார்கள் |
| வேறு குலவியோர் தன்னில் குதிரை கொடு சென்று சிலர் மேல் வைத்தார் | விளங்கா நின்ற வேறு சில தேவர்கள் தன்னைக் குதிரையாகக் கொண்டு சில பேர்களைத் தூக்கி சில பேர்களின் மேல்வைத்தார்கள். 107 |

ஓடினர் சிலவ ரொக்க நின்றவர்க ளொருவரோ டொருவர்
தழுவினர்
கூடியொண் புடவை மேலெரிந் துசிலர் கொண்டு கொண்டு
விளையாடினர்
ஓடிவந் துபிரி யத்தினே டொருவரொருவ ருச்சியை முகர்ந்தனர்
ஆடினர் கள்சி லரன்பினு லறிவதொன்றிலா தபடி யாகவே.
108

(இ - ள்)

| | |
|---|---|
| சிலர் ஓடினர் | சிலவர் நெடுந்தூரம் ஓடினர்கள் |
| ஒக்க நின்றவர்கள் ஒருவரோடு ஒருவர் தழுவினர் | சிலர் சமிபத்தில் நின்றவர்களே பரஸ்பரம் தழுவிக் கொண்டார்கள் |
| கூடி ஒண் புடவை மேல் எறிந்து கொண்டு விளை ஆடினர் | சிலர் ஒருங்கு சேர்ந்து அழகிய வஸ்திரத்தை மேலே விட்டெரிந்து பிடித்துக் கொண்டும் எரிந்தும் பிடித்துக் கொண்டும் விளையாடினர்கள் |
| ஓடி வந்து பிரியத்தினேடு ஒருவர் ஒருவர் உச்சியை முகர்ந்தனர் | சில பேர்கள் பிரியத்தோடும் ஓடி வந்து சில பேர்களுடைய உச்சியை முத்த மிட்டார்கள் |
| சிலர் அன்பினுல் அறிவது ஒன்றும் இலாத படியாகவே ஆடினர்கள் | சிலபேர்கள் பத்தியினுல் யாதொன்றையும் அறியாதவர்களாகவே நிர்த்தனம் செய்து கொண்டிருந்தார்கள். |

(அந்தப் பிரகாரம் தேவர்கள் பரமேஸ்வர பத்திப் பிரபாவத்தினுல் தற்போதமிழந்தவர்களாய் இவ்வித காரியங்களைச் செய்து கொண்டிருந்தார்கள் என்பதாம்.) 108

உமையோடு கூடி யுளனுய வீச னெழியாத தேவர் செயல்கண்
டமையாத வன்பு மிகவாகி யங்கை யருளோ டமைக்க வயன்மா
லிமை யோர்க ளோடு முனியாயி னேர்க ளிடர்தீரு வண்ண
மருளா
லமையாத வங்க ணது வைத்தல் கண்ட தருள்பெற்று நின்ற
தனைவோர். 109

(இ - ள்)

| | |
|---|---|
| உமை யோடுகூடி உளனுய ஈசன் ஒழியாத தேவர் செயல் கண்டு | உமா சகிதனுகிய பரமேஸ்வரன் பத்தி பரவசத்தால் நாநா வித மான வியவகாரங்களைச் செய்யுந் தேவர்களைப் பார்த்து |
| அமையாத அன்பு மிக ஆகி | மிகுந்த கிருபையை யுடையவராய் |

| | |
|---|---|
| அயன் மால் இமை யோர்கள் ஓடும் முனி ஆயினோர்கள் | பிரஹ்ம விஷ்ணு தேவர்களோடும் முனிவர்களாகிய வனைவருடைய |
| இடர் தீரும் வண்ணம் அருளால் அமையாத அம்கண் அதுவைத் தல் கண்டு | துன்பம் நீங்கும்படி தற்காருண்ய வசத்தால் அழகிய கிருபா வீட் சணத்தைச் சாத்தலோடு (பின்னும்) |
| அருளோடு அங்கை அமைக்க அருள் பெற்று நின்றது அனைவோர் | கருணையால் அபயஸ்தமும் செய்ய அவர்களனைவரும் அவ்வித பிர சாதத்தினுல் திருவருள் பெற்றிருந் தார்கள். 109 |

(அ – கை) தத்துவராய சுவாமிகள் வாக்கியம்.

சத்திய மாகி வேத மொன்றுமே யளவை யாகும்
இத்தன்மைப் பொருளை யெல்லா வுலகமு மறியும் வண்ணம்
நித்தார மன்ப ரேத்தும் நிறைந்தமெய் கருணை யீசன்
மெய்த்தகு பொருளி தென்றே விளம்பிடல் செய்ய லுற்ருன். 110

(இ – ள்)

| | |
|---|---|
| வேதம் ஒன்றுமே சத்தி யம் ஆகி அளவை ஆகும் | வேதம் பரமப் பிரமாணமாம் இவ் விதம் இதிற்கூறிய அர்த்தமே சத்தியமாமென்னும் |
| இத்தன்மைப் பொருளை எல்லா உல கரும் அறியும் வண் ணம் | இவ்வித நிச்சயத்தை சர்வ லோகத் திலுள்ளவர்களும் நன்ருகத் தெரிந்து கொள்ளும்படி |
| நித்தாரம் அன்பர் ஏத்தும் நிறைந்த மெய்க் கருணை ஈசன் | அஜரா மரணர்களான தேவர் களால் துதிக்கப்பட்டவராயும் பரி பூரணமான கிருபையையுடையவ ராயுமிராநின்ற பரமேஸ்வரன் |
| மெய்த்தகு பொருள் ஈது என்று விளம் பிடல் செய்யலுற்ருன் | உண்மையான அர்த்தமே யிவை யாவுமென்று சொல்ல ஆரம்பித் தார். 110 |

(அ – கை) "இதன் மயமே இவ்வனைத்தும்" என்பது முதலிய சுருதியின் பொருளை அர்த்தத் தன்மையால் போக்தா போக்கிய போகலக்ஷணமான சர்வத்திற்கும் அத்விதீய பிரஹ்மத் தன்மை யாதொன்று கூறப்பட்டதோ அது சத்தியமே என்று பரமேஸ்வரன் தனது சர்வான்மகத் தன்மையை வெளிப்படுத்துகின்றார்.

உலகம் யாவும் உயிர்பலவும் யானே சிறிதும் வேறில்லை
யலகி லறிவா லாய்ந்திடினு மாய விடத்து மருத்தமிதே
திலக மாய மறைதுணிந்து திகழ்த்தும் பொருளு மிதுவென்றன்
இலகுந் தன்மை யநுபவமு மிதிலோ ரைய முளதன்றால். 111

(இ – ள்)

| | |
|---|---|
| உலகம் யாவும் உயிர் பலவும் யானே சிறி தும் வேறு இல்லை | சர்வ லோகங்களும் சர்வ ஜீவராசிகளும் பரமேஸ்வரனான எனது வடிவமே. கிஞ்சிற்றுமெனக்கு பின்னமாக இவைகளின்று (பின்னையோ நானாகவே யிருக்கின்றேன்) |

[மெஞ்ஞானிகளுக்கு அவ்விதம் விளங்கும் அஞ்ஞானிகட்கு எப்படியெனில் அதற்குக் கூறுகின்றார்.]

| | |
|---|---|
| அலகில் அறிவால் ஆய்ந்திடினும் ஆயா விடத்தும் அருத்தம் இதே | விசார திருஷ்டியினால் விசாரித்தாலும் அவிசார திருஷ்டினால் விசாரியாவிட்டாலும் இந்த சர்வாத்மத் தன்மையே அர்த்தமாம் |

(விசாரதிருஷ்டி இக்கள்வனே இக்கட்டை யென்பது போல மாயை மாயா காரியங்களான வனைத்து நாம ரூபங்களும் இந்தச் சச்சிதானந்த சொரூபமே யென்றறியும் *பாத சமானாதிகரணியம். அவிசார திருஷ்டி கட்டையைக் கள்வ னென்றறிந்ததுபோல் சச்சிதானந்த சொரூபத்தை யறியாமல் மாயை மாயா காரியமான நாம ரூபங்களை யறியும் சம்சர்க்க சமானாதி காரணியமாம்)

["யாதொரு இந்தச் சர்வமுண்டோ அது ஆத்மா" என்று கேட்டலால் வேதத்திற்கு மிதுவே தாற்பரியமா யறியத்தக்க அர்த்தமாமென்று கூறுகின்றார்]

* 4 ஆம் தரங்கம். விசாரசாகரம் 85 ஆம் பிரசங்கத்திலும், அதன் குறிப்புரையிலும் காண்க.

| | |
|---|---|
| திலகம் ஆய மறை<br>துணிந்து திகழ்த்தும்<br>பொருள் இது | இன்னும் பிரமாணங்களுக்கெல்<br>லாம் திலக பூதமாக விளங்கா<br>நின்ற வேதமானது நிச்சயித்துக்<br>கூறு மருத்தமிதுவேயாம். |

[தனது அநுபவமுமிதுவேயெனக் கூறுகின்றார் பரமேஸ்வரன்]

| | |
|---|---|
| என்றன் இலகும்<br>தன்மை அநுபவமும்<br>(இது) இதில் ஓர் ஐய<br>மும் உளது அன்றால் | என்னுடைய விளங்கா நின்ற அநு<br>பவமும் இந்தச் சர்வான்மத்<br>தன்மையேயாம் இதிற் சமுசய<br>மில்லை என்பதாம் 111 |

(அ-கை) அவனேதான் கீழிலும் மேலிலும் பரோட்சத் தன்மையும் அபரோட்சத் தன்மையும் என்று சனற்குமார நாரத சம் வாதத்தில் பூம வித்தையிற் கூறப்பட்டதோ அதன் பொருளைக் கூறுகின்றார்.

அப்பாலாகி யெவர்கட்கு மதுவேயெனநிற் கின்றேனான்
இப்பாலாகிக் காண்பொருள்க ளெல்லாமாகி யுள்ளேனான்
மெய்ப்பா லுயிர்க ளியாவையுமாய் விளங்கி மிகவு நின்றேனா
னொப்பே யிலையா முபாதிபல வாகி யெங்கு முள்ளேனான் 112

(இ-ள்)

| | |
|---|---|
| அப்பால் ஆகி எவர்<br>கட்கும் அதுவே என<br>நிற்கின்றேன் நான் | சகல சீவர்களுக்கும் அதுவென்னும்<br>விருத்திக்கு விஷயமாய் பரோட்ச<br>மாயிருப்பவனும் நானே |
| இப்பால் ஆகிக் காண்<br>பொருள்கள் எல்லாம்<br>ஆகி உள்ளேன் நான் | இதுவென்னும் விருத்திக்கி விஷய<br>மான எல்லாமாய்த் தத்துவ ஞானி<br>கட்கு அபரோட்சமா யிருப்பவனும்<br>நானே |
| மெய்ப்பால் உயிர்கள்<br>யாவையுமாய்<br>விளங்கி மிகவும் நின்<br>றேன் நான் | சராசரமாகிய எழுவகைத் தோற்ற<br>மான சர்வ சரீரங்களிலும் சர்<br>வாத்மாவாகி மிக விளக்கமாய்<br>சீவனாய் நிற்கின்றேனும் நானே |
| ஒப்பே இல்லையாம்<br>உபாதி பலவாகி எங்<br>கும் உள்ளேன் நான் | சமான ரகிதமான மன முதலிய சர்வ<br>உபாதிகளிலும் ஈசனாய் உள்ள<br>வன் நானே |

நானே கீழும் மேலும் முன்னும் பின்னும் வலப் பக்கமும் இடப்பக்கமும் குருக்கும் நெடுக்கும் ஆயிருக்கின்றேன் என்பது விடுபட்ட அருத்தம்) 112

பூதமாகிப் பொருள்பலவாய்ப் புணர்ந்து நின்றுங் கரப்பவனுள்
பேதமாகிப் பேதித்தும் பேதமில்லாப் பெற்றியனுன்
சோதியாகு மிரவிமதி யாகித்தோன்று கின்றேனுன்
வேதமாகி யுள்ளேனுன் விளங்கு புராண மாவேனுன் 113

(இ - ள்)

| | |
|---|---|
| பூதம் ஆகி | நாநாவித பிருதிவியாதி பஞ்ச பூதங்களாயும் |
| பொருள் பலவாய் | அதன் காரியமான அநேக பௌதிகங்களாயும் |
| புணர்ந்து நின்றும் கரப்பவன் நான் | பொருந்தியிருந்து (அரவு கயிற்றை மறைப்பதுபோல) மறைந்திருப்பவனும் நானே |
| பேதம் ஆகி பேதித்தும் | பேதரூபமாயிருந்து பதார்த்தங் களை பேதப்படுத்தியும் |
| பேதம் இல்லாப் பெற்றியன் நான் | எதார்த்தத்தில் ஒரு பேதமு மில்லாத தன்மையையுடையவனும் நானே |
| சோதி ஆகும் இரவி மதி ஆகித் தோன்று கின்றேன் நான் | பிரகாசரூபமான சூரிய சந்திராதி கிரகங்களின் வடிவமாய் விளங்கு கின்றவனும் நானே |
| வேதம் ஆகிஉள் ளேன் நான் விளங்கு புராணம் ஆவேன் நான் | வேதங்களாயிருப்பவனும் நானே விளங்கா நின்ற புராணங்களா யிருப்பவனும் (ஸ்மிருதி கல்பாதி களயிருப்பவனும்) நானே. 113 |

கூறுமோசை பலவகைகானவற்றிற் குலவும் பொருளவைநான்
ஆறுசமய மாயவற்றி னருத்தமாகி நிற்பேனுன்
வேறென்றறியும் பொருள்களுமாய் வேருய்விளங்கு
கின்றேநான்
ஆறுஞ்சிந்தை யழிந்தொன்ரு மறிவாலறியு மறிவுநான் 114

(இ - ள்)

| | |
|---|---|
| கூறும் ஓசை பல வகை நான் | கருவிகள் வர்ணங்களென்று கூறுகின்ற நாநாவித சப்தங்களாயிருப்பவனும் நானே |
| அவற்றில் குலவும் பொருள் அவை நான் | விளங்கா நின்ற அவைகளின் அர்த்தரூபமாயிருப்பவனும் நானே |
| ஆறு சமயமாய் அவற்றின் அருத்தம் ஆகி நிற்பேன் நான் | (சைவம் வைஷ்ணவம் சாக்தம் கணுபத்தியம் கௌமாரம் சௌரம் எனுஞ்) சமயங்களாறும் (அதையனுஷ்டிப்பவர்க்கு அருளும் சிவன் விஷ்ணு சக்தி கணபதி குமரர் சூரியன் என்ற) அதன் அர்த்தமுமாகிய தெய்வங்களாயிருப்பவனும் நானே |
| வேறு என்று அறியும் பொருள்களும் ஆய் வேருய் விளங்குகின்றேன் நான் | (முற்கூறியவைகளுக்கு) வேருன சமயங்களும் அவற்றின் தெய்வங்களாயிருப்பவனும் நானே |
| சிந்தை அழிந்து ஒன்ரும் அறிவால் அறியும் ஆறும் அறிவு நான் | கோர மூட விருத்திகள் கெட்ட, ஏகாகார விருத்திரூப ஞானத்திஞல் அறிகின்ற சாந்தரூப ஆன்மாவும் நானே |

114

தோன்றுகின்ற வொளியவைநான் தொடர்ந்தே செறியு
மிருளதுநான்
ஆன்றங்கமைந் தோருளமேவி யறிவாய்நின்றே யறிபவனுன்
ஊன்றும் பொருள்கண்மேலோடு முணர்வாவதுனு
னுணர்பவனுன்
சான்றங்காகி யெப்பொருட்குஞ் சலியாதென்று
நிற்பேனுன் 115

(இ - ள்)

| | |
|---|---|
| தோன்றுகின்ற ஒளி அவை நான் | விளங்காநின்ற பிரகாசமும் நானே |
| தொடர்ந்தே செறியும் இருளது நான் | நிபுட (நெருக்க) மாகப் பொருந்திருக்கின்ற இருளும் நானே |

| | |
|---|---|
| ஆன்று அங்கு அமைந்தோர் உளம் மேவி அறிவாய் நின்றே அறிபவன் நான் | அறியவேண்டியதை அறிந்து அடையவேண்டியதை அடைந்து இருக்கின்ற மகான்களது உள்ளத்திற் பொருந்தி சாக்ஷியாயிருந்து சர்வத்தையும் அறிபவன் நானே |
| ஊன்றும் பொருள்கள் மேலோடும் உணர்வு ஆவது நான் | நிலைபெற்ற சப்தாதி விஷயங்களிற் செல்லும் விருத்தி ஞானமும் நானே |
| உணர்பவன் நான் | அந்த ஞானத்தின் ஞாதாவும் நானே |
| எப்பொருட்கும் அங்கு சான்று ஆகி சலியாது என்றும் நிற்பேன் நான் | சர்வ பதார்த்தங்களுக்கும் அங்கங்குச் சாக்ஷியாய் அசலமாய் முக்காலத்து மிருப்பவன் நானே |

பாடு மிசையா யவ்விசையின் பயனா யறிந்து நிற்பேனான்
கூடுங்கந்தம் பலவாயும் கொள்வானாயு முள்ளேனான்
காடுங் கல்லும் மலைபலவுங் கடமுபடமு மாவேனான்
நீடும் பொருளா யெவ்விடத்து நிறைந்த வொளியாய்
நிகழ்பவனான். 116

(இ – ள்)

| | |
|---|---|
| பாடும் இசையாய் அவ் விசையின் பயனாய் அறிந்து நிற்பவன் நான் | பாடும்படியான சப்த கானமும் அந்தச் சப்தச் சுகமாயிருப்பவனும் அந்தச் சுகானுபவ போக்தாவும் நானேயாம். |
| கூடும் கந்தம் பலவா யும் கொள்வானாயும் உள்ளேன் நான் | வாயுவசத்தால் ஒருங்கு சேரும் பலவித வாசனைகளாயும் அவ்வாசனைகளை கிரகணஞ்செய்யும் கர்த்தா வாயுமுள்ளேன் நான் |
| காடும் கல்லும் மலை பலவும் கடமும் படமும் ஆவேன் நான் | வனமும் கற்களும் அநேக பர்வதங்களும் கடமும் படமும் ஆயிருப்பவனும் நானே |
| நீடும் பொருளாய் எவ் விடத்தும் நிறைந்த ஒளியாய் நிகழ்பவன் நான் | (கடலும் தடாகமும் மேகமும் ஆகிய விரிந்த பதார்த்தங்களாயிருப்பவனும் நானே எவ்விடங்களிலும் பூரணப்பிரகாசமாய் விளங்குகின்றவனும் நானே. 116 |

அளவையோடங் கறிவானு யறியும் பொருளுமாவேனுன்
உளவஞ்ஞான ஞானமென வுரைக்கு முண்மைப் பொருளவை
நான்
விளையுங்கன்ம சுகதுக்க மேவுங்கால மாவேனுன்
உளம தார வுணர்கின்ற சுவையாருகி யுள்ளேன்நான். 117

(இ - ள்)

| | |
|---|---|
| அளவை ஓடும் அங்கு அறிவானும் அறியும் பொருளும் ஆவேன் நான் | * பிரமாணத்தோடு அங்குற்ற பிரமாத பிரமேயமாகிய திரிபுடியா யிருப்பவனும் நானே |
| உள அஞ்ஞானம் ஞானம் என உரைக் கும் உண்மைப் பொருள் அவை நான் | ஞானவஞ்ஞான ரூபமான பாவ பதார்த்தங்களாயுள்ளவனும் நானே |
| விளையும் கன்ம சுக துக்கம் மேவும் காலம் ஆவேன் நான் | ஜீவர்களது முக்கரணங்களாலுண் டாகும் சுபாசுப கர்மங்களும் அதன் பிரயோஜன ரூபமான சுகதுக்கங் களும் பொருந்தா நின்ற காலமும் ஆவேன் நானே |
| உளமது ஆர உணர் கின்ற சுவை ; ஆறும் ஆகி உள்ளேன் நான் | மனம் பொருந்தி யறியும்படியா யிருக்கின்ற சட்வித ரசமாயிருக் கின்றவனும் நானே. |

117

* பிரமையின் கரணம் பிரமாணம். பிரமை பிரமாணத்தால் உண்டாகும் ஞானம். கரணம் சிறந்த காரணமாம்.

1. கட முதலியவற்றின் ஞானத்தில் கண் முதலிய ஞானேந்திரியங்களே பிரத்தியட்சப் பிரமாணங்களாம். இது கடமென்று கண்ணினல் அறியும்போது அக்கண்ணிந்திரியமே பிரமாணமாம். கடம் பிரமேயமாம். அதன் ஞானம் பிரமையாம். மற்ற இந்திரியங்களிலும் இவ்விதமே அறியவும். பிரத்தியட்சப் பிரமையின் கரணம் பிரத்தியட்சப் பிரமாணமாம். பத்தாமவன் நீ. தத்துவமசி என்றல் முதலியவிடத்து சத்தமும் பிரத்தியட்ச ஞான கரணமாம்.

2 அநுமிதிப் பிரமையின் கரணம் அநுமானப் பிரமாணமாம்; இலிங்க ஞானத்தால் தோன்றும் ஞானம் அநுமிதியாம். இம்மலை புகையுடைதென்று மலையில் புகையின் பிரத்தியட்ச ஞான முண்டான விடத்துத் தீயின் ஞானமுண்டாகின்றது. ஈண்டுப்புகையின் ஞானம் இலிங்க ஞானமாம். அஃது அநுமானப் பிரமாணமாம்;

அதனு

லுண்டாகும் தீயின் ஞானம் அநுமிதியாம். அவ்வநுமானம், பிரதிஞ்ஞை, ஏது, திருஷ்டாந்தமென மூன்றவயவ முடையதாம். அம்மூன்றனுள் இம்மலை நெருப்புடையது என்பது பிரதிஞ்ஞை, புகையுடைமையால் என்பது ஏது, மடைப்பள்ளி (சமையலறை)போல என்பது திருஷ்டாந்தம். அவ்வநுமானம் அந்நுவயம், வெதிரேகம், பூர்வக்காட்சி, கருதல் ஆகமமென்பனவாம். மனனத்தில் உபயோக மாம்.

3. சாப்திப் பிரமையின் கரணம் சப்தப் பிரமாணமாம், எதார்த் தத்தைக் கூறுவோன் வாக்கியம் சப்தப் பிரமாணமாம். அதனல் உண்டாம் ஞானம் சாப்திப் பிரமையாம் இங்குப் பரமேஸ்வரனல் சொல்லப்பட்ட வேதங்களும் அவற்றை மூலமாகவுடைய சாஸ்திரங் களும் பிறவும் சப்தப் பிரமாணங்களாம். வச்சிர அஸ்தன் புரந்தரன் என்பது வைதிக வாக்கியமாம். ஆற்றங்கரையில் பழங்கள் பழுத் திருக்கின்றன என்பது லௌகிக வாக்கியமாம். மகாவாக்கிய உப தேசவாயிலாக அபரோட்சத்தில் உபயோகம்.

4. அருத்தா பத்தியின் கரணம் அருத்தாபத்திப் பிரமாணமாம். அர்த்தாபத்தி யென்பது, அர்த்தஸ்ய ஆபத்தியெனப் பிரிபடும். அதனர்த்தம் பொருளின் கற்பனை யென்பதாம். அது காட்சிப் பொருட்பேறு கேள்விப் பொருட்பேறு என்று இருவகைப்படும்.

பகற்பொழுது உணவுண்ணுதவன் உடம்பு பருத்திருத்தல் கண்டு அவனது உடம்பு பருத்திருத்தற்குக் காரணம் அவன் இர வின்கண் போஜனம் கரந்துண்பன் என்று அவனிடத்து இராப் போஜனத்தை கற்பிக்குமிடத்து, பருத்திருத்தல் இரவுண்டலால் பொருந்துமன்றி வேறோர் விதத்தால் பொருந்தாதென்பது பெறப் படுவதாம். இங்கு பருமை பொருந்தாமையால் இரவுண்டல் கற் பிக்கப்படுதலின் பருமை பொருத்தமின்மையின் ஞானம் காட்சி அருத்தா பத்திப் பிரமாணமாம் இரவுண்டலை கற்பித்தல் காட்சி அருத்தாப் பத்தி பிரமையாம். தேவத்தன் வீட்டிலில்லை என்னும் வசனத்தால் வேறிடத்தில் சென்றிருப்பன் என்றுணர்தல் கேள்வி அருத்தா பத்திப் பிரமாணமாம். மனனத்தில் உபயோகம்.

5. உவமிதி பிரமையின் கரணம் உவமானப் பிரமாணமாம். ஆவையொக்கும் ஆமா (காட்டுப்பசு) என்னும் வாக்கியத்தை வன வாசி சொல்லக் கேட்ட ஒருவன் ஓர்கால் தான் சென்ற காட்டில் ஆமாவைக் கண்டவிடத்து அவனுக்கு ஆமாவின் கண்ணுள்ள ஆ ஒப்புமை ஞானத்தால் ஆவின்கண் ஆமாவின் ஒப்புமை உண்டாவ தாம் இங்கு ஆமாவில் ஆ வொப்புமையின் ஞானம் உவமானப் பிரமாணமாம். ஆவில் ஆமாவின் ஒப்புமை ஞானம் உவமிதியாம். பேதசகித சமான தருமம் ஒப்புமை எனப்படும். திருஷ்டாந்த வாயி லாக உபாசனையிலும் மனனத்திலும் உபயோகமாம்.

தேவ ரெல்லா மாவேனுன் றிகழு நரரா யுள்ளேனுன்
யாவரேனுங் கருவாகி யிடுதற் கிசைந்தே யிருப்பவனுன்
பாவபேத புணணியங்கள் பலன்கள் சுவர்க்கமாவேனுன்
மேவியடையும் புத்திநான் வீழுநிரய மாவேனுன். 118

(இ - ள்)

| | |
|---|---|
| தேவர் எல்லாம் ஆவேன் நான் | இந்திராதி சர்வ தேவதைகளும் நானுகின்றேன்)(ருத்ரனும் விஷ்ணுவும் பிரஹ்மாவும்) |
| திகழும் நரராய் உள்ளேன் நான் | விளங்குகின்ற மனிதர்களும் நானே |
| யாவரேனும் கருவா யிருப்பதற்கு இசைந்தே இருப்பவன் நான் | யாவர்களும் கருவாயுற்பவித்தற்கு ஏதுவான சர்வசாதனமாகப் பொருந்தியிருப்பவனும் நானே |
| பாவபேத புண்ணியங்கள் | பரஸ்பரம் பேத மாயிருக்கின்ற பாவ புண்ணியங்களும் |
| பலன்கள் சுவர்க்கம் ஆவேன் நான் | அதன் பலனுன சொர்க்கலோகமும் ஆயிருப்பவனுனே |
| மேவி அடையும் புத்தி நான் | பொருந்தியடைகின்ற போகமும் நானே |
| வீழும் நிரயம் ஆவேன் நான் | வீழும்படியா யிருக்கின்ற பலவித நரகங்களாயிருப்பவனும் நானே. |

118

கரணம்பன்னுன் காவேனுன் கரணியாய காரணனுன்
சரணந்தருதே சிகனுகித் தன்னுள் ளடங்குந் தன்மையனுன்
புரணந்திகழ்பே ரொளியோவாப் போதமாய பூரணனுன்
கரணங்கடந்த வெனையென்றுங் காண்பார் காணப்படுவேனுன். 119

6. அபாவப் பிரமையின் கரணம் அநுபலத்தி பிரமாணமாம். அபாவத்தின் யதார்த்த ஞானம் எதனுலுண்டாகின்றதோ அஃது அநுபலத்திப் பிரமாணமாம். அபாவம் இன்மை உபலத்தி-விளக்கம் அநுபலத்தி-விளங்காமை.

ஒருவனுக்கு இந்நிலத்தில் கடமில்லை என்னும் காரணத்திஞல் ஈண்டுக் கடமில்லை யென்னும் ஞானம் உண்டாவதாம். அந்த ஞானமுண்டாவதற்குக் காரணம் அந்தக் கடத்தின் விளங்காமையாகிய அபாவமாம் இங்கு கடத்தின் விளங்காமை யென்னும் அபாவம் அநுபலத்திப் பிரமாணமாம் கடமில்லை யென்னும் யதார்த்தஞானம் அபாவப் பிரமையாம். மனனத்தில் உபயோகம்.

(இ - ள்)

| | |
|---|---|
| கரணம் பன்னுன்கு ஆவேன் நான் | மனமுதலிய அந்தக்கரண நான்கும் ஞானேந்திரிய கர்மேந்திரியம் பத்தும் ஆக பதிநான்கு கரணங்களாக விருப்பவனும் நானே |
| கரணி ஆய காரணன் நான் | கரணத்தை யுடையவனுனவக் காரணனுவேன் |
| சரணம் தருதேசிகன் ஆகி தன்னுள் அடங்கும் தன்மையன் நான் | அடைந்தவர்களுக்குச் சரணுகதியைக்கொடுக்கின்ற ஞானுசாரியனுயிருப்பவனும் (நானே) அவனிடத்திலடங்கும்படியான சீடனும் நானே |
| புரணம் திகழ்பேர் ஒளி ஓவாப்பேதம் ஆய பூரணன் நான் | பூரணமாய் விளங்கும் உயர்ந்த பிரகாசம் மாறுபடாத ஞானமாகிய பரிபூரண சொரூபனும் நானே |
| கரணம் கடந்த எனை என்றும் காண்பார் காணப்படுவேன் நான் | பாகிய அந்தக் கரணங்களாலறிய முடியாதவனும் பார்க்க யோக்கியதையுடைய ஞானிகளாலறியப்பட்டவனும் நானே. 119 |

நாதமாகி மந்திரங்கள் நானாவாகி யுள்ளேனுன்
பேதமாகி நினைத்திருந்து பேணுந்தியான மாவேனு
னேதலாகு மவத்தைபல வொன்ரு யறிவாயுள்ளேனுன்
ஏதமில்லா வெப்பொருட்கு முன்னே யிலங்கியிடுபவனுன். 120

(இ - ள்)

| | |
|---|---|
| நாதம் ஆகி மந்திரங்கள் நாநாவாகி உள்ளேன் நான் | சப்தரூபமான பிரணவாதி மந்தரங்களாயிருப்பவனும் நானே |
| பேதம் ஆகி நினைத்திருந்து பேணும் தியானம் ஆவேன் நான் | பேதரூபமாக சிந்திக்கும்படியான * பிரதீகத் தியானமும் நானே |
| ஓதல் ஆகும் அவத்தை பல ஒன்ருய் அறிவாய் உள்ளேன் நான் | நனவு கனவு றக்கம் துரியம் துரியாதீதம் என்று கூறும் ஐந்தவஸ்தங்களானவனும் அவ்வவஸ்தைகளை யறியும் ஏகரூபமான சாக்ஷியும் நானே |

* ஒன்றைப் பிறிதொன்ருக தியானிப்பது. அது சாலிக்கிராமத்தை விஷ்ணுவாகவும், சிவலிங்கத்தை சிவபெருமானுகவும் தியானித்தலாம்.

| | |
|---|---|
| ஏதம் இல்லா எப் பொருட்கும் முன்னே இலங் கியிடுபவன் நான் | தோஷ ரகிதமான சர்வ பதார்த்தங் களுக்கும் ஆந்தரமாக விளங்கப் பட்டவனும் நானே யாம் |

120

யாதொன்றருத்த முண்டில்லை யென்றுமுரைக ளிரண்டினுக்கும்
யாதொன் றருத்தந் தோன்றுமென்றுந் தோன்ருதென்றுஞ்
சொல்லுதற்கும்
தீதொன்றின்றி யிவையனைத்துந் திகழுமென்ற னுருவென்றே
யோதுமைய மோரிடத்துமுளதன் றுண்மை யுரைத்திடுங்கால்.
121

(இ - ள்)

| | |
|---|---|
| உண்டு இல்லை என்னும் உரைகள் இரண்டினுக்கும் யாதொன்று அர்த்தம் | அஸ்தி நாஸ்தி (இருக்கிறதில்லை) யென்கின்ற இருவித சப்தார்த்தங் களுக்கும் யாதொன்று பொருளோ (அதுவும்) |
| தோன்றும் என்றும் தோன்ருது என்றும் சொல்லுதற்கு யாதொன்று அருத்தம் | பானம் அபானம் (விளக்கம் விளக்க மின்மை) யென்னு மிருபதங்களுக் கும் யாதொன்று பொருளோ (அதுவும்) |
| இவை அனைத்தும் தீது ஒன்று இன்றி திகழும் என்றன் உருவு என்றே ஓதும் | ஆய இவை யாவும் நிர்தோஷமாக விளங்குகின்ற எனது வடிவ மென்றே வேதங்கள் பிரதிபாதியா நிற்கும் |
| உண்மை உரைக்கும் கால் | உண்மையாகக் கூறுமிடத்து |
| ஐயம் ஓரிடத்தும் உளது அன்று | யாண்டுஞ் சமுசயமில்லையாம் |

யாதினை நித்த முள்ள புத்தமே சுத்த மென்றிங்
கோதிடு மறைதா னென்ற னுண்மையே திகழும் வண்ணம்
தீதினை யொழிந்த திந்தப் பூரண மதுவே யாமென்
ருேதிடு மெய்யே யிங்கோர் ஐயமு முள்ள தன்றே.

122

(இ - ள்)

| | |
|---|---|
| யாதினை நித்தம் உள்ள புத்தமே சுத்தம் என்று | எவ்வஸ்துவை அபாவங்களற்ற சதோதயமாயும் விருத்திஞானம் போல் தோன்றிக் கெடாதுள்ள சொரூபஞானமாயும் சீவேசுரசெகத்தான 35 தத்துவங்களுக்குள்ள அசுத்தமின்றிய தென்பதாக |
| இங்கு என்றன் உண்மையே திகழும் வண்ணம் மறைதான் ஓதிடும் | இவ்விடத்தெனது எதார்த்தத் தன்மை விளங்குமாறு வேதமானது பிரதிபாதிக்குமோ |
| தீதினை ஒழிந்த அந்த இது பூரணமேயாம் என்றும் ஓதிடும் | குற்றமற்ற அந்த இப் பிரஹ்ம வஸ்துவே பூரணமாமென்று மீட்டும் சுருதி கூறுகின்றது |
| மெய்யே இங்கு ஓர் ஐயமும் உள்ளது அன்று | இது சத்தியமே இதில் கிஞ்சித்தும் சம்சயமே யில்லையாம் 122 |

அகமென வறியப்பட்டு நிற்கின்ற பொருளு மாகித்
தகைமையி லிதமென் றுன்னத் தக்கவிப் பொருளு மாகிச்
சுகமுடை சற்சித் தாமென் னுருவமே தோன்று மென்று
மிகவுரை செய்ய லுற்றான் வேறுரு விலாத வண்ணம். 123

(இ - ள்)

| | |
|---|---|
| அகம் என அறியப் பட்டு நிற்கின்ற பொருளும் ஆகி | நானென்றறியத்தக்க வஸ்துவுமாய் |
| தகைமையால் இதம் என்று உன்னத்தக்க இப்பொருளும் ஆகி | மேன்மையில்லாத இதுவென்று கருதத்தக்க வஸ்துவுமாயும் |
| சுகம் உடை சத் சித்து ஆம் என் உருவமே தோன்றும் என்று | ஆனந்தா பேதமுடைய சத்துச் சித்து வடிவ எனது சொரூபமே விளங்குமென்று |
| வேறு உருவு இலாத வண்ணம் மிக உரை செய்யலுற்றான் | தன்னிலும் பின்னமாக ஓர் வஸ்து வில்லாதபடி மிகவும் கூறத் தொடங்கினார் 123 |

நானே முழுதும் எனையொழிய நாடிற் சிறிதும் வேறில்லை
யான பொருளை யருமறைதா னறையும் படியா னதினுலும்
யானு மிசைத்த படியாலு மிதுவே திடமா யுளபொருடா
னூன மின்றி நான்முகனு முரைத்த துங்கட் குண்மையஃதே 124

(இ - ள்)

| | |
|---|---|
| முழுதும் நானே<br>நாடில் எனை ஒழிய<br>சிறிதும் வேறு இல்லை | எல்லாமும் யானே ஆராயுமிடத்து<br>என்னையன்றி கிஞ்சிற்றும்<br>பின்னமாகவில்லை |

[எக்காரணத்தால் (நானேயன்றி ஒரு சிறிதும் வேறில்லையென்ற) என்னுடைய நிச்சயம் இந்த ரூபமோ அக்காரணத்தால் சர்வாத்மத் தன்மையைப் பிரதிபாதிக்கும் சுருதியும் அவ்வர்த்தத்தைக் கூறும் பிரஹ்மாவும் ஆகிய இருவரும் சத்தியவாதிகளென உறுதிப்படுத்துகின்ருர்.]

| | |
|---|---|
| ஆனபொருளை யானும்<br>இசைத்தபடியாலும் | இவ்வாருன பரமாத்வைத<br>வஸ்துவை பரசிவனுய நானும்<br>கூறினபடியாலும் |
| அருமறைதான் அறை<br>யும்படி ஆனதினுலும் | அறிதற்கரிய வேதங்கள்<br>பிரதிபாதித்தபடியினுலும் |
| இதுவே திடமாய் உள<br>பொருள் | இதுவே சித்தாந்தமாயுள்ள<br>வஸ்து |
| ஊனம் இன்றி நான்<br>முகனும் உங்கட்கு<br>உரைத்த இது<br>உண்மை | பிரஹ்மாவும் தோஷமின்றியதால்<br>தேவர்களாயவுங்களுக்குக் கூறிய<br>இவ்வர்த்தம் சத்தியம் (ஏ - அசை)<br>124 |

இப்பொருளையப் பட்டோர் இறப்பர்கள் கணத்தின் மெய்யே
மெய்ப்படு பொருளை யென்றும் விடுத னிச்சயமதாகும்
இப்பொருளையமின்றி யறிந்தவன் பவபாசத்தை
மெய்ப்பட வொழித்து மேலா மொளியினை யடையு மன்றே 125

(இ - ள்)

| | |
|---|---|
| இப்பொருள் ஐயப்பட்<br>டோர் இறப்பர்கள்<br>கணத்தில் மெய்யே | இவ்வபேதரூப வஸ்துவில் சம்சய<br>மடைந்தோர் அந்தக் க்ஷணமே<br>(க்ஷணேக்ஷிணே) நாசத்தை<br>யடைவார்களிதுவே சத்தியம் |

| | |
|---|---|
| மெய்ப்படு பொருளை என்றும் விடுதல் நிச்சயமதாகும் | பரமாத்ம வஸ்துவின் தரிசனத்தை என்றும் நீங்கியிருத்தல் நிச்சயமாம் |
| இப்பொருள் ஐயம் இன்றி அறிந்தவன் | (பிரத்தியகபின்ன பரமாத்வைத) இவ் வஸ்துவை சம்சயமின்றி தெரிந்தவன் |
| பவபாசத்தை மெய்ப் பட ஒழித்து மேலாம் ஒளியினை அடையும் | ஜனன மரண ரூபபந்தத்தை உண்மையாக விலக்கி உயர்வாகிய ஜோதி சொரூபத்தை அடைவன் (அன்று ஏ - அசை) 125 |

(அ - கை) சூதமகா முனிவர் வாக்கியம்.

பாசமோ சகனு மீசன் பகர்ந்தருள் செய்து தன்னை
நேசமோ டயன்மாறம்மை நீடுறத் தழுவிக் கொண்டு
வாசிலா வமரர் தம்மை யருட்கணு லமைத்து நோக்கிச்
சோதியானந்த வெள்ளச் சுகரூப ராமினென்றான் 126

(இ - ள்)

| | |
|---|---|
| பாசமோசகனும் ஈசன் தன்னைப் பகர்ந்து அருள் செய்து | சீவர்களது அஞ்ஞானத்தை நிவர்த்திப்பவனாகிய பரமேஸ் வரன் தனது சொரூபத்தைச் சர்வான்மகமாக வுபதேசித்து |
| நேசமோடு அயன் மால் தம்மை நீடுறத் தழுவிக்கொண்டு | அன்போடு பிரஹ்மா விஷ்ணுக் களை கட்டியாலிங்கனஞ் செய்து கொண்டு |
| ஆசிலா அமரர் தம்மை அருள்கணால் அமைத்து நோக்கி | குற்றமற்ற தேவர்களை கிருபா திருஷ்டியால் பொருந்தப் பார்த்து |
| சோதி ஆனந்த வெள்ளச் சுகரூபர் ஆமின் என்றான் | ஹேதேவர்களே சிதானந்த சாகர மான இன்ப வடிவத்தை அடை யுங்களென்று கூறினார் 126 |

சாந்தமெய்க் கருணை மேனிச் சம்புவை யமர ரெல்லாம்
ஆய்ந்தபே ரன்பினாலே யடியிணை மலர்க டம்மே
லேய்ந்தமா மலரு நீரு மிலையொடு பலமுங் கைக்கொண்
டாய்ந்தனை யிறைஞ்சி யேத்தி யருச்சனை செய்து நின்றார். 127

(இ - ள்)

| | |
|---|---|
| அமரர் எல்லாம் பேர் அன்பினுலே | தேவர்களனைவோர்களும் மிகுந்த அன்பினுலே |
| சாந்த மெய்க் கருணை மேனிச் சம்புவை | சாந்தமும் உண்மையான கிருபையுமே வடிவமான பரமேஸ்வரனது |
| ஆய்ந்த இணை அடி மலர்கள் தம்மேல் | (வேதாகம புராணுதிகளால்) ஆராய்ந்து கொண்டிருக்கின்றவுபய திருவடித் தாமரைகளின் மீது |
| ஏய்ந்த மாமலரும் நீரும் இலையொடு பலமும் கைக்கொண்டு | வாசனை பொருந்திய பெருமையான புட்பங்களும் ஜலமும் பத்திரங்களும் பழவர்க்கங்களும் கைப்படையாகக் கொண்டு |
| ஆய்ந்தனை இறைஞ்சி ஏத்தி அருச்சனை செய்து நின்ருர் | தத்தமக்கு இயன்றவாறு நமஸ்கரித்துத் துதித்து அர்ச்சனையாதிகள் செய்து சந்நிதா[illegible]த்தில் நின்ருர்கள். |

127

உலகமியாவு மளந்தருளு முலப்பில் கீர்த்தி நாரணனும்
இலகுந் தனது காரணமா மீசன்பாத பங்கயத்தைத்
தலையின் மிசையே வைத்தருளி தரியா வன்பாற் ருனழிந்தான்
மலரில் மிசையோ னவ்வடிகண் மறந்தே தன்னை
வைத்திருந்தான். 128

(இ - ள்)

| | |
|---|---|
| உலகம் இயாவும் அளந்தருளும் உலப்பு இல் கீர்த்தி நாரணனும் | சர்வலோகங்களையும் மூன்றடியாக அளக்கும்படியான கெடாத பெருமையுடைய நாராயணனும் |
| இலகும் தனது காரணமாம் ஈசன் பாத பங்கயத்தை | விளங்கா நின்ற தனது காரணமாகிய பரமேஸ்வரனது திருவடித் தாமரையை |
| தலையின் மிசையே வைத்தருளித் தரியா அன்பால் தான் அழிந்தான் | சிரத்தின் மீது தரித்துக் கொண்டு மிகுந்த பத்தியால் (அடங்காத அன்பினுல்) தன்னை மறந்தனன் (பரவசமாயினன்) |

| | |
|---|---|
| மலரின் மிசையோன் அவ்வடிகள் வைத்து தன்னை மறந்திருந் தான் | கமலாசனராகிய பிரஹ்மாவும் அத் திருவடிகளை சிரசில் சூட்டிக் கொண்டு தன்னை மறந்திருந்தார். 128 |

தேவர்க்கு தேவ னய பெருமான்றன் கழல் செறிந்த
யாவர்க்கும் பாச நீக்கி யெடுத்திட லியல்பா யுள்ளோன்
மூவர்க்குந் தெரியாவுண்மைப் பொருளான தற்பாவத்தை
யாவர்க்குந் தெரியும் வண்ணம் இன்பக்கூத் தாடலுற்ருன். 129

(இ - ள்)

| | |
|---|---|
| தேவர்க்கும் தேவன் ஆய பெருமான் தன் கழல் செறிந்த | தேவர்களுக்கெல்லாம் தேவனு யிருக்கின்ற எம்பெருமானுடைய சரணரவிந்தம் கதியென்றடைந்த |
| யாவர்க்கும் பாசம் நீக்கி எடுத்திடல் இயல்பாய் உள் ளோன் | அதிகாரிகளனைவருக்கும் அஞ்ஞா னத்தை நீக்கி (பிறவிக்கடலினின் றும்) எடுப்பதே தனக்குச் சுபாவ மாயுள்ள பரமேஸ்வரன் |
| மூவர்க்கும் தெரியா உண்மைப் பொருள் ஆனதற் பாவத்தை | மும்மூர்த்திகளுக்கும் அறியாத தாகிய உண்மையான தனது சுபா வத்தையுடைய சொரூபத்தை |
| யாவர்க்கும் தெரியும் வண்ணம் இன்பக் கூத்து ஆடல் உற்ருன் | சகல தேவர்களுக்குந் தெரிந்து கொள்ளும்படி ஆனந்த நிர்த்த னஞ் செய்ய ஆரம்பித்தார். 129 |

மேலா யருள்சேராகரமாய் வேறென் றிடுதற் கரியவளும்
கோலா லளவில் பேரன்பாற் கூத்தன் றனையே பார்த்தருளிக்
காலா லாடத் தனக்கிசையக் கையாற் ருளக் கதிசெய்ய
மாலா முதலாம் வானோர்கள் வலவா மகிழ்வா லாடினரால். 130

(இ - ள்)

| | |
|---|---|
| மேலாய் அருள் சேர் ஆகரமாய் வேறு என் றிடுதற்கு அரியவளும் | பரையாயும் கிருபா சாகரமாயும் பர மேஸ்வரனுக்கு அபின்னமாயிருக் கின்ற உமா மகேஸ்வரி யானவள் |
| கோலால் அளவு இல் பேர் அன்பால் கூத் தன் தனையே பார்த் தருளி | பிரமாணங்களாலளவிட்டறிதற்கு முடியாததான மிகுந்த கிருபை யால் நடராஜப் பெருமானையே தெரிசித்துக் கொண்டு |

| | |
|---|---|
| காலால் ஆடத் தனக் கிசையக் கையால் தாளக் கதி செய்ய | பரசிவ நிர்த்தனத்திற்குத் தக்கபடி தனது திருக் கரங்களால் தாளம் போடவும் |
| மாலாம் முதலாம் வானோர்கள் வலமாம் மகிழ்வால் ஆடினர் | விஷ்ணு முதலிய தேவர்கள் தத்தம் சக்தியனுசாரம் சந்தோஷத்தினால் ஆடினார்கள். 130 |

பேரா னந்தக் கடலாய பெருமான் பிணங்கு தேவர்பிரான்
பாரா வெல்லா வமரரையும் பரிந்துள் ளுவகை கூர்ந்தெவர்க்குந்
தீரா வின்ப மளித்தருளித் தெரிவை யொருபா லுடனாகி
யாரா லறியா வறிவுருவோ னாங்கே யறிவிற் கரந்தனனால்.
131

(இ - ள்)

| | |
|---|---|
| பேரானந்தக் கடல் ஆய பெருமான் பிணங்கு தேவர் பிரான் | பிரஹ்மானந்த சமுத்திரமாயும் நெருங்கிய தேவர்களுக்கு பிரானா யுமிரா நின்ற பரமேஸ்வரன் |
| பாரா எல்லா அமரரையும் பரிந்து உள் உவகை கூர்ந்து | திருக்கண்ணால் பார்த்து சர்வ தேவர்களையும் பரிந்துள்ளே மிக்க கிருபை கூர்ந்து |
| எவர்க்கும் தீரா இன்பம் அளித்து அருளி | யாவர்க்கும் கெடாத மோக்ஷானந்தத்தைக் கொடுத்தருளி |
| தெரிவை ஒருபால் உடன் ஆகி | உமா மகேஸ்வரியை ஒப்பற்ற விடப் பாகத்திலுடையவனாயும் |
| யாரால் அறியா அறிவு உருவோன் ஆங்கே அறிவில் கரந்தனன் (ஆல்=அசை) | (அறிவித்தாலன்றி) யாராலு மறிதற் கசக்கியமான சேதன சொரூபனும் அவ்விடத்திலே தனது சாமானிய சேதன சொரூபத்தில் மறைந்து விட்டனனென்பதாம். 131 |

அரியு மயனை யணைத்துக்கொண்டமரர் முனிவர் தமையெல்லாம்
தெரிய வன்பான் மிகநோக்கி சித்தங் களிகூர்ந் துண்மகிழா
வுரிய வுலகங் தணியிலுமா முலப்பில் பெருஞ்சீர் வைகுண்டத்
தரிவை மல்ர்மே லவளோடு மரவி னணையோ னமர்தனனால்.
132

(இ - ள்)

| | |
|---|---|
| அரியும் அயனை அணைத்துக்கொண்டு அமரர் முனிவர் தமை எல்லாம் | (சேஷசாயி யாய) விஷ்ணுவும் சந்தோஷத்தோடு பிரஹ்மாவை ஆலிங்கனஞ் செய்து கொண்டு இந்திராதி தேவர்களையும் வியாசாதி முனிவர்களையும் |
| தெரிய அன்பால் மிக நோக்கி சித்தம் களிகூர்ந்து உள்மகிழா | மிகுந்த கிருபையால் பார்த்து விட்டு திருவுள்ளத்தில் மிக்க சந்தோஷமுடையவராய் |
| உரிய உலகம் தணியிலும் ஆம் | புண்ணியவான்கள் அடைய யோக்கியமான தேவருலகம் நசித்தாலும் |
| உலப்பில் பெரும் சீர் வைகுண்டத்து அரிவை மலர்மேல் அவளோடும் அரவின் அணையோன் அமர்ந் தனன் | கெடாத பெருமையை யுடைய வைகுண்டத்தின் கண் செந்தாமரை ஆசனமாகவுடைய மகாலட்சுமி தேவியோடு விஷ்ணு வானவர் அமர்ந்திருந்தார் (ஆல் - அசை) 132 |

அயனுமீண் டதிச யத்தா லவசமா யழிந்து பின்னும்
பயனுறு மமரர் தம்மை பார்த்துமுன் பரிவினாலே
வயமெலா முளதாய்ச் செய்யு மலர்மிசை மறையினோனுந்
தனதுவாய் திறந்து வார்த்தை யுரைத்தனன் றழைக்கும்
வண்ணம் 133

(இ - ள்)

| | |
|---|---|
| எலாம் வயம் உளதாய் செய்யும் மலர்மிசை மறையினோனும் | அனைத்தும் தன்வச முள்ளதாகப் படைப்பவனும் தாமரை மலரிலிருப்பவனும் வேதத்தை வெளியிட்டவனுமாகிய |
| அயனும் மீண்டும் அதிசயத்தால் அவசமாய் அழிந்து | பிரஹ்மாவும் திரும்பவும் பேருவகையால் பரவசனாய் தேகத்தை மறந்து |
| பின்னும் பயன் உறும் அமரர் தம்மைப் பார்த்து | மேலும் பரமேஸ்வர தெரிசனரூபப் பெரும் பேறடைந்த தேவர்களைப் பார்த்து |

| | |
|---|---|
| பரிவினுலே தழைக்கும் வண்ணம் | சிரத்தையினுலே அவர்கள் மேன்மையை அடையுமாறு |
| முன் வார்த்தை தனது வாய் திறந்து உரைத்தான் | பூர்வம் உபதேசித்த உபநிஷ தார்த்த சேஷத்தைத் தனது திரு வாக்கால் உபதேசிக்கத் தொடங்கினுர் 133 |

(அ – கை) சாந்தோக்கியத்தில் ஏழாவது அத்தியாயத்தில் யாதொரு பூமா வித்தையானது சனற்குமாரரால் நாரதர் பொருட்டு உபதேசிக்கப்பட்டதோ அதைச் சங்கிரகித்துச் சொல்ல இச்சித்து அதில் ஆத்ம வித்தையினும் வேருய வித்தைகளுக்கு சொரூபக் ஞானத்தை யுண்டு பண்ணுந் தன்மை யின்மையால் மாருக கிரந்தம் அதன் அர்த்தம் ஆகிய இவற்றின் தாரண நிமித்தமாகிய துக்க ஏதுத் தன்மையே உளதென்று யாதொன்று கூறப்பட்டதோ அதைச் சங்கிரகித்துக் கூறுகின்ருர்.

மாநுடர் ஆனே ரெல்லா மோதிடும் விச்சை யெல்லாம்
ஊனமாய் பாச பெத்தமாக்கிடு முண்மை யாக
தானதா மறிவாம் விச்சையொன்றுமே பாச மான
வீனமா மிருளை நீக்கு மின்பநற் சோதி யொன்றும் 134

(இ – ள்)

| | |
|---|---|
| மாநுடர் ஆனேர் என்றும் ஓதிடும் விச்சை எல்லாம் | மனுஷியர்களுக்கு எப்போது உப நிஷத்திற்கு வேருகக் கூரு நின்ற வித்தைகளனைத்தும் |
| ஊனம் ஆய் பாச பெத்தம் ஆக்கிடும் | தோஷமுடையதாய் சம்சார ரூப மான பந்தத்தை யுண்டு பண்ணும் |
| தான் அது ஆம் அறி வாம் விச்சை ஒன்றுமே உண்மை ஆக | தான் பிரஹ்மமா மென்னும் ஆத்மக்ஞானமாகிய வித்தை யொன்றே சத்தியமாய் |
| பாசம் ஆன ஈனம் ஆம் இருளை நீக்கும் இன்ப நல் சோதி ஒன்றும் | சம்சார காரணமான தோஷ முடைய அஞ்ஞானத்தைநீக்குவதும் நிரதிசயானந்த ரூபமாயும் சுயஞ் சோதியாயும் உள்ள பிரஹ்மத்தை அடையச் செய்வதுமாம் |

(அ - கை) தானாகின்ற ஆன்ம வித்தைக் கன்னியமான வித்தைக்கும் சம்சாரத்தை நிவர்த்திக்கும் தன்மை ஏனில்லை என்ற சங்கைக்குக் கூறுகின்றார்.

தானாகு மறிவொன் றில்லா தவனுக்குத் துன்ப வாழி
தானேயுண்டாவ தென்றுந் தான்றனிற் றழைத்துள்ளோர்கட்
கானதெவ் வுருவு மாகி யல்லவா மறிவாஞ் சோதி
தானாகும் வீடே யாதற் சங்கையொன் றில்லை யன்றே 135

(இ - ள்)

| | |
|---|---|
| தானாகும் அறிவு ஒன்று இல்லாதவனுக்கு துன்பமாம் ஆழி தானே என்றும் உண்டாவது | ஆத்ம ஞானமில்லாதவனுக்கு துக்க சாகரத்தில் வீழ்தலே எப்பொழுதும் உளதாம் |
| தான்தனில் தழைத்து உள்ளோர்க்கு | மனம் ஆன்மாவாய தன்னிடத்தில் தானாகவே நிலைபெற்று வாழ்ந்திருக்கின்ற ஆன்ம நிஷ்டர்களுக்கு |
| ஆனது எவ்வுருவும் ஆகி அல்லவாம் | சம்சார தசையில் ஒழியாது எவ்வுருவும் தானாகியும் பரமார்த்தில் ஒன்றும் அல்லாததாயுமிருக்கின்ற |
| அறிவுஆம் சோதி தான் ஆகும் வீடே ஆதல் சங்கை ஒன்று இல்லை | சேதன சுயஞ்சோதிப் பிரஹ்ம ரூபமாகிய மோக்ஷமுளதாதலின் (இதில்) கிஞ்சிற்றும் சம்சயமுமில்லை (அன்று ஏ - அசைகள்) 135 |

(அ - கை) நாமமுதல் பிராணாந் தங்களான 13 தத்துவங்களைப் பரதத்துவத்தில் புத்தி செல்லும் பொருட்டு உபாயமாகச் சோபானக் கிரமாக வுபதேசித்துப் பூம வத்துவே அறியத்தக்கதென்று அனவச்சின்ன சுரூப வியாபகனான ஆன்மாவை யறியத்தக்கவனாகப் பிரதிக்கினை செய்து ,, எவ்விடத்தில் வேற்றுப் பொருளைப் பார்க்கின்றுனில்லையோ ,, வென்ற சுருதியிற் கூறிய பூமலக்ஷணத்தைக் கூறுகின்றார்.

யாவ னொருவன் றனையிகழ்ந்தே யளவில் வேறு படக்கண்டும்
யாவ னொருசொல் வேறுபடக் கேட்டு மறிந்தும் வருகின்றான்
யாவ னொருவன் றனக்கென் றுஞ் சிறுமையதுவே பிறப்பிறப்புப்
போவதில்லாக் காரணமு மதுவே யென்று புகன்றனனால் 136

(இ - ள்)

| | |
|---|---|
| யாவன் ஒருவன் தனை இகழ்ந்தே அளவில் வேறுபடக் கண்டும் | எவனொருவன் தானாகிய பிரஹ்மத்தை உதாசீனஞ் செய்து அளவற்ற பேதரூபமாகப் பார்த்தும் |
| யாவன் ஒருசொல் வேறுபடக் கேட்டும் அறிந்தும் வருகின்றான் | யாவன் ஓர் வார்த்தையேனும் பின்னமாகக் கேட்டும் பேதமாக அறிந்தும் வருகின்றானோ |
| யாவன் ஒருவன் தனக்கு என்றும் அதுவே சிறுமை | அவனுக்கு எப்பொழுதும் அந்தப் பேதபாவமே பரிச்சின்னமும் |
| அதுவேபிறப்பு இறப்பு போவது இல்லாக் காரணமும் என்று புகன்றனன் | அந்தப் பேதபாவனையே ஜனன மரணம் நீங்காததற்குக் காரணமுமா மென்று இவ்விதம் பிரஹ்மதேவர் கூறியருளினார் (ஆல் - அசை) |

136

அருளினா லியாவன்றன்க ணிவையில்வே றொன்றுகாணா
தருளினால் வேறுகேளா தறிந்திடா திருக்கிலஃதே
யருளதாம் பெருமைதானு மழிந்திடாச் சுகமுமெல்லா
விருளிலா வீடுதானு மென்றன னிமையோர்க் கெல்லாம் 137

(இ - ள்)

| | |
|---|---|
| யாவன் அருளினால் தன்கண் இவையில் வேறு ஒன்று காணாது | யாவராயினும் ஞானத்தினால் தன்னிடத்தில் இத் தோற்றங்களுள் ஒன்றையும் பேதமாகக் காணாமலும் |
| அருளினால் வேறு கேளாது | ஞானத்தினால் பேதமாகக் கேளாமலும் |
| அறிந்திடாது இருக்கில் | பேதமாக அறியாமலுமிருப்பாராயின் (அவர்கட்கு) |
| அஃதே அருளதாம் பெருமை தானும் | அப் பேத தரிசனத்தின் இன்மை வடிவ அபரிச் சின்னத்வமே ஞான ரூபமாகிய பூமாவும் |

| | |
|---|---|
| அழிந்திடாச் சுகமும் | நித்திய நிரதிசயமான ஆனந்தமும் |
| இருள் இலா எல்லா வீடுதானும் | ஆவரணமின்றிய சர்வதுக்க நிவர்த்தி ரூபமான மோக்ஷமுமாம் |
| என்றனன் இமையோர்க்கு எல்லாம் | என்று தேவர்களனைவர்களுக்கும் பிரஹ்மதேவர் கூறியருளினூர் 137 |

யாவரொருவர் தமக்கென்றுஞ் சிறுமை யுண்டேற் சுகமிலேயாம்
ஓவ லில்லா தளவுபடா தொன்ரு மறிவாய் நின்ருர்கட்
காவ தில்லேப் பிறப்பிறப்பு மழிந்து போக்கு வரவுமிலே
மேவு பந்தம் வீடுமிலே யென்றே விரிஞ்சன் விளம்பினனுல் 138

(இ – ள்)

| | |
|---|---|
| யாவர் ஒருவர் தமக்கு சிறுமை உண்டேல் என்றும் சுகம்இலேயாம் | எவரொருவர்க்கு பரிச்சின்ன ரூப பேத பாவமிருந்தால் அவர்களுக்கு எப்பொழுதும் சுகமில்லேயாம் |
| ஓவல் இல்லாது அளவு படாது ஒன்ரும் அறிவாய் நின்ருர் கட்கு | நீக்கமின்றியதும் வியாபகமும் அத்வைதமும் ஆகிய ஆன்ம சொருபத்தின் கண் நிலேபெற்றவர்கட்கு |
| அழிந்து இறப்பு பிறப்பு ஆவது இல்லே | நாசமாகிய மரணமும் ஜனனமும் ஆகியதுண்டாவதில்லே (அதனுல்) |
| போக்கும் வரவும் இலே | (இகபரஹுசலாகிய) கமனுகமனமுமில்லேயாம் |
| மேவும் பந்தம் வீடும் இலே என்று விரிஞ்சன் விளம்பினன் | அறியாமையால் பொருந்திய பந்த மோக்ஷ விவகாரமேயில்லே என்று தேவர்களுக்கு பிரஹ்மதேவர் உபதேசித்தருளினர். (ஆல்-அசை) 138 |

(அ – கை) சாக்ஷியாகிய ஆத்மாவினிடத்தில் முக்குண ரூபப் பிரகிருதியால் பொய்யாய ஞாதுரு பிராந்தி ஞானம் பொய்ஞேயம் (சப்தாதி விஷயங்கள்) எனும் திரிபுடி மயப்பிரபஞ்சம் ஏககாலத்தில் கற்பிதமாய் வரினும் அவ்வாத்மாவிற்கு யாதொரு கெடுதியுமில்லேயென அதற்குத் திருஷ்டாந்தம் கூறுகின்ருர்.

தன்னிலே யாக்கப் பட்ட கனவினி லுலக மெல்லாம்
தன்னுணர் நனவ தாகத் தனிலவை யடங்கு மாபோற்
றன்னிலே தோன்று மெல்லாப் பொருள்களுந் தானே யானூற்
றன்னிலே தன்னிற் றானே யாமதே தனில்வே றின்றே. 139

(இ - ள்)

| | |
|---|---|
| தன்னிலேஆக்கப்பட்ட கனவினில் உலகம் எல்லாம் | தன்னிடத்திலுண்டுபண்ணப் பட்ட சொப்பனப் பிரபஞ்ச மனைத்தும் |
| தன்னுணர் நனவது ஆக தனில் அவை அடங்கு மாபோல் | தனது விழிப்பு ரூபமான ஜாக்கிர முண்டாக தன்னிடத்தில் அந்தச் சொப்பனப் பிரபஞ்சமொடுங்குவது போல |
| தன்னிலே தோன்றும் எல்லாப் பொருள் களும் | (அபரிச்சின்ன நிர்விகாரப் பிரஹ்ம ரூபமாகிய) தன்னிடத்தில் ஆரோப மாகிய (பிரதி பாச ரூப) சர்வ ஜகத்தும் |
| தானே ஆனூல் | ஸ்வகோசர (தானென்ற) ஞான முண்டானூல் |
| தன்னிலே தன்னில் தானே ஆம் | தன்னிடத்தில் சுவாபமாகவே அவைகள் லீனமாய் அபேதமாம் |

தனில் வேறு இன்று - தன்னிலும் பின்னமாக இல்லையாம்.
(அது பகுதிப்பொருள் விகுதி - ஏ. ஏ. அசைகள்) 139

(அ - கை) சிவபெருமான் திருவருளால் எல்லாம் கூறப் பட்டது என்று முடித்துக் கூறுகின்றூர்.

எல்லாப் பொருட்கு மேற்சுகமா மிதனை யுங்கட் கேயும்வணம்
நல்லாருளங்கொ ணடராஜ நாதன் பாதத் தருளாலே
யெல்லா மென்றன் கருணையினூல் உரைத்தே னிதன்றன் மேற்கேட்ப
தில்லா வண்ண மினியானு மியம்ப வேண்டு வதுமிலதே. 140

(இ -ள்)

| | |
|---|---|
| எல்லாப் பொருட்கும் மேல் சுகம்ஆம் இதனை | சர்வ பதார்த்தங்கட்கு மேலான தாயும் அதிசோபனமாயுமுள்ள இவ்வர்த்தத்தை |

| | |
|---|---|
| எல்லாம் உங்கட்கு ஏயும் வணம் | சர்வார்த்தங்களையும் தேவர்களாய உங்களுக்குச் சம்மதமாகும்படி |
| நல்லார் உளம் கொள் நடராச நாதன் பாதத் தருளால் | உத்தமர்களுள்ளத்தைத் திருக்கோயிலாகக் கொண்டுறையும் தாண்டவேசன் ருட்கமலத் திருவருளாலும் |
| என்றன் கருணையினால்- | எனது கிருபையினாலும் |
| இனிமேல் கேட்பது இல்லா வண்ணம் உரைத்தேன் | இதற்குமேல் நீங்கள் ஒன்றும் கேளாதவாறு கூறினேன் |
| இனியான் இயம்ப வேண்டுவதும் இலது | இனி நான் கூறவேண்டியதுமில்லை (ஏ. ஏ. அசைகள்) 140 |

ஐந்தாவது அத்தியாயம் சம்பூரணம்.

(ஆக விருத்தம் 314)

சற்குருநாதன் துணை.

---

# சாந்தோக்கிய உபநிஷத்து
## ஏழாவது - எட்டாவது அத்தியாயம் உரைக்கும் ஆருவது அத்தியாயம்.

(அ-கை) இந்தப் பிரகாரம் தேசகாலாதி யநவச்சின்ன மாய் அத்விதீயமாய் சத் சித் சுக ரூபமாயுள்ள பிரஹ்மம் ஆன்ம சொரூபமாய் உபதேசிக்கப்பட்டது. அது மந்தபுத்தி யுடைய அதிகாரிகளால் விரைவாக சாக்ஷாத்தாய் அறியக் கூடாமையின் இருதய புண்டரீக மத்தியில் சத்திய காமாதி குண விசிட்டமாக அந்தப் பரவஸ்துவின் உபாசனத்தை பிரஹ்மசரியாதி சாதன பரனுயிருக்கின்ற முமூட்சு புருஷ னுக்கு சுருதியினுல் உபதேசிக்கப்படுகிறது அந்தத் தகர வித்தையை இதில் சங்கிரகிக்கின்ருர்.

இது கவிநாயகர் வாக்கியம்

பங்கயா சனத்தி லிருந்திடும் பரமன்
பழமறை பகர்ந்தவப் பரிசே
சங்கையா காமற் சங்கரன் றிருவாய்
மலர்ந்தனன் பரிசினைத் தானே
யங்குவா னவர்கட் களிக்குமா றளித்து
மளவிலா வருளினு லந்த
எங்குமாய் நின்ற பொருளைமீண் டுணரு
மிடத்தையுந் தெளிவுற விசைப்பான். 1

(இ – ள்)

| | |
|---|---|
| பங்கயா சனத்தில் இருந்திடும் பரமன் | பதுமபீடத்தில் அமர்ந்திருக்கும் பிரஹ்ம தேவர் ஆனவர் |
| பழமறை பகர்ந்த அப் பரிசே சங்கை ஆகாமல் | புராதன வேதங்களில் பிரதி பாதித்த அத்தன்மையில் சந்தேக முண்டாகாமல் |
| சங்கரன் திருவாய் மலர்ந்த நல் பரிசினை | சிவபெருமான் உபதேசித்தருளிய உத்தமமான பரமாத்வைத ஞானத்தை |

| | |
|---|---|
| அங்கு வானவர்கட்கு அளிக்கும் ஆறு அளித்து | அவ்விடத்து தேவர்களுக்கு உபதேசிக்கும் விதமாய் உபதேசித்து |
| அளவு இலா அருளினுல் | அபாரமான காருண்யத்தினுல் |
| எங்குமாய் நின்ற அந்தப் பொருளை | சர்வ பரிபூரணமாயிருக்கின்ற அந்தப் பரமாத்வைத வஸ்துவை |
| உணரும் இடத்தை மீண்டும் தெளிவுஉற இசைப்பான் | அறியும் ஸ்தானத்தையும் மீட்டும் நன்ருகக் கூறத் தொடங்கினுர். 1 |

புகலநின் றிடுபிரம புரமெனும் பதியதனிற்
தகரபுண் டரிகமெனு மகமிலங் கியதகர
ககநமுண் டதுமறைகள் கருதநின் றுளபிரம
மிகவிரும் புவர்பிறவி விடவிரைந் துளவிமலர். 2

(இ – ள்)

| | |
|---|---|
| புகல நின்றிடு பிரம புரம் எனும் பதி அதனில் | சுருதிகளால் வியந்து கூறப்பட்ட பிரம்மபுர (வித்யாதிகாரி சரீர) மென்னும் பட்டனத்தில் |
| தகர புண்டரீகம் எனும் அகம் | அற்ப பரிணும முடைய ஹிருதய தாமரை யாகிய வீட்டில் |
| இலங்கிய தகர ககநம் உண்டு | விளங்கா நின்ற தகராகாசமிருக்கின்றது |
| அது மறைகள்கருத நின்று உள பிரமம் | அவ்வா காயம் சுருதிகளால் ஆராய்வதற்கு யோக்கியமாயுள்ள பிரஹ்மமாம் (அதனை) |
| பிறவி விட விரைந்து உள விமலர் மிக விரும்புவர் | ஜனன மரண ரூப சம்சார நிவர்த்தியைப் பெறுவதற்கு விரைந்துள சமதமாதி சாதனங்களையுடைய முமூட்சுக்கள் (விசாரிக்கவும் அறியவும்) அபேக்ஷிப்பர். 2 |

(அ – கை) சித்ரூப ஆன்மாவிற்கு சங்கோச (சுருக்க) மானது ஔபாதிகமன்று சைத்திரன் (இளைத்தவன்) மைத்திரன் (பிராமணன்) முதலிய நாம முடைய பரிச்சின்ன தேகங்களில் சுபாவீகமாகவே சங்கோசமானது காணப்படுகின்றதே யென்னில் கூறுகின்ருர்.

தெரிவிடஞ் சிறிதலது சிறியதன் றறிவுருவு
பெரிதெனும் படிநினைக புறமுமெங்கு முளதென
வுரியதொன் றுணர்வதுணர் வொழிவ தென்பதுமுணர்
கரியழிந்துள தோர்பொருள் கழியநின் றதுவுமிலை. 3

(இ – ள்)

| | |
|---|---|
| தெரிவு இடம் சிறிது அலது அறிவுருவு சிறிது அன்று | அஞ்ஞானவரண நிவர்த்தித் துவாரமாக சொப்பிரகாச சத்ரூப ஆன்மாபிவியஞ்சக (வெளிப்படும்) ஸ்தலமான அந்தக்கரணமானது பரிச்சின்னமேயன்றி ஆன்ம சொரூபமானது பரிச்சின்னமன்று |

[மற்றெவ்வித மிருக்கின்றதென்னில்]

| | |
|---|---|
| புறமும் எங்கும் உளது என உரியது ஒன்று பெரியது எனும்படி நினைக | அந்தக் கரணாதி கட்கும் புறம்பும் மற்றெத் தேசங்களினும் சதா யிருப்பாயுள்ள வஸ்து வொன்றே (ஆதலால்) அதை தேச காலாதி யனவச்சின்ன (எங்கும் வியாபக) மாகச் சிந்திக்கத் தக்கது |

[அங்ஙனமாயின் அந்தக்கரண முதலிய பிரகாசங்களைப் போல சகலத்தையும் தோற்றுவிக்க வேண்டாவோ எனிற் கூறுகின்றார்.]

| | |
|---|---|
| உணர்வது உணர்வு ஒழிவது என்பதும் | ஞானவிஷயாகார மாகவும் அஞ்ஞானவிஷயாகார மாகவுமுள்ள சகல ஜகத்தையும் |
| உணர்கரி அழிந்து | அறியாநின்ற சாக்ஷிசேதனத்தை விட்டு |
| உளது ஓர் பொருள் கழிய நின்றதுவும் இலை | உண்டென்பதாக வோர் வஸ்துவாவது எஞ்சி நிற்பதில்லை |

[வி – ரை] உற்பத்தி ஸ்திதி முதலிய சகல காலங்களிலும் அத்தியசிக்கப்பட்ட சகல பிரபஞ்சத்திற்கும் சித்திலக்கணப் பிரஹ்மமே சொரூபமாதலாலும் அத்தியஸ்தமானது அதிஷ்டானத்திற்கு வேறில்லாதபடியினாலும் காலம் தேசம் வஸ்து இவைகளாலுண்டாம் பரிச்சேதமில்லை யென்பதாம். 3

(அ – கை) ஜகத்து சுயமே ஏன் பிரகாசிக்க மாட்டாதெனிற் கூறுகின்றார்.

அறிவின் முன் பலதுசட வகிலமுண் டென நிகழ்வு
பெறுவதன் றறிவினிலை பெறநிகழ்ந் ததுபிறிது
செறிவுறும் பொருளினனி சிறிதெனும் படிநிகழும்
இறைவனெங் கணும்விரவி யெலையறும் படிநிகழும். 4

(இ – ள்)

| | |
|---|---|
| சடஅகிலம் அறிவின் முன்பு அலது உண்டு என நிகழ்வு பெறுவது அன்று | சடரூபமான பிரபஞ்சமானது சேதன சம்பந்தத்தால் அன்றி சுயமே சித்திக்கவும் பிரகாசிக்கவும் மாட்டாது |
| அறிவின் நிலை பெற நிகழ்ந்தது | சேதன சம்பந்தத்தாலேயே சித்தித்து விளங்குகின்றது |

[இங்ஙனம் சிவத்திற்குப் பிரதி பாதித்த வியாபகத் தன்மையை நிச்சயிக்கின்றார்.]

| | |
|---|---|
| பிறிது செறிவுறும் பொருளில் நிகழ்தல் நனி சிறிது எனும்படி | பேதமாகத் தோற்றுகின்ற ஜெகமனைத்தும் வியாபகமான பரசிவ சந்நிதியில் விளங்குதல் மிக அற்ப (சன்னல் துவாரவெளியிற் காணும் அணுக்கள் போலு) மென்பதாம். |
| இறைவன் எங்கணும் விரவி எலை அறும்படி நிகழும் | பரமேஸ்வரன் (சுபாவமாகவே திரிசியமான அஞ்ஞானத்தையும் அதன் காரியமான சகல ஜெகத்தையும்) வியாபித்துப் பூரணமாக (சூரியனைப்போல்) விளங்குவான். |

4

(அ – கை) இவ்வாறு கூறிய இதயகமல மத்தியில் சிற்சொருபமாக விளங்கும் பரமேஸ்வரனது வியாபகத் தன்மை அர்த்தத்தில் சுருதியைக் காட்டுகிறார்.

அளவிலம் பரமெவள வறிசிதம் பரமவள
வுளதுவிண் புவியனில மொளிபதங் கணுடுமதி
துளிதரும் புயன்மின் முதல் சொலவரும் பொருள்களினி
விளைபவென் றிவையிதய வெளியடங் கிடு மடைய. 5

(இ - ள்)

| | |
|---|---|
| அளவு இல் அம்பரம் எவளவு அறிசிதம் பரம் அவ்வளவு உளது | வியாபகமான ஆகாய மெப்படியோ சர்வத்தையும் பிரகாசிப்பிக்கின்ற சிதாகாயமானது அப்படியே சர்வ கத (இடமாயும் பூரணமாயுமிருக்) கின்றது |

[இதே சர்வ வியாபகத்துவத்தைக் கூறுகின்றார்]

| | |
|---|---|
| விண் புவி அனிலம் ஒளி | ஆகாயமும் பூமியும் வாயுவும் அக்கினியும் |
| பதங்கன் உடுமதி துளி தரும் புயல் மின்முதல் சொலவரும் பொருள்கள் | சூரியனும் நட்சத்திரமும் சந்திர னும் விருஷ்டிக்கின்ற மேகமும் மின்னலுமாகிய இவை முதலாக சொல்லும்படியாயுள்ள பதார்த்தங்களும் |
| இனிவிளைப என்று இவை அடைய இதய வெளி அடங்கிடும் | இனிமேல் உற்பத்தியாவதாகக் கூறும்படியாயுள்ள பதார்த்தங்க ளாகிய இவையனைத்தும் இதயாம் பரமாகிய தகராகாசத்தின் கண்ணேயிருக்கும் |

5

இலதெனும் பொருளுமிவ னிடையிலங் குதலிலிறை
சொலவரும் பொருண்முழுது நிலவினன் சுழலும்வினை
நலனுமன் றியதுநரை மரணமும் பசியை முதல்
உலகுறுந் துயர்முழுது முடையனன் றெருபொழுதும் 6

(இ - ள்)

| | |
|---|---|
| இலது எனும் பொருளும் | அசத்தெனக் கூறும் பதார்த்தங்களும் |
| இவன் இடை இலங்குதலில் | இவ்விடத்தில் பெருந்தி விளங்குதலால் |
| இறை சொலவரும் பொருள் முழுவதும் நிலவினன் | அப்பரசிவன் சத்தசத்தெனக் கூறும்படியாயுள்ள பதார்த்தங்கள் முழுவதிலும் பொருந்தி விளங்குகின்றார் |

[இங்ஙனம் ஈசுவரன் சர்வ வியாபியாகட்டும் ஜீவனுக்கு அவ்விதத் தன்மை யெங்கனம் கூடுமெனச் சங்கித்துக் கூறுகின்றார்.]

(மூலார்த்தம்) இந்த மேலான வியாபிதான் ஆத்மா.

[வி – ரை] இந்தப் பரசிவன்றான் பிரத்யக் சேதன ஜீவான்மாவாக விளங்குகின்றான் லக்ஷணபேதமின்மையால் இவன் விலக்ஷணமாகான் என்னும் மூலார்த்தத்தைக் கவி நாயகர் "இறை முழுதும் நிலவினன்" என்பதனுள் அடக்கினர்)

[இலக்ஷண பேதமின்மையின் வஸ்து பேதமில்லையாத லால் சச்சிதானந்த ரூபமான பிரத்யக்வடிவமான சீவனுக்கு இலக்ஷண சமத்துவத்தால் வியாபகமிருந்தாலும் தர்மா தர்மாதி ஆசிரய பூதனாய் ஈசுவரனுக்கு அன்னியனாய் காணப் படுகின்றானே எனிற் கூறுகின்றார்.]

| | |
|---|---|
| சுழலும் வினை நலனும் இன்றியது | இவ்வாத்மா பாவபுண்ணிய கர்மங்களற்றது |

[இவ்வாறு புண்ணிய பாவ சம்பந்தமற்றதனால் அதன் காரியமான ஜரா மரணாதி சர்வ விகாரக் கூட்டங்களும் அந்தச் சாக்ஷிக்கு இன்றெனக் கூறுகின்றார்.]

| | | |
|---|---|---|
| நரை, மரணமும், பசியை முதல் உலகு உறும் துயர் முழுதும் ஒருபொழுதும் உடையன் அன்று | மூப்பு இறப்பு பசி முதலியவை களாக உயிர்களடைகின்ற துன்பச் சமூகங்கள் ஒன்றேனும் ஓர் காலத்தும் பொருந்துவன வன்று. | 6 |

(அ – கை) இங்ஙனம் சகுண நிர்குணப் பிரஹ்மத்தின் ஞானமே அக்ஷய (அழிவற்ற) பலவேதுவாகுமன்றி அக்கினி கோத்திர முதலிய கர்மங்கள் ஆகாதென்று சுருதியின் வாக்கியத்தை சங்கிரகித்துக் கூறுகின்றார்.

பண்ணிய தொழில்தரு பயன்க ளியாவையும்
மண்ணிடை நுகர்ந்திட மாளுமா றுபோற்
புண்ணிய வினைதரு போக மியாவையும்
விண்ணிடை யிருந்தனு பவித்து மாளுமால். 7

(இ - ள்)

| | |
|---|---|
| பண்ணிய தொழில் தரு பயன்கள் இயாவையும் | செய்யாநின்ற வேளாண்மை முதலிய தொழில்களால் தரப் பட்ட தானியாதி பிரயோஜனங்க ளனைத்தும் |
| மண்ணிடை நுகர்ந் திட மாளும் ஆறுபோல் | போக்தாக்களால் மண்ணுலகத்தி லிருந்தனுபவித்து நாசமாந் தன்மைபோல் |
| புண்ணிய வினைதரும் | அக்கினி கோத்திராதி சற்கருமத் தால் வந்த (அமிர்தம் தேவமாதர் கள் விமானம் நந்தனவனம் அலங் காராதி போகங்களனைத்தும் |
| விண்ணிடை இருந்து அநுபவித்து மீளும் | கர்ம கர்த்தாக்கள் சுவர்க்கத்தி லிருந்தநுபவித்துத் (அக்கர்ம பலன் முடிவடைந்தவுடன்) திரும்புவார்கள் (ஆல் - அசை) 7 |

(அ - கை) "ஈண்டு ஆத்மாவை அறிந்தவன்" என்னும் சுருதியின் வாக்கியார்த்தத்தைக் கூறுகின்றார்.

மெய்யினை யுணர்ந்தவர் வினைக ளியாவையுஞ்
செய்யினுஞ் செய்திலராவர் தேவர்க
டுய்யநல் வினைகளே தொகுத்து மற்றையர்
வெய்யகன் மத்தராய் விளம்ப வேண்டுமே. 8

(இ - ள்)

| | |
|---|---|
| மெய்யினை உணர்ந் தவர் வினைகள் யாவை யும் செய்யினும் செய் திலர் ஆவர் | இருதய மத்தியிலிருக்கின்ற தகர பிரஹ்மத்தை யுணர்ந்தவர்கள் அக்கினி கோத்திராதி சர்வகர்மங் களையும் செய்தாலும் செய்யாதவர் களே யாவர் (அன்றியும்) |

[ஆன்ம ஞானத்தின் பலத்தைக் கூறுகின்றார்]

| | |
|---|---|
| தேவர்கள் | இந்திர சந்திராதி சர்வ போகங் களையுமடைந்தவராகின்றார் |

(பிதிர்லோக இச்சையுடையவனுகின்ருன் என்ற சுருதியால் வித்தானுக்கு உள்ளத்தின் கண்ணே சத்திய காம முதலிய குணங்களா லுபாசிக்கப்பட்ட தகரப் பிரஹ்மம் நிரதிசயானந்த ரூபமாய் சர்வகாமங்களும் பலிக்கு மென்பதாம்)

| | |
|---|---|
| மற்றையர் துய்ய நல் வினைகளே தொகுத்தும் | ஏனையோர் பரிசுத்த அக்கினி கோத்திராதி சற்கருமங்களை யொழுங்காகச் செய்தும் (சர்வ காமாப்தி - சர்வானந்தடைவு யின்மையின்) |
| வெய்ய கன்மத்தராய் விளம்ப வேண்டும் | கொடிய கர்மிகளென்றே கூற வேண்டும். (சம்சார துன்ப நிவர்த்தியின்மையால்) ஏ—அசை 8 |

(அ - கை) சத்தோடும் அக்காலத்தில் அடைந்தவனுகின்ருன் என்ற சுருதியால் சுழுத்தியில் அந்தப் பிரஹ்மம் அடையப்படுகின்றதனுல் வித்வான்போல தூங்கினவனும் சகல காமங்களையும் ஏன் அடைந்தவனுகான் எனச் சங்கித்து திருஷ்டாந்தத் தோடு அஞ்ஞான வலிமையின் தன்மை தோன்றக் கூறுகின்ருர்.

பொற்பொருள் புதைத்தபுவி யிற்புல னிலார்போய்
நிற்பினு மிடிப்பர்நனி நித்தமுல கத்தோர்
தற்பொருள் சுழுத்திதனி லுற்றுமது தானே
யற்பம றிவிற்றிலர யர்ச்சிவலி யையோ. 9

(இ - ள்)

| | |
|---|---|
| பொற்பொருள் புதைத்த புவியில் புலன் இலார் போய் நிற்பினும் மிடிப்பர் | பொன் புதைத்த க்ஷேத்திரத்தின் கண் சென்றும் அதன் ஞான மில்லாதவர்கள் அடிக்கடி நின்று வசித்தாலும் (அங்கே) மிகவும் தரித்திரர்களேயாவார்கள் (அது போல) |
| உலகத்தோர் நித்தம் சுழுத்திதனில் தற்பொருள் உற்றும் | உலகத்திலுள்ளவர்கள் நாள் தோறும் சுழுத்தியவஸ்தையில் அந்தப் பிரஹ்மம் அடையப் படினும் |

| | |
|---|---|
| அது அற்பம் அறிகிற்றிலர் அய்யோ அயர்ச்சிவலி | அதனை கிஞ்சித்தும் அறிந்திலர் ஓகோ மோக மகிமை என்னே. (தான்-அசை) 9 |

(அ - கை) முற்கவியில்'' அஃதெப்படி சுவர்ண நிதி'' என்ற சுருதியின் பொருள் கூறப்பட்டது இதயசப்த நாமத்தினும் சர்வகதமான பிரஹ்மத்திற்கு இருதய மத்தியிருப்பு சுருதிகளால் தரிசிப் பிக்கப்படுகின்றன அதைச் சங்கிரகிக்கின்றார்.

விதம்படு முளந்தொறும் விசேடவறி வாயுற்
றிதம்படு தலாலிதய மென்ப ரிறை தன்னைத்
திதம்பட விவன்றிற மறிந்தவர்கள் சேரும்
பதம்பிர மல்லதுப கர்ந்திடுத லுண்டோ. 10

(இ - ள்)

| | |
|---|---|
| விதம்படும் உளம் தொறும் விசேட அறிவாய் உற்று இதம் படுதலால் | நாநாவிதமாகப் பொருந்திய அந்தக்கரணங்க டோறும் * நிர்விசேஷ சைதன்னிய ரூபமாகப் பொருந்தி நன்கு விளங்கியிருத்தலால் |
| இறை தன்னை இதயம் என்பர் | (அறிஞர்கள்) அப்பரசிவத்தை இருதய சப்தத்தால் அழைப்பர்கள் |

[ இந்த இருதய மத்தியில் உள்ள பிரஹ்மத்தின் ஞானத்திற்கு சுருதியால் கூறப்பட்ட பலத்தைக் கூறுகின்றார். ]

| | |
|---|---|
| திதம்பட இவன் திறம் அறிந்தவர்கள் | திடமாக இவனது சொரூபத்தை அறிந்த வித்துவான்கள் |
| சேரும்பதம் பிரமம் அல்லது பகர்ந்திடுதல் உண்டோ | அடையா நின்ற பதமானது பிரஹ்ம உலகமே யல்லது வேருகக் கூறுதற்குண்டோ (இன்று) 10 |

(அ - கை) பின்பு'' யாதொரு இந்த ஆன்மாவானவன் நன்ருய் அடைகின்ருன்'' என்ற சுருதி முதலியவற்ருல் உபதேசித்த பிரஹ்மப் பிராப்த்தப் பிரகாரத்தைக் கூறுகின்ருர்.

* வீட்டினுள் சூரியனது பிரகாசம் சாமானியமாகவும் கண்ணுடியில் காட்டும்போது விசேடமாகவும் காண்பதுபோல, அந்தக்கரணத்திலும் விருத்தியால் இது கடமென்றறியும் ஆபாசனது விசேஷப் பிரகாசமும், கடத்தை நான் கண்டேன்னென்று விளங்கும் உபகித சாட்சியினது பிரகாசமுமான இரண்டுமுளதாம்.

சுழுத்தியத னிற்றுயர்து வக்குமுட றன்னின்
றெழுப்பியுள தன்வடிவி ளுலிறையை யெய்துற்
றழுத்தமுற யாவனது வாகுமவ னெங்கும்
முழுத்தியுள தற்பரம மாகிமுடி வுற்ருன். 11

(இ – ள்)

| | |
|---|---|
| யாவன் உடல் இன்று | எவன் தூல சூட்சுமாதி சரீராபிமானத்தைப் பரித்தியாகஞ் செய்து |
| சுழுத்தியதனில் துவக்கும் துயர் (இன்று) | சுழுத்தியவஸ்தையில் சாக்கிர சொப்பனங்களிலுள்ள விஷய போகங்களாலுண்டான கலக்கங்கள் இல்லாததனுல் |
| எழுப்பி உள | பிரசன்னனுய் சின்மாத்திர சொருப சாக்ஷியாயுள்ள |
| தன்வடி வினுல் இறையை | சுவாத்மாவாக (தகரப் பிரஹ்ம வித்தையால் அஞ்ஞான லக்ஷண முடைய காரண சரீரத்தையு நீங்கி விகார சம்பந்தமில்லாத கேவல சைதன்னிய பிரகாசமான) பரசிவ சொருபத்தை |
| எய்துற்று அழுத்தம் உற அது ஆகும் | அறிந்து திடமாக அப்பரசிவ சொருபமே ஆவனேல் |
| அவன் எங்கும் முழுத்தி உள தற்பரம் ஆகி முடிவு உற்ருன் | அவ்வித்வான் அவித்தையினுலுண்டான பரிச்சின்னத்தை விட்டுப் பூரணமான தன் சொருபமாகவே பிரகாசிக்கின்ருன் |

(தன். இன்று எனப்பதம் பிரித்து தன் என்பதை தான் என்பதின் மரு அசையாக விடுத்து. இன்று என்பதை உடல் உயிர் என்ற இரண்டிடத்தும் சேர்த்துக் கொள்க) 11

(அ – கை) "இவனே ஆன்மா வென்று கூறப்படுகின்ருன்" என்றும் "அபயம் அமிர்தம்" என்றும் சொல்லிய சுருதிகளின் பொருளை சங்கிரகின்ருர்)

இதுபரம் பரமமிர்த மபயமென் பது மிது
விதமுறும் பலவுலகும் விரவலின்றி யபிரம
பதமிதன் கணிலிரவு பகலடைந் திலமரண
முதய மொன் றிலவிருமை வினைகளொன் றதுவுமில. 12

(இ - ள்)

இது பரம் பரம் – இவனே மேலான பிரஹ்மமென்றும் (அபரிச் சின்னமாதலின்)

அமிர்தம் அபயம் என் பதுவும் இது – (பயத்திற்கு ஏதுவான இரண்டாம் பொருள் இன்மையின்) அபய மும் அமிர்தமென்பதுவும் இவனே

[இனி "எவன் ஆன்மாவோ அவனே சேது" வென்பது தொடங்கி "அநுதாப மில்லாதவன்" என்று முடிந்த சுருதியை சங்கிரகிக்கின்றார்.]

விதம் உறும் பல உலகும் விரவல் இன்றிய பிரமபதம் – (இவனே கர்த்துரு கர்ம பல ஆசிரயமான) நாநாவிதமாகப் பொருந்திய இந்தப் பூவாதி சகல வுலகங்களின் நாசமின்மையின் பொருட்டு வர்ணாச்சிர மாதி பேதத்தோடு கிரியாகாரக பல ரூபத்தால் நியதமாயுள்ள பிரபஞ்சத்தைத் தரிக்கும் சேது ரூபமான பிரஹ்மமாம்

இதன் கணில் இரவு பகல் அடைந்தில – அப்பிரஹ்ம சொரூபத்தில் காலத்துவமானது அத்தியஸ்த மாகலின் இராப் பகல் லக்ஷணமாகவுடைய காலப்பரிச் சேத மின்று

மரணம் உதயம் ஒன்றும் இல இருமை வினைகள் ஒன்றதுவும் இல – சென்ன மரண முமில தாம் பாவ புண்ணிய இருவினைகளுள் ஒன்றேனு மிலதாம். 12

ஆதலிற் சிலவினையி னுலடர்ப் பவனு மில
னேதலுற் றிடுபரம லோகமிப் பரமிவனோர்
சேதுவக் கரையடைஞர் சேர்பவக் கடல் விடுவர்
சாதுயர்ப் படினுமவர் தாமிடர் படுவதிலர். 13

சுழுத்தியத னிற்றுயர் து வக்குமுட றன்னின்
றெழுப்பியுள தன்வடிவி ஞலிறையை யெய்துற்
றழுத்தமுற யாவனது வாகுமவ னெங்கும்
முழுத்தியுள தற்பரம மாகிமுடி வுற்ருன். 11

(இ – ள்)

| | |
|---|---|
| யாவன் உடல் இன்று | எவன் தூல சூட்சுமாதி சரீராபிமானத்தைப் பரித்தியாகஞ் செய்து |
| சுழுத்தியதனில் துவக்கும் துயர் (இன்று) | சுழுத்தியவஸ்தையில் சாக்கிர சொப்பனங்களிலுள்ள விஷய போகங்களாலுண்டான கலக்கங்கள் இல்லாததனுல் |
| எழுப்பி உள | பிரசன்னனுய் சின்மாத்திர சொரூப சாக்ஷியாயுள்ள |
| தன்வடி வினுல் இறையை | சுவாத்மாவாக (தகரப் பிரஹ்ம வித்தையால் அஞ்ஞான லக்ஷணமுடைய காரண சரீரத்தையு நீங்கி விகார சம்பந்தமில்லாத கேவல சைதன்னிய பிரகாசமான) பரசிவ சொரூபத்தை |
| எய்துற்று அழுத்தம் உற அது ஆகும் | அறிந்து திடமாக அப்பரசிவ சொரூபமே ஆவனேல் |
| அவன் எங்கும் முழுத்தி உள தற்பரம் ஆகி முடிவு உற்ருன் | அவ்வித்வான் அவித்தையினுலுண்டான பரிச்சின்னத்தை விட்டுப் பூரணமான தன் சொரூபமாகவே பிரகாசிக்கின்ருன் |

(தன். இன்று எனப்பதம் பிரித்து தன் என்பதை தான் என்பதின் மரு அசையாக விடுத்து. இன்று என்பதை உடல் உயிர் என்ற இரண்டிடத்தும் சேர்த்துக் கொள்க) 11

(அ – கை) “இவனே ஆன்மா வென்று கூறப்படுகின்ருன்” என்றும் “அபயம் அமிர்தம்” என்றும் சொல்லிய சுருதிகளின் பொருளை சங்கிரகின்ருர்)

இதுபரம் பரமமிர்த மபயமென் பது மிது
விதமுறும் பலவுலகும் விரவலின்றி யபிரம
பதமிதன் கணிலிரவு பகலடைந் திலமரண
முதய மொன் றிலவிருமை வினைகளொன் றதுவுமில. 12

(இ - ள்)

| | |
|---|---|
| இது பரம் பரம் | – இவனே மேலான பிரஹ்மமென்றும் |
| அமிர்தம் அபயம் என் பதுவும் இது | (அபரிச் சின்னமாதலின்) அமிர்தமும் (பயத்திற்கு ஏதுவான இரண்டாம் பொருள் இன்மையின்) அபயமென்பதுவும் இவனே |

[இனி "எவன் ஆன்மாவோ அவனே சேது" வென்று தொடங்கி "அநுதாப மில்லாதவன்" என்று முடிந்த சுருதியை சங்கிரகிக்கின்றார்.]

| | |
|---|---|
| விதம் உறும் பல உலகும் விரவல் இன்றிய பிரமபதம் | (இவனே கர்த்துரு கர்ம பல ஆசிரயமான) நாநாவிதமாகப் பொருந்திய இந்தப் பூவாதி சகல வுலகங்களின் நாசமின்மையின் பொருட்டு வர்ணாச்சிர மாதி பேதத்தோடு கிரியாகாரக பல ரூபத்தால் நியதமாயுள்ள பிரபஞ்சத்தைத் தரிக்கும் சேது ரூபமான பிரஹ்மமாம் |
| இதன் கணில் இரவு பகல் அடைந்தில | அப்பிரஹ்ம சொரூபத்தில் காலத்துவமானது அத்தியஸ்த மாகலின் இராப் பகல் லக்ஷணமாகவுடைய காலப்பரிச் சேத மின்று |
| மரணம் உதயம் ஒன் றும் இல இருமை வினைகள் ஒன்றதுவும் இல | செனன மரண முமில தாம் பாவ புண்ணிய இருவினைகளுள் ஒன்றேனு மிலதாம். |

12

ஆதலிற் சிலவினையி னுலடர்ப் பவனு மில
ஞேதலுற் றிடுபரம லோகமிப் பரமிவனோர்
சேதுவக் கரையடைஞர் சேர்பவக் கடல் விடுவர்
சா துயர்ப் படினுமவர் தாமிடர் படுவதிலர். 13

சுழுத்தியத னிற்றுயர்து வக்குமுட றன்னின்
றெழுப்பியுள தன்வடிவி னாலிறையை யெய்துற்
றழுத்தமுற யாவனது வாகுமவ னெங்கும்
முழுத்தியுள தற்பரம மாகிமுடி வுற்றான். 11

(இ – ள்)

| | |
|---|---|
| யாவன் உடல் இன்று | எவன் தூல சூட்சுமாதி சரீராபிமானத்தைப் பரித்தியாகஞ் செய்து |
| சுழுத்தியதனில் துவக்கும் துயர் (இன்று) | சுழுத்தியவஸ்தையில் சாக்கிர சொப்பனங்களிலுள்ள விஷய போகங்களாலுண்டான கலக்கங்கள் இல்லாததனால் |
| எழுப்பி உள | பிரசன்னனாய் சின்மாத்திர சொரூப சாக்ஷியாயுள்ள |
| தன்வடிவினால் இறையை | சுவாத்மாவாக (தகரப் பிரஹ்ம வித்தையால் அஞ்ஞான லக்ஷணமுடைய காரண சரீரத்தையு நீங்கி விகார சம்பந்தமில்லாத கேவல சைதன்னிய பிரகாசமான) பரசிவ சொரூபத்தை |
| எய்துற்று அழுத்தம் உற அது ஆகும் | அறிந்து திடமாக அப்பரசிவ சொரூபமே ஆவனேல் |
| அவன் எங்கும் முழுத்தி உள தற்பரம் ஆகி முடிவு உற்றான் | அவ்வித்வான் அவித்தையினாலுண்டான பரிச்சின்னத்தை விட்டுப் பூரணமான தன் சொரூபமாகவே பிரகாசிக்கின்றான் |

(தன். இன்று எனப்பதம் பிரித்து தன் என்பதை தான் என்பதின் மரு அசையாக விடுத்து. இன்று என்பதை உடல் உயிர் என்ற இரண்டிடத்தும் சேர்த்துக் கொள்க) 11

(அ – கை) “இவனே ஆன்மாவென்று கூறப்படுகின்றான்” என்றும் “அபயம் அமிர்தம்” என்றும் சொல்லிய சுருதிகளின் பொருளை சங்கிரகின்றார்)

இதுபரம் பரமமிர்த மபயமென் பது மிது
விதமுறும் பலவுலகும் விரவலின்றி யபிரம
பதமிதன் கணிலிரவு பகலடைந் திலமரண
முதய மொன் றிலவிருமை வினைகளொன் றதுவுமில. 12

(இ - ள்)

இது பரம் பரம் — இவனே மேலான பிரஹ்மமென்றும்

அமிர்தம் அபயம் என்பதுவும் இது — (அபரிச்சின்னமாதலின்) அமிர்தமும் (பயத்திற்கு ஏதுவான இரண்டாம் பொருள் இன்மையின்) அபயமென்பதுவும் இவனே

[இனி "எவன் ஆன்மாவோ அவனே சேது" வென்று தொடங்கி "அநுதாப மில்லாதவன்" என்று முடிந்த சுருதியை சங்கிரகிக்கின்றார்.]

விதம் உறும் பல உலகும் விரவல் இன்றிய பிரமபதம் — (இவனே கர்த்துரு கர்ம பல ஆசிரயமான) நாநாவிதமாகப் பொருந்திய இந்தப் பூவாதி சகல வுலகங்களின் நாசமின்மையின் பொருட்டு வர்ணாச்சிர மாதி பேதத்தோடு கிரியாகாரக பல ரூபத்தால் நியதமாயுள்ள பிரபஞ்சத்தைத் தரிக்கும் சேது ரூபமான பிரஹ்மமாம்

இதன் கணில் இரவு பகல் அடைந்தில — அப்பிரஹ்ம சொரூபத்தில் காலத்துவமானது அத்தியஸ்த மாகலின் இராப் பகல் லக்ஷணமாகவுடைய காலப்பரிச் சேத மின்று

மரணம் உதயம் ஒன்றும் இல இருமை வினைகள் ஒன்றதுவும் இல — செனன மரண முமில தாம் பாவ புண்ணிய இருவினைகளுள் ஒன்றேனு மிலதாம். 12

ஆதலிற் சிலவினையி னுலடர்ப் பவனு மில
னேதலுற் றிடுபரம லோகமிப் பரமிவனோ்
சேதுவக் கரையடைனூர் சேர்பவக் கடல் விடுவர்
சாதுயர்ப் படினுமவர் தாமிடர் படுவதிலர். 13

| | |
|---|---|
| ஆதலில் சில வினையி னல் அடர்ப் பவனும் இலன் | புண்ணிய பாவ சம்பந்தமில்லை ஆதலால் சில கன்மங்களில் சம்பந் தித்து அவற்ருல் வருத்தப் படுபவனுகான் |
| ஓதல் உற்றிடு இப்புரம் பிரமலோகம் | கூறுநின்ற இவ்வாத்மா சுயம் பிரகாச (அபரோக்ஷ)மான பிரஹ்ம மாகிய லோகமாம் |
| இவன் ஓர் சேது | - இவ்வாத்மா வொப்பற்ற தீரமா |
| அக்கரை அடைஞர் சேர்பவக்கடல் விடுவர் | அந்தச் சேது ரூபமான கரையை அடைந்தவர் அனுதிகாலமாகப் பொருந்திய ஜன்ம சாகரத்தினின் றும் விடுபடுவார்கள் |
| சாதுயர்படினும் அவர் தாம் இடர்படுவது இலர் | மரணுந்த துன்பமேற்படினும் அவர்கள் துன்பமடையாதவர் களே யாவர். |

செப்பிய பொருள்க ளியாவையுஞ் சென்று
சேர்வுறு வகைநின்ற சேது
வப்படிப் பட்டா லந்தனு மனந்த
னிருந்துயர் உற்றுமுற் றிலனு
யிப்படி யிதயா காசமென் றியம்பு
மீசனிவ் வுடம்பின்வே ருகிச்
கப்புறு நனவு கனவுறக் கத்தைக்
கண்டவை கடந்துநிற் கின்ருன்.

(இ - ள்)

| | |
|---|---|
| செப்பிய பொருள் கள் யாவையும் | கிரியா காரக பலரூபமாகக் கூற பட்ட பதார்த்தங்கள் அனைத்து சொரூபமாகவுடைய பிரபஞ்ச மனைத்தும் |
| சென்று சேர்வுறு வகை நின்ற சேது அப்படிப்பட்டால் | அதிக்கிரமித்து சாங்கிரியப்படா வண்ணம் (அகாலத்தில் நாச மாகா வண்ணம்) தரித்திருக்கின்ற சேதுரூப ஆன்ம சொரூபமானு |
| அந்தனும் அனந்தன் | குருடனும் குருடனல்லாதவ னுகின்ருன் |

அரும் துயர் உற்றும் உற்றிலனும் } சகித்தற்கரிய துன்பத்தைப் பொருந்தியும் பொருந்தாதவனுகின்றுன்

[இந்தப் பிரகாரம் வித்யா விஷயமான பிரஹ்மத்தை உபதேசித்து சாக்கிராவஸ்தாவிநிர்முத்தமான பிரஹ்மத்தைப் பிரதிபாதியா நின்ற பிரஜாபதியால் இந்திரர்பொருட்டு உபதேசிக்கப்பட்டிருக்கிற அக்ஷி புருஷ வித்தையை உபதேசிக்கின்றுர்]

இப்படி இதய ஆகாசம் என்று இயம்பும் ஈசன் } இவ்வாறு தகராகாச ரூபமாகக் கூரு நின்ற பரமேஸ்வரன்

இவ்வுடம்பின் வேறு ஆகி } இத்தேகாதிகட்கு விலக்ஷணமாய்

கப்பு உறு நனவு கனவு உறக்கத்தைக் கண்டு } பேதமாகப் பொருந்திய சாக்கிரம் சொப்பனம் சுழுத்தியாகிய இவற்றை அறிந்து

அவை கடந்து நிற்கின்றுன் } அவைகட்கு அதீதமாயிருக்கின்றுன் 14

(அ - கை) அனுன்ம வஸ்துவிற்கு சாக்ஷியத் தன்மையைக் கூறுகின்றுர்]

தற்பரந் தன்னிற் கற்பனை யாலே
சாக்கிர கனவுறக் கங்கள்
அற்புத மாக விளங்குமல் லதுதா
ஞகவவ் வவத்தைகள் விளங்கா
கற்பனை யாகிக் காட்சியாங் கடம்போ
லுடம்பினைத் தானெனக் கருதிற்
புற்புத வுடம்பாய்ச் செற்றவார் வங்கள்
பொருந்துமை யுறேலினிப் பொருளில் 15

(இ - ள்)

தற்பரம் தனில் — அந்தப் பிரஹ்மத்தினிடத்திலே

கற்பனையாலே சாக்கிர கனவு உறக்கங்கள் } அத்தியஸ்தத் தன்மையால் சாக்கிர சொப்பன சுழுத்திகள்

| | |
|---|---|
| அற்புதம், ஆக விளங்கும் அல்லது தாஞக அவ்வவத்தைகள் விளங்கா | * கற்பித விசேடமாக விளங்குமே யன்றிச் சுயமாகவே அவ்வவத்தைகள் விளங்க மாட்டாவாம் |

[" சரீரத்தோடு கூடியவனுக்கே யன்றி இல்லை" என்ற சுருதியின் அர்த்தத்தைச் சங்கிரகின்ருர்.]

| | |
|---|---|
| கற்பனையாகி கடம் போல் காட்சியாம் உடம்பினைதான் எனக் கருதில் | அத்தியஸ்தமாயும் கடம்போல் திரிசியமாயும் உள்ள தேகத்தினை நானென எண்ணிடில் |
| புற்புத உடம்பு ஆய்ச் செற்ற ஆர்வங்கள் பொருந்தும் | நீர்க்குமிழிக்குச் சமானமான தேகாதிகளில் யானெனதென அபிமானித்துள்ள விசிட்டனுக்கே கோபவாசை முதலியவைகள் பொருந்தும் |
| இனிப் பொருளில் ஐயுறேல் | இனியிவ்வர்த்தத்தில் சம்சயம் வேண்டாம் 15 |

உடம்புட னிருந்தே யுடம்பிலா வுண்மை
யுணர்ந்தவ னுளத்தொரு காலும்
விடம்படுகாம வெகுளிமே வாது
விளம்பிடும் பொருளெலாம் விளக்கும்
இடம்படு மிதயா காசமற் றிதுவே
யிறப்பொடு பிறப்பிலா தென்றுந்
திடம்படு பிரம மாவது மான்மா
வாவதுந் தேகிகட் கெல்லாம் 16

(இ - ள்)

| | |
|---|---|
| உடம்புடன் இருந்தே உடம்பு இலா உண்மை உணர்ந்தவன் | தேகத்தோடு கூடியிருந்தே தேகாதி சங்காத மற்ற உண்மைப் பொருளை யறிந்த வித்துவானது |
| உளத்து ஒருகாலும் விடம்படு காம வெகுளி மேவாது | அந்தக்கரணத்தில் எப்பொழுதும் விஷத்திற்குச் சமானமாயுள்ள இராகத்துவேஷாதிகள் பொருந்தாது |

* இப்பியில் ஒன்று தோன்றும்போதொன்று தோன்ருத வெள்ளி கடிதம் காக்காப் பொன் தோன்றுவதுபோல் ஆன்மாவில் நனவாதி மூன்றவஸ்தைகளும் தோன்றுவதாம். இதை விரிவாய் அறியவிரும் பின் விசார சந்திரோதயம் 6ஆம் கலை காண்க.

[தகராகாச சப்தத்திற்கு பிரஹ்மத்வம் திடப்படுத்தும் பொருட்டும் மற்ருெரு சுருதியிலுள்ள "ஆகாசமே நாம ரூபங்களை நிர்வகிக்கின்றது" என்னும் வாக்கித்தைச் சங்கிரகிக்கின்ருர்.]

| | |
|---|---|
| இடம்படும் இதய ஆகாசம் மற்று இதுவே | நிரபேக்ஷிக சர்வ வியாபகதகரா காசமாகிய இப் பிரஹ்மமே |
| விளம்பிடும் பொருள் எல்லாம் விளக்கும் | கூரு நின்ற நாமரூப வஸ்துக்கள் அனைத்தையும் தோற்றுவிப்பதும் |
| என்றும் இறப்பொடு பிறப்பு இலது தேகிகட்கு எல்லாம் ஆன்மா ஆவது | எந்நாளும் ஜனன மரண மற்றதும் சீவர்களுக்கெல்லாம் ஆன்மாவுமாம் |

16

(அ-கை) அப்பரமான்ம வஸ்துவின் பூரணத் தன்மையையைக் கூறுகின்ருர்.]

அப்பரம் பொருளே வேருெரு பரமும்
ஆகிய தற்பமு மில்லை
யெப்பொரு ளாயும் விளங்கியும் விளங்கா
திருக்கின்ருன் ருனுமிங் கிறையே
யொப்பரும் பரம னுருத்திரன் சிவனென்
றுரைக்கநின் றவனுடைத் தான
இப்பெரும் தன்மை யிருந்தவா றென்னே
யேவரா லறியலா மிதனை 17

(இ-ள்)

| | |
|---|---|
| அப்பரம் பொருளே வேறு ஒரு பரமும் ஆகியது | ஆன்மாவே பரமாகவும் (அபரமாகவும்) இருப்பதாம் |
| அற்பமும் இல்லை | - கிஞ்சிற்றும் பின்னமில்லை |
| எப்பொருள் ஆயும் விளங்கியும் விளங்காது இருக்கின்ருனும் இங்கு இறையே | விவகாரத்தில் சகல வஸ்துக்கள் வடிவமாக விளங்கியும் பரமார்த்தத்தில் அங்ஙனம் விளங்காமலிருக்கின்றவனும் இப் பரமேஸ்வரனேயாம் |

| | |
|---|---|
| ஒப்பு அரும் பரமன் சிவன் என்று உரைக்க நின்றவன் உருத்திரன் உடைத்தான | சமான ரகிதமான பரமன் சிவன் என்று கூறத்தக்க நாமத்தோடு இருக்கின்றவனான உருத்திரனுடைய |
| இப் பெரும்தன்மை இருந்தவாறு என்னே இதனை ஏவரால் அறியலாம் | இப்பூரணத் தன்மையான திருந்த வண்ணந்தான் என்னே இதனை யார்தான் அறிந்து சொல்ல வல்லார் 17 |

(அ - கை) பிரஹ்மம் தனது காரியங்களாகிய பூத பௌதிகங்களில் இடைவிடாமல் நிறைந்திருக்கின்றதென்பதைத் தெரிவிப்பதற்குத் திருஷ்டாந்தத்துடன் கூறுகின்றார்.

இந்தம காபூ தங்கள்ப குந்தே யெல்லையி லாநாமங்களை யும்பெற்
றந்தவி காரங் களுநிகழ் போது மவ்வவை யாயே நிகழ்வது போன்மற்
றந்தமி லாவொன் றாகியி ருந்தே யளவறு பேதப் பலபொருளாயிட்
டெந்தவு பாதிக் குங்கரி யாய்நின் றெங்கும்வி யாபிக் கும் பரமீசன் 18

(இ - ள்)

| | |
|---|---|
| இந்த மகா பூதங்கள் பகுந்தே | இந்தப் பிருதிவியாதி பஞ்ச மகா பூதங்கள் காரிய ரூபமாகப் பிரிந்து |
| எல்லை இலா நாமங்களையும் பெற்று | அளவிறந்த நாமங்களையும் (ரூபங்களையும்) பெற்று |
| அந்த விகாரங்களும் நிகழ் போதும் | அந்தந்தக் காரியங்கள் விளங்குகின்ற காலத்தும் |
| அவ்வவையாயே நிகழ்வதுபோல் | அந்தந்தக் காரியானுகத ரூபமாயே விளங்குகின்றதுபோல் |
| அந்தம்இலா ஒன்று ஆகி இருந்தே | நாசரகிதமாயும் அத்வைதமாயும் தானிருந்த வண்ணமிருந்தே |
| அளவு அறுபேதம் பல்பொருள் ஆயிட்டு | அளவிறந்த பேதத்தோடு கூடிய காரியரூப சர்வ பிரபஞ்சமாகவுந் தோன்றிற்று |

| | |
|---|---|
| எந்த உபாதிக்கும் கரியாய் | சர்வ காரிய ரூப உபாதிகட்கும் சாக்ஷியாய் |
| பரம் ஈசன் எங்கும் வியாபிக்கும் நின்று | பரமேஸ்வரன் சர்வ திக்குகளிலும் வியாபித்து நிற்கின்ருன் (மற்று – அசை) |

18

பின்னக டாகா யாதிக ளாலா காயம பேதம பேத முருதே
யன்னவ னேகா காரன நேகா காரவ கம்புக் காலும னேத்தா
மன்னிய பேதா காரம பேதா காரமு மாய்மா தேவனி ரானேல்
இன்னதெ னுமத் தானெனு மாறெ னியாவையு மீசா னன்பிறி
தன்றே. 19

( இ – ள் )

| | |
|---|---|
| ஆகாயம் கடாதியாதி களால் பின்ன(ம்) | எப்படி ஆகாயமானது கடமடாதி உபாதிகளால் பின்னமாகத் தோற்றினும் |
| பேதம் உருதே அபேதம் | பேதமில்லாமல் அபேதமாமோ (அப்படி) |
| அன்னவன் அநேக ஆகார அகம்புக்காலும் ஏக ஆகாரன் | அப்பரமேஸ்வரன் பேதரூபமான சரீரங்களில் பிரவேசித்திருப்பினும் அபேதனே. |

[மகாதேவனென்னும் நாமதேய பாவத்தாலும் இவ்வான்மாவுக்குச் சர்வான்ம பாவத்தைக் கூறுகின்ருர்.]

| | |
|---|---|
| மன்னிய பேத ஆகாரம் அபேத ஆகாரமும் ஆய் அனைத்தாம் | நிலைபெற்ற பேதமும் அபேதமும் ஆகிய சர்வமும் ஆகவும் |
| மகாதேவன் இரானேல்- | மகாதேவன் இரானுயின் |
| இன்னது என் நாமத் தான் எனும் ஆறு என் | இவ்வித மகாதேவனென்னும் நாமமுடையனென்னுந் தன்மை எவ்வற்ருலாம் |
| யாவையும் ஈசானன் பிறிது அன்று | ஆகலின் சர்வமும் பரமேஸ்வரனே பின்ன மின்று. (ஏ – அசை) |

19

உளவாகியு மிலவாகியு முருவாலெவை யிலகு
மொளியானவ னவனேயவை யவையாயொளிர் வுறுவா
னளவாவகை சிவனேயடை யவுமானவ னெனவே
தெளிவாகிய மதியாதது சிவையாவது தெளிவீர்.

20

(இ - ள்)

(அ - கை) பரசிவமே அனைத்தினும் பிரகாசிக்கின்றதென நிச்சயிக்கின்ற புத்தியெதுவோ அது சித்து ரூபமான பராசத்தியே வேறில்லையெனக் கூறுகின்றார்.

| | |
|---|---|
| உளவாகியும் இலவாகியும் உருவால் எவை இலகும் | சத் ரூபமாகவும் அசத் ரூபமாகவும் எவ்வுருவமாக எவ்வெப்பொருள்கள் விளங்குகின்றனவோ |
| அவை அவையாய் ஒளியானவன் அவனே ஒளிர் உறுவான் | அவ்வப் பதார்த்தங்களாய் சேதனரூப பரசிவனே விளங்குகின்றான் |
| அளவாவகை சிவனே அடையவும் ஆனவன் எனவே | பரிபூரணமான பரசிவனே சர்வான்மகமாகவுமிருக்கின்றானென்றுண்டாகும் |
| தெளிவு ஆகிய மதியாது அது சிவை யாவது தெளிவீர் | சம்சய விபரீதங்களற்ற அபரோக்ஷ ஞானமெதுவோ அதுவே சம்வித் ரூபமான பராசத்தியாம் என ஏ தேவர்களே! நீங்கள் அறியுங்கள். (ஆல் - அசை) 20 |

(அ - கை) எவனுக்கு அனைத்துஞ் சிவமாகவே பிரகாசிக்கின்றதோ அவனுக்குச் சனன மரண சமுசார பந்தமெவையுமில்லையெனக் கூறுகின்றார்.

சிவனேயக மெனவேதிகழ் வுறுவானித மெனநின்
றவனேயுட லதுமாய்நிகழ் பவன்வேறிலை யானால்
பவமேதது விடலேதொரு படியாயுள பரனே
யிவனேகமு மெனவோர்பொழு திறவாரவர் பிறவார். 21

(இ - ள்)

| | |
|---|---|
| சிவனே அகம் எனவே திகழ் வுறுவான் | பரசிவனே அகம் விருத்திக்கு விஷயமான ஆத்மரூபமாக விளங்குகின்றான் |
| அவனே இதம் என நின்று உடலதும் ஆய் நிகழ்பவன் | அப்பரமசிவனே இதம் விருத்திக்கு விஷயமாய் நின்று தேகாதி ரூபமாகவும் விளங்குகின்றான் |

| | |
|---|---|
| வேறு இலை ஆனால் பவம் ஏது அது விடல் ஏது | பின்னமாக வொன்றுமில்லையானால் பந்தமென்பதேது முத்தியென்பதேது |
| இவ்வநேகமும் ஒரு படியாய் உள்ள பரனே என | இவ்வெல்லாமும் அத்வைதமாயுள்ள பரமேஸ்வரனே யென்று |
| ஓர்பொழுது அவர் பிறவார் இறவார் | ஆராய்ந்து அறிந்த அன்றே அவர்கள் ஜனன மரணத்தை யடைய மாட்டார்கள். 21 |

(அ-கை) இந்த மேலான அநுபவம், பரசிவன் பிரசன்னனாக விருந்திடில் கிடைக்குமேயன்றி மற்றொரு உபாயத்தால் கிடையாதென்று சிவமகிமையைக் கூறுகின்றார்.

பரையாமதி யுடையாரநு பவமாய்நிகழ் வதுநா
னுரையாடிய படியேயுள வொளியாய்நிகழ் சிவனார்
வரையாவரு ளதனால்வரு மிதுமாதவ முதலா
நிரையாயிர வழியாலிது நிகழாதிது நிகழா. 22

(இ-ள்)

| | |
|---|---|
| பரையாம் மதி உடையார் அநுபவமாய் நிகழ்வது | சிற்சத்தியாகிய சம்வித்தை (நல்ல ஞானத்தை) யுடையவர்க்குச் சுவானுபவமாய் விளங்குவது |
| நான் உரை ஆடிய படியேஉளவொளியாய் நிகழ் சிவனார் | யாம் கூறிய வண்ணமேயுள்ள சொப்பிரகாசமாய் விளங்குகின்ற பரசிவனும் |
| இதுவரையா அருள் அதனால் வரும் | இவ்வநுபவம் பரமேஸ்வரனது அபார கிருபையாலுண்டாகுமே யன்றி |
| மாதவம் முதலாம் நிரை ஆயிரம் வழி யால் இது நிகழாது இது நிகழா | மாக்ஷிமை பொருந்திய தவ முதலி யனவாகச் சொல்லப்பட்ட அநேக மாயிரம் மார்க்கங்களாலும் (என்னா லும் விஷ்ணுவினாலும்) இவ்வநுப வம் விளங்கவே விளங்காது |

(என்னாலும் விஷ்ணுவாலும் என்ற மூலார்த்தத்தை "அநேகமாயிர மார்க்க" மென்றதில் கவிநாயகர் அடக்கிக் கூறினர்.)

திவகரன் எழில்வேறே சிலவொளி திகழ்வாமோ
வவமுற விருள்போகா தவனெதிர் நிலையாமோ
சிவதின கரனாலே செறிபவ விருணேரா
விவனொளி தனின்மானா னமரர்கள றிவோமோ. 23

(இ - ள்)

| | |
|---|---|
| திவகரன் எழில்வேறே சில ஒளி திகழ்வு ஆமோ | சூரியன் உதயமாயின் அதனதுபிரகாசத்தின் முன்னர் அன்னிய சந்திர நக்ஷத்திராதி பிரகாசங்கள் விளங்குமோ |
| அவமுற இருள் போகாது அவன்எதிர் நிலையாமோ | தோஷமுற்ற அந்தகாரமானது நீங்காது அச்சூரியனெதிர் நிற்குமோ |
| சிவதினகரனாலே செறி பவ இருள் நேரா | சிவசூரிய சந்நிதியில் நெருங்கிய ஜன்ம காரணமான அஞ்ஞான விருள் நிற்காது |
| அவன் ஒளிதனில் மால் நான் அமரர்கள் அறிவோமோ | அப்பரமேஸ்வரனது பிரகாசத்தின் முன்னர் விஷ்ணுவும் நானும் தேவர்களாகிய நீங்களும் விளங்க மாட்டோம். 23 |

புரணநல் லறிவாகப் புகலுறு பரமீசன்
சரணினை தலுமாரா தனையுறு தலுமல்லான்
மரணம தறவேறோர் வழிசொல விலையானால்
அரணம துறநங்கட் கடையவு மவனன்றோ. 24

(இ - ள்)

| | |
|---|---|
| புரண நல் அறிவு ஆகப் புகல் உறு பரம் ஈசன் | பானரூப மாகவும் நல்ல ஞானரூப மாகவும் கூறப்பட்ட பரமேஸ்வரனது |
| சரண் நினைதலும் ஆராதனை உறுதலும் அல்லாமல் | திருவடியைச் சிந்தித்தலும் அதற்காராதனை செய்தலுமாகிய இவ்வுபாயங்களாலல்லாமல் |
| மரணமது அற வேறோர் வழி சொல இலை ஆனால் | ஜனன மரண ரூப சம்சாரத்தையொழிப்பதற்கு வேறோர் மார்க்கமுண்டென்று கூறவில்லை ஆதலால் |

| | |
|---|---|
| நங்கட்கு அரண மது உற அடையவும் அவன் அன்றே | நம்மனைவர்க்கும் காப்பாகப் பொருந்திய காரண பூதமாகவும் சொருப பூதமாகவும் பிராண பூத மாகவும் உள்ள சமஸ்தமும் அப்பர மேஸ்வரன் அல்லவா. 24 |

ஆகமங்கள் பலவுமுரை யாடுகின்ற திவனையநு
போகமொன்றி லறியுமறி வாகிநின்ற புனிதனிவ
னேகனந்த வநுபவம தேயிவன்றன் வடிவுதனை
யோகமொன்ற வருள்பவனு மோதுகின்ற பரமசிவன். 25

(இ - ள்)

| | |
|---|---|
| இவனை ஆகமங்கள் பலவும் உரை ஆடுகின்றது | இப்பரசிவனையே ஆகமாதிகள னைத்தும் பிரதி பாதிக்கின்றன |
| இவன் அநுபோகம் ஒன்றில் அறியும் அறிவு ஆகி நின்ற புனிதன் | இப்பரமேஸ்வரன் சுவானுபவ மொன்றினாலேயே அறிதற்குரிய ஞான சொரூபனாயிருக்கின்ற பரிசுத்தன் |
| (இவன்) ஏகன் | – இவனே சுவகதாகி பேத ரகிதனும் |
| அந்த அநுபோகமதே இவன் தன் வடிவு | இவ்வாறுளதாகிய அந்தப் பிரஹ்ம நிஷ்டர்களுடைய அநுபவமே இந் தப் பரமேஸ்வரனது சொரூபமாம் |
| தனை யோகம் ஒன்றி அருள்பவனும் ஓதுகின்ற பரமசிவன் | பிரஹ்மானுபவம் பொருந்தும்படி அநுக்கிரகஞ் செய்பவனும் வேதப் பிரதிபாத்திய பரமேஸ்வரனும். 25 |

நானுமந்த வரியமரர் ஞாலமொன்று நரர்விவித
யோனியிந்த முழுதுமத னூடெழுந்த சிறுதிவலை
தானெழிந்து சிறிதில் சிவ சாகரந்த னிகரரியை
யூனமொன்று மெனைமொழிவர் ஓர்வொழிந்த வுணர்
விலிகள் 26

(இ - ள்)

| | |
|---|---|
| நானும் அந்த அரி அமரர் ஞாலம் ஒன் றும் நரர் விவித யோனி இந்த முழுதும் | பிரஹ்மாவாகிய நானும் முற்கூறிய விஷ்ணுவும் தேவர்களாய நீங்க ளும் உலகின் கண்ணுள்ள மநு ஷியர்களும் நாநாயோனி பேதங் களுமாகிய இவ்வனைத்தும் |

| | |
|---|---|
| அதன் ஊடு எழுந்த சிறு திவலை தான் ஒழிந்து சிறிதும் இல் | சிவ சாகரத்தினுள் எழுந்த சிறிய துளிகளே யன்றி யிதற்கு வேறாக அற்பமுமில்லை |
| ஓர்வு ஒழிந்த வுணர்வு இலிகள் | இவ்வாறுணராத அஞ்ஞானிகள் |
| அரியை ஊனம் ஒன்றும் எனை சிவசாகரம் தன் நிகர் மொழிவர் | விஷ்ணுவையும் அவரிலும் தாழ்வு பொருந்திய என்னையும் சிவ சாகரத்திற்குச் சமானமாகக் கூறுநிற்பர். 26 |

எறிக திர்க்குநிக ராகின் மின்மினியி
றைக்கு நேரரியு மெட்டிதா
னறுவி ரைக்கொளகில் சந்தொ டொக்குமெனி
ஞனு மப்பரம ஞேடு நேர்
அறிவி னுக்கறிவி லாமை நேரகில
நாய கர்க்கொருவர் நேரெனிற்
செறிய வுற்றவறி யாமை யின்செயலி
ருந்த வாறெனது செப்புகேன். 27

(இ – ள்)

| | |
|---|---|
| மின்மினி எறி கதிர்க்கு நிகர் ஆகின் | மின்மினிப் பூச்சியானது சண்டபானுவிற்குச் சமானமா மேல் |
| அரியும் இறைக்குநேர் | விஷ்ணுவும் பரசிவத்திற்குச் சமமாம் |
| எட்டிதான் நறுவிரைக் கொள் அகில் சந்தொடு ஒக்கும் எனில் | எட்டி விருக்ஷமானது நல்ல வாசனை பொருந்திய அகில் சந்தன விருக்ஷங்களுக்குச் சமானமா மெனில் |
| நானும் அப்பரமேஸ்வரனோடு நேர் | நானும் அப்பரசிவத்திற்குச் சமானமாம் |
| அறிவினுக்கு அறிவு இலாமை நேர் எனில் | ஞானத்திற்கு அஞ்ஞானமானது சமானமாகு மேல் |
| அகில நாயகனுக்கு ஒருவர் நேர் | சர்வலோக நாயகராகிய பரமேஸ்வரருக்கு ஒருவர் சமானமாகுவர். |

| | |
|---|---|
| செறிய உற்ற அறியாமையின் செயல் இருந்தவாறு எனது செப்பு கேன் | (இங்ஙனம் பரமசிவன் இணையற்றவனாக இருக்க, அச்சிவ சமானமாகக் கூறுவோர்களது) நெருங்கியுள்ள அஞ்ஞானத்தின் துற்சேட்டையா யிருந்த வன்மைதனை என்னவென்று சொல்லுவேன். 27 |

ஓத லுற்றபர னால னைத்து முள
தாவ தப்பரம னொன்றி னா
லாத லுற்றிலன நாதி முற்றுமவ
னாலெ றிப்பததி ரேகமா
வேத னத்தவர னைத்து மத்துவித
மாய்வி ழிப்பர்வி விதத்திலே
போத மற்றவர்வி ழிப்பர் மற்றவர்கள்
போத மற்றவர்கள் புல்லியோர். 28



(இ - ள்)

| | |
|---|---|
| ஓதல் உற்ற பரனால் அனைத்தும் உளதாவது | சமான ரகிதனாய்க் கூறப்பட்ட பரமேஸ்வரனால் சகலமும் உண்டாவதாகின்றது |
| அப்பரமன் ஒன்றினால் ஆதல் உற்றிலன் | அப்பரமேஸ்வரன் ஓர் காரணத்தினால் உற்பவிக்க மாட்டான் |
| அனாதி முற்றும் அவனால் அதிரேகமாய் எறிப்பது | இவன் புராதனனா யுள்ளவன் சர்வ பதார்த்தங்களும் அவனாலேயே விசேஷமாக விளங்குகின்றது |
| வேதனத்தவர் அனைத்தும் அத்துவிதமாய் விழிப்பர் | இவ்வித ஞானமுடையவர்கள் சர்வ ஜகங்களையும் அத்வைத சொரூபமாய்ப் பார்ப்பார்கள் |
| போதம் அற்றவர் விவிதத்திலே விழிப்பர் | அத்துவித ஞான மில்லாதவர்கள் துவித ஆகாரமாகவே பார்ப்பார்கள் |
| போதம் அற்றவர்கள் அவர்கள் புல்லியோர் | அஞ்ஞானிகளாகிய அவர்கள் கீழ்மக்களே. (மற்று-அசை) 28 |

(அ - கை) இவ்வாறு சாந்தோக்கிய உபநிடதப் பொருளனைத்தையும் சிவபெருமானெனக்கு உபதேசித்தருளியபடி உங்களுக்கு உபதேசித்தேன் எனக் கூறுகின்ருர்.

இதுசகந் தானெனமு னிகழ்தலுண் டேலிவித
மெவர்களுங் காணு மறிவே
யதுபரந் தானென முனநுபவந் தானடையி
லதுபவந் தீரு மறிவாம்
முதியசந் தோகவுப நிடதநின் ருேதுபொருள்
முழுதுமிங் கீசன் மொழியால்
அதிசயந் தானமர ரனைவருங் கூடவழ
குறவறைந் தேன ருளினுல். 29

(இ - ள்)

| | |
|---|---|
| இது சகம்தான் என முன் நிகழ்தல் உண்டேல் | ஈது செகத்தென்று பின்னமாகப் பொருள்கள் எதிர் தோன்றுமாயின் |
| இவ்விதம் எவர்களும் காணும் அறிவே | இந்த ஞானம் சர்வ சாதாரண சீவர்கள் காண்கின்ற ஞானமேயாம் |
| அது பரம்தான் என முன் அநுபவம்தான் அடையில் | அந்தச் சகத்து பிரஹ்ம ரூபமென அபரோக்ஷ அநுபவ முண்டாமேல் |
| அநுபவம் தீரும் அறிவாம் | அந்த ஞானம் ஜென்ம நிவர்த்திக் கேதுவாகிய ஞானமாம் |
| முதிய சந்தோக உபநிடதம் நின்று ஓது பொருள் முழுதும் | அநாதியான சாந்தோக்கிய உபநிடதமானது சாவதானமாகப் பிரதிபாதித்த அர்த்தமனைத்தும் |
| ஈங்கு ஈசன் மொழியால் அருளினுல் | இவ்விடத்து பரமேஸ்வரனது ஆக்ஞையினுலும் எனது கிருபையினுலும் |
| அதிசயம்தான் அமரர் அனைவரும் கூட அழகு உற அறைந்தேன் | அற்புதமாய சம்சார காரணமான அஞ்ஞான நிவர்த்தியும் சொஸ்சொரூப பூதமான நிரதிசயானந்த ஆவிர்ப்பாவமுமாகிய இருவகைய பிரயோஜனமும் தேவர்காள் நீங்கள் எல்லோரும் அடையுமாறு நன்ருகக் கூறினேன். 29 |

இது கவிநாயகர் வாக்கியம்

திண்ணி தாகவித யத்தை மீளும்வகை
செய்து சிந்தனையெ லாமறப்
பண்ணி னாலறிவி லாமை யென்றுவரு
பாவ கத்தையு மொழித்திடக்
கண்ண தாய்நிகழு மக்கணன் றியெதிர்
காணொ ணாதுபிறி தென்னவே
நுண்ணி தானபொருள் சொல்லினா னதுமெய்
நோக்கி னாலடைய வாக்கினான். 30

(இ - ள்)

| | |
|---|---|
| திண்ணிது ஆக இதயத்தை மீளும்வகை செய்து | விஷயங்களிற் சென்ற மனத்தை திடமாக அந்தர்முகப் படுத்தி |
| சிந்தனை எலாம் அறப் பண்ணினால் | பின் வீக்ஷேப ரூபமான சங்கல்பங்கள் அனைத்தும் நீங்கும்படி செய்து |
| அறியாமை என்று வரு பாவகத்தையும் | அஞ்ஞான மென்று சொல்லும்படி வாரா நின்ற சொரூபத்தையும் |
| ஒழிந்திடக் கண்ண தாய் நிகழும் | நிவர்த்தித்து ஞான சொரூபமாய் விளங்கும் |
| அக்கண் அன்றி பிறிது எதிர் காணொணாது என்னவே | அந்த சொரூபத்தை யன்றிப் பின்னமாக வொன்றுமே தோன்றாதென்று |
| அது மெய் நோக்கினால் அடைய ஆக்கினான் | அந்தப் பிரஹ்ம ஞானத்தோடு கூடியிருந்தே சர்வ ஜகத்தையும் சிருஷ்டித்த பிரஹ்ம தேவர் |
| நுண்ணிதான பொருள் சொல்லினான் | சூக்ஷ்மமான அர்த்தங்களைக் கூறினார். |

30

ஆறாவது சாந்தோக்கிய உபநிடத தாற்பரியம்
உரைக்கும் அத்தியாயம் சம்பூரணம்

ஆக திருவிருத்தம் (344)

சற்குருநாதன் துணை.

# அதர்வண வேதத்திலுள்ள முண்டகோபநிடத தார்ப்பரியம் உரைக்கும் ஏழாவது அத்தியாயம் ஆரம்பம்.

(அ – கை) இந்தப்பிரகாரம் வேதத்திரய உபநிடதங்கட்கும் பிரஹ்மான்ம ஐக்கிய பரத்வத்தை தெரிசிப்பித்து அதர்வண வேத முண்டகோப நிஷத்திற்கும் அப்பரத்வம் உண்டென்பதை தெரிசிப்பிக்க வேண்டி அவ்வுபநிஷத்தை சங்கிரகிக்கின்ருர்.

(அதனைக் கவிநாயகர் நீண்ட கேள்வியென அத்தியாயம் அடியிடுகின்ருர்.)

நீண்டகேள் வியினுற் கல்வியா னெஞ் சால்
நிச்சயித் தறியவொண் ணுத
தூண்டிடா ஞானச் சுடர்தனைச் சொரூபா
னந்தனைத் துரிசற வுளத்தே
மீண்டுகாண் பதுவே விச்சையென் றுரைப்ப
தாகவே தொடங்கினுன் மெய்போல்
ஈண்டுலோ கங்கள் இறக்கவுற் பவிக்க
இமைப்பதும் விழிப்பதா மிறையோன். 1

(இ – ள்)

| | |
|---|---|
| நீண்ட கேள்வியினுல் கல்வியால் நெஞ்சால் நிச்சயித்தறிய வொண்ணுத | பரசிவ கிருபையின்றி நெடுங்கால சிரவணத்தினுலும் படனத்தினுலும் அர்த்த தாரணுரூப மேதையினுலும் துணிந்து உணரப்படாத |
| தூண்டிடா ஞானச் சுடர்தனை ஆனந்த சொருபனை | சொப்பிரகாச சொரூபனை இன்ப வடிவமாயுள்ளவனை |
| துரிசு அற உளத்தே மீண்டு காண்பதுவே விச்சை | குற்றமற்ற இருதயத்தின்கண் அந்தர்முக விருத்தியில் அறிவதுவே ஞானம் (பிரஹ்ம வித்தையாம்) |
| உரைப்பதாக | என்று திருவாய் மலர்ந்தருள |

என்று உரைப்பதாக

| | |
|---|---|
| ஈண்டு லோகங்கள் மெய்போல் உற்பவிக்க இறக்க | நெருங்கிய உலகமனைத்து சத்தியம் போல பிறக்கவு மிறக்கவும் |
| விழிப்பதும் இமைப்ப தாம் | விழிப்பதும் மூடுவதுமாயுள்ள |
| இறையோன் தொடங்கினார் | பிரஹ்மதேவர் ஆரம்பித்தார் |

1

எப்பொருள் களுக்குந் தோற்றமு நிலையு
மிறுதியு மிதன்கணே யாகி
யொப்பிட வொன்றும் இன்றியே யென்று
முள்ளதா யுரையுணர் விறந்த
அப்பொரு ணேரே யறிந்தபோ தெல்லாப்
பொருள்களு மறிந்ததா மந்த
மெய்ப்பொரு டானே யெப்பொருள் களுமாய்
விளங்கலால் வேறிலா மையினால்.

2

(இ - ள்)

| | |
|---|---|
| எப்பொருள்களுக்கும் | க்ஷரரூபமான சர்வபதார்த்தங் களுக்கும் |
| தோற்றமும் நிலையும் இதன்கணே இறுதி யும் ஆகி | உற்பத்தி ஸ்திதி நாசங்கள் தன்னி டத்தில் உளது ஆதலால் (அதிஷ்டானமாயும்) |
| ஒப்பு இட ஒன்றும் இன்றியே என்றும் உள்ளதாய் | உபமானமின்மையின் சமான ரகிதமாயும் அக்ஷரமாயும் |
| உரை உணர்வு இறந்த | (நிர்விசேஷமாதலால்) வாக்கு மனதிற் கெட்டாததாயு முள்ள (பரதத்துவமுளது) |

[ "சுருதியில் எது அறியப்படில் அனைத்தும் அறியப் பட்டதாகின்றதோ" என்றது முதலியவற்றால் சங்கை சமா தான ரூபமாக எவ்வதிஷ்டானமான அக்ஷர பரஞானத்தால் ஆரோபித சகல ஜகங்களின் ஞானம் தெரிசிக்கப்பட்டதோ அதைச் சங்கிரகிக்கின்றார்.]

| | |
|---|---|
| அப்பொருள் நேரே அறிந்தபோது எல்லாப் பொருள்களும் அறிந்ததாம் | அவ்வக்ஷர பிரஹ்மத்தை சாக்ஷாத்தாக அறிந்த அன்றே ஆரோபித சகல ஜகங்களும் அறியப்பட்டதாம் |

[பிரதிக்ஞை செய்த அர்த்தத்தில் ஏதுவைக் காட்டுகின்றார்.]

| | |
|---|---|
| அந்த மெய்ப்பொருள் தானே எப்பொருள்களும் ஆய் விளங்கலால் வேறு இலாமையினல் | அவ்வக்ஷரப் பிரஹ்மமே சர்வ பதார்த்தாகாரமாய் விளங்குகின்ற படியினாலும், பின்னமில்லாத படியினாலும் 2 |

(அ - கை) ஆரம்பித்த உபநிஷத்தின் அபிதேயப் (பொருளுள்ள சொற்) பொருளைச் சங்கிரகமாகக் கூறி "இவ் வர்த்தத்தில் இரண்டு வித்தைகள் அறியத்தக்கது என பிரஹ்ம வித்துக்கள் சொல்லுகின்றார்கள்" என்பதாதியாம் உபநிஷதப் பொருளைக் கூறுகின்றார்.

இங்குநா மறிய வேண்டுவ திரண்டு
விச்சையவ் விரண்டினு மொன்று
பங்கமா மபரை பரையெனப் படுவ
தொன்றிதிற் பழமறை நாலும்
அங்கமா றுண்மை யமையிதி காச
மாதிக ளபரையா மற்ற
தெங்குமாய் நின்ற தொன்றையா தொன்றூ
லெய்தலா மதுவிறை யருளால். 3

(இ - ள்)

| | |
|---|---|
| இங்கு நாம் அறிய வேண்டுவது இரண்டு விச்சை | ஈண்டு நாமறியத்தக்கதாயுள்ளது இரண்டு வித்தைகளாம். |

| | |
|---|---|
| அவ்விரண்டினுள் ஒன்று பரை எனப்படுவது ஒன்று பங்கமாம் அபரை எனப்படுவது. | அவ்விரண்டு வித்தைகளுள் ஒன்று பரவித்தையென்று சொல்லப்படுவதாம். ஒன்று களங்கம்பொருந்திய அபரை வித்தையென்று சொல்லப்படுவது. |
| அதில் பழமறை நாலும் அங்கம் ஆறும் உண்மை அமை இதிகாசம் ஆதிகள் அபரையாம் | அவற்றுள் அனாதியான கர்ம காண்டமயமான நான்கு வேதங்களும் (சிக்ஷை கற்பம் வியாகரணம் நிருத்தம் சந்தசு ஆகிய சோதிட) வேதாங்கங்களாறும் வியாவகாரிக சத்தியமாயுள்ள இதிகாசாதிகளும் அவற்றினாலுண்டான ஞானமும் அபரவித்தையேயாம் |

[“ எதனால் அவ்வக்ஷரப்பொருள் அடையப்படுமோ அஃது பரவித்தை” என்று பிரதிபாதித்த சுருதி வாக்கியத்தைச் சங்கிரகிக்கின்றார்.]

| | |
|---|---|
| எங்குமாய் நின்ற ஒன்றை | சர்வ வியாபகமாயிருக்கின்ற அத்வைத வஸ்துவை |
| இறை அருளால் | பரமேஸ்வரனது பரிபூரண கிருபையாலும் |
| யாது ஒன்றால் எய்தலாம் அது மற்றது | ஞானகாண்டமயமான வேத வாக்கியத்தாலும் அவ்வாக்கிய ஜன்னிய ஞானத்தினாலும் அடையலாமோ அது பரவித்தையாம். 3 |

(அ-கை) சுருதியானது “யாதொரு அந்த அதிரிசியம்” என்பதாதிய சொரூபத்தோடு மிதிற் சங்கிரகிக்கப்படுகின்றது.

காணவோ ருருவு மின்றியே தனக்கோர்
கண்செவி மூக்குவா யின்றிப்
பாணிபா தங்க ளின்றிநுண் ணியதாய்ப்
பற்றிய பொருளெலாங் கடந்து
தாணுவா யெல்லாந் தோற்றுதற் கிடமாந்
தத்துவந் தன்னைத்தன் னாலே
யாணியா யறியு மறிவது விச்சை
யாவது பிறிதெலா மவிச்சை. 4

(இ – ள்)

| | |
|---|---|
| காண ஓர் உருவும் இன் றியே | (சக்ஷுராதி ஞானேந்திரியங்களாலும்) அறிதற்கரிதாயும் (வாக்காதி கர்மேந்திரியங்களாலும் அக்கிராகிய (கைக்கொள்ள முடியாதது) மாயும் தூலத்வ முதலிய திரவிய கர்மங்களான) ரூபங்களில்லாத தாயும் |

[ " எவன் சர்க்ஞனே எவன் சர்வ வித்தோ " என்பதனுல் சேதன முடைமை விசேஷ மின்மையால் சம்சாரிக்குப்போல சிவனுக்கும் நேர்ந்த சக்ஷு சுரோத்தி ராதிகரண சத்பாவத்தை விலக்குகின்ருர் ]

| | |
|---|---|
| தனக்கு ஓர் கண் செவி மூக்கும் இன்றியே | சக்ஷு சுரோத்திரம் மூக்கு முதலிய ஞானேந்திரியங்க ளில்லாததாயும் |
| வாய் பாணி பாதங்கள் இன்றி | வாக்கு பாணி பாத முதலிய கர்மேந்திரியங்க ளில்லாத தாயும் |
| நுண்ணிதாய் தாணுவாய் | அதி சூக்ஷுமமாயும் அசலமாயும் |
| எல்லாம் தோற்று தற்கு இடமாம் | சர்வ பூத யோனியா யுள்ள |
| தத்துவம் தன்னைத் தன்னுலே | அக்ஷர பிரஹ்மத்தை ஸ்வ சொரூப மாக |
| ஆணி ஆய் அறியும் அறிவது விச்சை ஆவது | திடமாய் அறியா நின்ற ஞானமே பரவித்தையென்று கூறப்படுவது |
| பிறிது எலாம் அவிச்சை | வித்யா சம்பந்தத்தால் கூறப்பட்டவேனைய யாவும் அபரவித்தையாம். 4 |

(அ – கை) கூறப்பட்ட பூத யோனித்வத்தை திருஷ்டாந்தங்களால் கூறுகிருர்.

சிலந்தியு மிழ்ந்து விழுங்குவ தெப்படி தேகத்தே
மலந்தரு கேசவு ரோமம தெப்படி மண்ணிற்கே
பலந்தரு மோடதி யெப்படி யப்படி யீசன்பால்
அலர்ந்த தடங்க வெறுங்கன வொக்கும தாயுங்கால். 5

(இ - ள்)

| | |
|---|---|
| சிலந்தி எப்படி உமிழ்ந்து விழுங்குவது | எப்படி ஊர்ணாபியென்னும் லுதா கீடம்மானது காரணாந்தர மபேக்ஷியாமல் தன் சரீரத்தில் நின்றும் தந்துக்களை வெளிப்படுத்தி தன்னிடத்திற்றானே யடக்குகின்றதோ |
| எப்படி பலம் தரு ஓடதி மண்ணிற்கே | எப்படி பிரயோஜனத்தைத் தருகின்ற நெல் முதலிய பயிர்கள் தன் காரணம் (விதை) போல் பிருதிவியில் உண்டாகின்றனவோ |
| எப்படி தேகத்தேமலம் தரு கேச ரோமம் | எப்படி ஜீவித்திருக்கிற புருஷனிடத்தில் நின்றும் அசேதனங்களான தலை ரோமமாதிகள் உண்டாகின்றனவோ |
| அப்படி ஈசன் பால் அடங்க அலர்ந்தது | அப்படிக் காரணாந்தராபேக்ஷையின்றி பிரஹ்மத்தினிடத்தினின்றும் சலக்ஷண (சமானமாயும் சமானமின்றியதாயும்) விலக்ஷணங்களான சேதனாசேதன ஜகமனைத்து முதியாநின்றன |
| ஆயுங்கால் அது வெறும் கனவு ஒக்கும் | (அவிக்கிரிய பிரஹ்மத்தினின்றும் உண்மையாக உண்டாயிற்று என்பது கூடாமையால் அது மாயாமயமாதலால்) அந்த ஜகத்சொரூபத்தை ஆராயுமிடத்து கேவலம் சொப்பன துல்லியமேயாம், 5 |

(அ - கை) பிரஹ்மத்தினின்று மிவ்வாறு ஜகமுற்பவிக்கின்ற கிரமத்தை தெரிசிப்பிக்கின்றார்.

பன்னுத வத்திர ளூற்றப ரத்திடை யேமுன்ன
மன்னமெ முந்தி னின்றுபி ராணம னங்கன்மந்
தன்னிலு றும்பல லோகமும் வந்தது தாவில்லா
வின்னமு தென்றுணர் முத்தியும் வந்ததி தன்கண்ணே. 6

(இ – ள்)

| | |
|---|---|
| பன்னு தவத்திரள் உற்ற பரத்திடையே | (பரிபக்குவமுடைய பிராணிகளின் கர்மவசத்தால் உற்பன்ன மானதும் சிருஷ்டவ்விய பரியாலோசனுரூபமாகச்) சொல்லுகின்ற ஞானத்தோடு கூடிய மாயாசபளப் (கூடிய) பிரஹ்மத்தினின்றும் |
| முன்னம் அன்னம் எழுந்தது | பூர்வம் அவ்வித ஞானத்தோடு கூடிய பிரஹ்மத்தினின்றும் (சம்சாரிகளால் புசிக்கப்பட்ட) அன்னமென்னும் போக்கியப் பிரபஞ்சத்தின் காரணமான அவ்வியா கிருத தத்துவ முண்டாயிற்று (தமோரூப விக்ஷேபசத்தி வெளிப்பட்டது) |
| அதின் நின்றும் பிராண(ன்) | அந்த தத்துவத்தினின்றும் (பிருதிவி வாயுசல சம்பந்தத்தால் (உஜ்ஜுனுவத்தை பீஜத்தினின்றும் அங்குரம் போல) அபஞ்சீ கிருத பூதம் அதன் காரியமாகிய லிங்க சரீர சமஸ்டி இவற்றை யுபாதியாகவுடைய சர்வக்ஞனுகிய) பிராணன் (என்னும் பெயருடைய இரணிய கற்பர் உண்டானுர்) |
| மனம் | (அந்தப் பிராணனின்றும் பஞ்சீகரண விஷயமான பிரஹ்மாவென்று சொல்லப்பட்ட) மனமுண்டாயிற்று |
| தன்னில் பலலோகம் | அதினின்றும் (சப்த அபிதேயங்களான பஞ்சீகிருத பஞ்சமகாபூதங்களும் பூதோர்பத்தி யனந்தரம் அண்டோர்பத்திக் கிரமமாக) பூவாதி லோகங்களும் |
| உறும் கன்மம் | அவற்றில் வசிக்கா நின்ற மநுஷியாதிகட்கு வருணுச்சிரம விகிதங்களான கருமங்களும் |

| | |
|---|---|
| இதன் கண்ணே தாவில்லா இன்னமுது என்று உணர்முத்தியும் வந்தது | இவற்றினின்றும் (கற்ப கோடி காலம் தத்துவக்ஞ்ஞான பரியந்தம்) அழியாத இனிய அமுதமென்றுணரத்தக்க முத்தி (சுவர்க்காதி பதம்) என்னும் பலமும் கிரமமாக வுண்டாயின. 6 |

(அ - கை) சொல்லிய அர்த்தத்தை முடித்துக் கூறுகிருர்.

யாதுமு ணர்ந்தெவை யுஞ்செய வல்லவ னியாரியாவன்
போதம யந்தவ மாவுடை யன்னுள போலேயன்
ஞதிக ளங்கணி கழ்ந்தத டங்கவிந் நாநா வா
மாதிவ ரும்பிர மங்கன வொக்கும தாயுங்கால். 7

(இ - ள்)

| | |
|---|---|
| யார் யாதும் உணர்ந்து எதையும் செய வல்லவன் | எவன் சர்வ பதார்த்தங்களையும் சாமானிய விசேஷமாக அறியவும் எச்செயலையுஞ்செய்யும் (* கர்த்துருத்வ அகர்த்துருத்வ அன்னியதா கர்த்துருத்வமான பிரபுத்வ) சாமர்த்தியமும் உடையவனே |
| யாவன் போதமயம் | எந்தப் பரமேஸ்வரன் ஞான சொரூபமோ |
| தவமா உடையன் | - தவ வடிவமாக வுடையவனே |
| அங்கண் ஆதி வரும் பிரமம் | அவனிடத்தினின்றும் பூர்வத்திலுண்டாகிய முற்கூறிய சரீர ரூபமான இரணிகற்பனும் |
| அன்னுதிகள் இந் நாநா வாம் அடங்க உள போலே நிகழ்ந்தது | நெல் முதலிய லக்ஷணமுடைய அன்னமும் தேவதத்தாதி நாமமும் நீல பீதாதி ரூபமும் உடைய திரவியக் கூட்டங்களும் ஆகிய விப்பேத முழுதும் சத்தியம் போல தோன்றியது |
| அது ஆயும் கால் கனவு ஒக்கும் | அப்பிரபஞ்சத்தை ஆராயுமிடத்து சொப்பன துல்லியமேயாம். 7 |

* ஒன்றைச் செய்யலாம் அதைச் செய்யாமலிருக்கலாம் அதை வேறு விதமாகவும் செய்யலாம் இது பிரபுத்வசாமர்த்தியமாம். மார்க்கண்டனுக்காக எமனை வதைத்ததும் பிறவுமாம்.

(அ - கை) இந்தப் பிரகாரம் பரவித்யா விஷயலக்ஷண மான அக்ஷர பிரஹ்மத்தை சொரூப தடஸ்த லக்ஷணங் களால் உபதேசித்து "அக்கரமாகி மெய்மையா யுள்ள அப் பொருளறிந்த போதல்லால்" என்னும் வாக்கியத்தால் அத னது ஞானமே மோக்ஷ சாதன மென்று உபதேசித்து சுருதி மந்திரங்களில் அபரவித்தை விஷயமான கருமங்களைச் சொல்லுதல் வைராக்கியத்தை யுண்டு பண்ணும் பொருட்டு ஆதலால் அது சித்தித்திருத்தலால் அக்கருமங்களுக்கு "வலியில்லாத ஓடங்கள்" என்றது முதலிய சுருதியினுல் கூறப்பட்ட மோக்ஷ சாதன அபாவத் தன்மையைக் கூறு கின்ருர்.

அக்கர மாகி மெய்மையா யுள்ள
வப்பொரு ளறிந்தயோ தல்லால்
எக்கரு மங்க ளாலும்வீ டில்லை
யாகமா திகளியற் றுங்காற்
றுக்கர மாகி யநித்தமாய்ப் பேறுஞ்
சுருக்கமா யிருக்கமற் றிவற்றைத்
திக்கறி யாதே முயல்பவர் முத்தி
செறிந்திடார் மரணமே செறிவார். 8

(இ - ள்)

| | |
|---|---|
| அக்கரம் ஆகி மெய்மை ஆய் உள்ள அப் பொருள் அறிந்த போது அல்லால் | அக்ஷரமாயும் என்று முள்ளதாகி யும் இருக்கின்ற அப்பிரஹ்ம சொரூபத்தை அறிந்த காலத் தல்லால் |
| எக் கருமங்களாலும் வீடு இல்லை | எப்படிப்பட்ட கர்மானுஷ்டானங்க ளாலும் மோக்ஷ முண்டாவதில்லை |
| யாகம் ஆதி இயற்றும் கால் துக்கரம் ஆகி | எக்ஞாதி கருமங்கள் செய்யுங் காலத்து கஷ்ட சாத்தியமாகியும் |
| பேறு அநித்தமாய் சுருக்கமாய் இருக்க வும் | பிரயோஜனமான பலனும் அநித் தியமாயும் அற்பமாயு மிருக்க |
| இவற்றை திக்கு அறி யாதே முயல்பவர் | இவற்றின் முண்மை யறியாம லேயே முயற்சிப்பவர்கள் |

| | |
|---|---|
| முத்தி செறிந்திடார் மரணமே செறிவார் | மோக்ஷத்தை யடைய மாட்டார்கள் (அடிக்கடி ஜனன) மரணத்தையே அடைவார்கள். 8 |

(அ - கை) அவற்றின் பலாபலங்களுக்குத் தக்க சொர்க்காதி போகங்களைக் கொடுக்கும் கருமமே பரம புருஷார்த்த சாதன மென்று கருதுகின்றனரோ அவர்களை நிந்திக்கின்றார்.

கருமதற் பரராய் நாங்களே யெல்லாங்
கற்றவ ரென்றிருக் கின்ற
பெருமித முடையார் மூடரே பிறவா
நெறியையும் பெறுகிலர் பிறவிக்
குருடர்கைப் பற்றிப் போகிய குருடர்
குழியிலே கூடவீழ் வதுபோல்
மருவிய வினையும் தாங்களுங் கூட
மாய்வதே யன்றிமற் றில்லை. 9

(இ - ள்)

| | |
|---|---|
| கரும தற்பரர் ஆய் நாங்களே எல்லாம் கற்றவர் | கர்ம நிஷ்டர்களாய் யாங்களே சர்வ சாஸ்திரங்களை முணர்ந்தவர்கள் |
| என்று இருக்கின்ற பெருமிதம் உடையார் மூடரே | என்று மதித்திருக்கின்ற கர்வமுடையோர்கள் அறிவில்லாதவர்களே |
| பிறவா நெறியையும் பெறுகிலர் | முத்தி மார்க்கத்தையு மடையார்கள் |
| பிறவிக் குருடர் கைப் பற்றி போகிய குருடர் | பிறவிக் குருடரை கைப்பற்றிக் கொண்டு சென்ற மத்திய குருடானவரும் |
| குழியிலே கூட வீழ் வது போல் | பாழுங்கிணற்றில் ஒக்கவே வீழ்ந்திறப்பதே போல |
| மருவிய வினையும் தாங்களும் கூட மாய்வதே அன்றி மற்றில்லை | பரம புருஷார்த்த சாதனமாகத் தாங்கள் அடைந்துள்ள கருமங்களும் கருமாபிமானியாய தாங்களும் ஒக்கவே நாசமடைவதே அன்றி வேறில்லை யென்பதாம். 9 |

தொலையுநல் வினைப்பயன் றொலைந்த போதிலே
தலையது கீழுற விழுகை தப்புமோ
நிலையுறு முத்திநேர் படுதல் நெஞ்சிலே
யலைவறு ஞானமுண் டாகி லல்லவோ. 10

(இ - ள்)

| | |
|---|---|
| தொலையுநல் வினைப் பயன் தொலைந்த போதிலே | நாசமாகா நின்ற புண்ணிய கர்மத்தின் பிரயோஜன மாகிய சுகங்கள் அநுபவித்து நாசமானவன்றே |
| தலையது கீழ் உற விழுகை தப்புமோ | கரும பல போக்தாக்கள் (அநுபவித்த சீவர்கள்) சுவர்க்கங்களினின்றும் தலை கீழாக விழுதல் தவருமோ |
| நிலை உறு முத்தி நேர் படுதல் | நித்திய நிரதிசயானந்த மாகிய மோக்ஷமானது அடையப்படுதல் |
| நெஞ்சிலே அலைவு அறு ஞானம் உண் டாகில் அல்லவோ | இருதயத்தில் திடஞானம் உதயமான லல்லவோ. 10 |

(அ - கை) இந்தப் பிரகாரம் சுருதி கூறிய அபரவித்யா விஷயமான கரும நிந்தையைத் தெரிவித்து "கருமத்தால் சாதிக்கப்பட்ட அநித்தியமான இகபர வுலகங்களை பரீக்ஷித்து" என்று சுருதி கூறிய வைராக்கிய விதியை சங்கிரகிக்கின்றார்.

சுருதியு மிருதியுஞ் சொன்ன வாறுநின்
றிருமையு மனித்தமென் றேதும் விட்டுநற்
குருவினை வழிபடிற் கோதி லாவவன்
அருளிடு மழிவற நின்ற வப்பொருள். 11

(இ - ள்)

| | |
|---|---|
| சுருதியும் மிருதியும் சொன்ன ஆறு நின்று இருமையும் அநித்தம் என்று ஏதும் விட்டு | அநேக ஜன்மங்களில் சுருதி ஸ்மிருதிகளால் கூறப்பட்ட சிரௌத ஸ்மார்த்த கருமாநுஷ்டானத்தோடுநின்று (அதனால் உளதாய சித்த சுத்தியும் அதனால் உளதாய நித்தியா நித்தியவஸ்து விவேகமும்) அதனால் சர்வவிஷயங்களிலும் வைராக்கியமடைந்து |

[இந்தப் பிரகாரம் நித்தியா நித்திய வஸ்துவின் விவேக ஞானத்தால் விரக்தனான புருஷனுக்கு சுருதியாதிகளால் சொல்லப்பட்ட லக்ஷணமுடைய குருவழிபாடே கர்த்தவ்யமாமென்று சொல்லுகின்றார்]

| | |
|---|---|
| நல்குருவினை வழிபடில் கோது இலா அவன் அழிவு அற நின்ற அப் பொருள் அருளிடும் | சற்குருவினை சரணமாக அடைந்து அவர் மனமுவக்க வழிபாடு செய்தவரின் அந்தக் குற்றமற்ற ஞானாசாரியன் அக்ஷரப் பிரஹ்மத்தையுபதேசிப்பர். |

11

(அ – கை) இங்ஙனம் சாதன சதுஷ்டய சம்பன்னனுக்கே பிரஹ்மக்ஞ ஞானம் உபதேசிக்கவேண்டும் என்பது கூடும் "அப்பொருள் சத்தியம்" என்றதால் அதன் விஷயமாகிய பிரஹ்மத்திற்கே சத்தியத்துவ மென்பது அயுக்தம் சீவர்களுக்கும் வேருகக் காணப்படுதலால் என்று சங்கித்து அவர்களும் பிரஹ்மத்திற்கு வேறில்லையென்று திருஷ்டாந்தத்தாற் கூறுகின்றார்.

எங்குநி றைந்தப ரத்தினி லோகமெ ழுந்தழி யும்படிதான்
அங்கியெ ழும்பொறி போலும கம்புற மாயது மாயையெனுங்
கங்குல்க டந்துயி ருக்குயி ராயொரு காலழி வற்றகமாய்
அங்கபி ராணன்ம னங்கள றுஞ்சி வணுகிய வக்கரமே. 12

(இ – ள்)

| | |
|---|---|
| லோகம் | சித்து ரூபராய ஜீவர்கள் (தேகேந்திரியாதியுபாதி செனன வசத்தால்) |
| எங்கும் நிறைந்த பரத்தினில் எழுந்து அழியும்படி தான் | வியாபக சித்து ரூப பிரஹ்மத்தில் நின்றும் உண்டானவர்களாய் (சிவயென்னும் அக்ஷரத்தில் உபாதி வயத்தால்) லயித்து (இலயத்திலும் அத்தன்மை பின்னமின்றியவராவர் யெதுபோலு மெனின்) |
| அங்கி எழும்பொறி போலும் | அக்கினியினின்றும் பொறிகளுண்டாய் ஒடுங்குவது போலாம் |

[ சீவனைப் போல அந்த அக்ஷரமும் பிராணாதி சம்பந்தம் ஏன் உடையதாகாது எனச் சங்கித்து சர்வ உபாதிகளும் இன்றிய அந்த வஸ்துவின் சொரூபத்தைக் கூறுகின்றார் ]

சிவன் ஆகிய அக்கரம் அகம் புறம் ஆயது } சிவனென்னும் அக்ஷரமானது உள்ளும் புறமும் நிறைந்திருப்பதாம்

மாயை எனும் கங்குல் கடந்தது } அஞ்ஞானந்த காரா தீதமாம்

உயிர்க்கு உயிர் ஆய் – பிராணனுக்குப் பிராண பூதமாம்

ஒருகால் அழிவு அற்று அகம் ஆய் அங்க பிராண மனங்கள் அறும் } எந்நாளும் நாச ரகிதமாம் அகம் பதலக்ஷயமாம் சர்வாந்தரமாம் தேகேந்திரிய பிராண அந்தக் கரணங்களற்றதாம். 13

(அ – கை) இரணிய கற்பனுக்குப் போல பிரஹ்மாண்டத்தினுள் இருப்பதாய் அதன் அபிமானி யாகின்ற விராட் புருஷனுக்கும் பரசிவத்தினின்றும் உற்பத்தியும் அதற்கன்னிய மில்லாமையும் பிரதி பாதிக்கின்றார்.

அங்கிதலை வாய்விவித மானமறை பாநு
திங்கள்விழி யெண்டிசைக ளுஞ்செவிகள் வாயு
தங்கு முயிர் தன்னிதய மேசகல முங்கால்
இங்கவனி சங்கர னிருக்கும்வடி வீதே. 13

(இ – ள்)

அங்கிதலை விவிதம் ஆன மறை வாய் } தேவ லோகமே சிரமாகவும் நான்கு வேதங்களே வாக்காகவும்

பாநு திங்கள் விழி } சூரிய சந்திரர்களே நேத்திரங்களாகவும்

எண் திசைகள் செவிகள் } அஷ்டதிக்குகளே சுரோத்திரங்களாகவும்

வாயு தங்கும் உயிர் } வாயுவே நிலைபெற்ற பிராணனாகவும்

சகலமும் தன் இதயம் – சர்வ ஜகத்துமே யிருதயமாகவும்

| | |
|---|---|
| அவனி கால் | பூமியே பாதங்களாகவும் (உடைய விராட் புருஷன் உற்பத்தி யாயினன்) |
| இங்கு ஈது வடிவு சங்கரன் இருக்கும் | இங்ஙனங் கூறிய இவ்வடிவுடைய விராட்டும் உபாதி நீங்கிடில் பர சிவனாகவேயிருப்பன் என்பதாம். 13 |

(அ - கை) முற்கூறிய சிருஷ்டியை விவரணஞ் செய்கின்றார்.

அர்க்கன்மதி யங்கிமழை யாதிமறை நாலும்
மிக்கமிகு தியாகவிவி தங்களிய மானர்
தக்கணசு ராசுரர்ம னித்தர்பசு சாதி
யெக்கிருமி கீடமுமெழுஞ்சிவனி டத்தே. 14

(இ - ள்)

| | |
|---|---|
| அர்க்கன்மதி அங்கி மழை ஆதி மறை நாலும் | சூரியனும் சந்திரனும் அக்கினியும் மழையும் முதன்மையாகிய நான்கு வேதங்களும் |
| மிக்க மிகுதியாக விவி தங்கள் இயமானர் | உயர்வு பொருந்திய யாக பேதங்களும் அவற்றின் கர்த்தாக்களும் |
| தக்கண சுரர் அசுரர் மனித்தர் பசு சாதி | தக்ஷிணைகளும் தேவர்களும் அசுரர்களும் மனிதர்களும் மிருகங்களும் (பிராணபானன் நெல் அரிசி பட்சிகளும்) |
| எக்கிருமி கீடமும் சிவனிடத்தே எழும் | எவ்வகைப்பட்ட கிருமிகளும் விட்டில் முதலிய வண்டுகளும் பரமேஸ்வரனிடத்தினின்று முண்டாயின. 14 |

[வி -ரை] சுருதியில் பஞ்சாக்கினி வித்தையில் சுவர்க்கலோகம் மழை பிருதிவி புருஷன் ஸ்திரி என்னும் ஐந்தக்கினிகளும் உபதேசிக்கப்பட்டு சுவர்க்கலோகம் அக்கினியினின்றுமுண்டாகி சோமனிடத்தினின்றும் மழையுண்டாகி அதினின்றும் பிருதிவியில் ஓஷதிகளுண்டாகி அவைகள் புருஷனாகிய அக்கினியில் ஆகுதி செய்யப்பட்ட அவ்வித அன்ன ரசம்

ரேதஸ்ரூபமாக பரிணமித்து புருஷனால் ஸ்திரீயென்னும் அக்கினியில் ஆகுதி செய்யப்பட்டு பிரஜைகளாக இவ்வாறுபவித்திடினும் பிரஜைகளனைத்தும் அப்பிரஹ்மத்தினின்றும் உண்டாகின்றதெனக் கூறியது காண்க. இவ்வாறு உற்பத்தியாக வேண்டுமானால் சிருஷ்டி அனாதியானது பற்றிப் புண்ணிய பாவங்களை யுடைய சீவர்கள் தேவயானம் பிதிர்யானம் என்னும் மார்க்கங்களால் பரலோகத்தையடைந்து முற்கூறியபடி செனிப்பதிற் சந்திரமண்டலத்தைச் சூக்குமவுபாதியடைந்தே செனிக்கவேண்டி யிருப்பதனாலும் பிதிர்லோகத்தை அடைதற்குச் சந்திரனும் சொர்க்க லோகத்தையடைதற்கு சூரியனும் சாதனமாக விருத்தலால் அவர்கள் சமித்தெனவும் சுவர்க்க முதலியவற்றையடைந்திடினும் செனன மரண மடைவதனால் அவைகளில் வைராக்கியம் வரவேண்டிச் சிருஷ்டி மத்தியில் *பஞ்சாக்கினி வித்தையு முபதேசிக்கப்பட்டதாம்.

மெய்மைவிர தந்தவம் விழுப்பமுத லாகுஞ்
செம்மைதரு நல்வினைகள் செய்தநுப விக்கும்
இம்மைமறு மைப்பயன னைத்து மிறைவன்பாற்
பொய்மையற வேநிகழி னுங்கனவு போலாம் 15

(இ – ள்)

| | |
|---|---|
| மெய்மை விரதம் தவம் முதல் ஆகும் விழுப்பம் செம்மை தரு நல் வினைகள் செய்து | (சிரத்தை) சத்தியம் பிரஹ்ம சரியம் தவம் முதலிய மேன்மை யாகிய சிறந்த பயனைத் தருகின்ற சற்கருமங்கள் அனைத்துஞ் செய்து |
| அநுபவிக்கும் இம்மை மறுமைப் பயன் அனைத்தும் இறைவன் பால் | அநுபவிக்கும் படியாயுள்ள இம்மை மறுமைப் பிரயோஜன மனைத்தும் பரசிவனிடத்தில் (உற்பத்தியாம்) |
| பொய்மை அறவே நிகழினும் கனவு போல் ஆம் | சத்தியமாகத் தோற்றினும் சொப்பன துல்லியமே யாம். 15 |

* இதை விசேடமாயறிய விரும்புவோர் பஞ்சதசி தியானதீபம் 11ஆம் சுலோகம், வியாக்கியானம், குறிப்புரை, சாந்தோக்கிய உபநிஷத் 4ஆம் அத்தியாயத்தில் காணலாம்.

(சுலோகம் 30—31) விடுபட்ட அர்த்தம். அவரிட மிருந்து ஏழு பிராணன்களும் (காது முதலிய ஏழு துவாரங் களின் வழியாக வருகிற) ஏழு தேஜஸ்களும் ஏழு ஹோமங் களும் (விஷய ஞானங்களும் ஏழு லோகங்களும்) (இந்திரிய ஸ்தானங்களும்) இவைகளெல்லாம் உண்டாயின அவரிட மிருந்து சமுத்திரம் பர்வதம் நதி எல்லா செடிகள் ரசங் களும் உண்டாயின. இந்த புருஷன் எல்லாவற்றிற்கும் ஆத்மா சர்வ சாக்ஷி பரமாத்மா நித்யானந்தன் புராணன் பூரணனுயிருக்கின்ருன்.)

வரக்கடவ தெப்பொருளு முன்புவரு மாபோல்
உரைத்தபர னேயடைய வாகியொளிர் கின்ருன்
அரிக்குமுனி கட்குமர னுக்குமறி வீதே
யிருக்குமதி லையமொரு காலுமிதி லொய்தா. 16

(இ - ள்)

| | |
|---|---|
| எப்பொருளும் முன்பு வருமா போல்வரக் கடவது | சர்வ பதார்த்தங்களும் பூர்வ சிருஷ்டி துல்லியமாய் பரமேஸ்வர னிடத்திருந்து மறு சிருஷ்டி யுண்டாகு மென்று |

[ இவ்வாறு சங்கிரக விஸ்தாரங்களாக சிருஷ்டிப் பிரதி பாதனத்தால் அக்ஷர சொரூபத்தைப் பிரதி பாதித்து "புரு ஷனே இந்த விஸ்வம்" என்னும் சுருதியினுல் சிருஷ்டிக்கப் பட்டதான செகத்து அப்பரசிவத்திற்கு அனன்னிய மென்று நிச்சயிக்கும் பொருட்டு அதைச் சங்கிரகிக்கின்ருர் ]

| | |
|---|---|
| உரைத்த பரனே அடைய ஆகி ஒளிர் கின்ருன் | கூறிய புருஷனுய பரசிவனே சர் வான்மகமாக விளங்குகின்ருன் |
| அரிக்கும் முனிகட்கும் அரனுக்கும் ஈதே அறிவு இருக்கும் | (எனக்கும்) மகாவிஷ்ணுவுக்கும் முனிவர்களுக்கும் ருத்திரனுக்கும் இவ்வித ஞானமே யிருப்பதாகிய |
| அதில் ஐயம் ஒரு காலும் எய்தா | அவ்வித நிருபணத்தில் சமுசயம் ஓர் போதும் அடையாததாகும். 16 |

மருவிவரு மாய விடயமய லாலிம்
மநுடர்மர ணுதி யிடரரு
வெருவுபவ வேலே விழுவரழி யாத
விமலசிவ ஞான விழிபெருர்
ஒருபிரம ஞான மொழியவொரு காலிவ்
வுததிகரை யேற யொணுமதோ
தெருள்செய்சிவ ஞானம் வருவதிறை தாள்கள்
செறியவரு சேவை வலியினுல். 17

(இ - ள்)

| | |
|---|---|
| மருவிவரு மாய விடய மயலால் இம்மநுடர் | வெகுசென்ம பரம்பரையாகப் பொருந்தி வாரா நின்ற மாயமய மான தாரபுத்திராதி பிரபஞ்ச விஷயங்களாலிம்மநுடர்கள் |
| மரணுதி இடர் அரு வெருவு பவவேலே விழுவர் | மரணுதி துன்பம் மாருததும் முமூட்சுக்கள் பயந்து நடுங்குவதற்கேதுவானதும் ஆகிய சம்சார சாகரத்தில் விழுவார்கள் |
| அழியாத விமலசிவ ஞான விழிபெருர் | கெடாத நின்மலமான பிரஹ்மக்ஞ் ஞான திருஷ்டியையும் பெருர் (அடையமாட்டார்கள்) |
| ஒருபிரம ஞானம் ஒழிய ஒருகால் இவ்வுததி கரை ஏற ஒணுமதோ | ஒப்பற்ற பிரஹ்மக்ஞ் ஞானத்தையன்றி எக்காலத்தும் இச்சம்சார சாகரத்தின் தீரமாகிய மோக்ஷத்தையடைய முடியாது |
| தெருள் செய்சிவ ஞானம் வருவது | தெளிவையுண்டு பண்ணத்தக்க சிவஞானம் உதயமாவது |
| இறைதாள்கள் செறிய வரு சேவை வலியினுல் | இறைவனுடைய திருவடிகளுக்குப் பொருந்தும்படி செய்து வாரா நின்ற சேவையின் வல்லபத்தாலே யாம். 17 |

அக்க ரந்தனே யிக்கு ரம்பையி லரியு மாசில விச்சையா
மிக்கி ரந்திக சிக்கி மீசனே யெய்த லாமமு தென்பதும்
புக்கி ருந்தபி ராண ஞமந மாவ தும்பர போதமே
மிக்கி ருந்தவு ளத்த ஞேர்விர காலி துள்புக மேவுவார். 18

(இ – ள்)

| | |
|---|---|
| அக்கரம்தனை இக்கு ரம்பையில் அறியும் ஆகில் | அக்ஷர பிரஹ்மத்தை இச்சரீரமத்தியில் குகா சப்த வாச்சியமாகிய இருதயத்தில் சுவாத்மாவாக ஒருவன் அறிவானாயின் |
| அவிச்சை ஆம் கிரந்தி நசிக்கும் | அந்தப் புருஷனுக்கு அஞ்ஞான மாய கிரந்தி! (முடிச்சானது) நாசமாவதாம் |
| ஈசனை எய்தலாம் | பிரஹ்மத்தைத் தானாகவே அடையலாம் |
| பரபோதமே புக்கி இருந்து பிராணன் நா. மனம் ஆவதும் | மேலான அந்த ஞானசொரூப ஆத்மாவே சரீரத்தினுள் புகுந்திருக்கின்ற பிராணனும் வாக்கும் மனமும் ஆவதாம் |
| அமுது என்பதும் | (பூர்வம் தடஸ்தலக்ஷணத்தால் கூறப்பட்டதும்) நாசரகிதமாமென்பதுமாம் |
| மிக்கு இருந்த உளத்தினோர் விரகால் இது உள்புக மேவுவார் | விவேகமிகுந்துள்ள வித்வான்கள் நிரந்தரம் அப்பியாசரூப உபாயத்தால் இவ்வான்மாவை இருதயத்தில் பொருந்தும்படி தெரிசிக்கத் தக்கதாம். 18 |

(அ – கை) வேதம் (துளைத்தல்) அல்லது எய்தல் பிரகாரத்தைக் கூறுகின்றார்.

தாரம் விற்கணை தானி லக்குள தத்து வந்தவ ருதவா
ருர்கு றித்தெய வல்ல ரப்பொரு ளிற்கு ளிப்பவ ரம்புபோற்
பேறி லக்கெயும் வில்லி யப்படி பேசு நற்கனை யெங்கணுங்
கூர்மு கத்தி லக்கி லம்புகு ளிக்கை யையுறல் கூடுமோ. 19

(இ – ள்)

| | |
|---|---|
| தாரம் வில் தான் கணை உள தத்துவம் இலக்கு | (எப்படி லௌகீகமானவில் இலக்ஷியத்தில் பாணத்திற்குப் பிரவேசமாமோ அப்படி ஆன்மபாணத்திற்கு இலக்ஷிய பிரஹ்மத்தில் பிரவேசகாரணமாவதால்) ஓங்காரம் தனுசும் சர்வ விருத்திகளின் சாக்ஷியாகிய சோபாதிக ஆன்மா பாணமும் பிரஹ்மம் இலக்ஷியமுமாம் |

| | |
|---|---|
| தவராதவாறு ஆர் குறித்து எய்ய வல்லார் | (இச்சாதனங்களால் விஷயதிருஷ ணை(ராக) முதலிய பிரமாதமின்றி) எவர்கள் ஏகாக்கிரசித்தத்தால் (ஆன்மாவை பிரஹ்மத்தோடு ஐக்கியமாக தியானித்தல் ரூப) வேதஞ்செய்யத் தக்கவர்களோ. |
| அவர் அப்பொருளில் அம்புபோல் குளிப்பர் | அவர்கள் அப்பிரஹ்மத்தில் அம்பு போல் ஐக்கிய பாவத்தை அடைவார்கள். |

[லோகித வேத (எய்தல்)வை லக்ஷணத்தைக் கூறுகின்றூர்.]

| | |
|---|---|
| பேர் இலக்கு | – இலக்ஷியமோ பரிபூரணம் |
| எயும் வில்லி அப்படியே | வேத (எய்யும்) கர்த்தாவோ உபாதி நீங்கிடில் அப்படியே |
| பேசும் நல்கணை எங்க ணும் கூர்முகத்தது | கூருநின்ற பாணம் எவ்விடங்களி னும் கூர்மை பொருந்திய முகத்ததாம் |
| இலக்கில் அம்பு குளிக்கை ஐயுறல் கூடுமோ | ஆனதால் இலக்ஷியத்தில் அம்பு பிரவேசித்தல் சம்சயமுண்டோ. 19 |

(அ-கை) பிரணவத்தால் ஆன்மாவுக்கு பிரஹ்மரூபத்வ ஞானமானது மற்றோர் சுருதியினும் பிரதிபாதிக்கப்பட்டிருக் கின்றது என தரிசிப்பிக்கின்றூர்.

அரணியோ டுத்தி ராரணி யுயிரும்
அமலவோங் காரமு மாக்கி
கரணிய தியான மாமத னத்தாற்
காணெணு வொளியினைக் காண்பர்
புரணநல் லொளியில் பூதபௌ திகங்கள்
பொருந்துயிர் புலன்கள் மற் றெல்லாம்
அரணுற கோவை யாகியே கிடக்கு
மதனையே யறிகுவ னறிஞன். 20

(இ - ள்)

| | |
|---|---|
| உயிரும் அமல ஓங்காரமும் அரணியோடு உத்திர ஆர் அரணி ஆக்கி | சோபாதிக ஆன்மாவையும் நின்மல பிரணவத்தையும் கீழரணி மேலரணியாகப் பொருந்தக் கொண்டு |
| கரணிய தியானம் ஆம் மதனத்தால் காணொணா ஒளியினைக் காண்பர் | செய்யா நின்ற தியானமாகிய கடைதலால் துர்லபமான சொப்பிரகாச ஆன்மசொரூபத்தைக் காண்பார்கள். |

[கூறிய அக்ஷரம் அதிசூக்ஷுமம் ஆதலால் அறிதல் துர்லபம் என்று சுருதி மீண்டும் உபதேசிக்கின்றார்.]

| | |
|---|---|
| புரண நல் ஒளியில் | யாதொரு பூரணப் பிரகாசமான அக்ஷரத்தில் |
| பூத பௌதிகங்கள் | – பூதங்களும் பூதகாரியங்களும் |
| பொருந்து உயிர் புலன்கள் மற்று எல்லாம் | உடலிற் பொருந்துகின்ற பிராணனும் இந்திரியங்களும் ஏனைய வனைத்தும் |
| அரண் உறக் கோவை ஆகியே கிடக்கும் அறிஞன் அதனையே அறிவன் | சூழ்ந்து எதனிடத்துக் கோவையாகக் கிடக்குமோ அவ்வக்ஷர பிரஹ்ம சொருபத்தையே விவேகிகள் அறியத்தக்கதாம். 20 |

பரம்பொரு ளினையே பாடுவான் வேறு
பகருவா னலன்பரு கமிர்த
வரம்பது வாகு மண்ணின்மற் றிந்த
மகிமையே யுள்ளதிப் பிரம
புரந்தனி லிதயா காசமே நிகழ்ந்தெப்
பொருள்களு மறிந்தெலாம் வல்ல
அரன்தனை வெறுமா னந்தநல் வடிவா
யறிந்தவர் மறுபிறப் பறுவார். 21

(இ - ள்)

| | |
|---|---|
| பரம்பொருளினையே பாடுவான் வேறு பகருவான் அலன் | பரமாத்ம விஷயமான வார்த்தைகளையே வசனிக்கத்தக்கது அன்னிய அனான்ம விஷயமான வார்த்தைகளை விடத்தக்கது. |

[இதற்குக் காரணம் கூறுகின்றார்.]

| | |
|---|---|
| பகரு அமிர்த வரம்பு அது ஆகும் | இவ்வான்மா சம்சார சாகரத்தின் தாண்டுதலால் அடையப்படும் அமிர்தத்துவப் பிராப்திக்கு சேதுவாம். |

[இவ்விதங் கூறிய ஆன்மா எவ்விடம் அறியத்தக்கதென்றால் கூறுகிறார்]

| | |
|---|---|
| எப்பொருள்களும் அறிந்து எலாம் வல்ல | சர்வ வஸ்துக்களையும் எவன் சாமானியமாகவும் விசேஷமாகவும் அறிய வல்லவனோ |
| மற்று இந்த மகிமையே மண்ணில் உள்ளது | எவனுடைய முற் கூறப்பட்ட இந்த வீபூதியே லோகத்திற் காணப்படுகின்றது |
| அரன் இப்பிரம புரம் தனில் இதய ஆகாசமே நிகழ்ந்தது | அப்பரமேஸ்வரன் இந்தச் சரீரமாகிய பிரஹ்ம புரத்தில் இதயாம்பரத்தில் விளங்குகின்றான் |
| தனை வெறும் ஆனந்த வடிவமாய் அறிந்தவர் மறுபிறப்பு அறுவார் | (எல்லா மனத்தையும் பிராணனையும் சரீரத்தையும் நடத்துபவனாயிருக்கும்) அப்பரசிவனை சுத்த ஆனந்த வடிவாய்ச் சாக்ஷாத் கரித்தவர் புனராவிருத்தியற்றவராவர். 21 |

(அ - கை) பரமாத்ம ஞானத்தினது பலத்தைக் கூறுகின்றார்.

இதயமா மிந்த விமலகோ சத்தை
யிரசமாய் விளங்குறற் பிரமம்
துதயமே விடுமச் சோதியே யெல்லாச்
சோதிக்குஞ் சோதியா வதுவும்
இதயமே நிகழு மிதனைமெய் கண்ட
விடத்தின்மற் றியதனோ யெல்லாம்
சிதயுமை யுறவுந் தீருமெவ் வினையுஞ்
செய்யினுஞ் செய்தில னாமால். 22

(இ – ள்)

| | |
|---|---|
| இதயமே நிகழும் இதனை | இருதயாகாசத்தில் விளங்குமிப் பரம்பொருளை |
| மெய்கண்ட விடத்தில் | உண்மையாக சாக்ஷாத்கரித்த விடத்தில் |
| மற்று இதய நோய் எல்லாம் சிதையும் | வேறுபோல் மனத்திலுள்ள காரியா வித்தை வாசனை கிரந்தி (முடிச்சு) ஆய துக்கமனைத்தும் நாசமாம் |
| ஐயுறவும் தீரும் | – சர்வ சந்தேகமும் ஒழிந்துபோம் |
| எவ்வினையும் செய்யினும் செய்திலனும் | (மனோவாக்கு காயங்களால்) சர்வ தொழில்களையும் செய்தாலும் செய்யாதவனும் |
| இதயமாம் இந்த விமல கோசத்தே நல்பிரமம் இரசமாய் விளங்கும் | இதயமென்று கூறப்பட்ட இரண்ய மய கோசத்தில் ஆனந்த சொரூப பிரஹ்மமானது அவித்தியாதி (ரஜோதமோ) மலவர்ஜிதமாய் விளங்குவதாம் |
| துதய மேவிடும் அச் சோதியே எல்லாச் சோதிக்கும் சோதி யாவதுவும் | எவ்விடத்து மிடையீடின்றிப் பொருந்தியிருக்கின்ற சொப்பிர காச ஆன்மாவே சர்வ சோதிகட்கும் சோதியாம். |

22

(அ – கை) எப்படி சோதிக்கெல்லாம் சோதியாகுமென்று சங்கித்து அதைப்பிரதி பாதிக்கின்றார்.

இலங்கிரவி யிந்துவன றாரகைமி னெல்லாம்
நலம்பெற விளங்குவது ஞானவொளி கொண்டே
புலம்படு மனத்தையும் விளக்குபர போதம்
துலங்குவது தன்னுடைய சோதியத னாலே.

23

(இ – ள்)

| | |
|---|---|
| இலங்கு இரவி இந்து அனல் தாரகை மின் எல்லாம் | விளங்கா நின்ற சூரியன் சந்திரன் அக்கினி நக்ஷத்திரம் மின்னல் ஆகியவனைத்தும் |

| | |
|---|---|
| நலம்பெற விளங்கு வது ஞான ஒளி கொண்டே | நன்ருகப் பிரகாசிப்பது ஞானப் பிரகாசத்தினுலேயாம் |
| புலம்படும் அனைத்தை யும் விளக்கு பர போதம் | ஞானத்திற்கு விஷயமாகிய வனைத் தையும் பிரகாசிக்கின்ற மேலான ஞான சொரூபமானது |
| துலங்குவது தன்னு டைய சோதியதனுலே | விளங்கா நிற்பது சுயம்பிரகாசத் தாலேயாம். 23 |

(அ – கை) இங்ஙனம் சூரியாதிகள் விளங்க மாட்டா தென்ற சுருதியின்ருர்பரியத்தைச் சங்கிரகித்துக் கூறு கின்ருர்.

ஓரொளி விளங்குகில தூதையுல வாத
சீரொளியில் வேறுசில தேவர்திகழ் வாரோ
பார்வெளியு மெப்பொருள்க ளுந்திசைகள் பத்தும் 24
பேரொளி பெறத்திகழ் பரப்பிரம மேயாம்.

(இ – ள்)

| | |
|---|---|
| ஊதை உலவாத சீர் ஒளியில் ஓர் ஒளி விளங்கு கிலது | வாயுவால் சலியாத சிறந்த அந்த பரசிவப் பிரகாசத்தில் சூரியாதிப் பிரகாசத்தினுள் ஒன்றும் பிரகாசிக்காது |
| வேறு சில தேவர் திகழ்வாரோ | மற்றும் சில தேவர்கள் பிரகாசிப்பரோ |

[ இந்தப் பிரகாசம் சொப்பிரகாச சித்துருபமான பிரஹ் மத்திற்குச் சர்வஜகத் காரணத் தன்மையால் யாதொரு சர்வான்மியத்வங் கூறப்பட்டதோ அதையுபசம்மரிக் கின்ருர் ]

| | |
|---|---|
| பார்வெளியும் எப் பொருள்களும் திசை கள் பத்தும் பேர் ஒளி பெறத் திகழ்பரப் பிரமமேயாம் | பிருதுவி ஆகாயம் மற்றனைத்தும் ஆயவஸ்துக்களும் தசதிக்குகள் யாவும் சொப்பிரகாச சுபாவமுற்று விளங்காநின்ற பிரஹ்மமேயாம். 24 |

(அ – கை) ஜீவேசுரர்கள் சம்சாரித்வம் முதலிய தர்ம பேதத்தால் சாயையும் ஆதபமும் போல விலக்ஷண சுபாவர்கள் இவர்களுக்கு எப்படி ஏகத்வம் என்றுசங்கித்து நீக்குகின்றார்.

இந்தவு டம்புறை சீவப ரங்களெ னப்படு மன்னமிரண்
டந்தவி ரண்டிலு மொன்றுவி னைப்பய னங்குநு கர்ந்திடுமாந்
தொந்தம றும்பர மொன்றுமு ணாதுசொ லப்படு பேதமில்வான்
வந்துக டத்தில கப்படு பேதமெ னப்படு மாயையினால். 25

(இ – ள்)

| | |
|---|---|
| இந்த உடம்புறை சீவ பரங்கள் எனப்படும் இரண்டு அன்னம் | இந்தச் சரீரத்தினுள் ஜீவன் ஈசுவரன் என்று சொல்லப்பட்ட அன்னப்பறவைகள் இரண்டு வசிக்கின்றன |
| அவ்விரண்டிலும் ஒன்று வினைப்பயன் அங்கு நுகர்ந்திடுமாம் | அவ்விரண்டினுள் சீவனாகிய ஓர் பறவை உபாதி தாதான்மியத்தால் கர்மத்தின் பலத்தை அவ்விடத்தே அநுபவிக்கும் |
| தொந்தம் அறும்பரம் ஒன்று உணாது | துவந்துவ பாவமற்ற பரனாகிய வோர் பறவை (கர்த்துருத்வாதி தாதான்மிய உபாதியற்றதால் கர்ம பலன்களை)யொன்றுமநுபவிக்காது (சொப்பிரகாச சாட்சியாகவே விளங்குகின்றது) |

[ பிரதிக்ஞை செய்த அர்த்தத்தை திருஷ்டாந்தத்தாற் கூறுகின்றார் ]

[வி – ரை] அவர்களுக்கு போக்துருத்வ அபோக்துருத்வ லக்ஷணமான தர்ம பேதத்தால் தோற்றாநின்ற பேதமானது.

| | |
|---|---|
| பேதம் இல்வான் | யாதொரு பேதமுமின்றிய ஆகாயமானது |
| வந்து கடத்தில் அகப்படு பேதம் என | வாராநின்ற கடாதிகளால் அவச்சின்னமாய் கடாகாசமென்று கூறப்படுவதுபோல் |

| | |
|---|---|
| சொலப்படும் | - முற்கூறிய (பிரஹ்மத்தினிடத்தில்) |
| மாயையினால் | -(சுத்தசத்வ மலினசத்வ)மாயையினால் |
| படும் | - (ஜீவேசுரர்களைக் கற்பிக்கப்) படும். |

25

(அ – கை) ஈசுவர ஞானம் சர்வ விஷயமாயும் ஜீவ ஞானம் பரிமித விஷயமாயும் காணப்படுவதால் அவர்கட்கு எங்ஙன் ஏகத்துவம் கூடும் எனச் சங்கித்துக் கூறுகின்றார்.

தற்பர னுருவஞ் சித்தே தற்பர னிடையேயக்
கற்பித சீவன் றானும் தானக் காலந்தச்
சிற்பொரு ளொன்றே வேறெனின் மற்றது சித்தாமோ
அற்பமும் வேறா காதுசித் தாகா ரத்தாலே. 26

(இ – ள்)

| | |
|---|---|
| தற்பரன் உருவம் சித்தே | வாஸ்தவத்தில் மாயாசபள ஈசுவர சொரூபம் சித்துவடிமே |
| தற்பரன் இடையே அக்கற்பித சீவன் தானும் அது | அம்மாயா உபகித அவ்வீசுவரனிடத்து கற்பித ரூபமாய்த் தோன்றாநின்ற ஜீவனும் அந்தச் சித்ரூபமே |
| ஆனக்கால் அந்தச் சிற்பொருள் ஒன்றே | ஆனதால் அந்தச் சித்ரூப மிரண்டும் உபாதிபேதமேயன்றி உண்மையிலேகமே |

[ மறுபடியும் ஜீவேசுரவரர்கள் பின்னமெனக் கூறும் வாதியைக் கேட்கத்தக்கது அப்பேதம் சித்ரூபத்தாலா ஜடரூபத்தாலா என விகற்பித்து பிரதம விகற்பத்தை நிராகரிக்கின்றார் ]

| | |
|---|---|
| வேறு எனில் அது சித்து ஆமோ | சித்ரூபத்தால் பேதமெனக் கூறில் சித்தினும் பின்னமாகிய சீவன் சித்தாகுமோ |
| சித்து ஆகாரத்தால் அற்பமும் வேறு ஆகாது | இரண்டும் சிற்சொரூபமானதால் கிஞ்ஞிற்றும் பேதமாகாது. (மற்று. ஏ. அசைகள்) 26 |

(அ – கை) இரண்டாவது விகற்பத்தில் ஜடத்திற்கே பேதமன்றி சித்திற்கில்லை யென்று கூறுகின்றார்.

பன்னு சடாகா ரப்புணர் வாலே பரசீவர்
பின்ன ரெனிற்போ தத்தொரு பேதம் பிறவாதே
மன்னு சடத்தே பேதம தத்தான் மானத்தால்
சொன்ன வபபேதப் பொருள்கலர் கண்ணிற் றோன்றுதே. 27

(இ - ள்)

| | |
|---|---|
| பரசீவர் பன்னு சடாகாரப்புணர்வாலே பின்னர்எனில் போதத்து ஒரு பேதம் பிறவாதே | ஈசுவரசீவர்கள் (சித்ருபத்தால் பேதமில்லை) சொல்லாநின்ற சடரூபத்தால் பின்னர்கள்என்று கூறுதல் (எமக்கும் சம்மதமே) சித்தினிடத்தில் கிஞ்சிற்றும் பேதமுண்டாகாது |
| சடத்தே பேதம் மன்னும் | ஜடத்திற்கே பேதம் பொருந்தும் |
| மதத்தால் மானத்தால் சொன்ன அபேதப் பொருள் | யுக்தியினாலும் சுருதியனுசார தர்க்கத்தினாலும் சுருதியாதி பிரமாணத்தினாலும் நிச்சயித்துக் கூறிய அவ்வத்வைதவஸ்துவின் ஞானமானது |
| கலர் கண்ணில் தோன்றுதே | பாபிஷ்ட ஜனங்களது புத்தியின் கண் விளங்க மாட்டாது. 27 |

மறையாலு மிருதிசொலும் வழியாலும் வருவதவிர்
இறையார்த மருளில்வரு வதுவேக மெனுமுணர்வு
பிறிவான தருமுணர்வு பெறுமாகி லொருபொழுதும்
இறவாத சிவமடையு மிடர்மோக மெவையுமிலன். 28

(இ - ள்)

ஏகம் எனும் உணர்வு – அத்வைத விஞ்ஞானமானது

| | |
|---|---|
| மறையாலும் மிருதி சொலும் வழியாலும் வருவது | சுருதிப் பிரதிபாத்திய சிரௌத ஆசாரத்தாலும் ஸ்மிருதி பிரதிபாத்திய ஆசாரத்தாலும் (அதிகாரிக்கு சித்த சுத்தி) உண்டாவதாம் (அதனால்) |
| அவிர் இறையார் தம் அருளில் வருவது | (ஒப்பற்று) விளங்கா நின்ற ருத்திரப் பிரசாதத்தினால் உண்டாவதாம் |

| | |
|---|---|
| பிறிவு ஆனது அறும் உணர்வு பெறும் ஆகில் | ஜீவேசுவரர்களது பேதரகிதமான அத்வைத ஞானமடைவானுகில் |
| ஒரு பொழுதும் இற வாத சிவம் அடையும் | நித்திய (நிரதிசயானந்த) சிவ சொரூபத்தை அடையா நிற்பன் |
| இடர் மோகம் எவையும் இலன் | சோக மோகங்களின் சங்காத (கூட்டம்) மற்றவனுவன். 28 |

(அ - கை) இரண்டு பக்ஷிகள் என்று சொல்லிய மந்திரதாற்பரிய வியாக்யானத்தால் பேத பரத்வத்தை நிரா கரித்துக் கீழ்ச்சொல்லிய பொருளைச் சாக்ஷாத் பிரதி பாதிக் கின்ற சமான விருக்ஷத்தில் என்னும் மந்திரார்த்தத்தை விவ ரித்துக் கூறுகின்ருர்.

திதமாவி யுடலுறைய விறைமாயை செயலதுயர்
விதநாட வரியகடல் விழும்வேறு படவுணர
விதுநாளும் வருமிறைவ னுருவாகு மிலதெவையு
மதுநானெ னநுபவம தடைவோனெ ரலேவுமிலன். 29

(இ - ள்)

| | |
|---|---|
| இறை உடல்திதம் ஆவி உறைய | சிவஸ்தானமாகிய சரீரத்தில் நிலே பெற்ற ஜீவன் தான் சிவனுகவே யிருக்கவும் |
| மாயை செயல் விதம் நாட அரிய துயர்க் கடல் விழும் | ஜீவோபாதியான மலின சத்துவப் பிரதான அவித்தையின் வசத்தால் அநேக பிரகாரமான துக்க சாகரத் தில் விழுந்து சோகப்படுவன் |
| இலது எவையும் | உற்றுணரில் இல்லாத தாயழியுமிச் சகத்தனைத்தும் |
| இது நாளும் வேறுபட உணரவரும் இறை வன் உருவு ஆகும் | சுருதி விசார காலபரியந்தம் தனக் கன்னிய மாயறிந்து உபாசித்து வந்த பரமேஸ்வர சொரூபமேயாம் |
| அது நான் என் அநு பவம் அடைவோன் ஓர் அலேவும் இலன் | அப்பரசிவ சொரூபமே நானென் னும் நிச்சய ரூபமான சுவானுபூதி யுடையவன் ஓரனர்த்தமும் அற்ற வனுவன். 29 |

(அ - கை) ஆகாமிய (மேற்) ஜெனன ஆரம்பங்களான புண்ணிய பாவங்களால் பிரதிபந்திக்கப்பட்ட பரவித்தையி ஞல் எங்ஙன் ஜீவனுக்கு முத்தி கூடும் என்னுஞ் சங்கைக்குக் கூறுகின்ருர்.

சின்மய மாகுந் தன்மகி மாவைத்
    தீரவ றிந்தா னியாதொரு போதத்
தன்மய மாகுந் தன்னை கர்த்தா
    வாய்முழு துக்குந் தானிட மாகிப்
பொன்மய ஞகும் பூரண ஞவப்
    போததிற் காணும் புண்ணிய கோடிப்
பன்மையி ஞலுந் தர்க்கொடு மானப்
    பார்வையி ஞலும் பரனரு ளாலும். 30

(இ - ள்)

| | |
|---|---|
| யாது ஒரு போது சின் மயம் ஆகும் தன் மகி மாவைத் தீர அறிந் தான் | எப்போது சித்வடிமாகிய தனது பரமாத்வைத லக்ஷணமுடைய பூர ணத்வத்தை திடமாக சாக்ஷாத் கரித்தனஞே |
| அப்போது முழுதுக் கும் தான் இடம் ஆகி | அப்போது நாமரூபப் பிரபஞ்ச மனைத்திற்கும் சச்சிதானந்தமாகிய தானதிருஷ்டானமாம் |
| பொன்மயன் ஆகும் பூரணன் ஆ அத்தன் மையன் ஆகும் தன்னை | சொர்ணச் சோதியாய் பரிபூரண மாய்உள்ள வியத்தற்குரிய அவ்வித சொரூபமுடைய தன்னை |
| புண்ணிய கோடிப் பன்மையி ஞலும் | அநேக கோடி கற்பங்களில் அர்ச் சித்த புண்ணிய புஞ்ச (கூட்டம்) பரிபாகத்திஞலும் |
| தர்க்கொடு மானப் பார்வையி ஞலும் | சுருதி யனுசார தர்க்கத்திஞலும் சுருதியாதி பிரமாண ஆராய்ச்சியி ஞலும் |
| பரமன் அருளாலும் | - பரமேஸ்வர பிரசாதத்திஞலும் |
| அகர்த்தா வாய் எதிர் காணும் | கர்ம கர்த்துரு பாவ மில்லாதவனுய் அபரோக்ஷமாய் அறியா நிற்பன். |

30

பாவபுண் ணியங்க ளிரண்டையு முதறிப்
பற்றுவீ டொன்றெடு மின்றி
யாவையுந் தானய் வேறிலா தவனைப்
பெய்துமற் றிப்பொரு ளறிந்தோன்
சீவனும் பரனும் சின்மய மாகு
மாதலா லொப்பெனச் செப்பன்
மேவியொன் ருகி விடுதலே யன்றி
வேறுவே ருகுமோ வீடு. 31

(இ - ள்)

| | |
|---|---|
| இப்பொருள் அறிந்தோன் பாவ புண்ணியங்கள் இரண்டையும் உதறி | முற்கூறிய லக்ஷணமுடைய பரசிவத்தை சுவான்மாவாக அறிந்த வித்வான் ஆகாமிய (வரும்) செனனத்தைக் கொடுக்கும் புண்ணிய பாவங்களிரண்டும் விட்டவனய் |
| ஒன்றெடும் பற்று வீடு இன்று | அவைகட்கேதுவாகிய தேகேந்திரிய யாதிகள் ஒன்றுடனும் சம்பந்தமின்றி |
| வேறு இலாதவன் யாவையும் தானய் ஒப்பு எய்தும் | பேதரகிதனய் சர்வ பிரகாரத்தாலும் தானே யாயிருப்பவனய் (பரமாத்வைத லக்ஷணமுடைய சிவ) சாமியத்தை யடைவன் |

[ சமபாவத்தை மறுக்க வேண்டி சின்மாத்ர ரூபர்களாயுள்ள ஜீவேசுவரர்களுக்குச் சாமியமா அல்லது சோபாதிகர் (மாயையும் அவித்தையும் உடையவர்) களுக்கா என்று சங்கித்து முதற்பட்சம் அன்றெனக் கூறுகின்ருர் ]

| | |
|---|---|
| சீவனும் பரனும் சின்மயம் ஆகும் ஆதலால் ஒப்பு எனச் செப்பல் | ஜீவேசுவரர்கள் சின்மாத்திர சொரூப மாதலால் சாமியமாமென்று கூறில் |
| மேவி ஒன்று ஆகிவிடுதலே அன்றி வேறு வேறு ஆகுமோ வீடு | பொருந்தி ஏகமாயிருத்தல் மோக்ஷமாவதன்றி பேத பேதமாயிருக்கை மோக்ஷமாகுமோ. 31 |

(அ - கை) துவிதீய பட்சத்தை நிராகரிக்கின்றார்.

உடம்புடன் புணர்ப்பால் சீவனுக் கிறையோ
டொப்புள தென்னிலொப் பில்லை
கடந்திகழ் வானின் வானம்வே றாக
கருதியொப் புரைப்பரோ வொப்பாய்
இடுந்திரங் கன்மத் தாலெனிற் கன்ம
மிறக்குமே விச்சையா லென்னிற்
றிடம்பட முன்பே யுள்ளதே ஞானந்
திகழ்த்துவ தில்லது செய்யா. 32

(இ - ள்)

| | |
|---|---|
| உடம்பு உடன் புணர்ப்பால் சீவனுக்கு இறையோடு ஒப்பு உளது என்னில் ஒப்பு இல்லை | உபாதி சம்பந்தத்தால் ஜீவனுக்கு பரனோடு சாமிய முண்டென்னும் துவிதீய பட்சத்தைக் கூறில் இவர்கட்கு கிஞ்சிக்ஞத்வாதி சர்வக்ஞத்வாதி தர்மங்களால் அத்தியந்த வைலக்ஷண்யமிருத்தலால் சாமியங் கூடாது |

[ உபாதி சம்பந்தத்தால் சாமியம் (சமத்தன்மை) கூடாது என்பதை திருஷ்டாந்தத்தோடுங் கூறுகின்றார் ]

| | |
|---|---|
| கடம் திகழ் வானம் வானில் வேறாகக் கருதி ஒப்பு உரைப்பரோ | கடாகாயத்தை மகாகாயத்தினும் பின்னமாகக் கருதி அதற்குச் சாமியங் கூறுவரோ |

[ இவ்வாறு ஜீவேசுவர சொரூப பரியாலோசனையால் சாமியம் அன்றென்று கூறி காரண பரியாலோசனையாலும் சாமியங்கூடாதென்று சொல்பவராய் அந்தச் சாமியகாரணம் யாது? கர்மமா அல்லது வித்தையா, என விகற்பித்து முதலதை நிராகரிக்கின்றார். ]

| | |
|---|---|
| ஒப்பு ஆயிடும் திரம் கன்மத்தால் எனில் கருமம் இறக்குமே | சாமியம் கர்மத்தால் ஆம் என்று கூறில் கர்ம சாத்தியம் அவசியம் நாசத்தை யடையுமாம் |

[ துவிதீய பட்சத்தை நிராகரிக்கின்றார் ]

விச்சையால் என்னில் – ஞானத்தால் சாமியம் எனக்கூறில்

திடம்பட முன்பே உள்ளதே ஞானம் திகழ்த்துவது } நிச்சயமாய் பூர்வம் சித்தித்த அர்த்தத்தையே ஞானம் விளக்குமேயன்றி

இல்லது செய்யா } அன்னியத்தை யுற்பத்தி செய்யாது. 32

(அ – கை) இவ்வாறு நிராகரித்த சித்தாந்தி தனது அபிமதமான சாமியத்தைக் கூறுபவராய் முற்கூறிய சாமியமும் வித்யா சாத்ய மென்றால் பூர்வ சித்தத்வம் பவிக்குமென்று யாதொரு அர்த்தமானது பிரதி பாதிக்குமோ அது இஷ்டந்தான் என்று அங்கீகரித்துக் கூறுகின்றார்.

எப்படி யாலும் பண்டுமிப் போது
மெப்பொழு துஞ்சிவ சீவர்க்(கு)
ஒப்புள தாகு முருவமொன் றான
உண்மையால் வேறுரு தொன்றே
அப்படி யுள்ள சிவன்பிறர் போல
வவிச்சையா னிகழுமவ் வவிச்சை
மெய்ப்பர விச்சை யானசித் தொன்றாய்
விடுதலொப் படைதல்வே றின்றே. 33

(இ – ள்)

எப்படியாலும் பண்டும் இப்போதும் எப்பொழுதும்சிவசீவர்க்கு ஒப்பு உளது ஆகும் } சர்வ பிரகாரத்தாலும் பூதபௌஷிய வர்த்தமான காலத்திரயத்திலும் பர சீவர்களுக்கு சாமிய முளதாகும்

உருவம் ஒன்றான உண்மையால் வேறு உருது ஒன்றும் } சச்சிதானந்த லக்ஷண வடிவம் சமான முடையதால் எதார்த்தமாக பேதமின்றி யேக ரூபமே

அப்படி உள்ள சிவன் பிறர் போல் அவிச்சையால் நிகழும் } ஏக ரூபமாயுள்ள பரசிவன் அன்னியமாயுள்ள ஒரு ஜீவனைப்போல் அவித்யாவசத்தால் விளங்கா நிற்பன்

[ வித்தையால் அவித்தை நிவர்த்தியாகும்போது ஜீவேசுவரர்களுக்கு சுபாவ சித்தமான ஐக்கியமே சேடிக்கின்றது. அதுவே சாமிய சப்தத்தால் கூறக் கருதியதென்று நிகமனஞ் செய்கின்ருர் ]

| | |
|---|---|
| அவ்வவிச்சை மெய்ப் பரவிச்சையால் நசித்து ஒன்று ஆய் விடுதல் ஒப்பு அடைதல் வேறு அன்று | அந்த அவித்தையானது தத்துவ ஞானத்தால் நசித்த விடத்து சுபாவ சித்தமான ஏகரூபமாக அவசேஷித்த (மிஞ்சு)லே சாமிய சப்தத்திற்குப் பொருளாவதன்றி சாதுர்சியார்த்தம் சாமிய சப்தத்திற்குப் பொருளன்று. 33 |

(அ - கை) பிராணனல்லவா இவன் என்ற சுருதி வாக்கியார்த்த தாற்பரியத்தை சங்கிரகித்தும் பரமார்த்த திருஷ்டியில் பெத்தனும் முத்தனும் இல்லையெனக் கூறுகின்ருர்.

சீவன் றன்னுரு வானசி வத்தைத் தெளியிற்ருண்
மேவும் பலதொழி றன்னிடை யாலே விளையாடும்
யாவும் தன்னுரு வாகிநி கழ்ந்தா லிவன்முத்தன்
ஆவன் பண்டவ னுகாமை யின்முத் தனுமாகான். 34

(இ - ள்)

| | |
|---|---|
| சீவன் தன்னுருவான சிவத்தைத் தெளியில் | ஜீவன் தனது ஆன்மரூபமான நிஷ்பிரபஞ்ச பரசிவ ரூபத்தை யறியில் (அப்போது அன்னிய மின்மையால்) |
| தான்மேவும் பல தொழில் தன்னிடை யாலே விளையாடும் | தான் செய்த தியான பூஜாதி நானுக் கிரியைகளை சுவான்ம விஷயமாகவே கிரீடிப்பன் |
| யாவும் தன்னுருவாகி நிகழ்ந்தால் இவன் முத்தன் ஆவன் | சர்வமும் தனது சொரூபமாகவே விளங்குமாயின் இப்புருஷன் மோக்ஷ சொரூபனும் |
| பண்டு அவன் ஆகாமையின் முத்தனும் ஆகான் | சொரூப திருஷ்டியால் பூர்வம் பெத்தனுகாமையால் இப்பொழுதும் முத்தனும் அன்று. |

34

(அ-கை) இனி பரவித்தையினுற்பத்திக்குச் சககாரி (துணை) சாதனத்தைக் கூறுகின்றார்.

வேதம் பகர்வழி யேவந் தவர்கட மெய்க்குள்ளே
யோதும் பரவொளி யேகண் டுணருவ ரொன்றுமப்
போதந் தனையடை வாரங் கொடுகதி போய்மீளா
ரேதுந் திகழ்தரு வானெங் கொழிவுசெய் தேகுந்தான். 35

(இ - ள்)

வேதம் பகர்வழியே வந்தவர்கள் } சுருதியிற் கூறியபடி அநுஷ்டித்தவர்கள்

(அதாவது சத்தியமும் பிரஹ்மசரியமும் சித்த ஏகாக்கிரமான தவமும் ஆதி தர்மங்களும் (ஆதி சப்தத்தால் அஹிம்சை அஸ்தேயம் அபரிக்கிரகம் இவைகளைக் கொள்க) ஆகிய இவற்றோடு கூடி சுருதியிற் கூறிய ஆன்மாவைக் கேட்கத் தக்கவர், மன்னிக்கத் தக்கவர், தியானிக்கத் தக்கவர் என்ற முறையே சிரவணாதிகளை அநுஷ்டித்தவர்கள்.)

தம்மெய்க்கு உள்ளே } தமது சரீரத்தினுள்ளே இருதய புண்டரீகத்தில்

ஓதும் பர ஒளியே கண்டு உணர்வர் } சுருதிகளால் கூறுநின்ற சொப்பிரகாச வஸ்துவை சாக்ஷாத்கரிப்பர்

[பூரணான்மகவஸ்து நிஷ்டனுக்கு கமனாகமனா (போக்கு வரவா) திகளில்லை யென்று திருஷ்டாந்தத்தோடுங் கூறுகின்றார்.]

ஒன்று ஆம் அப்போது அதனை அடைவர் அங்கு ஒருகதி போய் மீளார் } அவ்வைக்கிய ஞானத்தை யடைந்த வித்வான்கள் ஓரிடத்தும் சென்று திரும்புதல் அற்றவர்கள் ஆவர் (வியாபகராதலின்)

ஏதும் திகழ்தருவான் தான் எங்கு ஒழிவு செய்து ஏகும் } எவ்விடத்தும் பொருந்தி விளங்கா நின்ற ஆகாயமானது எவ்விடத்தை விட்டு எவ்விடத்திற்குச் செல்லும். 35

(அ – கை) ஆன்மாவுக்கு யாதெரு பரிபூரண பரசிவ ரூபத்துவமுளதோ அதன் ஞானத்தில் சககாரி சாதனமான சத்தியாதிகள் உபதேசிக்கப்பட்டன. இப்போது அசாதரண காரணத்தை உபதேசிக்கின்ருர்.

வாக்கிஞ லுரைக்கு மாறிலாப் பொருளை
மற்றுள புலன்களொன் ருலே
நோக்குமா றென்னுங் கருமமொன் ருலும்
நுவல்தவத் தாலுநண் ணுதே
தாக்கிலா வந்தக் கரணம துடையார்
தத்துவ ஞானநல் வழியால்
போக்கிலா தெங்கு மாகிய பொருளைப்
புரையறக் காண்பரெப் பொழுதும். 36

(இ – ள்)

| | |
|---|---|
| வாக்கிஞல் உரைக்கும் ஆறு இலாப்பொருளை | வாக்கு முதலிய இந்திரியங்களால் கிரகித்தற்கு அருமையான பரசிவ வஸ்துவை |
| மற்றுஉள புலன்கள் ஒன்ருலே நோக்கும் ஆறு என்னும் | ஏனைய கரணங்களால் கிரகிக்கும் தன்மை எவ்வாற்ருல் ஆம் |
| கருமம் ஒன்ருலும் | அக்கினி கோத்திராதி கர்மங்களாலும் |
| நுவல்தவத்தாலும் நண்ணுது | சொல்லாநின்ற கிருச்சிர சாந்திராயணுதி தவங்களாலும் அடைய முடியாததாம் |

[ சக்ஷுவாதி இந்திரியங்களால் கிரகிக்கக் கூடாதாயின் மற்றெப்படி அது அறியப்படும் என்னில் அதற்குக் கூறுகின்ருர் ]

| | |
|---|---|
| தாக்கிலா அந்தக் கரணமது உடையார் | ஐம்புலப் போரின்றிய சுத்தாந்தக் கரணமுடை மோக்ஷாதிகாரிகள் |

| | |
|---|---|
| தத்துவ ஞான நல் வழியால் | உண்மையான ஞானப் பிரகாசத்தால் |

[ அதாவது விடயேந்திரிய சம்பந்தத்தாற்றேன்றிய ராகாதி மலத்தாற் செய்யப்பட்ட கலக்கம் நீங்கியபோது ஞானப் பிரசாதமான அந்தக்கரணத்தின் கண் மலமற்ற கண்ணுடி போன்ற யாதொரு சொச்சத் தன்மையுண்டோ அதனுல் ]

| | |
|---|---|
| போக்கு இலாது எங்கும் ஆகிய பொருளை | கமனுகமனமற்ற பரிபூரண பிரஹ்ம சொருபத்தை |
| எப்பொழுதும் புரை அறக் காண்பர் | சர்வதாபிரதி பந்தமின்றி சாக்ஷாத் கரிப்பர்கள். (ஆ - அசை) 36 |

(அ - கை) விசுத்த சத்துவ குணத்தையுடையவனுக்கு சகுணத்தியானமு நிஷ்கள ஞானேற்பத்திக்கு காரணமென்று கூறுகின்றூர்.

அருளினைத் திருமேனி யிற்றரித் தருளு
மகிலநா யகனையெப் பொழுதும்
தெருளுறத் தியானம் பண்ணுமே காந்த
சித்தராற் தெளிவுறும் பொருளிப்
பொருளித னிடத்தே யைவகைப் பட்ட
பொருள்களும் பொருளிநுட் பத்தால்
ஒருவரு மறியா ரரியதென் றிகழா
தொருப்பட வேண்டுமீ தோன்றும். 37

(இ - ள்)

| | |
|---|---|
| அருளினைத் திருமேனியில் தரித்தருளும் அகில நாயகனை | பரவித்யா தேவியாகிய பார்வதி அம்மையை அழகிய திருமேனியில் இடது பாகத்திற் கொண்டருளிய சர்வலோக சரண்யனுகிய பரசிவனை |

| | |
|---|---|
| எப்பொழுதும் தெருள் உற தியானம் பண்ணும் ஏகாந்த சித்தரால் | இடையருது * பிரதிபந்தமின்றி தியானிக்கின்ற ஏகாக்கிர சித்தமுடைய மோக்ஷாதிகாரிகள் |
| தெளிவு உறும் பொருள் இப்பொருள் | அறியத்தக்க வஸ்து இந்நிஷ்களசொரூபமாகிய பரசிவமாம் |

[ இவ்வணு ஆன்மா வென்ற சுருதி வாக்கியத்தைச் சங்கிரகிக்கின்ருர் ]

| | |
|---|---|
| இதனிடத்தே ஐவகைப் பட்ட பொருள்களும் | (சகலஜகத் கல்பனுஸ்பதமும் தகராகாச மத்தியிலிருப்பதுமாகிய) பரமாத்மாவிடத்தில் (விருத்தி பேதங்களால் பினனமாயுள்ள) பிராணுதிகள் ஐந்தும் உள்ளன |
| பொருளின் நுபட்த்தால் ஒருவரும் அறியார் | வஸ்துவின் சூக்ஷுமத் தன்மையால் (பகிர் முகர்) எவரும் அறிகிலர் |

* அதிகாரியானவன் சற்குருவினிடத்தில் மகாவாக்கிய வுபதேசங்கேட்டு சாக்ஷாத்கார மடைந்தும் திருடர்கள் ஆடை ஒனுய் எனக்கூறி கவர்ந்த பால போதத்தின் கதைபோல, பேதவாதிகள் நீ பிரஹ்மமென்ருல் பஞ்சகிருத்தியமும் சர்வக்ஞத்வமாதி தர்மங்கள் காணவில்லேயே எனக்கூறும் கூற்ருல் தத்துமசியாதி மகாவாக்கியங்களுக்கு ஜீவப் பிரஹ்மவைக்கியத்தை அறியாததே அஞ்ஞானமாம். (பாகத்தியாக லக்ஷணேயால் தத்துவமசியாதி மகா வாக்கியங்களின் பொருளே அறிந்தும் விசுவாசக் குறைவால்) நான் அந்த பிரஹ்மமாவேனே ஆகமாட்டேனே என்னும் பாவனேயே சந்தேகமாம்.

சுருதி யுக்தி அனுபவங்களால் நான் பிரஹ்மமாயிருக்கின்றேன் என்பது எனக்கு விளங்குகின்றது ; அவ்வாறு விளங்கினுலும் எனக்கு யானெனது என்னும் அபிமான வடிவ ஜீவத்வம் இன்னும் நீங்காதிருக்கின்றது அதனுல் நான் ஜீவனே எனப் பாவனே செய்வதே விபரீதமாம். இந்த மூன்றும் மோட்சப் பிரதிபந்தம் இதை சிரவண மனன நிதித்தியாசனங்களால் நீக்கத் தக்கதாம் சிரவணுதிகளே 7 ஆம் அத்தியாயம் 4 ஆம் பாடலுரையிலும் கைவல்லிய நவநீதம் தத்துவ விளக்கப்படலம் 84 முதல் 92 வரையிலும் வேதாந்தசூடாமணியில் 127 முதல் 137 வரையிலுள்ள பாடல்களிலும் திருவாரூர் நாநாஜீவவாதக் கட்டளே வியாக்கியானம் அத்யாரோப நிரூபகம் 155 முதல் 196 வரையிலும் தத்துவ விவேசன நிரூபகத்தில் 49 முதல் 60 வரை வினுவிடைகளிலும் விசாரசாகரம் முதலிய நூல்களிலும் காணலாம்.

அறியாது என்று இக மூாது ஈது ஒன்றும் ஒருப்படவேண்டும் } முமூட்சுக்கள் அறிதற்கருமையா மென்று உபேக்ஷியாது இவ்வொரு வஸ்துவையே ஏகாக்கிரசித்தத் தோடு நின்று அறியத்தக்கது

[வி – ரை] (பொ – ம்) அப்படிப்பட்ட சர்வாச்சரியமான இந்த ஆன்மா சூக்ஷுமமாயிருந்தாலும் கூர்மையுள்ள புத்தி யால் அறியப்படவேண்டுமென்பது மூலார்த்தம். 37

(அ – கை) இவ்வாறு சர்வான்மாவான பரசிவத்தைத் தானகவறிந்த வித்வானுக்கு சர்வாப்தி லக்ஷணமான பலத் தைக் கூறுகின்ருர்.

எத்தைப் பெறமுயல் கின்ருர் அதுபெறு
இன்ரு ராதலி லெப்போது
நித்தத் துவமெனு மொன்றைப் பெறநினை
கின்ரு னருளினி னேர்பாடாம்
அத்தத் துவமுனி தன்னைப் பொருளத
ஞலுந் தனதுட லாற்கூடப்
பத்திப் படுமன ஞலர்ச் சனைநனி
பண்ணப் படுவது பவவீடாம். 38

(இ – ள்)

எத்தைப் பெற முயல் கின்ருர் அது பெறு கின்ருர் } (நிஷ்களமான பரசிவத்தை சுவான் மாவாக அறிந்த வித்வான்கள் "அவன் பிதிர்லோக காமனுக பவிப் பானுயின்" என்பது முதலிய வற்ருல்) எந்தெந்த லோகங்களை யடைய மனதில் பவிக்கின்ருர் களோ அந்தந்தவுலகங்களின் சுகங் களை சொருபத் தன்மையால் அடைந்தவராவர்.

ஆதலில் எப்போது நித்தத்துவம் எனும் ஒன்றைப்பெற நினை கின்ருன் } ஆனதால் சர்வகாலமும் நித்யத்வ மாகிய அத்வைத வஸ்துவை அடைய இச்சிக்கின்ற முமூட் சுக்கள்

| | |
|---|---|
| அருளின் நேர்பாடாம் அத் தத்துவ முனி தன்னை | சாக்ஷாத் ஈசுவரனை அந்தத் தத்துவ ஞானியை |
| பொருளதனுலும் தனது உடலாலும்கூட பத்திப்படும் மனனுல் | பொருள் ஆக்கை (ஆவி) ஆகிய மூன்றேடும் பத்திபொருந்திய உள்ளத்தினுல் |
| நனி அர்ச்சனை பண்ணப்படுவது பவ வீடு ஆம் | மிகவும் அர்ச்சிக்கத்தக்கது அதனுல் ஜன்ம நிவர்த்தி ரூபமான மோக்ஷமுண்டாம் (ஆதலின்) |

[எப்போதும் ÷ பவவீடாம் – எந்தக் காரணத்தினுல் இவ்வாறு சகல காமங்களும் வித்வானுடைய சொரூப வடிவமாமோ அந்தக்காரணத்தினுல் அவனது சேவையைச் செய்பவர்களுக்கு மனத்தில் விரும்பிய பலத்தினடைவானது சித்திக்கிறது என்பது லோகப்பிரசித்தம் என்பதாம்.] 38

(அ – கை) ஆன்மதத்துவமானது கூறிய உபாயத்திற் கன்னியவுபாயங்களால் அறிதற்கசக்கியமென்று தரிசிப்பிக்கின்ருர்.

எண்ணிலாக் கல்வி யாலும் இலங்கிய கேள்வி யாலும்
திண்ணிதா மதியி ஞலுந் தெளியவா ருது தீரம்
நண்ணிய ஞானி தானே நயந்தருள் செய்யில் ஞானக்
கண்ணிஞற் காண லாகும் கரத்திலா மலகம் போல. 39

(இ – ள்)

| | |
|---|---|
| எண்ணிலாக் கல்வி யாலும் இலங்கிய கேள்வி யாலும் | அளவிறந்த வேதசாஸ்திர படனத்தினுலும் விளங்காநின்ற வெகு காலம் (அடிக்கடி) செய்யாநின்ற சிரவணத்திஞலும் |
| திண்ணிதா மதியினுலும் | கிரந்தார்த்த தாரணுவடிவ மேதையினுலும் |
| தெளியவாராது தீரம் | சம்சார சாகரத்தின் சேதுவான பிரஹ்மத்தை அறிய முடியாது |
| நண்ணிய ஞானி தானே நயந்து அருள் செய்யில் | தீரத்தை யடைந்த ஞானபரன் கிருபையினுல் (உபதேச) அனுக்கிரகம் செய்யில் |

| | |
|---|---|
| ஞானக் கண்ணினல் கரத்தில் ஆமலகம் போல் காணல் ஆகும் | ஞான சட்சுவினல் அங்கை நெல்லிக்கனியென அபரோக்ஷமாய் அறியலாகும். |

(இவன் (இம்முமூட்சுவானவன்) எவனைக் கோருகிருனே (சிரவணுதி ரூப பிரார்த்தனை செய்கிருனே) அவனல் (ஆத்மாவால்) அடையத்தக்கவன் அவனுக்கு இந்த ஆத்மா தன் ரூபத்தை விளக்கிக் காட்டுகிருர் என்பதைக் கவி நாயகர் தீரம் + ஆகும் என்று ஆத்ம மகிமையை ஞானியிடத் தேற்றிக் கூறினர்.) 39

(அ - கை) ஆன்மப் பிரார்த்தனு சகாய பூதங்களான பலாதிகளைச் சம்பாதிக்க வேண்டும் என்று உபதேசிக்கின்ருர்.

அயர்ச்சிமிக் கிருப்பா னுலு மரும்பிணி யாள ஞலும்
முயற்சியிற் றமோகு ணத்தான் மூடிடப் பட்டா ஞலும்
செயப்படா துண்மை ஞானந் தெள்ளுமா மதியாற் கால
வயத்திஞற் சத்து வத்தின் வலியிஞ லன்றி வாரா. 40

(இ - ள்)

| | |
|---|---|
| அயர்ச்சிமிக்கு இருப்பானுலும் | தாரபுத்ர பசுவாதி விஷயா சங்க நிமித்தமான எத் தத்வ அனவதானம் (மறதி) உண்டோ அவ் வித) பிரமாத மிகுந்துள்ளவனுலும் |
| அரும் பிணியாள ஞலும் | (லிங்கமென்னும் யாதொரு சன்னியாசமுண்டோ அவ்வித சன்னியாச தர்ம ரகித) தவமுடையோனுலும் |
| முயிற்சியில் தமோ குணத்தால் மூடிடப் பட்டானுலும் | ஆன்மதத்துவானுசந்தான ஜென்னிய புத்தியுற்சாக கிருத வீரிய (செய்யும் வல்லபமின்றி) தமோகுணத்தினல் மூடப்பட்டவனுலும் |
| உண்மை ஞானம் செயப்படாது | தத்துவ ஞானம் அப்பியாசித்து அடையப்படமாட்டாது |

| | |
|---|---|
| தெள்ளுமாமதியால் காலவயத்தினுல் சத்துவத்தின் வலியினுல் அன்றிவாரா | மயக்கமின்றி தெளிந்த புத்தியினுலும் சன்னியாச சகித தபசினுலும் தத்துவானுசந்தான பலத்தினுலும் அடையப்படுகின்றதாம். 40 |

(அ - கை) பிரஹ்ம வித்துக்கள் பிரஹ்மகைவல்லியத்தை யடையுந்தன்மை எங்ஙனம் என்னில் அதை தரிசிப்பிக்கின்ருர்.

இப்பரம் பரனைச் சேர்ந்தார் ஏகமாம் பொருள தாகித்
தப்பறு ஞான மெய்திச் சாந்தராய்த் தாப மாறி
எப்படி யாலு மெல்லாப் பொருள்களு மெய்தி யிங்கே
அப்பொரு டமக்குள் ளாக வவைதனக் குள்ளு மாவர். 41

(இ - ள்)

| | |
|---|---|
| இப்பரம் பரனைச் சேர்ந்தார் | இவ்வான்மாவை (கண்டாபரணம் போல்) தத்துவ ஞானத்தாலடைந்த வித்வான்கள் (ரிஷிகள்) |
| ஏகம் ஆம் பொருள தாகி | (பேதமற்ற) அத்வைத சொரூபமாய் |
| தப்பு அறு ஞானம் எய்தி சாந்தராய் | தடையற்ற ஞானத்தினுல் திருப்தியுடையராய் உபரத இந்திரியராய் (ஜிதேந்திரியாராய்) |
| தாபம் ஆறி | சம்சாரத்திலுள்ள * முத்தாபமற்றவராய் |
| எப்படியாலும் எல்லாப் பொருள்களும் எய்தி | சர்வ பிரகாரத்தாலும் சர்வகத தத்துவத்தைப் பொருந்தி |
| இங்கே அப்பொருள் தனக்கு உள்ளாக அவை தனக்கு உள்ளும் ஆவர் | ஈண்டு அச்சர்வ பதார்த்தங்களும் தன்னிடத்திலாரோபமாகப் பொருந்தியிருக்கத்தான் அவற்றிற்கு அதிஷ்டான வடிவமாயிருப்பரென்பதாம். 41 |

* தனது தேகத்தைப் பற்றிவரும் நோய் முதலிய துன்பங்களும், திருடர், பாம்பு, புலி முதலியவைகளால் வருந் துன்பங்களும், காற்று அக்கினி முதலிய பூத பைசாசமாகிய தெய்வத்தால் வரும் துன்பங்களும் முத்தாபமாம்.

அந்தமா மறையா ஞடிய பொருளை
அழகுற வறுதியிட் டல்லற்
பந்தமா மயற்பற் றறுத்தமா தவரிப்
பரமயோ கத்திலே யெல்லாம்
வந்துமாய் விடமா யனைத்தினும் பரமாய்
மதிக்கொணு மாயையி னுடைய
வந்தகா லத்தே யந்தமற் றிந்த
வமிர்திஞ லரியவீ டடைவர், 42

(இ - ள்)

| | |
|---|---|
| அந்தமா மாயையால் நாடிய பொருளை அழகுஉற அறுதி இட்டு | தத்துவமசியாதி வேதாந்த மகா வாக்கியங்களால் அபிப்பிராயப் பட்ட ஜீவப் பிரஹ்மங்களின் ஐக்கி யார்த்தத்தை நன்ருக நிச்சயித்து |
| அல்லல் பந்தமாம் மயல் பற்று அறுத்த மாதவர் | மமதத்துவாபி மானத்திஞல் துன்ப ரூப பந்தமாகிய மயக்க வடிவ தார புத்திராதி பற்றுக்களை யொழித்த யதி (சன்னியாசி) களியாவரும் |
| எல்லாம் வந்து | காரிய ரூப ஜெகத்தனைத்து முண்டாகி |
| மாய் விடம் ஆய் | – கர்ம பல முடிவில் ஓடுங்குமிடமாய் |
| அனைத்தினும் பரமாய் | – காரியமனைத்திற்கு மேலானதாய் |
| மதிக்கொணு மாயை யினுடைய அந்த காலத்திலே | சத்தசத்தாதி ஒன்பது விதத்தா லும் நிச்சயித்தற்கு அரிதாயிருக் கின்ற மாயையின் நாசகாலத்தில் |
| இப்பரம யோகத்தில் | சர்வகர்ம பரித்தியாக ரூப, சன்னி யாசத்தோடு கூடிய கேவல பிரஹ்ம நிஷ்டா ரூப, இந்த யோகத்திஞ லுண்டாம் |
| அந்தம் அற்று இந்த அமிர்திஞல் அரிய வீடு அடைவர் | நாச ரகித அமிர்தத்வ, இந்தச் சாதன பூதமான ஞானத்திஞல் பிரஹ்மத்தில் சர்வ சம்சார பந்தத் தினின்றும் விடுபடுகின்ருர்கள். (ஏ – அசை) |

(உபாதிலயமாகும் போது இதிலிருந்தே கடாகாச முத லியன போல அபரிச்சின்ன பிரஹ்ம ரூபத் தன்மையை அடைவரென்பதாம்.) 42

(அ – கை) அந்த முத்தனுடைய பிராணாதி கலைகள் எப்படியாம் என்று சங்கித்து அதைப் பிரதி பாதிக்கின்றார்.

வீடிலா வினைகள் கலைகள்மூ வைந்தாம்
விடயவிந் தியவதி பதிகள்
நாடுசே தனனுஞ் சீவன்மற் றனைத்தும்
நாதனா ராலயம் நண்ணி
பாடுபே றுருவ மொன்றுமற் றந்தப்
பரமனே யாய்விடும் பார்மேல்
ஓடுமா ரெல்லா முததிபுக் கொன்றா
யுருவுபே ரொழியுமா போல. 43

(இ – ள்)

| | |
|---|---|
| வீடு இலா வினைகள் மூவைந்தாம் கலைகள் | அனாரப்த (நீங்குதலின்றிய) பலமுடைய சஞ்சித கர்மங்களும் பிராணன் முதல் நாமபரியந்தமான கலைகள் பதினாறுக்குள் நாமமொழிந்த பதினைந்து கலைகளும் |
| விடய இந்திய அதிபதிகள் நாடு சேதனனும் சீவன் | விஷயங்களில் செல்லுகின்ற அதிதேவதைகளும் அவைகளை நாடியறிகின்ற சேதனனாகிய சீவனும் |
| மற்று அனைத்தும் நாதனர் ஆலயம் நண்ணி | நாமமொழிந்த பதினைந்து கலைகளும் தத்தங்காரணத்திலொடுங்குதல் வாயிலாக பரமாத்ம சொரூபத்தை அடைந்து |

[பிராணன் சிரத்தை ஆகாசம் வாயு அக்கினி ஜலம் பிருதிவி இந்திரியம் மனம் அன்னம் வீரியம் தவம் மந்திரம் கருமம் லோகங்கள் என்று பிரச்நோபநிஷத்திற் கூறிய பதினைந்து கலைகளாம்.]

| | |
|---|---|
| பாடு பேர்உருவம் ஒன்றும் அற்று அந்தப் பரமனே ஆய்விடும் | கூறுநின்ற நாமம் ரூபங்களும் ஒன்றுமின்றி அப்பிரஹ்ம சொரூபமே யாகும். |

[அந்த விஷயத்தில் மேலும் திருஷ்டாந்தத்தைக் கூறுகின்றார்]

| | |
|---|---|
| பார்மேல் ஓடும் ஆறு எல்லாம் உததி புக்கு ஒன்ருய் உருவு பேர் அழியுமாபோல் | உலகத்திற் செல்லா நின்ற நதிகளெல்லாம் சாகரத்தினுட் புகுந்து நாமரூப மற்று ஏகமாவது போலாம். 43 |

(அ – கை) ஜீவப் பிரஹ்ம பேதத்திற்கு அவித்யா மாத்ர நிபந்தம் (ஏது) ஆதலால் அதன் நிவர்த்தியிலும் வித்யா அதிரிக்தமான (வித்தையின் வேருன) சாதனங்களின் அபேக்ஷயின்மையின் வேதன மாத்ரத்தால் * கண்ட சாமீகரம்போல பிரஹ்மப் பிராப்தி சித்திக்கிறதெனக் கூறுகின்ருர்.

மிக்க நற்பிரம ஞான முற்றபொழு
தேவெ றும்பிரம மாய்மனத்
துக்க மற்றிடுவர் தொல்லை வல்வினைத்
துவக்கு மாறுமிலர் துஞ்சிடார்
பொக்க மற்ருெருவ னிச்சகத்திலநு
போக மாயறியு மாயின்மேல்
அக்கு லத்தினிலொ ருத்த ரப்பிரம
வித்த ராவதில ராணையே. 44

(இ – ள்)

| | |
|---|---|
| மிக்க நல்பிரம ஞானம் உற்ற பொழுதே | மேலான ஆனந்தரூப பிரஹ்ம ஞானத்தை அடைந்தவன்றே |

---

* ஒரு பெண்ணானவள் பெட்டியிலிருந்த கண்டத்தில் அணியும் ஆபரணத்தை எடுத்தணிந்து கொண்டு கல்யாண வீட்டுக்குச் சென்று அவ்விடமிருந்து திரும்பி வந்து பெட்டியைத் திறந்து பார்த்தாள். ஆபரணத்தைக் காணுதவளாய் "ஓ" என்று அலறத் தொடங்கினள். பக்கத்து வீட்டு சனங்கள் வந்து, "ஏன் இப்படி சத்தமிட்டு அழுகிருய்" என்று வினவ "கண்டாபரணத்தைக் காணே"மென்று கூறினள். "உன் கழுத்தில் உள்ளதைக் காணவில்லையா", எனக்கூற அதைக் கேட்டவள் நினைத்துணர்ந்து மகிழ்ந்தது போல் விவேகாதி சாதனங்களையுடைய அதிகாரிகள் நித்தியப் பிராப்தமான பிரஹ்ம சொரூபத்தை குருவினுபதேசத்தால் நித்தியப் பிராப்தத்தின் பிராப்தியாகிய ஞானத்தால் சுவானுபவமாய் உணர்ந்து மகிழத்தக்கதாகும். வேறு தேகத்தையும் உலகத்தையும் அடைய வேண்டுமென்ற நினைவுள்ள பரியந்தம் உண்மை அறியாத அஞ்ஞானிகளென்றே அறியத்தக்கதாம்.

| | |
|---|---|
| வெறும் பிரமம் ஆய் | (பிரஹ்மவித்துக்கள்) சுத்தப் பிரஹ்மமாய் |
| மனத்துக்கம் அற்றிடுவர் துஞ்சிடார் | அநேக இஷ்டவைகல்ய (குறைவின்) நிமித்தமான சதா ஆபத்தினின்றும் விடுபடுவர் நாசமடையார் |
| தொல்லை வல்வினை துவக்கும் ஆறும் இலர் | சம்சார சம்பந்த ஹேதுவாகிய அனாதியான வலிமை பொருந்திய தர்மா தர்மரூப கர்மசம்பந்த மற்றவராவர் |

[அவனுடைய குலத்தில் அப்பிரஹ்மவித்துண்டாகானெனக் கூறுகிறார்.]

| | |
|---|---|
| இச்சகத்தில் ஒருவன் பொக்கம் அற்று அநுபோகமாய் அறியும் ஆயின் | இவ்வுலகின்கண் ஒரு புருஷன் எதார்த்தமாய் பிரஹ்மத்தைச் சுவான்மாவாக அனுபூதியினால் அறிவானாயின் |
| மேல் அக்குலத்தில் ஒருத்தர் அப்பிரமவித்தர் ஆவது இலை ஆணையே | பின்னர் அந்த வம்சத்தில் ஒருவரும் அஞ்ஞானிகளாகார்கள் இது சத்தியமே |

44

(அ-கை) பிரதிபாதித்த உபநிஷதார்த்தத்தை நிகமனஞ் செய்கின்றார்.

சோக மோகபட லத்தி னைக்கடிதொ
ழிப்ப தாகிவெறு முண்மையா
யேக போகசுக ரூப மெய்ப்பொருளெ
றிப்ப தாகியுள சோபனங்
தூக மோடும்வகை யிங்கொர் நாவிலிது
சொல்ல லுற்றதிது தொல்லையே
பாக மாகி யவிரோத மானபரி
சுத்த நெஞ்சிடை பரிப்பதே.

45

(இ-ள்)

| | |
|---|---|
| தூகம் ஓடும் வகை சோக மோக படலத்தினைக் கடிது ஒழிப்பது ஆகி | காற்றானது மேகத்தையோட்டுவது போல சோக மோக வடிவமான அஞ்ஞான படலத்தினை விரைவில் நீக்குவதாயும் |

| | |
|---|---|
| வெறும் உண்மையாய் ஏக போக சுகரூப மெய்ப்பொருள் | பரமார்த்த சத்தியமாய் அத்வைத அனுபவவானந்த வடிவமாயிருக்கின்ற சத்திய வஸ்துவை |
| எறிப்பது ஆகி உள இது சோபனம் | பிரகாசிப்பதாயுமுள்ள இந்த மங்களகரமான வேதார்த்த மணைத்தும் |
| இங்கு ஓர் நாவில் சொல்லல் உற்றது | இவ்விடத்தில் எமது ஒரு நாவினுல் உபதேசிக்கப்பட்டது |
| இது தொல்லேயே பாகம் ஆகிய | இவ்வர்த்தமானது பூர்வ ஜன்மங்களில் அநுஷ்டித்து வந்த புண்ணிய புஞ்ச பரிபாகத்தாலேற்பட்ட பரிபக்குபமுடைய |
| அவிரோதமான பரிசுத்த நெஞ்சிடை பரிப்பது | விரோதமில்லாத (மலவிக்ஷேப மற்ற) சுத்தமான ஹிருதயத்தில் தரிக்கத்தக்கதாம் (ஏ–அசை) 45 |

அச்சமா கியவெம் பிறவியை வேரோ
டறுப்பதா யறிவதற் கரிதாய்
மெய்ச்சொரு பானந் தன்றிரு மேனி
விளங்குவ தாய்மிகுந் துள்ள
விச்சையின் றன்மை விண்ணவர்க் கெல்லாம்
விளங்கவே விளம்பினுன் மெய்போல்
இச்சக மெல்லாம் படைத்துமெய் யன்ப
ரிதயபங் கயத்தில்வீற் றிருப்போன். 46

(இ – ள்)

| | |
|---|---|
| அச்சம் ஆகிய வெம் பிறவியை வேரோடு அறுப்பது ஆய் | முமூட்சுக்களுக்கு பயத்தை யுண்டு பண்ணத்தக்க கொடிய ஜனன மரண ரூபசம்சாரத்தை அஞ்ஞான கர்மமாகிய மூலத்தோடு சேதிப்பதாகியும் |
| அறிவதற்கு அரிதாய் | உணர்தற்கருமையதாகியும் |
| மெய்ச் சொரூபானந் தன் திருமேனி விளங்குவதாய் | சச்சிதானந்த பரசிவ சொரூபத்தை பிரகாசிப்பதாயும் |

| | |
|---|---|
| மிகுந்து உள்ள விச்சையின் தன்மை | பெருமை மிகுந்துள்ளதாயிருக்கின்ற பரவித்தையின் சொரூபத் தன்மையென |
| இச்சகம் எல்லாம் மெய் போல் படைத்து | தூல பூத பௌதீக ரூப இச்சர்வ ஜகத்தையும் சத்தியம்போல் சிருஷ்டித்து |
| மெய்யன்பர் இதய பங்கயத்தில் வீற்றிருப்பான் | உண்மையாகிய அன்பர்களது ஹிருதய தாமரையில் வசிக்கின்ற பிரஹ்மாவானவர் |
| விண்ணவர்க்கு எல்லாம் விளங்கவே விளம்பினன் | தேவர்களனைவர்களுக்கும் தெளிவாகத் தெரியும்படி உபதேசித்தார். 46 |

முண்டகோப நிஷததாற்பரியம் உரைத்த

7-வது அத்தியாயம் சம்பூரணம்

ஆக திருவிருத்தம் (390)

சற்குருநாதன் துணை

# எட்டாவது கிருஷ்ண எசுர் வேதத்திலுள்ள கைவல்லிய உபநிஷத தாற்பரிய முரைக்கும் அத்தியாயம்

(அ – கை) மேலும் கைவல்லிய உபநிஷத்திற்கும் பூர்வம் கூறிய பிரஹ்மான்ம பரத்வம் உண்டென்று தெரிசிப்பதற்காக அந்தவுபநிஷதார்த்தத்தை சங்கிரகிக்கின்ருர்.

இது கவிநாயகர் வாக்கியம்

நனிவேத நாலு முகமாக மேவி நளினுல யத்தி லுறைவான்
அனுபோக மாக வருளால றிந்த வவரேப ரத்தை யறிவார்
தனிமேவு வார்கள் பெறுஞானமாகு மிதுசாத னங்க ளுடையார்
முனிமேவு வான தெனுமாறு வேத மொழியோது மாறு
மொழிவான். 1

(இ – ள்)

| | |
|---|---|
| நனிவேதம் நாலு முகம் ஆக மேவும் நளின ஆலயத்தில் உறைவான் | பெருமை பொருந்திய நான்கு வேதங்களையும் நான்கு முகங்களாகப் பொருந்திய பதுமாலயத்தில் வீற்றிருக்கின்ற பிரஹ்ம தேவர் ஆனவர் |
| பரத்தை அருளால் அநுபோகமாக அறிந்த அவரே அறிவார் | பிரஹ்ம சொரூபத்தை சிவப் பிரசாதத்தால் சுபானுபவமாக சாக்ஷாத்கரித்தவர்களே அறிந்தவர்களென்றும் |
| தனி மேவு வார்கள் பெறு ஞானம் ஆகும் இது | ஏஷணைத்திரய (மூவாசை) தியாகிகளாயும் ஏகாந்தவாசிகளாயும் இருக்கின்றவர்களால் அடையத்தக்க ஐக்கிய ஞானமாகிய இதனை |
| சாதனங்களுடைய முனி மேவுவான் | சாதன சம்பத்தியுள்ள மனன சீலர்கள் அடைவர்கள் என்றிருக்கின்ற முறையை |
| எனும் ஆறு வேத மொழி ஓதும் | சுருதி பிரதி பாதித்த பிரகாரம் |
| ஆறு மொழிவான் | உபதேசிக்கத் தொடங்கினர். (அது பகுதிப்பொருள் விகுதி) 1 |

(அ - கை) ஆசுவலாயனரென்னும்மாமுனிவர் பரமேட்டியையடைந்து சொன்னதாவது "எப்போதும் சத்துக்களாலே சேவிக்கத் தக்கதாயும் ரகசியமாயும் மேலானதாயுமுள்ள பிரஹ்ம வித்தையை உபதேசிக்க வேண்டும் எதனுல் சீக்கிரத்தில் வித்வான் பாவங்களினின்றும் நீங்கி மேலான சிவருத்திராதி நாமங்களையுடைய பரம புருஷனை யடைகின்ருனென்ற சுருதியின் தாற்பரிய வித்யா விஷயத்தைப் பிரதிபாதிக்கின்ருர்.

ஈசனென் றியம்பு மொன்றை யிப்பிறப் பறுப்பார் தம்பான்
மாசற வறிய வேண்டும் வருந்தியு மறிந்து நன்ருய்ப்
பாசமா னதுகெ டுத்துப் பரப்பிர மத்தை நல்குந்
தேசுடை யிந்த விச்சை தீர்வறத் துறந்தோர் செய்வர். 2

(இ - ள்)

| | |
|---|---|
| ஈசன் என்று இயம்பும் ஒன்றை | சிவருத்ராதி நாமங்களால் கூறப்படும் ஓர் பரதத்துவமுளது (அதனை) |
| இப்பிறப்பு அறுப்பார் தம்மால் வருந்தியும் மாசு அற அறிய வேண்டும் | இச்சமுசாரத்தை யொழிக்க விருப்புற்ற முமூட்சுக்கள் மிகப் பிரயாசமுற்ருவது நன்ருக அறியத் தக்கது ஆகும் |

[இவ்விதம் வித்யா விஷயத்தைப் பிரதிபாதித்து அவ்வித்தையின் பிரயோஜனத்தையும் அதற்கதிகாரியையும் உபதேசிக்கின்ருர்]

| | |
|---|---|
| நன்ருய் அறிந்து பாசமானது கெடுத்து | அப்பிரஹ்மத்தை நன்கு கோசரித்து அஞ்ஞானமாகிய பாசபடலத்தை யொழித்து |
| பரப்பிரமத்தை நல்கும் இந்தத் தேசுடை விச்சை | மேலாகிய பிரஹ்மத்தை அதிகாரிகளின் சொரூபமாகத் தரத்தக்க இவ்வித பிரகாசம் பொருந்திய பரவித்தையை |
| தீர்வறத் துறந்தோர் செய்வர் | முற்றுந் துறந்த முனிவர்களான எதிகளால் செய்யத் (அடைய) தக்கது. 2 |

(அ - கை) அவ்வித பரவித்தை யுதிப்பதற்கு அநுகூலமான சாதனங்களை யுபதேசிக்கின்ருர்.

முத்தியின் விருப்பத் தாலும் முதலவன் நற்பா தத்திற்
பத்தியி ஞலு மற்றைப் பரனையே பாவிக் கின்ற
நித்தமா தியானத் தாலும் நிரந்தர யோகத் தாலுஞ்
சித்தியா மிதுசித் திக்கும் வினையினுற் சித்தி யாதால். 3

(இ - ள்)

| | |
|---|---|
| முத்தியின் விருப்பத் தாலும் முதலவன் நல் பாதத்தில் பத்தியினுலும் | (ஆசாரியர்உபதேசித்த) மோக்ஷத்தில் மிகுந்த சிரத்தையினுலும் அவ்வாசியர் திருவடியிலுள்ள பத்தியினுல் அவரது உபதேச அர்த்தத்தில் சதா தாற்பரியத்தினுலும் |
| அப்பரனையே நித்தம் நிரந்தரமா பாவிக் கின்ற தியானத்தாலும் | அவ்வர்த்த ரூப பிரஹ்மத்தையே நெடுங்காலம் நிரந்தரமாக பாவனுரூப சஜாதீய விருத்திப் பிரவாகத்தால் தியானத்தினுலும் |
| யோகத்தாலும் | ஐந்து முதல் ஏழுவரை இனிக் கூறும் யோகததாலும் |
| சித்தியாம் இது சித் திக்கும் | பரவித்தையாகிய இது உண்டாகும் |
| வினையினுல் சித்தி யாது | எக்ஞ தானுதி கர்மங்களாலுண்டாகாது. (மற்று ஆல்-அசை) 3 |

(அ - கை) இவ்வித சாதன சம்பன்னனுக்கு ஏஷணுத்தியாகமே (மனைவி மக்கள் தானுதிகளிலுள்ள ஆசையை விடுதலே) மோக்ஷசாதனமன்றி அன்னியமன்றென்று தரிசிபிக்கின்ருர்.

திரமாம ருத்தத்தி னுன்மைந்த ராலுந்
தீ ராத வற்றின்தி யாகத்தி னுலே
யுரமான வேதாந்த மாவாக்கி யத்தா
லுற்பன்ன மாம்விச்சை யாநிச்ச யத்தால்
பரமான வஞ்ஞான வந்தத்தி லேயப்
படிஞான வுபதேச மொன்ருலு மேயிப்
புரமாமு டம்புக்கு ளேயந்த முத்தி
பொருள்கண்டு வீடெய்து வாரிப்பு விக்கே. 4

(இ – ள்)

| | |
|---|---|
| திரமாம் அருத்தத்தினு லும் மைந்தராலும் தீராது | அவிவேகிகளால் திரமாகக் கருதப் படுகின்ற தனத்தினுலும் தாரபுத் ராதிகளாலும் பரவித்தையானது லபிக்க மாட்டாது |

[மற்றெதனுல் லபிக் (உண்டா) கும் என்னில் கூறுகின்ருர்.]

| | |
|---|---|
| அவற்றின் தியாகத் தினுலே | அவைகளை விடுதனுலேயே அடையப்படும் |

[பிரஹமவித்தையினுற்பத்திக்கு அசாதாரண காரணம் அதனுல் அதிகாரிக்கு உண்டாகும்பலன் ஆகியவற்றைக் கூறுகின்ருர்.]

| | |
|---|---|
| உரம் ஆன வேதாந்த மகா வாக்கியத்தால் | ஞான சாதனமான வேதாந்த மகா வாக்கிய சிரவணத்தினுலும் |
| அப்படி ஞான உப தேசம் ஒன்ருலுமே | அவ்வாறே சற்குரு நாதனுடைய மகாவாக்கிய உபதேசத்தினுலும் |
| உற்பன்னமாம் விச்சை யாம் நிச்சயத்தால் | உண்டாகின்ற பரவித்யா ரூப திட நிச்சயத்தாலும் நன்ருக நிச்சயிக் கப்பட்ட அர்த்தத்தினையுடைய எதிகள் (சன்னியாசிகள்) |
| பரம் ஆன அஞ்ஞான அந்தத்திலே | காரியங்களினும் பரமாயிருக்கின்ற அஞ்ஞான நாச காலத்திலே |
| இப்புரமாம் உடம்புக்கு உள்ளே அந்த முத்திப் பொருள் கண்டு | இப்பிரஹ்மபுரமாகிய சரீரத்தினுள் மோக்ஷ சொரூபமாகிய அவ்வித வஸ்துவை தெரிசித்து |
| இப்புவிக்கே வீடு எய்துவார் | இவ்வுலகத்திலேயே (இத்தேகத் திலேயே) மோக்ஷமடைவர். |

(அ – கை) இனியதன் சாதன பூதமான யோகத்தை 56
தரிசிப்பிக்கின்ருர்.

தக்கஞா னத்தைத் தான்பெறற் பொருட்டுத்
தனியிடந் தனையடைந் திதய
துக்கமே வாமற் சுகாசனத் திருந்து
தோடலே கழுத்துடம் பிவைநே

ரொக்குமா றிருத்திப் பூதிகொண் டிந்த
வுடம்பையுத் தூளனம் பண்ணி
மிக்கவாய் வருமிந் தியங்களை யெல்லாம்
விடயமே லெழாவகை விலக்கி 5

(இ - ள்)

| | |
|---|---|
| தக்க ஞானத்தைத் தான் பெறற் பொருட்டுத் தனி இடந்தனை அடைந்து | ஆசலால் முமுக்ஷுவானவன் மேன்மை பொருந்திய ஞானத்தை அடையவேண்டி ஏகாந்தஸ்தானத்தைப் பொருந்தி |
| இதயதுக்க மேவாமல் சுகாசனத்து இருந்து | இருதயத்தின்கண் துன்பம் பொருந்தா வண்ணம் சுகமாகிய ஆசனத்திருந்து |
| தோள்தலை கழுத்து உடம்பு இவை நேர் ஒக்குமாறு இருத்தி | புயம் சிரம் கிரீவம் (கழுத்து) தேகமாகிய இவைகள் கோணாதிருக்குமாறு செய்து |
| இந்த உடம்பை பூதி கொண்டு உத்தூளனம் பண்ணி | இச்சரீர முழுவதும் விபூதியாற் கவசம் போன்றணிந்து |
| மிக்கவாய் வரும் இந்தியங்களை எல்லாம் விடயமேல் எழாவகை விலக்கி | அதிகரித்து விடயங்களில் செல்வனவாய் வருகின்ற இந்திரிய சமூகத்தை விடயங்களை நோக்கிச் செல்லா வண்ணம் தகைந்து. 5 |

பத்தியாற் குரவன் பதம்பணிந் திதய
பங்கயந் தனைநினைந் ததிலே
நித்தமா யொருவரானிணைப் பரிதாய்
நிமலமா யெங்கணு நிறைந்து
சுத்தமாய்ச் சாந்த மாயனைத் துலகுந்
தோன்றுதற் குயோனியாய்ச் சுபாவ
சித்தமா யமுதா யருவமா யொன்றாய்ச்
சிற்சதா னந்தமாய்ச் சிவமாய். 6

(இ - ள்)

| | |
|---|---|
| பத்தியால் குரவன் பதம் பணிந்து | சிரத்தையினுலே சற்குருவின் பாதத்தை நமஸ்கரித்து |
| இதயபங்கயம் தனை நினைந்து நிமலமாய் | இருதய தாமரையைச் சிந்தித்து (விஷய வைராக்கியத்தினுல் அவ் விஷயபோக ஜெனித கலக்கமற்ற தன்மையினுல்) மலரகிதமாய் |
| சுத்தம் ஆய் அதிலே | அதனுலே சுத்தமாயுள்ள இருதயாம் புயத்திலே |
| நித்தம் ஆய் ஒருவரால் நினைப்பரிது ஆய் | நாசரகிதமாயும் எவராலும் சிந்தித்தற்கு அரியதாயும். |
| எங்கணும் நிறைந்து | சர்வவியாபகமாயும் |
| சாந்தம் ஆய் | (சம்சார சம்பந்தமின்மையின் நிஸ்தரங்க சாகரம்போல்) சாந்த சொரூபமாயும் |
| அனைத்து உலகும் தோன்றுதற்கு யோனி யாய் | சகல ஜெகத்தும் உற்பத்திக்குக் காரணஸ்தானமாயும் |
| சுபாவ சித்தமாய் | இயல்பாகவே சித்தித்துள்ளதாயும் |
| அமுதாய் அருவம் ஆய் | மரணமற்றதாயும் லௌகீக வடிவமற்றதாயும் |
| ஒன்ருய் சிற்சதானந்தமாய் சிவமாய் | அத்வைதமாயும் சச்சிதானந்த ரூபமாயும் (சர்வ) மங்களமாயும். 6 |

(குளகம்)

உரிநால் வேதத் தோமெனும் பொருளா
யுள்ளதா யுள்ளவெப் பொருட்டுங்
கரியதாய் நின்ற வொன்றினைக் காள
கண்டமுங் கண்ஞெரு மூன்றுங்
பிரிவிலா மங்கை பாகமு மாகப்
பேணுநற் பாவனை பெறுவான்
அரியதா யருளி ஞல்வரும் விச்சை
யதனிஞ லதனையே யடையும். 7

(இ - ள்)

| | |
|---|---|
| உரியநால் வேதத்து ஓம் எனும் பொருள் ஆய் | பரமப் பிரமாணத்திற்குரிய இருக்காதி நான்கு வேதங்களின் சிரோரத்தினமாயுள்ள பிரணவப் பிரதிபாத்தியப் பொருளாயும் |

| | |
|---|---|
| உள்ளதாய் உள்ள எப்பொருட்கும் கரிய தாய் நின்ற ஒன்றினை | சத்ரூபமாயும் சப்தார்த்தங்களைத் திற்கும் சாக்ஷியாயும் இருக்கின்ற அத்வைதமாகிய ஞேய வஸ்துவை |

[இந்தப்பிரகாரம் நிஷ்கள ரூபத் தன்மையைக் கூறி தியேயத் (தியானஞ் செய்யத்தக்கபாவனா விஷயத்) தன்மையால் லீலா விக்கிரகத்தை உபதேசிக் கின்றார்.]

| | |
|---|---|
| காள கண்டமும் கண்ணொரு மூன்றும் பிரிவு இலா மங்கை பாகமும் ஆக | திருநீலகண்டமும் திரியம்பகமும் உமா சகிதமும் ஆகவுள்ள லீலா விக்கிரகத்தை |
| பேணு நல் பாவனை பெறுவான் | சிரத்தையோடும் நன்கு தியானிக்கின்ற முமூக்ஷுக்கள் |
| அரியது ஆய் அருளினால் வரும் விச்சை அதனினால் | அனதிகாரிகளால் அடைதற்கரியதாயும் சிவப்பிரசாதத்தினால் வருவதாயும் உள்ள பரவித்தையினால் |
| அதனையே அடையும் | அந்நிஷ்கள பரசிவத்தையே அடைவார்கள். 7 |

(அ – கை) அந்த ஞேய (ஞான விஷய – அறியும்)த் தன்மையால் உபதேசித்த பரசிவ ரூபத்திற்கு கூறப்பட்ட அத்வைதத் தன்மையை சர்வான்மத் தன்மையால் கூறுகின்றார்.

தெரிவரிய சிற்கனமாய்த் திகழ்சிவனே திசைமுகனும்
அரியுடனவ் வரனுமவ னவனமரர்க் கதிபதியும்
துரிசறவே யக்கரமாய்ப் பரமாகுஞ் சுராட்டுமவன்
எரியுமழற் காலனவ னிந்துவொடு பிராணனவன். 8

(இ – ள்)

| | |
|---|---|
| தெரிவு அரிய சித்கன மாய் திகழ் சிவனே | சுட்டி யிது வென்றுணர்தற்கரிய சிதேகரசமாய் விளங்காநின்ற பரசிவனே |
| திசை முகனும் அரி யுடன் அவ்வரனும் அவன் | நான்முகனும் விஷ்ணுவும் ஈசானிய மூர்த்தியும் ஆவன் |

| | |
|---|---|
| அவன் அமரர்க்கு அதிபதியும் | அவனே தேவர்கட்கதிபதியான தேவராசனும் |
| துரிசு அறவே அக்கரமாய் | தோஷமற்ற நாசரகிதனுமாவான் |
| பரம் ஆகும் சுராட்டும் அவன் | (பிரமேந்திராதிகட்குக் காரணத் தன்மையால்) பரமாயிருப்பவனுமாவன் சுதந்தர முடமையால் சுராட்டுமாவன் |
| எரியும் அழல் காலன் அவன் | தகிக்கின்ற அக்கினி தேவனும் எமனும் அவனேயாம் |
| இந்து ஓடு பிராணன் அவன் | சந்திரனுடன் பிராணனுமாவன். 8 |

ஒழிந்ததொ ருபொருளில்லை யுள்ளதெலா மவனேமுன்
கழிந்தபொருள் மேலும்வரக் கடவபொரு டானுமவன்
மொழிந்ததனி பரவிச்சை யவிச்சையெனு முற்றுமவன்
இழிந்தபிறப் பறவேறோர் வழியில்லை யிவனொழிய. 9

(இ – ள்)

| | |
|---|---|
| ஒழிந்தது ஒரு பொருள் இல்லை | ஈசனுக்கன்னியமாய் எஞ்சியிருப்பதாக வோர் வஸ்துவுமில்லை |
| உள்ளது எல்லாம் அவனே | வர்த்தமான காலத்திலுள்ள சர்வ பதார்த்தங்களும் அவனே |
| முன்கழிந்த பொருள் மேலும் வரக்கடவ பொருள் தானும் அவன் | பூதகாலத்தொழிந்த பதார்த்தங்களும் பௌஷிய (எதிர்) காலத்தில் உற்பன்னமாம் பொருள்களும் அவனே |
| தனிமொழிந்த பர விச்சை அவிச்சை யெனும் முற்றும் அவன் | தனித்தனியே கூறப்பட்ட வித்தை அவித்தை யென்னும் அனைத்துமவனே |
| இழிந்த பிறப்பு அற இவன் ஒழிய வேறு ஓர் வழி இல்லை | நிக்கிருஷ்ட சம்சாரம் நீங்குவதற்கு பரசிவனது இந்த சர்வான்மகத்தன்மை ஞானத்தைவிட்டு அன்னியமார்க்கமில்லை. 9 |

(அ - கை) அந்த ஞானமே முத்தி சாதனமென்று உபதேசிக்கின்றார்.

இன்னதெ னாமற் றன்னிடை காணத்
தன்னையெப் பொருளினுங் காணும்
அந்நிலை யடைந்தா லவன்பிர மத்தை
யடையும்வே றொன்றினா லடையான்
தன்னையு மோங்கா ரத்தையு மரணி
யாக்கியத் தத்துவ ஞான
வன்னியைத் தியான மதனவிட் டெழுப்பும்
மதியினார் வன்பவஞ் சேரார். 10

(இ - ள்)

| | |
|---|---|
| இன்னது எனாமல் | இது தன்னினும் பின்னமென்று எண்ணாமல் |
| தன்னிடை காண | அனைத்தையும் காரிய நாம ரூபத்தால் தன்னிடத்திற் பார்ப்பதாலும் |
| தன்னை எப்பொருளினும் காணும் | தனது சொரூபத்தை சர்வபதார்த்தங்களிடத்திலும் காரண சச்சிதானந்த ரூபத்தால் பார்த்தலும் (ஆய) |
| அந்நிலை அடைந்தால் அவன் பிரமத்தை அடையும் | அவ்வித ஸ்திதியைப் பெற்றால் அந்த வித்வான் பிரஹ்ம அபேதத்தையடைவான், |
| வேறு ஒன்றினால் அடையான் | மார்க்காந்தர (மற்றோர் உபாய)ங்களால் அடையமாட்டான் |

[ இவ்வித ஞானோற்பத்திப் *பிரதிபந்தக பாவபாருள்யத்தால் (மிகுதியால்) சம்பவியாதென்று சங்கித்து அதன் நிவர்த்தி யுபாயங் கூறுகின்றார். ]

| | |
|---|---|
| தன்னையும் ஓங்காரத்தையும் அரணி ஆக்கி | சோபாதிக ஆன்மாவை கீழரணியாகவும் பிரணவத்தை மேலரணியாகவுங்கொண்டு |
| அத் தத்துவ ஞான வன்னியை தியான மதனம் விட்டு எழுப்பும் மதியினர் வன்பவம் சேரார் | முற்கூறிய வுண்மை ஞானவடிவ அக்கினியை சிந்தனாரூப கடைதலினால் வெளிப்படுத்தும் புத்திமான்கள் (அஞ்ஞானத்தினால்) கொடிய சம்சாரத்தையடையார். 10 |

* 4ஆம் அத்தியாயம் 63ஆம் பாட்டின் குறிப்புரையிற் காண்க.

(அ – கை) சாக்கிர சொப்பனாதி அவஸ்தைகளில் சுக துக்கங்களையனுபவியா நின்ற போக்தா சம்சாரியான ஜீவன், ஈசுவரன் அவ்வாறன்று இவர்களுக்கெப்படி யேகத்வமெனச் சங்கித்துக் கூறுகின்றார்.

தாக்கரும் பரமன் றன்சுதந் தரத்தால்
தன்னுடை மாயைதன் னாலே
ஆக்கின னிந்த வுடம்படைந் தறியான்
போலநின் றனைத்தையு மதிலே
சாக்கிரத் தென்னும் இடம்வகுத் தன்ன
பானமும் தையலார் முதலாம்
போக்கியங் களையும் புசித்திடுங் கனவும்
பணணியத் தன்மையே புசிக்கும். 11

(இ – ள்)

| | |
|---|---|
| தாக்கு அரும் பரமன் தன்னுடைய மாயை தன்னால் அறியான் போல் நின்று | அசலமாய் மனோ வாக்குகளுக் கெட்டாதிருந்த வண்ணமே அசங்கமாயிருந்த பர்மேஸ்வரன் தனது மாயா வசத்தால் மோகமடைந்தவன் போல நின்று |
| தன் சுதந்தரத்தால் இந்த உடம்பு அடைந்து அனைத் தையும் ஆக்கினன் | தனது சுதந்தர பலத்தினால் இச் சரீரத்தினுள் பிரவேசித்து சகல விவகாரங்களையும் செய்ப வனாய் |
| அதிலே சாக்கிரத் தென்னும் இடம் வகுத்து | அச்சரீரத்திலே சாக்கிராவஸ்தை யென்னும் ஸ்தானத்தைக் கற்பித்து |
| அன்ன பானமும் தையலார் முதலாம் போக்கியங்களையும் புசித்திடும் | (இராஜபுத்ராதிகளைப் போல லீலையால் புசித்தல் பருகுதல் ஆகிய) அருந்தல் விஷயங்களையும் ஸ்திரீ முதலிய பொருந்தல் விஷ யங்களையுமனுபவிக்கும். |
| கனவும் பண்ணி அத்தன்மையே புசிக்கும் | சொப்பனாவஸ்தை யென்னும் ஸ்தானத்தை வகுத்து முற்கூறிய வண்ணமே புசிக்கின்றான். 11 |

உறங்குமவ் வியத்த மந்நிய தமத்தி
  னுட்புகுந் தொன்றொழி யாமல்
இறந்தவவ் விடத்தே தன்னுரு வான
  வின்பமே புசிக்குமீண் டெழுந்து
கறங்குபோ னனவை யடையினு மடையுங்
  கனவைவந் தடையினு மடையுஞ்
சிறந்தமுப் புரமு மிவன்விளை யாடித்
  திரிதரச் செய்ததே திகழ்த்தில். 12

(இ - ள்)

| | |
|---|---|
| உறங்கும் அவ்வியத் தம் அன்னிய தமத்தி னுள் புகுந்து | துயிலுங்கால் அவ்வியத்தமாய்ப் பொருந்திய தமசினுல் ஆவரிக்க (மறைக்க) ப்பட்டவனுய். |
| ஒன்று ஒழியாமல் இறந்த அவ்விடத்தே தன்னுருவு ஆன இன் பமே புசிக்கும் | சர்வ கரணங்களும் (மனதும் தன் காரியங்களாகிய பொருள்களுக் குள் யாதொன்றும்) சேஷியாமல் லயமான அச்சுழுத்திய வஸ்தையில் சுவசொருபத்தையே புசிக்கின்ருன் |
| மீண்டு எழுந்து | பூர்வகர்ம சம்பந்தத்தால் மறுபடி யும் சுழுத்தியினின்றும் வெளிப் பட்டு |
| கறங்குபோல் நனவை அடையினும் அடையும் | காற்ருடிபோல் சாக்கிராவஸ்தை யைப் பொருந்தினும் பொருந்து வன் (அல்லது) |
| கனவை வந்து அடை யினும் அடையும் | சொப்பனுவஸ்தையை வந்து பொருந்தினும் பொருந்துவன் |
| திகழ்த்தில் சிறந்த முப்புரமும் இவன் விளையாடித்திரிதரச் செய்ததே | கூறுமிடத்தில் சிறப்புப் பொருந் திய மூன்று அவஸ்தைகளும் இவ் வான்மா கிரீடித்தற்கு ஆகச் செய்யப்பட்டதேயாம். 12 |

(அ - கை) அப்படியாளுல் ஈசுவரனே சீவசொருபமா யிருப்பானுயின் அவனுக்குப் போகம் பொருந்தாது "அன் னியன் புஜியாதவனுயிருக்கின்ருன்" என்னும் சுருதியினுல் என்ற சங்கைக்குக் கூறுகின்ருர்.

சொல்லிடும் பொருள்களி யாவையுங் கடந்து
சுதந்தர ஞய்த்துவக் கின்றி
யெல்லேதீர் இன்ப மேவடி வாகி
யிருந்துள விறைவனுக் கென்றும்
அல்லலுண் டாகா திவையனு பவிக்க
வன்னிய மாகவோர் சீவன்
இல்லேயே பேத மின்மையாற் சடந்தா
னெங்ஙனே புசிக்குமா றியம்பீர். 13

(இ - ள்)

| | |
|---|---|
| சொல்லிடும் பொருள்கள் இயாவையும் கடந்து | கூறுநின்ற சர்வ பதார்த்தங்களேயும் கடந்திருத்தலால் (விஸ்வாதீதனுயும்) |
| சுதந்தரனுய் துவக்கு இன்றி எல்லேதீர் இன்பமே வடிவு ஆகி இருந்து உள இறைவனுக்கு | சுதந்தரனுயும் தோஷ சம்பந்த மற்றவனுயும் அளவிறந்த பேரின்ப வடிவனுயும் இருக்கின்ற பரசிவனுக்கு |
| என்றும் அல்லல் உண்டாகாது | (போகாதிகள் கேவலம் லீலாமாத்திரமாதலால்) எந்நாளுந் துன்பமுண்டாகாது |

[சித்ரூப பரசிவனுக்கு ஸ்தானத்திரய போகமானது துக்க வேதுவாகா தென்பது சத்தியமாகட்டும் சீவன் ஈசனுடைய பரதந்திரனுகக் காணப்படுதலால் சீவனுக்கு அது வாஸ்தவமாக வுளதென்று ஏன் சொல்லக்கூடாது எனச் சங்கித்து உத்தரமருளிச் செய்கின்ருர்.]

| | |
|---|---|
| இவை அநுபவிக்க அன்னியம் ஆக ஓர் சீவன் இல்லேயே | இப்போகங்களே யனுபவித்தற்கு பிருதக் பூதனுக வொரு சீவனின்று |
| பேதம் இன்மையால் | சீவேசுரர்கட்கு வாஸ்தவ பேத மின்மையால் |

| | |
|---|---|
| சடம்தான் எங்ஙனே புசிக்குமாறு இயம்பீர் | (அன்றியும் சித்ரூப ஆன்மாவில் அத்தியஸ்தத் தன்மையால் மித்தை யாயும்) ஜடமாயும் உள்ள கர்ம பல போகமானது (அதிஷ்டான வடிவ ஆன்மாவிற்கு) எப்படி வாஸ்தவ போகமாம் தேவர்களேகூறுங்கள். 13 |

(அ – கை) இந்தப்படி ஜாக்கிர சொப்பன சுழுத்திய வஸ்தைகளில் ஜீவ பாவத்தை யடைந்துள்ள பரசிவனுக்கு வாஸ்தவமாகப் போகம் கூடாமையால் அவ்வவத்தா நிர் மாணங்களும் அவற்றின் போகங்களும் லீலாமாத்திரமென நிகமனஞ் செய்கின்றார்.

ஆதலா லறிவா னந்தமா யுள்ள
வமலனே யவைபுசிக் கின்றான்
ஈதெலாம் விளையாட் டேவிளை யாடு
மிடங்களே யிப்புரம் மூன்றும்.
ஆதலா காமை சொல்லவும் படுமோ
வதிசுதந் தரனையன் னியமாய்
ஓதலா மோவிப் புரங்களும் அவன்றன்
னுருவமே யொழிவிலா மையினல். 14

(இ – ள்)

| | |
|---|---|
| ஆதலால் அறிவு ஆனந்தமாய் உள்ள அமலனே அவை புசிக் கின்றான் | (சித்ரூப பரசிவனுக்கு அன்னிய மாக சீவனில்லை) ஆதலால் சேதன னந்தமாயிருக்கின்ற நின்மல பர சிவனே அப்போகங்களைப் புசிக் கின்றான் |
| ஈது எலாம் விளை யாட்டே விளையாடும் இடங்கள் இப்புரம் மூன்றும் | (அப்பரசிவனுக்கு) இத்தானத்திரய போகமனைத்தும்கிரீடாமாத்திரமே, கிரீடிக்கும் உத்தியான வனங்களே யிம் மூன்று அவஸ்தைகளும் |
| ஆதல் ஆகாமை சொல் லவும் படுமோ | ஒரு பயனுள வாதலும் உளவாகா மையும் அவனுக்குக் கூறப்படுமோ |

[ அவரது கிரீடா உத்தியானத் தன்மையால் ஸ்தானத் திரயமிருக்குமாகில் துவிதப் பிரசித்தி வருமென்று சங்கித்துக் கூறுகின்றார். ]

| | |
|---|---|
| அதிசுதந்தரனை அன்னியமாய் ஓதல் ஆமோ | சர்வ சுதந்தரனுக்கு அன்னியமாக இப்புரங்களைக் கூறலாமோ |
| ஒழிவு இலாமையினால் இப்புறங்களும் அவன் தன்னுருவமே | பூரணனாதலால் ஸ்தானத்திரய (தூல, சூட்சும, காரண தேகங்களும் அவனது) சொரூபமே. 14 |

மாலுரு நனவு கனவுறக் கங்கள்
வடிவமா நிகழ்ந்துள விறைக்கு
ஞாலமே விசுவன் றைசதன் பிராக்ஞ
னாமமா நவிலுவ ரடைவே
தூலமே விசுவன் உண்பன சுருக்கந்
தைசதன் றுய்ப்பன சுகந்தன்
பாலதா தலினாற் றன்னுடை யின்பம்
பருகிடா நிற்குமே பிராக்ஞன். 15

(இ - ள்)

| | |
|---|---|
| மால்உரு நனவு கனவு உறக்கங்கள் வடிவமாய் நிகழ்ந்து உள இறைக்கு | உண்மையில் மயக்கமடையாமல் அவித்யா வசத்தால் ஜாக்கிர சொப்பன சுழுத்தியவஸ்தைகளில் அவ்வவ் வவஸ்தா ரூபமாக விளங்காநின்ற பரமேஸ்வரனுக்கு |
| ஞாலம் அடைவே விசுவன் தைசதன் பிராக்ஞ்ஞன் நாமமா நவிலுவர் | ஆன்றோர்கள் கிரமமாக விசுவன் தைசதன் பிராஞ்ஞன் என்றும் நாமங்களைக் கூறாநிற்பர் |

[ அவர்களின் சொரூப விசேஷத்தைக் கூறுகின்றார். ]

| | |
|---|---|
| விசுவன் உண்பன தூலம் | ஜாக்கிராவஸ்தா சாக்ஷியாக விளங்கும் விசுவான்மா புசிப்பவை பஞ்சீகிருத சப்தஸ்பரிசாதி விஷயப்பிரபஞ்சம் அல்லது சர்வ போக்துருக்கட்கும் சாதாரணமாக ஈசுவர மாயா நிருமித போக்ய பிரபஞ்சம் |

| | |
|---|---|
| தைசதன் துய்ப்பன சுருக்கம் | (சொப்பனுவஸ்தா சாக்ஷியாகிய) தைசதான்மா புசிப்பவை சூக்ஷ்மம் (சுவ(தனது) அவித்யா கற்பிதமான அசாதாரண விஷயம்) |
| பிராஞ்ஞன் சுகம் தன்பாலது ஆதலினுல் தன்னுடை இன்பமே பருகிடா நிற்கும் | (சுழுத்திய வஸ்தா சாக்ஷியாகிய) பிராக்ஞன் (அவ்வவஸ்தையில் நனவாதிகளிலுள்ள விஷயேந்திரிய வர்க்கங்களோடு அந்தக்கரணம் தனது காரணமான அஞ்ஞானத்தில் லயமாதலின் விக்ஷேப அபாவத்தால்) ஆனந்தம் தனது ரூபமானதால் சுவானந்தத்தையே அநுபவியா நிற்பன். 15 |

(அ – கை) இவ்வாறு அறிந்தவனுக்கு புண்ணிய பாவ சம்பந்தமில்லையென்பதை தரிசிப்பிக்கின்ருர்.

புரங்கண் மூன்றிலும் போக்கிய மியாவையங்
இருந்து துய்ப்பவ னியாவன்மற் றியாவையும்
பரப்பி ரமமெ னும்படி பார்ப்பவன்
அரந்தை யெய்திடா ஞயிரஞ் செய்யினும். 16

(இ – ள்)

| | |
|---|---|
| புரங்கள் மூன்றிலும் போக்கியம் யாவை | மூன்றவஸ்தைகளிலும் உள்ள போக்கிய வஸ்துக்களெவையோ |
| அங்கு இருந்து துய்ப்பவன் யாவன் | அவ்விடத்திலிருந்து அப்போகங்களை அநுபவிப்பவன் எவனே |
| மற்றும் யாவையும் பரப்பிரமம் எனும்படி பார்ப்பவன் | ஏனையவனைத்தும் பரப்பிரஹ்ம சொரூபமென்றறிந்த வித்வான்கள் |
| ஆயிரம் செய்யினும் அரந்தை எய்திடான் | அநேகமாயிர போகங்களை புசிப்பினும் அப்போக ஜெனிதமான புண்ணிய பாவங்களோடு சம்பந்தப்படமாட்டார்கள். 16 |

(அ - கை) இந்தத் தாற்பரியத்தையே மேலுமுபதேசிக்கின்றார்.

விழுமி தாமய மேதங்கள் செய்யினும்
பழிமி கும்பஞ்ச பாதகம் பண்ணினும்
ஒழிவு றுமலொன் றேயென் றுணர்ந்தவன்
நழுவி னனந்த நன்மையுந் தீமையும். 17

| | |
|---|---|
| விழுமிதாம் அயமேதங்கள் செய்யினும் | உத்தமமான ஆயிரம் அஸ்வமேதங்களைச் செய்தாலும் |
| பழிமிகும் பஞ்ச பாதகம் பண்ணினும் | பாவ மிகுந்துள்ள * பஞ்சமகா பாதகங்களைச் செய்தாலும் |
| ஒழிவுறுமல் ஒன்றே என்று உணர்ந்தவன் | நீக்கமின்றி நிறைந்திருக்கின்ற அத்வைத வஸ்துவே நானென்று சாக்ஷாத் கரித்த வித்வான் |
| அந்த நன்மையும் தீமையும் நழுவினன் | அதனால் வரும் புண்ணிய பாவங்களினின்றும் விடுபட்டவனாவன். |

17

(அ - கை) இங்ஙனம் ஏகத்வ ஞானத்திற்குப் பலன் கூறி அந்த ஏகத்வத்தைச் சொல்லுகின்றார்.

சீவ னன்று புரமூன்றிற் சித்தா மவனே விளையாடும்
மேவு மெல்லா மெய்போல வவனால் விளைத லான்மெய்யத்
தேவ னேசான் றுதலினாற் சித்தா மவனே யத்துவிதன்
யாவுந் தானா தலிலெதினுந் தனையே விரும்ப லாலின்பன். 18

| | |
|---|---|
| புரம் மூன்றில் சித்தாம் அவனே விளையாடும் சீவன் அன்று | நனவு கனவு வுறக்கமென்னு மூன்று ஸ்தானங்களிலும் சிதாத்மாவாகிய சம்புவே கிரீடிக்கின்றான் ஜீவனல்ல (இது சத்யம்) |

[பிரதிக்ஞை செய்த அர்த்தத்தைச் சாதிக்கின்றார்.]

| | |
|---|---|
| மேவும் எல்லாம் அவனால் மெய்போல் விளைதலால் | போக்துரு போக்கியாத்மகமாகப் பொருந்திய மித்தியா பிரபஞ்சமனைத்தும் அவ்வான்மாவின் நின்றும் மாயையினால் சத்தியம் போல் உற்பன்னமாகின்றதென்பதாம். |

* பாதகம் 5. கொலை, பொய், களவு, கள்ளுண்ணல், குருநிந்தை.

[சின்மாத்ர ரூபமாகிய சுவாத்மாவிற்கு பிரஹ்ம லக்ஷண சம்பந்தத்தால் அதோடு ஏகத்வஞ் சொல்லும் பொருட்டு சச்சிதாநந்தத் தன்மையைப் பிரதி பாதிக்கின்றார்.]

| | |
|---|---|
| சான்று ஆதலினால் அத்தேவனே மெய் | (அந்தமித்யா பதார்த்தங்களனைத் திற்கும் திரிசியத்வும் நியமமாகவே; அத்திரிசியத்திற்கு) திருக்கு ரூப ஆத்மாவே சத்தியமாக அங்கீகரிக் கத்தக்கது |
| (சான்று ஆதலில்) அவனே சித்து ஆம் | (சடப்பிரபஞ்சத்திற்கு சாக்ஷிரூப மாதலால்) அவ்வாத்மாவே சித்து ரூபனும் ஆவன் |
| யாவும் தான் ஆதலின் அத்துவிதன் | போக்துரு போக்கியாதி பேதப்பிர பஞ்சமனைத்தும் தனது சொரூப மாயிருத்தலால் அத்வைதனுமாவன் |
| எதிலும் தனையே விரும்பலால் இன்பன் | பிரியவஸ்துக்களனைத்தினும் தன்னி டத்தில் அதிகப் பிரீதி வைத்திருப் பதால் ஆனந்த சொரூபனுமாவன். 18 |

இந்தப் புரங்கள் ஒருமூன்று மிவன்ற னிடையே யிறப்பதுநிர்த்
தொந்தப் புருட னொருக்காலும் நசியானாத லாற்சொல்லும்
அந்தப் பிரம மேயவன்றா னறியாமையினா லப்பரனைப்
பந்தப் படுமோர் சீவனெனப் பார்ப்பார் பவத்தே
பதைக்கின்றார். 19

(இ - ள்)

| | |
|---|---|
| இந்தப்புரங்கள் ஒரு மூன்றும் இவன் தன் னிடையே இறப்பது | இம்முப்புரங்களாய தேக ஸ்தானங் களும் இப்பரசிவனிடத்தே யொடுங்குவதாம் |
| நிர்த்தொந்தப் புருடன் ஒருகாலும் நசியான் | (ஆகாயம் போல) அசங்க பர மேஸ்வரன் ஒரு காலத்தும் நாச முறாதவனும் |
| ஆதலால் சொல்லும் அவன் தான் அந்தப் பிரமமே | சச்சிதானந்த லக்ஷண முடையவ னாதலால் சுருதிப் பிரதிபாத்திய அவ்வாத்மாவானவன் அந்தப் பிரஹ்ம சொரூபமே |

| | |
|---|---|
| அறியாமையினல் அப் பரனை பந்தப்படும் ஓர் சீவன் எனப்பார்ப்பார் பவத்தே பதைக் கின்ருர் | அவிவேகத்தினல் அந்தப்பரமேஸ் வரனை பந்தபாச முடைய வொரு சீவனென்பதாக அறிகின்றவர்கள் சம்சாரத்திலே விழுந்து * துடிக் கின்ருர்கள். 19 |

(அ – கை) இந்தப் பிரகாரம் ஜீவனுக்கு சச்சிதானந்த அத்வைத லக்ஷணமான சொரூபத்தைப் பிரதிபாதித்து பிரஹ்மத்திற்கு தடஸ்தல லக்ஷணத் தன்மையால் அதைப் பிரதிபாதிக்கின்ருர்.

ஈன மாகிவி டும்பி ராணன்ம நங்க ளிந்திய மியாவையும்
வான மூதைநெ ருப்பு நீர்புவி மற்று மந்தம கத்திலே
யான தாகிலு நுண்மை யாமதி னுண்மை யாமது வாகுமெய்ஞ்
ஞான நாடிய தத்து வங்களெ னும்ப தங்கண வின்றதே. 20

(இ – ள்)

| | |
|---|---|
| ஈனம் ஆகிவிடும் பிரா ணன் மனம் இந்தியங் கள் யாவையும் | இழிந்த பிராணுதி வாயுக்களும் மனுதி நான்கு கரணங்களும் ஞான கர்கேந்திரியங்கள் யாவும் |

* ஓர் இடையன் ஆடு மேய்த்தான் வெயில் வந்தவுடன் ஆடு களை யோர் அரசமரத்தில் அமரச்செய்து அயர்ந்து தூங்கினன். அவ் வழியில் கையில் கத்தரிக்கோலுடன் வந்த பிரஹ்மச்சாரியானவன் "ஏக் பிரஹ்மசாரி தஸ்மர்க்கடக:" என்னும் பழமொழி போல் அவ் விடையன் குடுமியை கத்தரித்துச் சென்ருன். தூக்கத்தில் ஆழ்ந்த இடையன் எழுந்து பார்த்தான்; ஆடுகளைக்காணேம். அடுத்திருக்கும் தடாகத்தில் தண்ணீர் அருந்தச் சென்ருன். குடுமியைக் காணேம் அவன் எண்ணினன்: குடுமியும் காணேம் ஆடுகளையும் காணேம் அதனல் என்னைக் காணேம் எவனே என்னைக் கொண்டு சென்ருன். எவனையோ கொண்டு வந்து போட்டுவிட்டான் என்று அழத் தொடங்கியது போல ஓர் புருஷன் சம்சார மென்னும் அரசமரத்தில் மூவாசையாகிய தாரபுத்ராதிகள் பேதவாதிகள் பரமராதிகளின் சங்கத்தால் அவிவேகமென்னும் நித்திரையில் ஆழ்ந்த போது திருட னும் பிரஹ்மச்சாரியும் போன்ற காமக் குரோதாதி சத்துருக்கள் வைராக்கியாதி சற்குணங்களையும் நான் பிரஹ்ம சொரூப மென்கின்ற தத்துவ ஞானத்தையும் பறித்துச் சென்றனர். அதனல் தன்னை துக்கி யென்றும் ஈசுவரனின் வேறென்றும் துடிக்கின்றவனை இடையனை வன் வழியில் வந்த நல்லவன் வாக்கால் தன்னை தானென்றின் புற்றது போல் புருஷனும் சற்குருநாதன் கிருபையினல் தன்னைச் சச்சிதானந்த வடிவமாய் அறிந்து இன்புறக்கடவனென்பதாம்.

| | |
|---|---|
| வானம் ஊதை நெருப்பு நீர் புவி மற்றும் | ஆகாயம் வாயு அக்கினி அப்பு பிருதிவி ஏனையவனைத்தும் |
| அந்த மகத்திலே ஆனது ஆகிலும் | நிரபேக்ஷிக அந்த வியாபக பிரஹ்மத்தினிடத்திலே உண்டாயினும் |
| அது நுண்மையாம் அதின் நுண்மை யாகும் | அந்தப் பிரஹ்ம மானது சூக்ஷ்மங்களனைத்தினுள்ளும் அதி சூக்ஷ்மமாம் |
| மெய்ஞ்ஞான நாடிய தத்துவம் எனும் பதங்கள் நவின்றதே | பரமார்த்த ஞானத்தால் அறியத் தக்க அதுவே துவம் சப்தத்தால் கூறப்பட்ட பொருளாவதாம். 20 (தான். ஓ – அசைகள்) |

(அ – கை) மேலும் இவ்வேகத்வத்தை ஐந்தாவது அத்தியாயத்தில் "நீயென்கின்ற வார்த்தைக்கு" என்று கூறியிருப்பதையே இங்ஙனஞ் சித்தாந்தமாக வெடுத்துக் கூறுகின்றார்.

நீயெ னும்பொரு ளேய தென்று நிகழ்த்தி டும்பொரு ளாவதும்
தூய சிற்பர மேப தங்களி ரண்டி னுந்துணி வாதலான்
மாயை யென்றும வித்தை யென்றுமுபாதி பேதவ ழக்கினல்
ஆய கற்பித பேத மல்ல தபேத மேபொரு ளாவதே. 21

(இ – ள்)

| | |
|---|---|
| நீ எனும் பொருளே அது என்று நிகழ்த்திடும் பொருள் ஆவதும் | துவம்பத இலக்ஷியார்த்தமே தற்பத இலக்ஷயார்த்தமாவதாம் (அது சுபாவ சித்தமாயிருப்ப தென்பதாம்) |

[பேதவாதிகள் தத்துவம் பதங்களின் ஜீவேசுவரரென்னும் வாச்சியார்த்தத்தையே பொருளாகக் கூறி கலகம் விளைவிக்கின்றனரே எனின் அதற்குக் கூறுகின்றார்.]

| | |
|---|---|
| தூய சிற்பரமே பதங்கள் இரண்டினும் துணிவு ஆதலால் | பரிசுத்தமாயும் சுதசித்தமாயும் உள்ள சின்மாத்திரமே இருபதங்களின் முடிந்த பொருளாமாதலின் |

| | |
|---|---|
| மாயை என்றும் அவித்தை என்றும் | (தத்துவம் பத லக்ஷியார்த்தமான சேதனத்திற்கு) மாயையெனவும் அவித்தையெனவும் |
| உபாதி பேத வழக்கினால் ஆய கற்பித பேதம் அல்லது அபேதமே பொருள் ஆவது | கூறுகின்ற) உபாதியால் ஏற்பட்ட பேத விவகாரத்தால் ஆகிய பேதம் கற்பித்தபேதமேயல்லது வாஸ்தவமன்றாதலின் அபேதமே வாஸ்தவமாகும். (ஏ. அசை) 21 |

**ஆத ரத்தொட விச்சை நாமம றுத்த நல்லதி காரியைப்**
**பேத முற்றுமெ னப்பு கன்றது பொய்யி லாமறை யையமன்**
**றேத மற்றது நானெ னுந்திட னாவ னேயஃ தெய்தினான்**
**ஓது முத்திய வன்ற னுள்ளநு போக மிங்ஙனா திப்பதாம்.** 22

(இ - ள்)

| | |
|---|---|
| பொய்யிலா மறை ஆதரத்தொடு | சத்தியவாதினியாகிய வேதமானது மிகுந்த பிரியத்தோடும் |
| அவிச்சை நாமம் அறுத்த நல்ல அதிகாரியை | விவேகாதி சாதனங்களுற்ற வுத்தமாதிகாரிக்கு சித்தசித்தேகத்துவ அஞ்ஞானத்தைக் கெடுத்து |
| போதம் முற்றும் எனப் புகன்றது ஐயம் அன்று | எல்லாம் ஞான சொரூப மென்று கூறுகின்ற இதில் சம்சயமில்லை (சுபாவ சித்தமான ஏகத்வத்தை போதிக்கின்றது என்பது 43-ம் சுலோகார்த்தம்) |
| ஏதம் அற்று அது | தோஷமற்ற (ஜாக்கிர முதலிய அவஸ்தா ரூபமாய் பிராணன் மன முதலிய பிரபஞ்சமாய் யாதொரு பிரஹ்மம் பரோக்ஷமாய் விளங்குகின்றதோ) அதுவே |
| நான் எனும் | அகம் துவம் என்னும் பதங்களின் லக்ஷியமாய் அபரோக்ஷமாய் விளங்குகின்ற பிரத்யக்சைதன்யமாகிய) நானென்னும் |

| | |
|---|---|
| திடனுவனேயஃது எய்தினுன் | திடஞான முடையவனே (தடஸ்த லக்ஷணமாகப் பிரதிபாதித்த) அந்தப் பிரஹ்ம சொரூபத்தை அடைந்தவனுவன் |
| அவன் தன் உள் ஓதும் முத்தி அநுபோகம் இங்ஙன் உதிப்பது ஆம் | அவ்வித்வானது உள்ளத்தின் கண் கூறுகின்ற சொரூபாநுபவம் பின்வருமாறு உண்டாவதாம். 22 |

(அ - கை) இந்தப்பிரகாரம் பரமான்ம ஐக்கியத்வத்தை அறிந்த ஜீவன்முத்தனுடைய அநுசந்தானப் பிரகாரத்தைக் கூறுகின்ருர்.

புகலுமுப் பதத்திற் போகம் போக்கியம் புசிப்பா னேநா
னிகழுமித் தனைக்குஞ் சான்ருய் நின்றதற் சொருப னேநா
னிகழுவ தென்பா வென்பானிற்பது மிறப்ப தென்பாற்
சகலமு மாத லாலே தற்பரம் பொருளா கின்றேன். 23

(இ - ள்)

| | |
|---|---|
| புகலும் முப்பதத்தில் போகம் போக்கியம் புசிப்பானே நான் | கூறுநின்ற மூன்றவஸ்தைகளிலும் உள்ள போக்கியமும் போகமும் புசிப்பவனும் நானே |
| நிகழும் இத்தனைக்கும் சான்ருய் நின்ற தற்பர சொரூபனே நான் | விளங்கா நின்ற இவை யாவைக்கும் சாக்ஷியாயிருக்கின்ற பிரஹ்ம சொரூபமே நான் |
| சகலமும் நிகழ்வது என்பால் நிற்பது என்பால் இறப்பதும் என்பால் | சர்வனுத்ம பதார்த்தங்களும் விளங்குவதும் நிலைத்திருப்பதுவும் நசிப்பதுவும் என்னிடத்தேயாம் |
| ஆதலாலே தற்பரம் பொருள் ஆகின்றேன் | ஆனபடியால் அந்தப் பிரஹ்ம சொரூபமாகவேயிருக்கின்றேன். 23 |

அணுவினுக் கணுவு நானே யப்படி மகத்து நானே
துணியிலெப் பொருளு நானே சோதியுள் சோதி நானே
பணிவுறத் தகுவே னுனே பழையனும் புருட னுனே
யிணைதனக் கில்லா வீச னுகிய வின்பம் நானே. 24

(இ - ள்)

| | |
|---|---|
| அணுவிணுக்கு அணுவு நானே | சூக்ஷ்ம தன்மையினுல் அணுவிற்கும் அணுவாயிருப்பவனும் நானே |
| அப்படி மகத்தும் நானே | அவ்விதமே வியாகத் தன்மையினுல் பெரிதுக்கெல்லாம் பெரிதாயிருப்பவனும் நானே |
| துணியில் எப்பொருளும் நானே | ஆராய்ந்தறிந்த விடத்தில் சகல பதார்த்தங்களு நானு யிருக்கின்றேன் |
| சோதி உள் சோதி நானே | சூரியாதி பாகியப் பிரகாசங்களுக்கும் ஜீவாதி யாந்தரப் பிரகாசங்களுக்கும் பிரகாசமாயிருப்பவனு நானே |
| பழையனும் புருடன் நானே | புராதனனும் நானே புருட சப்த வாச்சியனுயிருப்பவனும் நானே. |
| தனக்கு இணையில்லா ஈசன் ஆகிய இன்பம் நானே | சுவசமான ரகித (சுத்தனும்) ஈசுவரனும் இரண்ய கற்பனும் சிவனுமாகிய ஆனந்த சொரூபனுயிருக்கின்றேனும் நானே |
| பணிவுறத் தகுவேன் நானே | யாவரும் வழிபடுதற்குரியவனும் நானே |

24

கண்ணுஞ் செவியு மின்றியுமே காணக் கேட்கக் கடவேனுன்
பண்ணுந் தொழிலெல் லாம்வல்லேன் பாணிபாத
மில்லெனினும்
எண்ணுங் கடந்த விடமிங்கே யிருந்துஞ் செல்வ னுனெருவர்க்
கொண்ணும் படியன் றெனேயுணர வெல்லா முணறு
கின்றேனுன். 25

| | |
|---|---|
| கண்ணும் செவியும் இன்றியே காணக் கேட்கக்கடவேன் நான் | சட்சு சுரோத்திராதி இந்திரியங்களில்லாமலே சாக்ஷி ரூபத்தன்மையால் காண்பவனும் கேட்பவனும் யானே யாகும் |
| பாணி இல்லெனும் பண்ணும் தொழில் எல்லாம் வல்லேன் (நான்) | கரமில்லாமலே சுவ மகிமையிலிருந்தே சந்நிதிமாத்திரத்தால் சர்வ கிருத்தியங்களையும் செய்யும் சமர்த்தனும் நானே |

| | |
|---|---|
| பாதம் இல்லெனினும் இங்கே இருந்தும் எண்ணும் கடந்த இடம் செல்வேன் நான் | காலில்லை யென்றாலும் தனதுவியாபகத் தன்மையிலிருந்தே (கடஞ்செல வான்செலல்போல்) எவ்விடத்திற்கும் செல்லும் சமத்துடையவனும் நானே |
| எனை உணர ஒருவர்க்கு ஒண்ணும் படி அன்று | என்னை (அறிவித்தாலன்றி) யறிவதற்கு யாராலுல் முடியாததாம் |
| எல்லாம் உணருகின்றேன் நான் | சர்வத்தையும் அறிகின்றவனுநானுகும். 25 |

ஓது வேதம் பலவாலு மோதி யுணரப் படுவேனுன்
றீது நன்றும் வினைமரணஞ் சனனந் தேகேந் தியம்புத்தி
வேத வேதாந் தப்பொருள்க ளெல்லாம் விளங்கவறிவேனுன்
பூதம் ஐந்து மின்றியக மிதமாய் நானே புரிக்கின்றேன். 26

(இ – ள்)

| | |
|---|---|
| ஓது வேதம் பல வாலும் ஓதி உணரப் படுவேன் நான் | கூறுநின்ற சதுர்வேதத்திலும் பிரதிபாதித்து அறியப்பட்டவனும் நானே |
| வேத வேதாந்தப் பொருள்கள் எல்லாம் விளங்க அறிவேன் நான் | சுருதி உபநிஷதாதிகளால் பிரதிபாதிக்கப்பட்ட அர்த்தங்களனைத்தும் நன்ருக அறிகின்றவனும் நானே |
| தீது நன்றும் வினை மரணம் சனனம் தேகேந்தியம் புத்தி பூதம் ஐந்தும் இன்றி | பாவம் புண்ணியம் அதன் ஏதுவாகிய கிருத்தியங்கள் இறத்தல் பிறதத்ல் தனுகரணம் புந்தி பஞ்சபூதங்கள் எனக்கின்றி |
| அகம் இதமாய் நானே புரிக்கின்றேன் | நானெனதென்றறியும் விஷயங்களாக நானே (எப்படியோ அப்படி) விளங்குகின்றேன். 26 |

சிறப்புடைய தேசுவடி விற்றிகழ்த லானு
னெறித்தவடி வாலுமெறி யாவடிவி னுலு
நிறத்தசுட ரானவடி வாகநிகழ் கின்றே
னிறத்தலிலனுனபர மீசனவனி யானே. 27

(இ – ள்)

| | |
|---|---|
| நான் சிறப்பு உடைய தேசுவடிவில் திகழ்தலால் | யான் மேன்மை பொருந்திய சுயம் பிரகாசத்தால் விளங்குவதால் |
| எறித்த வடிவினாலும் எறியா வடிவினாலும் | பான (விளக்க) ரூபத்தாலும் அபான (விளங்காத) ரூபத்தாலும் |
| நிறத்த சுடர் ஆன வடிவு ஆக நிகழ்கின்றேன் | மிகுந்த நிரபேக்ஷிக பிரகாசவடிவமாக விளங்குகின்றேன் |
| இறத்தல் இலன் ஆன பரம் ஈசன் அவன் யானே | நாசரகிதமான பரமேஸ்வரன் யானா யிருக்கின்றேன். 27 |

(அ – கை) இவ் அனுசந்தானத்திற்குப் பலத்தைக் கூறுகின்றார்.

எனையொழி யவொன்று மிலையெலா மெனதுரு வென்று
நிகழ்வதோர்
அனுபவம் வந்து விளையுமே லழிவுள தன்றி யமலமாய்
இனிதுற நெஞ்சி லுறைவதா யிலதுள தன்றி யெதுவுமாய்
அனியமி றந்த பிரமமா யறிவுரு வொன்றை யடையுமே. 28

(இ – ள்)

| | |
|---|---|
| எனை ஒழிய ஒன்றும் இலை எலாம் எனது உருவு | என்னினும் அன்னியங் கிஞ்சிற்றும் இல்லை சர்வமும் எனது சொரூபமே |
| என்று நிகழ்வது ஓர் அநுபவம் வந்து விளையுமேல் | என விளங்குவதாகிய அத்வைதானுபவம் உதயமாகில் (அவ்வித்வான்) |
| அழிவுளது அன்றி அமலமாய் இனிது உற நெஞ்சில் உறைவது ஆய் | நாசரகிதமாயும் நிர்மலமாயும் இன்பகரமாயும் இருதயத்தில் பொருந்தியிருப்பதாயும் |
| உளது இலது அன்றி எதுவும் ஆய் | சத்தசத்தான் மகமான காரண காரியபாவமின்றி சகஸ்த ரூபமாயும் |

(பிரதீதித்தன்மையால் காரியத்திற்கு சத்பாவமும் அப்பிரதீதித்தன்மையால் மாயா ரூபகாரணத்திற்கு அசத்பாவமும் கூறப்பட்டது)

| | |
|---|---|
| அனியம் இறந்த பிரமம் ஆய் | பேத ரகிதமான பிரஹ்ம சொரூபமாயுள்ள |
| அறிவு உரு ஒன்றை அடையும் | சேதன சொரூபத்தை யடைவான் 28 |

(அ - கை) உத்தரார்த்தத்தை நிகமனஞ் செய்கின்றார்.

கைவல் லியவுப நிடதங் கருணையி ஞலேயெதுகரு திக்கூறிற்
றுய்வில் லையனிய மொன்று லெனவரி பிரமாதிகளுக வாகின்றார்
எவ்வல் லியிலுள வதிகா ரிகளும தறியும் படியினிதிற்
சொன்னேன்
அவ்வெல் லையில்பொருள் அதிபத்தி யொட றிவுருவீ
ரமர்களனைவீரும். 29

(இ - ள்)

| | |
|---|---|
| கைவல்லிய உபநிடதம் கருணையினாலே எதுகருதிக் கூறிற்று | கைவல்லியவுபநிஷத்தானது காருண்யத்தால் எவ்விஷயத்தை ஆராய்ந்து கூறிற்றோ |
| அரிபிரமாதிகள் அனியம் ஒன்றில் உய்வு இல்லை என உகவாநின்றார் | மாலயனாதியோர் அன்னிமார்க்கங்களொன்றாலும் உஜ்ஜீவிக்கும் தன்மையில்லையெனவெதையாதரிக்கின்றார்களோ |
| அது எவ்வல்லியுள்ள அதிகாரிகளும் அறியும் படி இனிதில் சொன்னேன் | அவ்வத்வைத பிரஹ்ம ஞானத்தை எவ்வித பிரிவிலுள்ள அதிகாரிகளும் (உத்தம மத்திம மந்தமான அதிகாரிகளும்) அறிந்து அடையுமாறு நன்றாகக் கூறினேன் |
| அவ்வெல்லையில் பொருள் அமரர்கள் அனைவீரும் அதிபத்தி ஒடு அறிவுருவீர் | அவ்வியாபக பரசிவ சொரூபத்தை தேவர்களாகிய நீங்களியாவரும் மிக்க பத்தியோடும் அறிந்தடையுங்கள். 29 |

(அ – கை) கவிநாயகர் உபதேச சிறப்பைக் கூறுகின்ருர்.

பண்டைநான் மறைகள் சொல்லிய பரிசே
பரகுரு வாயிருந் துள்ள
அண்டர்நா யகனே யாதரித் தவன்றன்
அருளினு லநுபவ மாகக்
கண்டுளோர் இருக்குந் தன்மையை யெல்லாங்
காதலால் வானவர்க் குரைத்தான்
புண்டரீ கத்தே யிருந்துதான் சகல
பூதமும் படைத்திடும் புனிதன். 30

(இ – ள்)

| | |
|---|---|
| பண்டை நான் மறைகள் சொல்லிய பரிசே | அனுதியாயுள்ள இருக்காதி வேதங்கள் நான்கும் பிரதி பாதித்த வண்ணமே |
| பரகுரு வாயிருந்துள்ள அண்டர் நாயகனை ஆதரித்து | பரம ஞானசாரிய சொரூபமாயிருக்கின்ற தேவதேவனை வழிபட்டு |
| அவன் தன் அருளினுல் அநுபவம் ஆகக் கண்டு உளோர் இருக்கும் தன்மையை எல்லாம் | அவனது திருவருட் பிரசாதத்தினுல் சுபானுபவமாக நிஷ்கள பிரஹ்மத்தை சாக்ஷாத்கரித்த மகத்துக்களுடைய ஆசார மனைத்தும் |
| புண்டரீகத்தே இருந்து சகல பூதமும் படைத்திடும் புனிதன் | பத்மாலயத்தில் வீற்றிருந்து சகல ஜீவர்களின் சரீரங்களையும் சிருஷ்டிக்கின்ற பிரஹ்மாவானவர் |
| காதலால் வானவர்க்கு உரைத்தான் | அன்புடையவராய் தேவர்களுக்கு உபதேசித்தருளினுர். (தான் – அசை) |

30

8-வது கைவல்லிய உபநிஷத தாற்பரிமுரைத்த அத்தியாயம் சம்பூரணம் ஆக திருவிருத்தம் (420)

சற்குருநாதன் துணை.

## ஒன்பதர்வது பிருக தாரணிய வுபநிஷதத்தில் மைத்திரேயிப் பிராமணுர்த்த தாற்பரியம் உரைக்கும் அத்தியாயம்.

(அ - கை) இனி பிரகதாரணியத்திற்கும் பிரஹ்மான்ம வைக்கிய பரத்வத்தை இரண்டத்தியாயங்களால் பிரதி பாதிப்பவராய் அவற்றுள் மைத்திரேயப் பிராமணத் தில் அமிர்தத்துவ சாதனமான அத்வைத வான்ம தெரி சனத்தையும் அதற்குச் சாதனமான சிரவணுதிகளையும் பிரதிபாதிக்கின்றது பற்றி சம்பூரண வுபதேச மாதலால் அவ்வர்த்தத்தை முன்னர் சங்கிரகித்து தரிசிப்பிக்கின்ருர். அதைக் கவிநாயகர் ஆரம்பிக்கின்றவராய் துன்பமா முடம்பு என அத்தியாயமடியிடுகிருர்.

துன்பமா முடம்பி னின்றுமங் கதனுற்
துவக்குரு வகைநின்ற சிவனுக்
கின்பமே வடிவ மாதலாற் சொருபா
னந்தனென் றெழின்மறை யெல்லா
முன்புகூ றிற்றவ் வின்பமாம் பரிசை
மொழிந்திடக் கேண்மினென் றழகாய்
அன்பினு லலரோ னமரரியா வர்களு
மறியவா தரத்தொடு முரைப்பான். 1

(இ - ள்)

| | |
|---|---|
| துன்பம் ஆம் உடம்பில் நின்றும் | (கள்வனுக்குக் காராக்கிரகம் போன்ற பலவித) துக்கமயமாகிய தேகத்திற் பொருந்தி நின்றும் |
| அங்கு அதனுல் துவக்கு உருவகை நின்ற சிவனுக்கு | (தாமரையிலையும் தண்ணீரும் போல்) அத்தேகத்தின் சம்பந்த மின்றியிருக்கும் பரமேஸ்வரனுக்கு |
| இன்பமே வடிவம் ஆதலால் ஆனந்த சொருபன் என்று எழில் மறை எலாம் முன்பு கூறிற்று | சுகமே சொரூபமாதலால் இன்ப சொரூபனென்று அழகிய வேதங் களெல்லாம் பூர்வம் பிரதி பாதித்தது |

| | |
|---|---|
| அவ்வின்பமாம் பரிசை மொழிந்திடக் கேண்மின் என்று | அவ்வித சுக சொரூபானந்தத் தன்மையைக் கேளுங்களென்று |
| அன்பினல் அலரோன் அமரர் யாவர்களுக்கும் | சுரரிடத்திலுள்ள பிரியத்தினல் பிரஹ்மா வானவர் அத்தேவர்களனைவரும் நன்குணருமாறு |
| ஆதரத்தொடும் அழகாய் உரைப்பான் | சுருதியிற் சிரத்தை யுடையவராய் நன்ருக உபதேசிக்கத் தொடங்கினர். 1 |

ஈசனுக் குருவா னந்தமே யாகு
மேதெனி லியாதினுந் தன்மேல்
ஆசைவைத் திடலா லாசைவைத் திடுமா
னந்தமே மிகவுமா னந்தம்
பாசம்வைத் திடுத றன்பொருட் டன்றிப்
பதிபொருட் டல்லவே மனைவி
நேசமெப் படியுந் தன்னெடா தலிற்று
னிரதிச யானந்த நேரே. 2

(இ - ள்)

| | |
|---|---|
| ஈசனுக்கு ஆனந்தமே உருவம் ஆகும் | நான் என்று பிரத்யக்தன்மையால் சீவபாவமடைந்து விளங்கும் பரமேஸ்வரனுக்கு ஆனந்தமே சொரூபமாம் |

[அதில் ஏதுவைக் கூறுகின்ருர்.]

ஏது எனில் - யாது காரணத் தாலென்ருல்

| | |
|---|---|
| யாதினும் தன்மேல் ஆசை வைத்திடலால் | பொருள் முதல் பிராண பரியந்தமான சர்வ பதார்த்தங்களிலும் ஆன்மாவே பரமப் பிரேமாஸ்பதமாயிருத்தலால் |

[ஏதுவுக்கு அப்பிரயோஜனத்வத்தை நிராகரிக்கின்ருர்.]

| | |
|---|---|
| ஆசை வைத்திடும் ஆனந்தமே மிகவும் ஆனந்தம் | பரமப் பிரேமாஸ்பதமான ஆனந்தமே பிரியதம மாம். (தமம் - அதிகமாம்) |

[ அதுவும் ஆன்மாவின் கண் அசித்தமெனச் சங்கித்து சுருதியில் பதி பத்தினி தனுதிகளுக்கு ஆன்ம சேஷத்தன்மை யாலே பிரியத் தன்மையைச் சொல்லுதலால் அவ்வான்மா விற்கு யாதொரு சர்வ பிரியத்வம் பிரதிபாதிக்கப்பட்டதோ அதைக் கூறுகின்ருர். ]

| | |
|---|---|
| மனைவி பாசம் வைத் திடுதல் தன் பொருட்டு அன்றிப் பதி பொருட்டு அல்லவே | நாயகி நாயகனிடத்திற் பிரியம் வைத்தல் தனது சுகத்தின் பொருட்டே யல்லாமல் நாயகன் சுகத்தின் பொருட்டல்ல (அவ்வாறே நாயகனுமாம்) |
| எப்படியும் நேசம் தன்னெடு ஆதலில்தான் நேரே நிரதி சயா னந்தம் | ஆதலால் பிரியம் எப்படியும் (மனவி பதி லோகம் சாதி முதலிய வெந்தப் பிரகாரத்தாலும்) தன்னி டத்தே யிருத்ததால் பிரத்யக் ரூப மான தான் சாக்ஷாத் நிரதி சயானந்தமாகும் 2 |

(வி—ரை) பிரியம் கடசியில் மிஞ்சுவது எதனிடமோ அது சேஷியாம். அஃதெங்கன மெனில் சகல ஜனங்களும் புத் திரன் மனவி முதலியோர்களின் ஆபத்தை நிவிருத்திக்கும் பொருட்டு பொருளைச் செலவிடுகின்றனர். ஒருகால் தனது தேகத்தை ரக்ஷிக்கும் பொருட்டுத் தார புத்திராதிகளையும் தானஞ் செய்கின்றனர். கண் முதலிய இந்திரியங்களுக்கு வரும் ஆபத்தை நீக்கும் பொருட்டு அடித்தல் முதலியவற் ருல் உண்டாம் வருத்தத்தை தேகத்தில் அங்கீகரிக்கின்ற னர். பிராணனுக்கு ஆபத்து நேருங்கால் அதை நீக்கும் பொருட்டு கால் முதலிய இந்திரியங்களின் சேதத்தையும் அங்கீகரிக்கின்றனர். ஆதலின் தனமுதல் பிராண பரியந்த மான பொருள்களில் பின். பின், உள்ளவற்றின் அதிக பிரியத்தன்மை சர்வ சனங்களின் அனுபவத்தினுலும் சித் திப்பதால் அவ்வான்மாவே சேஷியாவதாம் அது வித்வான் களது அனுபவத்தினுலும் சித்தித்துளது. இதற்கு உதார ணம்: ஒரு புருடன்; மனவியும் இரு குழந்தைகளுடனும் ஆற் றில் இறங்கிச் செல்லும் போது மேல் வெள்ளம் வர குழந்தைகளுடன் செல்ல முடியாமல் தானும் மனவியும்

செல்ல நினைத்தான்; அதுவும் முடியாதென நினைத்து தன்னிடத்திலுள்ள மிகுந்த பிரியத்தினுல் மனைவியையும் நழுவ விட்டுத் தான் கரையேற நினைத்தது போலுமென்க.) 2

வேதியர் அரசர் விண்ணவர் மிகவும்
விரும்பிய உலகுகள் சகல
பூதமும் போக போக்கிய மாகும்
பொருள்களும் பொருள்களின் பொருட்டுக்
காதல்செய் கின்ருனல்லனெப் படியுங்
காதல்செய் வதுதனைக் காமித்
தாதலால் விருப்பந் தன்னுெடா தலிற்று
னிரதிசயா னந்த மாகும். 3

(இ - ள்)

| | |
|---|---|
| வேதியர் அரசர் விண்ணவர் மிகவும் விரும்பிய உலகுகள் | பிராமணர் சக்ஷத்திரியர் தேவர்கள் அதிகப் பிரியத்திற்கு விஷயமாகிய அவர்களது உலகங்கள் |
| சகல பூதமும் போக போக்கியம் ஆகும் பொருள்களும் | சர்வ பூதங்கள் போக போக்கிய வஸ்துக்களாகிய இவைகளைப் (புருடன்) |
| பொருள்களின் பொருட்டுக் காதல் செய்கின்ருன் அல்லன் | அவ்வப் பதார்த்தங்களின் பொருட்டு விரும்புகின்ருன் அல்லனும் |
| எப்படியும் காதல் செய்வது தனைக் காமித்து | சர்வ பிரகாரத்தாலும் பதார்த்தங்களில் வைக்கும் பிரியம் தன் பிரீதியின்பொருட்டேயாம் |
| ஆதலால் விருப்பம் தன்னுெடு | ஆனதால் பிரிய வஸ்து ஆன்மாவே |
| ஆதலின் தான் நிரதிசயானந்தம் ஆகும் | ஆகையால் ஆன்மாவே நிரதிசயானந்த சொரூபமாம். 3 |

யார்க்குமின் பம்போல் விரும்பிடப் படலா
லின்பமே யிறைவடி வின்பம்
தூக்கியே யின்பம் பெறநினைப் பவராற்
றுயர்மிகுந் தொழிலெலாம் விட்டுப்

பார்க்கவுங் கேட்க நினைக்கவுந் தியானம்
பண்ணவும் படுவனிப் பரம
னூக்கியங் கவனே யறியவே யெல்லா
மறிந்த தா மொழியவின் மையினுல் 4

(இ – ள்)

| | |
|---|---|
| யார்க்கும் இன்பம் போல் விரும்பிடப் படலால் | சர்வ ஜீவர்களுக்கும் விஷயானந்தம் போல விரும்பப் படுதலால் |
| இறை வடிவு இன்பமே | ஆத்மா நிரதிசயானந்த சொரூபமே |

(எதனுல் இவ்வாறு சர்வமும் ஆன்மசேடத் தன்மையால் பிரியமாமோ அதனுல் ஆத்மா சர்வ பிரியமாம். எக்காரணத்திஞல் (விறுப்பு வெறுப்பு உதாசீனமாயிராமல் தனது வடிவமாய்) இவ்வாறு பரம பிரேமாஸ்பதமோ அக்காரணத்திஞல் என்பதாம்.)

| | |
|---|---|
| இன்பம் தூக்கியே இன்பம் பெற நினைப்பவரால் | (விஷய ஜெனித சுகத்தையும் அபரிச்சின்ன வான்ம) சுகத்தையும் சீர்தூக்கி அபரிச்சின்ன சுகத்தை விரும்பிய முமூக்ஷுக்களால் |
| துயர் மிகும் தொழில் எல்லாம் விட்டு | பரிச்சின்ன சுக சாதனங்களான கருமங்களனைத்தையும் பரித்தியகஞ்செய்து |
| இப்பரன் பார்க்கவும் படுவன் | திருக்குருப இவ்வான்ம தேவர் சாக்ஷாத் கரிக்கப்படுவர் |

[இவ்வித ஆன்ம தெரிசனத்திற்கும் மனன நிதித்தியாசனங்களோடு கூடிச் செய்யப்பட்ட வேதாந்த மகாவாக்கிய சிரவண மனன நிதித்யாசனமே சாதனமெனக் கூறுகின்றூர்.]

| | |
|---|---|
| கேட்கவும் | (இப்பரன்) ஷட்லிங்க வடிவ யுக்திகளால் வேதாந்த வாக்கியத்தின் தாற்பரியத்தை நிச்சயஞ் செய்வது சிரவணம் அவ்விதம்) சிரவணிக்கவும் (சப்தத்தினது சக்கியார்த்த நியாயத்தை அனுசந்திப்பதும்) |

(வி – ரை) சற்குரு சன்னிதானத்தில் சட்லிங்க தாற்பரியத்துடன் வேதாந்த சாஸ்திரத்தைக் கேட்பது சிரவணமாம். அது வேதாந்த வாக்கியத்துக்கும் சுரோத்திரத்திற்கும் உள்ள சம்யோகரூபமான அங்கி (முதற்சிரவணமெனவும் அங்க (விசாரரூப) சிரவணமெனவும் இரண்டு விதமாம். அன்றியும் அக்கினியை அறிவிப்பதற்கு புகை லிங்கமாயிருப்பதுபோல வேதாந்தவாக்கியங்களின் தாற்பரியமாகிய அத்வைத ஸ்வரூபஞானம் உபக்கிரம உபசஸம்ஹாராதிலிங்கங்களாகிய குறிகளால் உண்டாகின்றமையால் அதனை ஈண்டு அறியத்தக்கதாம் அந்தலிங்கங்களாவன (1) உபக்கிரம உபசம்ஹாரம் (2) அப்பியாசம் (3) அபூர்வதை (4) பலம் (5) அர்த்தவாதம் (6) உப்பத்தி என்பனவாம்.

1. உபக்கிரமமாவது பிரகரணத்தின் ஆரம்பம் உபசம்ஹாரம் பிரகரணத்தின் முடிவு. ஆரம்பத்தில் சொல்லிய அர்த்தத்தையே முடிவிலுஞ் சொல்லுவது உபக்கிரம உபசம்ஹாரங்களின் ஏகரூபமாகிய முதலாவது லிங்கமாம்.

2 அத்வைதார்த்தத்தை (சுருதி) யடிக்கடி சொல்வது அப்பியாசமாம். யாசகன் தன்பிரயோஜனமான ஓரபிப்பிராயத்தை பல்வித வாக்கியங்களால் அறிவிப்பதுபோல பலவித யுக்திகளால் அத்வைத பிரஹ்மத்தைப் பிரதிபாதித்தலே அப்பியாசமாம்.

3. பிரஹ்மம் சுயம்பிரகாசமாயிருத்தலால் உபநிஷத்துக்களொழிந்த வேறு பிரமாணங்களால் அறியப்படாதெனவும் பிரதிபாதிப்பதே அபூர்வதையாம்.

4. அத்வைத பிரஹ்மஞானத்துக்கு சர்வதுக்க நிவர்த்திப்பரமானந்தப் பிராப்தியே பயனெனச் சொல்வது பலமாம்.

5. பேதஞானத்தின் நிந்தையும் அபேத ஞானத்தின் துதியும் ஆன வாக்கியங்கள் அர்த்தவாதமெனப்படும் உதாரணம் கட்டமுது சுமந்து சென்றவன் புசித்தபின் சுகஏதுவானதென்பது போலென்க.

6. சொல்லப்படும் அத்வைதார்த்தத்துக்கு அநுகூல மான திருஷ்டாந்தங்கள் உபபத்தியென்று சொல்லப்படும். மண் பொன் இரும்பு என்னுமிவைகளின்று முண்டாகிய காரியமான கடம் நகை ஆயுதமாகிய இவைகளுக்கு தனது காரணத்தின் நின்றும் பேதமில்லாததுபோல. காரணமான பிரஹ்மத்துக்கும் அதன் காரியமான ஜெகத்திற்கு பேதமில்லை யெனக் கூறுவதே உபபத்தியாம். இவ்வாறு லிங்கங்களில் ஒருலிங்கத்தின் தாற்பரியத்தினுவது சிரவணம் செய்யத்தக்க தென்பதாம்.

நினைக்கவும் } மனனிக்கவும் (சீவப் பிரஹ்மங் களின் * அபேதத்துக்குச் சாதக மான யுக்திகளாலும் பேதத்துக்குப் பாதகமான யுக்திகளாலும் அத் வைத பிரஹ்மத்தைச் சிந்தனை செய்வது மனனமாம்)

---

## சீவப் பிரஹ்ம அபேதத்தின் சாதக யுக்திகள்

1. ஜீவன் பிரஹ்மத்தினும் அபின்னமாம் சச்சிதானந்த வடிவமா யிருத்தலின் ஈசுவர சேதனம் போல எது சச்சிதானந்த வடிவ மன்றோ அது பிரஹ்மத்தினும் அபின்னமன்று; கடம் போல; எத னுல் சீவன் சடமன்றோ அதனுல் பிரஹ்மத்தினும் பின்னமுமன்று ஆனுல் அபின்னமாம். இவ்வனுமானத்தில் 1 ஜீவன் பட்சம் 2 அதற்கு பிரஹ்மத்தோடு அபேதம் சாத்தியம் 3 சச்சிதானந்த வடிவு ஏது; 4 ஈசுவர சேதனமும் கடமும் திருஷ்டாந்தம். இது முதலியன அநுமானப் பிரமாண வடிவ யுக்திகளாம்.

2. (1) கடபட உபாதிகளை நீக்கின் கடாகாச மடாகாசங் களுக்கு அபேதமிருத்தல் போல, புத்தியும் மாயையுமாகிய உபாதி களை யொழிக்கின் ஜீவப் பிரஹ்மங்களு அபேத மிருக்கின்றது.

(2) கடாகாசம் ஜலாகாசம் மகாகாசம் மேகாகாசம் என நான்கு ஆகாசங்களிருக்கின்றன அவற்றுள் ஜலாகாசத்திற்கும் மேகாகாசத் திற்கும் அபேதம் இல்லையாயினும் கடாகாச மகாகாசங்களுக்குப் பெயர் மாத்திரத்தால் பேதமுண்டு; பாரமார்த்தமாயில்லை, அங்ங னமே கூடஸ்தன் ஜீவன் பிரஹ்மம் ஈசுவரன் என நான்கு சேதன ங்களுண்டு அவற்றில் ஜீவனுக்கும் ஈசுவரனுக்கும் அபேதமில்லையாயி னும் அவற்றின் அதிஷ்டான லக்ஷியார்த்தமாகிய கூடஸ்தனுக்கும் பிரஹ்மத்திற்கும் பெயர் மாத்திரத்தில் பேதமுண்டு; பரமார்த்தமாக பேதமில்லை. இவை முதலியன உவமானப் பிரமாண வடிவ யுக்தி களாம்.

3. இங்கு நாநா வென்பது "சிறிதுமில்லை" என்றல் முதலிய சுருதிகளில் பேதம் விலக்கப்பட்டிருக்கின்றது அந்தப் பேத விலக்கு வாஸ்தவ அபேத முளதாயின் சம்பவிக்கும்; அஃதின்றிச் சம்பவியாது. ஆதலால் பேத நீக்கத்தினது அநுபபத்தி (பொருத்தமின்மை) யின் ஞானமாகிய அர்த்தா பத்திப் பிரமாணத்தால் ஜீவப் பிரஹ்மங்களின் அபேதத்தினது ஞானமாகிய அர்த்தாபாத்திப் பிரமை உண்டாகின்றது. இது முதலியன அர்த்தாபத்திப் பிரமாண வடிவ யுக்தியாம்.

## ஜீவப் பிரஹ்ம பேதத்தின் பாதக யுக்திகள்

1. ஜீவப் பிரஹ்மங்களின் பேதம் மித்தையாம்; உபாதியினுலாகியதா யிருத்தலால் கடாகாச மகாகாசங்களின் பேதத்தைப்போல ஏது மித்தையன்றே அது உபாதியினுலாகியதுமன்று எங்ஙன கட படங்களுக்கு வியவகார காலத்தில் பேதமுண்டு; அது உபாதியால் ஆனதன்று ஆதலால் மித்தையுமன்று. எதனுல் அது (ஜீவன்) இங்ஙனம் (சொரூபத்தால் பேத) மன்றே, அதனுல் மித்தையன்யென்பது மில்லையாம். ஈண்டு, பேதம் பட்சம்; மித்தியாத்தன்மை சாத்தியம்; உபாதித்தன்மை ஏது; இரண்டு ஆகாயங்களின் பேதமும் கடபடங்களின் பேதமும் உதாரணமாம்.

(2) ஜீவர்களின் பரஸ்பர பதம் கற்பிதம் ஆபாச சகித அந்தக்கர ரூப உபாதியினுலாகியனவா யிருத்தலின் நாநா கடாகர்சங்களின் பேதம் போல.

3. ஜீவஜடங்களின் பேதம் கற்பிதம் ஆபாச சகித அந்தக்கரண ஆபாசமின்றிய நாமரூபமய உபாதிகளாலாகியனவாயிருத்தலின்; சொப்பனத்திலுள்ள சராசரங்களைப் போல.

4. ஈசுவர ஜடபேதம் கற்பிதம்; ஆபாசசகிதமாயை நாமரூபமய உபாதிகளாலாகியனவாயிருத்தலின்; சாக்ஷி சொப்பனப் பிரபஞ்சத்தின் பேதத்தைப் போல.

5. ஜடஜடங்களின் பேதம் மித்தை நாமரூபமய உபாதியினுலாகியனவாயிருத்தலின்; கயிற்றில் கற்பித தண்டம் மாலை முதலியவற்றின் பேதத்தைப் போல. இது முதலியன அநுமானவடிவ யுக்திகளாம்.

1. பிம்பப்பிரதிபிம்பங்களின் பேதம் மித்தையாவது போல, ஜிவப்பிரமங்களின் பேதம் மித்தையாம்.

2. அநேக கடாகாசங்களுக்கு ஒன்றற்கொன்றுள்ள பேதம் மித்தையாவது போல சீவர்கள் ஒருவரோடு ஒருவர்க்குள்ள பேதம் மித்தையாம்.

| | |
|---|---|
| தியானம் பண்ணவுப் படுவன் | * நிதித்தியாசிக்கவும் (சிரவண மனனங்களால் விஞ்ஞாத (நிச்சய) மாயுள்ள அர்த்தத்தில் சாக்ஷாத் காரம் ஜெனிப்பதற்கு விஜாதீய விருத்திகளை விட்டு சஜாதீயவிருத் தியை நிரந்தரம் பரிசயம் செய்ய வும்) தக்கவன் |
| ஊக்கி அங்கு அவனை அறியவும் | மிகுந்த அன்பு செய்யத்தக்கவனுன ஆன்மாவை சிரவண மனனவிசார பூர்வகம் சாக்ஷாத்கரிக்கப்பட்ட அளவில் |

---

3. சொப்பன ஜவர்களுக்கும் சொப்பன கடமுதலியவற்றிற்கும் உள்ள பேதம் மித்தையாதல் போல, ஜிவசடங்களுக்குள்ள பேதம் மித்தையாம்

4. கயிற்றில் கற்பித சர்பப்த்திற்கும், அல்லது சாக்ஷி சேதனத் திற்கும் சொப்பனப் பிரபஞ்சத்திற்கும் உள்ள பேதம் மித்தையாதல் போல, ஜட ஜகத்திற்கும் ஈசுவரனுக்குமுள்ள பேதம் மித்தையாம்.

5. கயிற்றிற் கற்பிக்கப்பட்ட சர்ப்பம் தண்டமுதலியவற்றிற் காவது சொப்பன பதார்த்தங்களுக்காவது ஒன்றற்கொன்றுள்ள பேதம் மித்தையாதல் போல, ஜட பதார்த்தங்களுக் கொன்றற் கொன்றுள்ள பேதம் மித்தையாம். இவை முதலியன உபமானப் பிரணவடிவ யுக்திகளாம்.

3. மகாவாக்கியங்களில் சொல்லப்பட்ட ஜீவப்பிரஹ்மங்களின் அபேதம் யாதோ, அது தோற்றப்படுகின்ற பேதத்தின் மித்தியாத் தன்மையின்றிப் பொருந்தாததாய்ச் ஜிவப்பிரஹ்மங்களினது பேதத் தின் மித்தியாத் தன்மையைக் கற்பிக்கின்றது. இது முதலியன அர்த்தாபத்திப் பிரமாண வடிவ யுக்திகளாம்.

4. சாக்கிர சொப்பனங்களில் உபாதியிருத்ததால் ஜிவப்பிரஹ் மங்களின் பேதம் தோற்றுகிறது அங்ஙனமே சுழுத்தியில் உபாதி களில்லாமையால் பேதம் தோற்றுகிறதில்லை ஆதலால் ஜிவப் பிரஹ் மங்களுக்குப் பாரமார்த்திக பேதத்தின் அபாவமிருக்கின்றதென்னும் நிச்சயமுண்டாகின்றது. இது முதலியன அநுபலப்திப் பிரமாண வடிவ யுக்திகளாம், இப்படி அநுமானம் உபமானம் அர்த்தாபத்தி அநுபலப்தியாகிய நான்கு பிரமாணங்களும் மனனத்தில் உபயோக மென்பதறியவும். 259ஆம் பக்கம் பிரமை பிரமாணங்களைக் காண்க.

* அநாத்மாகார விருத்தியின் மறைப்பின்றிய பிரஹ்மாகார விருத்தியின் ஸ்திதி நிதித்தியாசனம்.

| | |
|---|---|
| ஒழிய இன்மையினுல் எல்லாம் அறிந்தது ஆம் | அவனிடத்தில் ஆரோபமும் அவ்வான்மா சேஷமாகப் பிரியமும் ஆகுமென்று முன்பே சொல்லப்பட்டதுமான) சர்வ ஜகத்தும் அவ்வான்மாவிற்குப் பின்னமாக இல்லாமையால் அறியப்பட்டதாம். 4 |

(அ – கை) இது (இவ்வாத்ம வைக்கிய ஞானத்தை கொண்டு தானே வெகுவித சம்சாரிகத்வ துக்கசாந்தி கூடுமாவென்ருசங்கித்து உபதேசிக்கின்ருர்.

மத்தமு றும்பிற விப்பகை மாளும்
முத்தியு முன்னிலே யாமுடி வில்லா
வெத்துய ருங்கெடு மின்பம தாகும்
அத்துவி தத்தைய றிந்தவ ருக்கே. 5

(இ – ள்)

| | |
|---|---|
| இன்பமது ஆகும் அத்துவிதத்தை அறிந்தவருக்கே | இன்பகரமான பரமாத்துவைத ஞானவாணுகிய புருஷனுக்கே |
| முடிவு இல்லாத எத்துயரும் கெடும் | தனக்கு வேருன துக்க வேதுக்களின்மையால் பவ பரபராச்சித (பரம்பரையாய் வந்த பிறவிகளிற் சம்பாதிக்கப்பட்ட) துக்க சமூகங்கள் நசித்துப்போம். |

[ துக்க ராசிகள் நசிப்பினும் சுவர்க்காதி சுகவேதுவான புண்ணிய மிருப்பதால் அதன் நிமித்தமாக வித்துவானுக்கும் ஏன்சம்சாரம் வாராது ? என்று சங்கித்துக் கூறுகின்ருர் ]

| | |
|---|---|
| மத்தம் உறும் பிறவிப் பகை மாளும் | உன் மத்தம் பொருந்திய சம்சார சத்துருவும் வித்துவானுக்கு நசித்தும்போம் |

[ வி – ரை ] அத்வைதப் பிரஹ்மான்ம வைக்கிய சாக்ஷாத்காரோத்தரகாலம் சகல புண்ணிய பாவங்கட்காசிரயமும் கர்த்திருத்வ போக்துருத்வாதிகளையுடையதுமாகிய

அந்தக்கரணத்திற்கு வேறுபட்ட தன்மையால் அதனால் உண்டுபண்ணப்பட்ட சுகதுக்க போக லக்ஷணமென்று மிலதாகும்.

| | |
|---|---|
| முத்தியும் முன்னிலை ஆம் | (சொரூப பூதமான நித்திய நிரதிசய அபரோக்ஷ அத்விதீய ஆனந்த ரூப) மோக்ஷமானது சுயமே பிரகாசிப்பதாம். 5 |

(அ – கை) இந்தப் பிரகாரம் மோக்ஷ சாதனமான அத்விதீய பரமானந்த ஆன்ம தெரிசனத்தைக் கூறி, யாதொரு பேத தெரிசனத்தைச் சுருதியில் நிந்தை கூறப் பட்டதோ அதைச் சங்கித்துக் கூறுகின்றார்.

பின்னமு றப்பிர மத்தைய றிந்தான்
றன்னையம் மெய்ப்பொருள் தள்ளும தன்றி
மன்னுமு டம்புவ சத்தொரு வாதிங்
கின்னவு லோகமெ னுமலி ழிக்கும். 6

(இ – ள்)

| | |
|---|---|
| பின்னம் உறப் பிர மத்தை அறிந்தான் தன்னை | தன்னினும் பின்னமாக பிராமணத்வ ஜாதியை அறிந்த புருஷனை |
| அம்மெய்ப் பொருள் தள்ளும் | வியாவகாரிக சத்தியமாயுள்ள அந்த பிராமணத்வ ஜாதியானது துக்க சுகங்களை அடையச்செய்யும் |
| அது அன்றி மன்னும் இங்கு இன்ன உலகம் எனுமல் | அஃதல்லாமலும் க்ஷத்திரியத்வ ஜாதியும் இந்த வுலகமும் ஒரு பொருளாக வையாமல் |
| ஒரு வாது உடம்பு வசத்து இழிக்கும் | நீங்காது தேகத்தினிடத்தே தள்ளும் (ஒழியாத சென்ன மரண சம்) சம்சாரத்தை தருமென்பதாம். 6 |

(அ – கை) பேத புத்திபெற்ற ஆன்மா, அடைந்துள்ள பசுவென்றும் பெயரின் தன்மையும் அப்பசுவடையும் பேதத் தன்மையும் இன்னின்னவெனக் கூறுகின்றார்.

அல்லாதில்லாப் பரந்தன்னி லயலா யறியும் படியயர்ந்து
பொல்லா தாகத் தறிவுபெறும் பசுவானவனைப் புத்தேளிர்
எல்லாமெல்லா வேதமும்பூ தங்களியாவு மிறத்தள்ளி
நில்லா நிற்கும் பேதத்தே நிற்பா னசிக்கை தப்பாதே. 7

(இ - ள்)

| | |
|---|---|
| அல்லாது இல்லாப் பரம் தன்னில் அயல் ஆய் அறியும்படி அயர்ந்து | தன்னையன்றி பரமார்த்தமாக வொன்றுமில்லாத பிரஹ்மத்தினின்றும் (தன்னை) பின்னமாகக் கருதும் படி மறந்து. |
| பொல்லாது ஆகத்து அறிவு பெறும் பசு ஆனவனை | கொடிதினுங் கொடிய தேகான்ம புத்தியையுடைய அஞ்ஞ புருஷனை |
| புத்தேளிர் எல்லா (மும்) எல்லா வேதமும் பூதங்கள் யாவும் இறத் தள்ளி நில்லா நிற்கும் | சர்வதேவர்களும் சர்வவேதங்களும் சர்வபூதங்களும் நாசமாகும் படி தள்ளிவிடும். |
| பேதத்தே நிற்பான் நசிக்கை தப்பாது | ஆதலால் பேததரிசியானவன் நாசமடைவது திண்ணமேயாம் 7 |

(அ - கை) தோற்று நின்ற பிராமண க்ஷத்திரியாதிகளை யெப்படியறியத்தக்கது என்று சங்கித்து அந்தச் சர்வத்தையும் ஆன்ம சொரூபமாகவே அறியத்தக்கது என்று சுருதியில் கூறிய அர்த்தத்தைக் கூறுகின்றார்.

மறையோ ரரசர் முதலான வன்னாச் சிரம மற்றுள்ள
பிறிவாய் நிகழு கின்றவெலாம் பிரமமென்று மேபிறிதால்
அறியா நிற்கு மறிவொன்று மல்லற் பிறப்பை யடைவிக்கும்
இறைதா ஞான நிலையெய்து மிரண்டுகாணா திருந்தக்கால் 8

(இ - ள்)

| | |
|---|---|
| மறையோர் அரசர் முதல் ஆன வன்னாச்சிரமம் | பிராமண க்ஷத்திரியாதி வர்ணங்கள் பிரஹ்மசாரியாதி ஆச்சிரமங்கள் |
| மற்றும் உள்ள பிறிவாய் | ஏனைய தேவகந்தருவாதிகள் பூத புவனங்கள் அஸ்தி நாஸ்தியென்னும் சத்தங்கள் ஈசுரசீவ உபாதிகள் பஞ்சபூதகாரணமான தமப்பிரகிருதி இத்தியாதி பேதங்களாய் |

| | |
|---|---|
| நிகழுகின்ற எல்லாம் பிரமம் ஒன்றுமே | விளங்கா நின்ற சகலமும் பிரஹ்ம சொரூபமான வொன்றேயாம் |

(பிரஹ்மத்தில் அத்தியஸ்தமானதால் சுத்தியில் வெள்ளி போல் அதிஷ்டானத்திற்கு அன்னியமாய் நிரூபிக்கக் கூடா மையின் அதிஷ்டானரூப அத்விதீயப் பிரஹ்மமொன்றே அறியத்தக்கதென்பதாம்.)

| | |
|---|---|
| பிறிதால் அறியா நிற்கும் அறிவு என்றும் அல்லல் பிறப்பை அடைவிக்கும் | பேதமாயறியும் ஞானம் எப்பொழுதும் துக்கரூப சம்சாரத்தைக் கொடுக்கும் ஹேதுவாகும். |
| இரண்டு காணுது இருந்தக்கால் இறை தான் ஆன நிலை எய்தும் | பேததிருஷ்டி யொழிந்து போனுல் பிரஹ்ம சொரூபமாய் நிலேத்த லாகிய மோக்ஷப் பிராப்தியாம். 8 |

(அ – கை) அத்விதீய பிரஹ்மான்ம வித்தையே சர்வ துக்க நிவர்த்திக்கும் நிரதிசயானந்தப்பிராப்தி லக்ஷண மான முத்திக்கும் சாதனமாகும் என்றும் உபதேசிக்கின்ருர்.)

அத்துவி தந்தானுமை விகற்பத்தை யடைந்த போதே
புத்தியி லிளைப்பும் போகும் போகுமிப் பிறப்பு நேரா
வெத்திகழ் வாலும் பேத மின்இமையா லிறையே யெண்ணுந் 9
தத்துவ வித்தே யென்றன் றலேயினுல் வணங்கத்தக்கான்

(இ – ள்)

| | |
|---|---|
| அத்துவிதம்தானும் அவிகற்பத்தை அடைந்தபோதே புத்தியில் இளைப்புப் போகும் | சத்தியஞான அனந்தானந்த ஏகரசமாய் சமஸ்தவுபாதிகளற்றதாய் சர்வவிவகாரங்களுக்கும் பரமாயிருக்கின்ற பிரஹ்மத்தைத் தானுகச் சாக்ஷாத்கரித்தபோதே சித்தத்திலுள்ள வருத்தமனைத்தும் நீங்கும். |

(சிரவணுதி ஜெனித பரவித்தையால் அவித்யா நிவர்த்திவாயிலாக சமஸ்தவிக்ஷேப வாசனுரகிதமான புத்திக்குப் பிரத்யக்ரூபப் பிரஹ்மத்தில் விஸ்ராந்தியுளதாம் அதுவே தன் சொரூபப்பிரதிஷ்டாரூப மோக்ஷாவஸ்தையாம்

(அதனுல்)

| | |
|---|---|
| இப்பிறப்புப் போகும் | இச்செனன (மரண) முள்ளபடி யொழியும் |

[அவ்வித ஞானியினது பிரபாவத்தையுபதேசிக்கின்ருர்]

| | |
|---|---|
| எத்திகழ்வாலும் பேதம் இன்மையால் | (கடபடாதி நாமரூப) எவ்வித விளக்கத்தாலும் பிரஹ்மத்தினு மன்னிய மின்மையால் |
| இறையே | ஈதனைத்தும் பிரஹ்ம சொருபமே யென்று |
| நேரா எண்ணும் | – சாக்ஷாத்தாக அறியா நின்ற |
| தத்துவவித்தே | (செகத்குருவாகிய) தத்துவ ஞானியே |
| என்தன் தலையினுல் | – எனது நான்கு சிரங்களினுலும் |
| வணங்கத்தக்கான் | பணியத்தகுந்தவனுகும் (பிரதிஷ்டை – இருப்பு) |

9

(அ – கை) இவ்வித அத்விதீய பிரஹ்மான்ம விஞ்ஞானத்தை ஏன் சர்வத்தராலும் சுலபமாக அறியவில்லை யெனச் சங்கித்து அதற்குக் காரணங் கூறுகின்ருர்.

வேதமா கம்பு ராண மிருதிகள் வேரு மார்க்கர்
ஓதுமா கமங்க டர்க்க மொன்றெடொன் ருெவ்வா தாகும்
ஈதெலா மொக்கப் பண்ண லாவதன் றிதய துக்கம்
ஆதலா லனைத்தும் விட்டிங்கனைத்துமாஞ் சிவத்தைப்
பார்ப்பான் 10

(இ – ள்)

| | |
|---|---|
| வேதம் ஆகமம் புராணம் மிருதிகள் | இருக்காதி வேதங்களும் சிவ விஷ்ணுவாதி ஆகமங்களும் புராணங்களும் பரராதிஸ்மிருதிகளும் |
| வேரும் மார்க்கர் ஓதும் ஆகமங்கள் தர்க்கம் | இதரமதஸ்தர்களாகிய அருகர் புத்தர்களால் செய்யப்பட்ட ஆகமங்களும் நியாயவைசேஷிகாதிகளால் சொல்லப்பட்ட தர்க்கங்களும் (பல ஸ்தூலசூக்ஷ்ம கேவலலௌகிகயுத்தியும்) |

| | |
|---|---|
| ஒன்றோடு ஒன்று ஒவ்வாதாகும் | (சாதாரண ஜனங்கட்கு) பரஸ்பர விரோத அர்த்தத்தை உண்டு பண்ணுவதாம் |
| ஈது எலாம் ஒக்கப் பண்ணல் ஆவது அன்று | இவைகளனைத்தையும் அவிரோதஞ் செய்வது ஒருவரால் முடிந்த தன்று |
| இதயதுக்கம் ஆதலால் | புத்திமான்களோ அவ்வித முயற் சித்தல்) சித்தவிக்ஷேபஹேதுவாம் ஆதலால். |

[ பிரதிபாதிக்கப்பட்டவக்கிய ஞானத்தை உபசம்மரிக்கின்றார்:]

| | |
|---|---|
| அனைத்தும் விட்டு | வெகுவித சுருதிஸ்மிருதி புராணாதி பரிசீலனம் சித்தவிக்ஷேபமெனப்) பரித்தியாகஞ் செய்து |
| அனைத்தும் ஆம் சிவத்தைப் பார்ப்பான் | (வேதாந்த மகாவாக்கிய ஜெனிதமான ஆத்மஞான முடையராய் எந்தெந்த வஸ்துக்கள் எந்தெந்த ரூபமாகப் பிரதீதியாகிறதோ) அவைகளனைத்தையும் (அவைகட்கதிஷ்டான ரூபமான அத்துவிதீயப்) பரசிவமென்றே பார்க்கத்தக்கது |

[ ஒன்றோடொன்று ஒவ்வாதாகு மென்பது – சீவித்திருக்
கும் வரை அக்கினி ஹோத்திரம் செய்யத்தக்கது என்றும்
கரும முதலியவற்றால் பயனில்லை துறவறந்தான் மிகச் சிறந்
தென்றும் இரண்டு பறவைகள் கூடிச் சகாக்களாகவிருக்
கின்றதெனவும் ஒருவனே தெய்வம் அவன் சகல பூதங்களி
லும் சூக்ஷ்மமாயிருக்கின்றான் எனவும் சுருதியாதிகள் கூறு 10
கின்றபடியினாலாம்.

கிருமிகீ டங்கண் மதியுடைத் ததனிற்
கிளர்ந்திடு பசுமதி யவற்றில்
நரர்மதி யுடையர் அவரினுஞ் சிலவர்
ஞானமிக் கிருப்பரன் னவரில்
அரியகந் தருவர் மதியினா லவரிற்
பெரியரே பிதிர்க்கள் வெவ்வேறு
வொருவருக் கொருவர் தாரதம் மியத்தால் 11
உணர்வினா லுயர்ந்தவ ருளராம்.

(இ – ள்)

| | |
|---|---|
| கிருமிகீடங்கள் மதி யுடைத்து | (பரிசவுணர்வுமாத்திரமுடைய விருக்ஷாதிகளைக் காட்டிலும் பரிச ரசவுணர்வுடைய இப்பி நத்தையாதிகள் மேலாம் அதிலும் பரிச ரசகந்தத்தையும் அறியும் கறையான் எறும்பாதிகள் மேலாம் அதிலும் பரிச ரசகந்த ரூபத்தையும் அறியும்) புழு வண்டு தும்பி முதலியன மதியுடையதாம். |
| அதனில் பசுமதி கிளர்ந்திடும் | அவற்றிலும் சப்தாதி ஐறிவுடைய விலங்கு (பறவை முதலியன) சிரேஷ்டமாம். |
| அவற்றில் நரர் மதி உடையார் | அவற்றினும் ஐயறிவோடும் ஆருவது அறிவாகிய பகுத்தறிவால்மனிதர்கள் சிரேஷ்ட புத்தியுடையவர்கள் |
| அவரினும் சிலர்கள் ஞானம் மிக்கிருப்பர் | அந்த மநுடர்களினும் சிலபேர் சரஸ்திரஞான பண்டிதராகிய புத்திவிசேஷமுடையவராய் இருப்பர் |
| அன்னவரில் அரிய கந்தருவர் பெரியர் | அவரினும் அரியகந்தருவர்கள் பிரக்ஞையையுடையவர்கள் ஆவர் |
| மதியினுல் அவரில் பெரியர் பிதிர்க்கள் | அவரினும் பிதிர்க்கள்புத்திவிசேஷமுடையவர்கள் ஆவார்கள் |
| ஒருவருக்கு ஒருவர் வெவ்வேறு தாரதம்மியத்தால் உணர்வினுல் உயர்ந்தவர் உளராம் | அவர்களினும் வேறு வேறும் பின்ன பின்னமாக தாரதம்மிய ஞானத்தாலும் மேம்பட்டவர்களாயிருக்கின்றூர்கள் 11 |

உள்ளபே ரெல்லா ரினுமுணர் வுடையீ
ரும்பர்கா ணீங்களுங் களினுன்
றெள்ளியே ஞவேன் மதியினு லென்னிற்
செனுர்த்தனன் சேதன ஞகும்
வெள்ளமே துயிலு மாலினு மரன்ருன்
மேதையாம் விளம்பிய வெவர்க்கும்
உள்ளமே மருவி யுணர்வளிக் கின்ற
சிவனியா ரினுமுணர் வுடையான் 12

(இ - ள்)

| | |
|---|---|
| உள்ளபேர் எல்லாரினும் உம்பர்காள் நீங்கள் உணர்வு உடையீர் | மேற்கூறிய யாவரினும் தேவர்களே நீங்கள் விசேஷப் பிரக்ஞையை உடையவர்களாவீர்கள் |
| உங்களில் நான் மதியினுல் தெள்ளியேன் ஆவேன் | உங்களைப் பார்க்கிலும் பிரஹ்மாவாகிய நான் விசேஷப் பிரக்ஞையுடையவன் ஆவேன் |
| என்னில் செனுர்த்தனன் சேதனன் ஆகும் | என்னிலும் திருமாலானவர்புத்தி விசேஷமுடையவராவர் |
| வெள்ளமேல் துயிலும் மாலினும் | திருப்பாற் கடலின் கண்அறிதுயிலமரா நின்ற திருமாலினும் |
| அரன்தான்மேதை ஆம் | திரிமூர்த்திகளிலொரு மூர்த்தியான ருத்திரர் அதிகப்பிரக்ஞையை உடையவராவர் |
| உள்ளமே மருவி உணர்வு அளிக்கின்ற | மனத்தின்கண் அந்தர்யாமியாகப் பொருந்திஞானத்தைகொடுக்கின்ற |
| சிவன் யாரினும் உணர்வு உடையான் | பரசிவனே யாவர்களினும் ஞானத்தையுடையவன் (சாக்ஷி ரூபமாயிருப்பனெனினும் ஆம்) 12 |

ஆதலா லறியு மறிவெலாங் கைவிட்
டறிவினுக் கறிவதாய் நின்ற
பேதமில் பிரம மொன்றுமே யறிவான்
பேறுபே ரின்பமாம் பிறத்தல்
சாதலற் றிருக்கு மதனையோர் வருத்த
மின்றியே சாரலா யிருக்க
வாதரித் தறியா ரற்பமே விரும்பி
யனந்ததுக் கத்திலே யமைவார் 13

(இ - ள்)

(கிருமிகீடாதி ருத்திரர் வரைக்கும் மேன்மேல் பிரக்ஞை அதிசயமாயிருத்தலால் சர்வக்ஞுத்தன்மை கூடாது அனவச்சின்னஞான ரூபனுன பரமேஸ்வரன் ஒருவனே சாக்ஷாத் சர்வக்ஞுன்) ஆதலால்.

| | |
|---|---|
| அறியும் அறிவு எலாம் கைவிட்டு | (முற்கூறிய சுருதி ஸ்மிருதியாதிகளை) அறியும்படியாயுள்ள அனாத்ம வித்தைகளையெல்லாவற்றையும் பரித்தியாகஞ் செய்து |
| அறிவினுக்கு அறிவதாய் நின்ற பேதம் இல் பிரமம் ஒன்றுமே அறிவான் | விருத்திஞானத்திற்கு மறிவாய் விளங்குகின்ற (சாக்ஷியாக விளங்குகின்ற) பேதரகிதமான பிரஹ்ம சொரூபத்தையே (தானாக) அறியத்தக்கது |
| ஓர் வருத்தம் இன்றியே சாரலாய் இருக்க | (பிரத்யகபின்ன பிரஹ்மஞானமானது மனோவியாபார வருத்த மாத்திரமாய்) அன்னியமாய் ஒரு சிரமமின்றி அடைவதாயிருக்கும் |
| பேறு பேரின்பமாம் பிறத்தல் சாதல் அற்று இருக்கும் இதனை | பெரும் பிரயோஜனமாயும் நிரதிசயானந்த வடிவமாயும் உற்பத்தி நாசமற்ற அம் மோக்ஷ ரூப பரமாத்மாவை |
| ஆதரித்து அறியார் | அவித்யாவாசனையால் மூடப்பட்ட திருஷ்ணையையுடைய சம்சாரிகள் வாஞ்சித்தறிகின்றாரில்லை |
| அற்பமே விரும்பி அனந்த துக்கத்திலே அமைவார் | பின்னையோ பரிச்சின்ன விஷய சுகத்தை விரும்பி (அவ்விஷய சுகங்களை அடையு நிமித்தமாக) முடிவில்லாத துக்கத்திற்படிவார்கள். |

(ஆதரித்து – அமைவார்) இந்த விஷயத்தில் ஒரு பொழுதும் சித்தத்தில் கொஞ்சமேனும் பயமுண்டாவதில்லை. அப்படியிருந்து மிச்சிக்கிறார்களில்லை தன் சொரூபத்திற்கு வேறாக பிரமாணமும், தர்க்கமுமில்லை, விரோதமுமில்லை. அப்படியிருந்து மிச்சிக்கிறார்களில்லை என்பது 36 முதலிய சுலோகார்த்தமாம்.)

(அ – கை.) இங்ஙனம் கூறிய பரமாத்வைதமான பொருளை சுருதியாதிகளும், ஈசுவராதிகளும் யுக்தியுடன் அநுபவமாகக் கூறியும் குதர்க்கவாதிகள் மட்டும் அனாதரித்தல் மாயையினுடைய பெருஞ் சாமர்த்தியமென்று பிரதிபாதிக்கின்றார்.

**வேதநூன் மிருதி புராணமத் துவித**
**மெய்மையே விளம்பமெய்த் தர்க்கஞ்**
**சாதியா நிற்கத் தத்துவ ஞானத்**
**தவருமிப் பொருளையே சார**

ஆதியாஞ் சிவனு ராயண னுனிங்
கறைந்தது மபேதமா யிருக்க
வாதியா மொருவர்க் கிதையனு தரித்தன்
மாயையி னுடையவல் லபமே. 14

(இ - ள்)

| | |
|---|---|
| வேதம் நூல் மிருதி புராணம் அத்துவித மெய்மையே விளம்ப | வேதங்களும், சாஸ்திரங்களும், ஸ்மிருதிகளும், புராணங்களும் (இதிகாசங்களும் ஆகிய இவை யெல்லாம்) அத்வைத சொரூபத்தின் சத்தியத்தையே பிரதிபாதிக்கவும் |
| மெய்த்தர்க்கம் சாதியா நிற்க | சுருதியனுசார மெய்யான தர்க்கமும் (பேதபாதக அபேதசாதகத்தையே) நிகமனஞ் செய்யவும். |
| தத்துவ ஞானத்தவர் இப்பொருளேயே சார | தத்துவ (பிரஹ்ம) நிஷ்டர்களும் இந்த அத்விதீயப் பொருளையே அநுபவமாயடைந்து கூறவும் |
| ஆதியாம் சிவன் நாராயணன் நான் இங்கு அறைந்ததும் அபேதமாய் இருக்க | ஆதியாயுள்ள சிவபிரானும், மகா விஷ்ணுவும், பிரஹ்மாவாகிய நானும் இவ்விடத்துபதேசித்த ஆகமம் கீதையாதிகளும் அத்விதீயத்தையே பிரதிபாதிக்கவும் |
| வாதியாம் ஒருவர்க்கு | (சாங்கியராதி குதர்க்க பேத)வாதிகளுக்கு |
| இதை அனுதரித்தல் | இந்த அத்வைதத்தை அனுதரஞ் செய்தல் (உபேக்ஷித்தல்) |
| மாயையின் உடைய வல்லபமே | *மாயையாலுண்டாகிய சாமர்த்தியமென்று புத்திசாலிகளால் மதிக்கத் தக்கது 14 |

* சர்வ சுதந்திர சாம்ராஜ்ய மெய்யுணர்வென்னும் அரச சமூகத்தில் வாதிகள் வாதமிடத் தொடங்கினர். முதலில் சித்தாந்தி ; ஒருவன் தனது எதார்த்த சொரூபத்தை அறியாத அஞ்ஞானத்தினுல் தேகமும், தேகத்தில் நானென்ற அபிமானமும் உண்டானபின் ஈசுவரன் வேறென்றும் காணப்பட்ட உலகம் சத்தியமென்றும் தோற்றுவதாம். திருஷ்டாந்தம்

இப்பியில் வெள்ளிபோல் மித்தையாம். இதில் சுருதி யுக்தி அனுபவமும் பொருந்துவதாம் எனக் கூறினர். பின்னர் சூனியவாதி இப்பியில் இல்லாத வெள்ளி தோற்றுவதுபோல் என்றுமில்லாத சீவேசுர செகத்து தோற்றுமென்றனர். அதன்பின்னர் விஞ்ஞானவாதி புத்தியிலுள்ள வெள்ளியே இப்பியில் தோன்றுவதுபோல் புத்தியிலுள்ள சீவேசுர செகத்து வெளியில் தோற்றுவதாம் என்றவுடன் நியாயவை சேடிகர்கள், கடையில் அல்லது காந்தையின் கரத்திலுள்ள வெள்ளியே இப்பியில் வந்து தோஷத்தோடு கூடிய நேத்திரத்திற்குத் தெரிவதுபோல சீவேசுர செகத்து தோன்றுமென்றனர் சிந்தாமணிக்காரர். இப்பியின் இதுவென்ற ஞானமும் வெள்ளியைக்கண்ட சமஸ்கார ஞானமும் தோஷத்தினுல் வெள்ளியாகத் தோன்றுமென்றனர். அதன்பின்னர் சத்கியாதிவாதிகள் (முப்பொருள் சத்தியமெனக் கூறுவோர்) இப்பியில் எப்படி இப்பி அவயவம் சத்தியமோ அப்படி இப்பியில் தோற்றும் வெள்ளியின் அவயவமும் சத்தியமாம். அத்தியாச சாமக்கிரியா தோஷத்திஞலே இப்பியின் அவயவம் தோன்ருமல் வெள்ளியின் அவயவம் தோன்றுகின்றது. அத்தியாசம் நீங்கி இப்பி தோன்றும்போது வெள்ளி அவயவம் ஒடுங்கியிருக்கின்றன ஆனதால் இவ்விரண்டவயவங்களும் சத்தியமே என்று தர்க்க வல்லமையால் 3 நாள் பரியந்தம் வாதமிட்டு இப்பியிலுள்ள வெள்ளியும் சத்தியம் சீவேசுர செகத்தின் பேதமும் சத்தியமென வெற்றி கொண்டனர். இதை அறிந்த சர்வஞ்ஞனுகிய அரசன் கூறினன் வாதிகளே நீங்கள் வெற்றிகொண்டபடி அந்த இப்பியிலுள்ள வெள்ளியே உங்களுக்கு சம்பாவனையாக கொடுக்கப்படுமெனத் தீர்ப்புக் கூறினர். அதைக் கேட்டு வெட்கி வீடு திரும்பின பேதவாதிகளைப்போல் சீவேசுர செகத்தின் பேதம் சத்தியமென்று கூறி புருஷார்த்த மோசம் போகாமல் சுருதி, யுக்தி, அனுபவத்தில் தெளிந்த பெரியோர்களிடத்தில் கேட்டுத் தெரிந்துகொண்டு 1 நிமிடம் அல்லது 3 நிமிடம் அல்லது 5 நிமிடம் ஆவது மௌனமாயிருந்து பார்த்தால் சீவேசுர செகத்தின் இருப்பும் அதனது

(அ-கை) ஆதலால் சர்வ பிரகாரத்தாலும் அத்வைதமே வாஸ்தவமென்று உபசம்மரிக்கின்றார்.

கனகமத பேதம் வேறு கடகமகு டாதி போல
அனியவடி வால நேக மறிவுநிலை யால பேதம்
எனவுமுரை யாடு வாரு மிதய மிலர் ஞானவீனர்
எனையநிகழ் வாலு மீச னென நினைகு வானவ் வீசன் 15

(இ - ள்)

| | |
|---|---|
| கனகமது அபேதம் கடகம் மகுடாதி வேறு போல் | சர்வபூசணங்களும் சொர்ணரூப சாமான்ய வடிவத்தால் அபேதமும் கங்கணம், கிரீடம் முதலிய விசேஷ ரூபத்தால் பேதமும் ஆவனபோல் |
| அறிவு நிலையால் அபேதம் எனவும் | சேதனரூப சாமான்ய ரூபத்தால் அபேதமாமெனவும் |
| அனிய வடிவால் அநேகம் (எனவும்) உரை ஆடுவாரும் | (சர்வஜகத்தும்) ஆகாசாதி விசேஷ ரூபத்தால் பேதமுமாம் (எனவும்) ஒன்றுக்கொன்று விரோதமான துவிதாத்விதங்களோரிடத்திலிருக்கின்றதென்று சொல்கின்றார்கள். |
| இதயம் இலர் ஞான ஈனர் | விவேகபுத்தியில்லாதவர்களும் அதனால் எதார்த்த ஞானமற்றவர்களுமாவார்கள் |
| ஈசன் என நினைகுவான் அவ்வீசன் | (அனைத்தும்) சச்சிதானந்த அகண்ட பிரஹ்மமே விளங்குகின்றதென நிரந்தரம் சிந்திப்பவன் அப்பிரஹ்மமே ஆவான் 15 |

(அ – கை) அபேதமே பரமார்த்தம் ஆதலின் துவித மதத்தைக் கண்டித்துக் கூறுகின்றார்.

பலவடிவு வேறு பாடு பகரும்வெறு மூட ரான
புலையரொடு கீட மோடு புழுவினொடு வாசி யேது
சொலவிலுல காகும் வேறு துணிவிலுணர் வேயெ லாமெ
னிலகுமதி பேற தாகு மிறைவனடி பேண லாலே. 16

---

பேதமும் உண்மையா அல்லது அத்வைதம் உண்மையா என்பது தனக்குத்தானே விளங்குமென்பதை அறிந்து அனுபவிக்கப்படுமென்பது சித்தம்.

(இ - ள்)

| | |
|---|---|
| பல வடிவும் வேறுபாடு பகரும் வெறும் மூடர் | காரிய காரணங்களான பல வடிவங்களையும் அத்தியந்தம் பேதமென்று கூறுநிற்கும் சுத்த மூடர்களாகிய சத்கியாதி சாங்கிய வைசேஷிகாதிகள் |
| ஆன புலையரொடு கீடம் ஓடு புழுவின் ஓடு சொல வாசி ஏது இல் | ஒழுக்கவீனரான நீசரோடும் வண்டோடும், கிருமிகளோடும் (சமானமேயல்லாமல்) விசேஷம் யாது கூறற்குளது இல்லை (மற்றூகடங்களேயாவர் அவர்கள்) |
| வேறு ஆகும் உலகு எலாம் | விவகாரத்தில் பேதமாகும் இவ்வுலகனைத்தும் (பரமாத்தமான ஞானிகளுடைய) |
| துணிவில் உணர்வே இலகும் என்மதி | சிந்தாத்தத்தில் சேதன ரூபப் பிரஹ்மமாகவே விளங்கா நிற்கும் என்கின்ற ஞானமானது |
| இறைவன் அடி பேணலாலே பேறது ஆகும் | பரமேஸ்வரனது திருவடிகளை தியானித்தலினால் (மல விக்ஷேப நீக்கவாயிலாக நிர்க்குண சொரூபத்தில் மனம் நிலைத்ததால் முத்தியாகிய) பிரயோஜனத்துடனுமுண்டாகும். (என்பது என் தீர்மானம்) |

16

(அ - கை) சர்வப்பிரகாரத்தாலும் அத்வைதமே உண்மையெனக் கூறுகின்றார்.

தேசிக னளித்த வழியினா லையந்
தீர்ந்துசிற் சடத்திகழ் வெல்லாம்
ஈசனாய்ப் பார்ப்பா னிப்படிப் பார்க்கு
மிதனையு மிறையெனப் பார்ப்பான்
நேசமோ டிங்கன் பார்ப்பவன் பார்வை
தன்னையும் நிகழ்ந்திடா துள்ள
தேசிகந் திகழுஞ் சின்மய மாகிச்
சின்மய மென்கையு மிலையே

17

(இ – ள்)

| | |
|---|---|
| தேசிகன் அளித்த வழியினால் ஐயம் தவிர்ந்து | சற்குருவானவர் உபதேசித்துத் தெரிவித்தமார்க்கத்தால் (பிரமாணகதபிரமேயகத) சந்தேகமும் (விபரியயமும்) தீர்ந்து |
| சிற்சடம் திகழ்வு எலாம் | சேதனு சேதனமாக விளங்காநிற்கும் நாமரூபப் பிரபஞ்சமனைத்தும் |
| ஈசனாய் பார்ப்பான் | பிரஹ்ம சொரூபமாத்திரமாகப் பார்க்கத்தக்கது |
| நேசமொடு இங்ஙன் பார்ப்பான் | பிரியத்தோடு மிவ்விதம்(அத்விதீய பிரஹ்மான்மாபேதஞான பலத்தால் அதற்கு வேருகத் தோற்ருநின்றதோற்றமனைத்தும் பிரஹ்மமாகவே) பார்ப்பவனாகிய (இந்தச் சற்குருநாதனாகிய வித்வான்) |
| பார்வை தன்னையும் | – பார்வை ரூபமான திருஷ்டியையும் |
| நிகழ்ந்திடாது | விடுத்து (தேற்றும் பொடிசேறுடனீங்குவது போனீங்க) |
| உள்ள தேசிகம் திகமும் சின்மயம் ஆகி | என்றுமுள்ளதாயும் பிரகாசமாயும் விளங்காநின்ற சேதனரூபமாய் அவசேஷித்து (பரமார்த்தமாக அவசேஷப்பிரதியோகியின் அபாவத்தால் |
| சின்மயம் என்கையும் இலையே | சேதனமாய் அவசேஷித்தோம் (மிஞ்சுகிரேம்) என்பதையும் விடுத்து என்பதாம் |

(அனுத்மாவின் கண்ணுள்ள ஆத்மசம்பந்தத்திற்கு அனுத்மாபிரதியோகி பரமார்த்தமாக அனுத்மா இன்மையினுல் சம்பந்தமுமில்லை சம்பந்தாதீனமான பிரதியோகியுமில்லை என்பதாம். (பிரதியோகி இரண்டாவது பொருள்)

51. ஜகத்தின் தோற்றத்தை வைத்துக்கொண்டு (அது இருப்பதாக அபேக்ஷித்து) சுருதிபிரியஹேதுவான கர்மத்தை இங்கு கூறுகிறது (அதனுல் ஜகத் சத்யமாகாது) ஜகத் தோற்றமில்லை சுருதியும் பிரியகரமான கர்மத்தைச் சார்ந்தில்லை யதார்த்தமாக யாதொன்றுமில்லை.

52. இந்தவிமலபுத்தியுண்டானுல் அவன் சிவனே அந்த மகானுக்கு ஒரு கருமமுமில்லே கருமமிருந்தால் அந்த மனிதன் பசுவே.

53. இந்தப் பரமயோகிக்கு பிறப்பு மரணமில்லே போக்குவரவில்லே மலம் விமலமில்லே அறிவு (அறியாமை) என்பதுமில்லே இதெல்லாம் சிவமாக வெகுதெளிவாக விளங்கும். (மொழி பெயர்க்காமல் விடுபட்ட மூலார்த்தமாகுமிது 16-17ம் பாடலின் மத்தியிலிருப்பதாகும். 17

(அ - கை) ஞானத்தைக் கூறி ஞானுனுபவத்தைக் கூறுகின்ருர்.

ஒழிவிலாப் பரம யோகிய ரனுபவ
முள்ளவா றுரைத்திட வெனக்கோர்
வழிபெறே னெடுமான் மகேசன்மா முனிவர்
வானவ ருரைத்திட மாட்டார்
விழிமிகுஞ் சிவனுல் விஞ்சையாஞ் சிவையால்
விளம்பிடப் படாதது விளம்பும்
மொழியெலாம் வந்து மோனபா வத்தே
முடியுமன் னிலமதே முடிவு. 18

(இ - ள்)

| | |
|---|---|
| ஒழிவு இலாப் பரம யோகியர் அனுபவம் | நிரந்தரம் பிரஹ்மாப்பியாசஞ் செய்த மேலான ஞானிகளது அநுபவத்தை |
| உள்ளவாறு உரைத்திடயானேர் வழி பெறேன் | எதார்த்தமாகக் கூறயானேர் மார்க்கத்தை யடையமாட்டேன் |
| நெடுமால் மகேசன் மாமுனிவர் வானவர் உரைத்திடமாட்டார் | மாவலிபான் மண்ணளந்தமாயோனும் சர்வசம்மார ருத்ரனும் பெருமைமிக்க முனிவர்களும் அஜராமரணதேவர்களும் கூறமுடியாது |
| விழிமிகும் சிவனுல் | விசேஷ ஞானத்தோடு கூடிய பரசிவனுலும் |
| விஞ்சையாம் சிவையால் | பிரஹ்மவித்யா சொரூபியாகிய பரசிவையினுலும் |

| | |
|---|---|
| அதுவிளம்பவும் படாது | அவ்வநுபவம் கூறமுடியாது (ஏனெனில்) |
| விளம்பும் மொழி யெலாம் வந்து மோன பாவத்தே முடியும் அந் நிலமதே முடிவு | சொல்லா நின்றவாக்குகளெல்லாம் வந்து மௌன பாவத்தே முடிந் துள்ளதாகிய அந்தப் பூமியே முடிந்த அநுபவமாம். 18 |

(அ – கை) அந்தியப்பிரதிபாதிதமாயுள்ள அர்த்தத் தைத் தெரிவித்து உபசம் மரிக்கின்ருர்.

இப்படிக் கருணையா லியம்பி னேனெல்லா
மப்பழ மறையெலா மறிய வோதுவ
தொப்பற நானுமக் குரைத்த வீதெலாஞ்
செப்பறு மறையதின் சேட மாகுமே. 19

(இ – ள்)

| | |
|---|---|
| அப்பழமறை எலாம் ஓதுவது எல்லாம் | அந்தப்பழமையான வேதங் களனைத்தும் அறியும்படி பிரதி பாதித்த அருத்தங்களனைத்தும் |
| இப்படிக் கருணையால் இயம்பினேன் | இந்தப்பிரகாரம் கிருபையினலே உங்களுக்கு உபதேசித்தேன் |
| ஒப்பற நான் உமக்கு உரைத்த ஈது எலாம் | நான் சமான ரகிதமானவுங்களுக்கு உபதேசித்த இவைகளனைத்தும் |
| செப்பறும் மறையதின் சேடம் ஆகும் | கூறற்கரிய சுருதியின் சேஷமான (சிறிது) அருத்தமாம் (சுருதி சர் வார்த்தத்தையும் போதிக்கின்றது என்னுடைய வாக்கியமோ அதின் ஏகதேசமாகிய பிரகதாரணிய உப நிஷதாதி சாரமாத்திரம் ஆம் ஆத லின் அதின்சேடமென்பதாம்.) |

இது கவிநாயகர் வாக்கியம்

உரையா டுவதித் தகைமைத் தெனவோர் குறியுண்டாம்
பொருள்பா லன்றே பூரண மாயோர் வேறில்லாச்
சொருபா னந்தன் றிருமேனியெனச் சொலவன்றே
விரையார் கமலத் தவன்மெய் பாரா வியவுற்ருன். 20

(இ - ள்)

| | |
|---|---|
| இத்தகைமைத்து என உரை ஆடுவது ஓர் குறி உண்டாம் | இவ்விதத் தன்மையை யுடைய அநுபவ மாமென்று கூறுவது ஓர் அடையாள மிருக்கின்றது |
| பொருள்பால் அன்று | (அதுவும்) வேறு பொருளிடத்தலவாம் |
| பூரணம் ஆய் ஓர் வேறு இல்லாச் சொரூபானந்தன் திருமேனி எனச் சொல | அகண்ட பரிபூரணமாயும் ஒப்பற்றதாயும் பேதரகிதமாயும் இராநின்ற பிரஹ்ம சொரூப மென்று கூற |
| அன்றே விரை ஆர் கமலத்து அவன் | அந்த க்ஷணமே வாசனை பொருந்திய கமலாசனராகிய பிரஹ்ம தேவர் |
| மெய்பாரா வியவு உற்றார் | உண்மையை யுணர்ந்தவராய் (அல்லது) சரீரத்தைப் பாரமல் ஆச்சரியமடைந்தார். |

(பொருள் பால் இத்தகைமைத் தென உரையாடுவது ஒரு குறியுண்டு ஆம் அன்றே - பொருளினிடத்து சொல்லும்படியான குறியில்லையென்பதாம் பின்னையோ பிரஹ்மமெப்படியோ அப்படித்தானிருக்கின்றது என்பது குறியாம்) 20

9-வது பிரகதாரணிய உபநிஷத்தில் மைத்திரேயப் பிராமணார்த்தம் உரைக்கும் அத்தியாயம் சம்பூரணம் ஆக திருவிருத்தம் (440)

சற்குருநாதன் துணை.

## பத்தாவது அத்தியாயம்

(அ - கை) பூர்வாத்தியாயத்தில் அத்விதீய ஆன்ம விஞ்ஞானமும் அதன் சாதனங்களும் கூறப்பட்டது இதில் (உஷத்தங் கார்க்கி யந்தர்யாமிப் பிராமணங்களால்) அதன் விஷயமாகிய பரமாத்ம லக்ஷண மெத்தன்மையதெனச் சங் கித்துக் கூறுகின்றார்.

(இது கவி நாயகர் வாக்கியம்)

நாத னார்சொரு பானந்த னுண்மலர் பாதம்
போத மேயெனும் பரிசுபுத் தேளவர்க் கெல்லா
நேதி நேதிசெய் திப்பரி செனநிகழ்த் திடுவான்
வேத நாலுநான் முகத்தினல் விளக்கிய விதாதா. 1

(இ - ள்)

| | |
|---|---|
| வேதம் நாலும் நான் முகத்தினல் விளக்கிய விதாதா | நான்கு வேதங்களையும் நான்கு முகங்களால் உபதேசித்துத் தெரி வித்தருளிய பிரஹ்மாவானவர் |
| நாதனார் சொரூபானந் தன் நாள் மலர் பாதம் போதமே எனும் பரிசு | ஆனந்த சொரூபமாகிய பிரஹ்மம் ஞானமே யெனும் தன்மையை |
| புத்தேள் அவர்க்கு எல்லாம் நேதி நேதி செய்து | சர்வ தேவர்களும் தெரிந்து கொள் ளும்படி தேகாதிகளை இதுவன்று இதுவன்று என்றும் அதத்வியா விருத்திவாயிலாக |
| இப்பரிசு என நிகழ்த் திடுவான் | இத்தன்மைத்தென விளங்கும்படி உபதேசிக்கலுற்றார். |

(குருவின் பதமமைய பிரஹ்மத்தைக் கூறினர். குருவின் ஞாபகார்த்தமென்பது பொருள்.) 1

(அ - கை) அதில் யாக்கியவற்கியரைக் குறித்து உஷஸ்தர் எந்த வஸ்து சாக்ஷாத் அபரோக்ஷமாயுள்ள பிரஹ்மம், யாதோர் ஆன்மா சர்வாந்தரமாயுளன், அவனை என் பொருட்டு அநுக்கிரகிக்க வேண்டும் என்ற பிரசினத்

திற்கு இவன் நின் ஆன்மா என்று அபினயத்தால், சுவானு பூதியால் அடையத்தக்க ஆன்ம விஷயமான உத்தரம் உப தேசிக்கப்பட்டிருக்கின்றது அவ்வித பிரசிஞேத்தரங்களால் சித்தமாயுள்ள அர்த்தத்தைச் சங்கிரகித்துக் கூறுகின்ருர்:

எப்பொருள் களுக்குஞ் சான்ரு யார்க்குமுள் ளாகி யென்று
மெய்ப்படு தன்தே சாலே விமலமாய் விளங்கா நின்ற
தெப்பொருள் எல்லா மாகி யெங்கணு நிறைந்து நின்ற
அப்பரம் பிரம நேரே யழகுற வறிய லாகும். 2

(இ – ள்)

| | |
|---|---|
| எப்பொருள் எப் பொருள்களுக்கும் சான்ருய் | எப்பரமாத்ம வஸ்துவானது சர்வ பதார்த்தங்களுக்கும் சாக்ஷியாயும் |
| ஆர்க்கும் உள்ளாகி | சர்வ காரிய காரண சங்காதங் களுக்கும் ஆந்தரமாய் |
| என்றும் மெய்ப்படு தன் தேசலே | எப்போதும் எதார்த்தமாகப் பொருந்திய சொப்பிரகாசத் தன்மையிஞலே |
| விமலமாய் விளங்கா நின்றது அப்பரம் | நிர்மலமாய் விளங்கா நிற்பது எதுவோ அதுவே சர்வ பிரத்தியக் பூதமான ஆத்மாவாகும் |
| எல்லாம் ஆகி எங்க ணும் நிறைந்து நின்ற | (அவ்வாத்மாவே) சர்வ கதமாயும் சர்வத்தரசம்பூரணமாயிருப்பது |
| நேரே அழகு உற அறியலாகும் பிரமம் | (சுருதிப் பிரசித்தமாய்) சாக்ஷாத் அபரோக்ஷமா யறியும்படியாயுள்ள பிரஹ்மமாம். |

(இவ்வாறு * சொரூப லக்ஷணங் கூறப்பட்டது) அபி னயம் சம்ஞை. அது உள்ளே இருக்கும் அபிப்பிராயத்தை வெளியிற்றெரிவிக்கும் குறியாம்.) 2

* எப்போது மிருப்பதாய் எது வேறு பிரித்தறி விக்கின்றதோ அதனைச் சொரூப லக்ஷண மென்பர். அது உஷ்ண கிரணங்களு டையவன் சூரியன் எனல்போல் சச்சிதானந்த வடிவ பிரஹ்மம் நீ என்பதாம்.

(அ – கை) இவனே நின் ஆன்மா என்று அபிநயத்தோடு நிருபாதிக ஆன்மசொரூபமுபதேசிக்கப்பட்டது அவ்வித வுபதேசார்த்தத்தை யறியாதவராகிய உஷஸ்தருக்குப் போதிக்கும் பொருட்டு யாவரொருவர் பிராணனாலே பிராணாதி வியாபாரத்தைச் செய்கின்றார் என்று ஆரம்பித்து மூலசுருதியில் யாதொரு தடஸ்தலக்ஷணஞ் சொல்லப் பட்டதோ அதைச் சங்கிரகித்துக் கூறுகின்றார்.

இந்தப் பிராணா பானாதி யாரா லுண்டா யியங்குவதிங்
கெந்தப் புருடன் முன்பாக வெல்லா மியங்க வற்றாகுங்
தொந்தப் படவெத் தொழிலுஞ்செய் தேவன் றொழிலற்
றிருக்கின்றா
னந்தப் பரனே யாவர்க்கு முள்ளா மான்மா வாகின்றான். 3

(இ – ள்)

| | |
|---|---|
| இந்தப் பிராணா அபானாதி யாரால் உண்டாய் இயங்குவது | (பேதப்பிரதீதி யாகின்ற) இப்பிராணா பானாதி காரிய காரண சங்காதங்கள் தாரு எந்திரம் (ஏற்றம்) போல் சுபாவிகமாய் அசேதனமாயுள்ளவைகள்) யாதொன்றின் வசத்தால் சத்தாஸ்புரண (இருப்பு விளக்க) மாய் விளங்குகின்றதோ |
| இங்கு எந்தப் புருடன் முன்பாக எல்லாம் இயங்க வற்றாகும் | இப்பிராணாபானன் முதலியவனைத்தும் எந்தப் புருடன் சன்னிதான மாத்திரத்தால் (அயக்காந்தம் போல) சேட்டிக்க வல்லனவோ. |
| தொந்தப் பட எத் தொழிலும் செய் தேவன் தொழில் அற்று இருக்கின்றான் | (அக்காரிய காரண சங்காதங்களான பிராணாபானாதி சேட்டைகளிருந்தாலும்) எவன் நிருபாதிக அசங்க சின்மாத்திரனாய் அச்சங்காதகிருத (செய்த) புண்ணியபாவ கர்மங்களால் சங்கமற்றவனாகவே யிருக்கின்றானோ |
| அந்தப் பரனே யாவர்க்கும் உள்ளாம் ஆன்மா ஆகின்றான் | அந்தப் பரவஸ்துவே சர்வாந்தர ஆத்மதத்துவ லக்ஷணமுடையவனாக முன்னர் கூறிய ஆத்மாவாவன் 3 |

உடம்போ தானன் றுடம்பீதென் றுணரப்படுத லாலுடம்பிற்
றிடஞ்சேர் பிராணு தியுமன்று செடமாக் காணுஞ்
செய்தியினுற்
கடம்போ லியாவ னிவையனைத்துங் காண்பா னவனே
கர்த்தாவாய்
நடஞ்சேர் உடம்பி னுண்ணின்று நடத்துகின்ற நாணுவான் 4

(இ - ள்)

| | |
|---|---|
| தான் உடம்போ அன்று | (அகம்பிரஹ்மாஸ்மி என்பதாதி மகாவாக்கியங்களில் பிரத்யக்கர்த்தவாசகமாய் சொல்லப்பட்ட அகம் என்னும் பதத்திற்கு சர்வாந்தரராய் சர்வபிரத்யக் பூதராய்ச் சொல்லப்பட்ட) ஆன்மாவே முக்கியார்த்தமாம் (கடம்போல சடமாகலின்) சட்கோசமான தூல சரீரம் முக்கியார்த்த மன்றும் |
| உடம்பு இது என்று உணரப்படுதலால் | தூலசரீரமானது (கடம்போல அசேதனமாய்த்திருசியமாதலால் அதைதிருஷ்டாவாக விருந்து எவன் அறிகின்ருனே அவனே சர்வாந்தரனுன ஆன்மா |

[இந்தப்பிரகாரம் தூலசரீரத்தைக் காட்டிலும் ஆந்தரத்துவத்தை பிரதிபாதித்து லிங்கசரீரத்தைக் காட்டிலும் ஆந்தரத்துவத்தைப் பிரதிபாதிக்கின்ருர்.]

| | |
|---|---|
| உடம்பில் திடம் சேர் பிராணுதியும் | உடம்பில் திடமாயுள்ள பிராணுபாணுதி பஞ்சவாயுக்களும் ஞானகர்மேந்திரியங்களும் மனமும் புத்தியுமாகிய இந்தப் பதினேழின் வடிவான லிங்கசரீரமும் |
| கடம்போல் செடமாய்க் காணும் செய்தியினுல் அன்று | கடம்போல் பூதகாரியமாய் திருசியமாய் தோன்ரு நின்ற நியாயத்தால் ஆன்மாவல்ல |
| இயாவன் இவை அனைத்தும் காண்பான் அவனே | இக்காரிய காரண சங்காதங்களனைத்திற்கும் திருஷ்டாவாகிய அவனே |

| | |
|---|---|
| கர்த்தாவாய் நடம்சேர் உடம்பின் உள் நின்று நடத்துகின்ற நான் ஆவன் | கர்த்தனாய் விவகார சம்பந்தியான சர்வ சரீரங்களுக்கும் ஆன்மாவாய் நின்று சகல விவகாரங்களையும் நடத்தா நின்றவன் ஆன்மா வாவன் |

(என்பதாக *தடஸ்தலக்ஷணமாய் நிருபாதிக பிரஹ்ம சொரூபம் பிரதிபாதிக்கப்பட்டது.)

(அ – கை) "திருஷ்டிக்கு திருஷ்டா" என்பது முதலிய சுருதியிற் சாக்ஷாத்தாக வந்த சொரூபம் கொம்புப் பிடியாய்ச் சுவப்பிரகாச சிதான்ம லக்ஷணமென லக்ஷிப்பிக்கப் (அறிவிக்க) பட்டதோ அதை சங்கிரகித்துக் கூறுகின்றார்.

வினவுற்ற கேள்விக்குச் கேட்பா னாகி
மேவியகாட் சியில்விழித்துக் காண்பா னாகி
மனனத்தின் மந்தாவாய் ஞானந் தன்னின்
மதித்திடுஞா தாவாகி மன்னு கின்றான்.
சொனவத்தற் பரனாகு மவனில் வேறாந்
தோற்றமெலா மெய்யான தோற்ற மன்று
நினையிற்றற் பரனையிங் கெல்லா மென்று
நினைவதுவே நினைவான நினைவு நேரே. 5

(இ – ள்)

| | |
|---|---|
| வினவுற்ற கேள்விக் குக் கேட்பானாகி | முற்கூறிய சர்வாந்தரமாகிய ஆன் மாகேட்கின்ற சுருத்திக்கு (செவிக் குச்) சுரோதாவாகியும் |
| மேவிய காட்சியில் விழித்துக் காண்பான் ஆகி | பொருந்தா நின்ற திருஷ்டிக்கு (நேத்திரத்திற்கு) நன்றாய்ப் பார்க் கும் திருஷ்டாவாகியும் |
| மனனத்தின் மந் தாவாய் | சங்கற்பவிகற்பமான மனத்திற்கு மனனிக்கின்றவனாய் |
| மதித்திடு ஞான ந் தன்னின் ஞாதாவாகி மன்னுகின்றான் | நிச்சயரூபமான புத்திக்கு நிச்சயிக் கின்ற விக்ஞாதாவாயுமிருக் கின்றான் |

* ஓர் காலத்திருப்பதாய் வியாவர்த்தகமா (வேறு பிரித்தறிவிப் பதா) கின்றதோ அதனைத் தடஸ்தலக்ஷணமென்பர் அது சாகை யைக்காட்டிச் சந்திரனைக் காட்டல்போல் ஜெகத் காரணம் பிரஹ்ம மென்பதாம்.

| | |
|---|---|
| சொனஅத்தத்பரனு கும் அவனில் வேறு ஆம் தோற்றம் எலாம் மெய்யாகும் தோற்றம் அன்று | முற்கூறிய சர்வாந்தரனுகிய ஆத்மாவினும் வேருன காரிய காரணமாகிய பூதபௌதிக வடிவ தோற்றங்களனைத்தும் (அத்தியஸ் தமாதலால் வியாவகாரிகதசையில் சத்தியமன்றி பாரமார்த்திகதசை யில்) சத்தியமன்று |
| நினையில் இங்கு எல்லாம் | ஆராயுமிடத்து இங்கு காணப்பட்ட னவாகிய சர்வஜெகத்தும் |
| தற்பரனே என்று நினைவதுவே நேரே நினைவான நினைவு | அதிஷ்டான ஆத்மசொரூப மென்று அறிவதுவே சாக்ஷாத் எதார்த்த ஞானமாம் |

(ஆன்மா – கண், காது, மனம், புத்தி முதலியவைகளை தானறியுமேயன்றி அவைகளால் அறியப்படுவதன்று) என்பதாம்.

(அ – கை) இவ்விதம் பிரத்யகான்மாவிற்கு *அத்தியான்மமாயுள்ள சர்வாந்தரத்துவ முபதேசிக்கப்பட்டது இனி † அதிபூதமாகிய சர்வாந்தரத்துவ முபதேசிக்க வேண்டிக் கார்க்கிப் பிராமணார்த்தத்தையுஞ் சங்கிரகித்து உபதேசிக்கின்ருர்.

பாரிலே யெல்லாப் பொருள்களுங் கோவைப்
பட்டதெப் படியிலப் படியே
நீரிலே பாரும் நெருப்பிலே நீரும்
நிலவுகா லதனிலே நெருப்பும்
ஊருகா லந்த ரிக்கலோ கத்து
முண்டையும் பாவுமே போலச்
சாருமா லொன்றே டொன்றுவே றறவே
தன்னிலே பின்னியிச் சகத்தில்

6

(இ – ள்)

| | |
|---|---|
| உண்டையும் பாவுமே போல | தந்துக்களின் படமானது குறுக்கு நெட்டாக சூத்திரங்களால் ஓதப்பு ரோதமாயிருப்பது போல் |

* ஆத்மாவை ஆசிரயித்திருக்கும் தூல சூட்சுமசரீரங்கள் அத்தியாத்மம். † தனது தேகாதிகட்கு வேருய் நேத்திரேந்திரியத்திற்கு விஷயமாவது அதிபூதம்.

| | |
|---|---|
| பாரில் எல்லாப் பொருள்களும் கோவைப்பட்டது எப் படியில் அப்படியே | பிருதிவியின் காரிய முழுவதும் பிரு திவியில் எவ்விதம் கோர்க்கப் பட் டதோ அவ்விதமே |
| நீரிலே பாரும் * நெருப்பிலே நீரும் | அப்புபூதத்தில்பிருதிவியும் அக்கினி பூதத்தில் அப்புபூதமும். |
| நிலவுகால் அதனிலே நெருப்பும் | விளங்காநின்ற வாயுவில் அக்கினி யும் |
| ஊருகால் அந்தரிக்க லோகத்தும் ஒன்றோடு ஒன்று வேறு அறவே | சலிக்கின்றவாயு வாகாயத்திலும் ஒன்றோடு ஒன்று பரஸ்பரம் பின்ன மில்லாமல் |
| தன்னிலே பின்னி இச் சகத்தில் சாரும் | சம்பந்தித்து இச்சகத்தில் பொருந் தியிருக்கும் (காரியங்களனைத்தும் தன் காரணங்களில் ஓதப்புரோத (குறுக்கு நீட்ட) மாயிருக்கும் என் தாம் 6 |

அந்தரிக் கங்கள் கந்தரு வத்தே
யாதித்த வுலகங்க ளிடை யே
கந்தரு வங்கள் சந்திர வுலகிற்
கதிரவ னுலகுக ளெல்லாஞ்
சந்திர வுலகுந் தாரகை யுலகிற்
றாரகை வானவ ருலகில்
இந்திர னுலகில் வானவ ருலக
மியாவையுங் கோவையா யிருக்கும் 7

(இ - ள்)

(அந்தரிக்ஷலோகங்கள் கந்தருவலோகத்திலிருப்பதாம் கந்தருவ லோகம் ஆதித்ய லோகத்தும் ஆதித்ய வுலகம் சந்திர லோகத்தும் சந்திரலோகம் நக்ஷத்திர லோகத்தும் நக்ஷத்திர லோகம் தேவலோகத்தும் தேவலோகம் இந்திர

* நீருக்கு நெருப்பு உபாதானமாவது விசாரத்தில் பொருந்தாத தாகும். அப்படியிருந்தும் நெருப்பிலே நீரும் என்று கூறியது வேதாந்தமதத்தையனுசரித்து கவிநாயகர் கூற்றும். இதை கார்க்கி யாற்கியவற்கியர் சம்வாதத்தில் ஆத்மபுராணம் 5ம் அ. 463 ஆம் பக் கத்திலும் பிரஹ்ம கீதை மூலத்திலும் ஜலத்திற்கு உபாதானம் வாயு வென்றே கூறப்பட்டது.

லோகத்தும் ஒன்றிலொன்று கோக்கப்பட்டிருக்கும் என்பதாம் (சூக்ஷுமதாரதம்மியக்கிரமமாக உத்தரோத்தரம் சாதிசய (ஏற்றத்தாழ்வாய்) போகாசிரய ஆகாரமாக † பரிணமமடைந்து சங்காதங்களாயுள்ள பஞ்சபூதங்கள் அவஸ்தா விசேஷத்தால் அந்தந்த லோகமாகக் கூறப்பட்டது. அக்காரணத்தால் அந்தரிக்கங்கள் கந்தருவத்தே என்றறிந்த பிரகாரம் ஒவ்வொரு லோகத்திலும் பகுவசனம் பிரயோகிக்கப்பட்டது.) 7

அரசா கியவம ராதிப னுலகா னவையடையப்
பிரசா பதியுல கங்களி னிடையே பிரமனதா
முரைசா ருலகம தானவை யுயர்மா லயனுலகிற்
றிருமா லுலகஞ் சேர்வுறு மிடமுஞ் செப்புதுமே 8

(இந்திரலோகங்கள் முழுவதும் பிரஜாபதிலோகத்தில் ஸ்திதியடைந்துள்ளன அந்த பிரஜாபதி லோகங்களும் பிரஹ்மலோகத்தில் கோக்கப்பட்டிருக்கும்.)

[சர்வாந்தரனை ஆன்மாவுக்கு நிரதிசயமான சூக்ஷுமவியாபகத்தை தெரிவிக்கும் பொருட்டுப் பிருதிவிமுதல் பிரஹ்மலோக பரியந்தம் மேன்மேற்குறுக்கு நீட்டங்களாக கோவைப்பட்டுச் சூக்ஷுமவியாகத்தன்மை இரண்டுமொன்றற்கொன்று ஏற்ற தாழ்வுகளாகச் சுருதியில் கூறப்பட்ட விவகாரம் முடிந்தது இனி புராணவிவகாரம் சுருதியில் பிரஹ்மலோகத்தின் * மேல்லோகமென்பதில்லை இதுவே திடம்.]

உரைசார் உலகமது ஆனவை உயர்மாலவன் உலகில் } சொல்லாநின்ற பிரஹ்மலோகங்களும் உக்கிருஷ்டமான விஷ்ணு லோகத்திலுல் கோர்க்கப்பட்டிருக்கும்

---

† சம சத்தையின் வேற்றுச் சொருபம் பரிணமம். பால் தயிராதல் போலென்க.

* ஆத்மபுராணத்தில் 5ம். அ. 464. 465ம் பக்கத்தில் யாற்கியவற்கியர் சம்வாதத்தில் பிரஹ்ம லோகத்திற்குமேல் லோகமில்லையென்பதறியலாம் ஆயினும் ஒரே தெய்வமானது எப்படி நினைத்து வழிபடுகிறார்களோ அப்படி வந்து காட்சியளிப்பதுபோல ஒரே பிரஹ்ம லோகமே அந்தந்த வுபாசகர்களுக்கு அந்தந்த லோகமாகத் தோன்றும் மகிமை பிரஹ்மலோகத்திற்கு உண்டென்றும் பலவுலகமாய் கற்பித்தல் புராணிகர் கூற்றென்றும். பிரகதாரண்யோபநிஷத் வியாக்கியானத்தில் பாடியக் காரரான சங்கரராலும் அப்பாடியவியாக்கியானக்காரார்களாலும் கூறியதறியவும்.

| | |
|---|---|
| திருமால் உலகும் சேர் உறும் இடமும் செப்புதுமே | விஷ்ணுலோகமும் பொருந்தும் இடமும் கூறுகின்றோம். |

(காரணகாரியங்களான லோகங்களெல்லாம் ஓதப்புரோதபாவத்தால் இருக்கின்றன இந்த சர்வலோகங்களும் அத்தியஸ்தமாவதால் பொய்யாயிருக்கின்றனவென்பதாம்.) 8

உருத்திர வுலகின்மா லுலகு ருத்திர
னிருக்குமவ் வுலகெலா மீச லோகமே
திருத்தகு மீசலோ கங்க டிண்ண மாய்க்
கருத்தகு சதாசிவ வுலகின் கண்ணதே. 9

(இ – ள்)

(உருத்திர லோகத்தில் விஷ்ணுலோகங்களும் கோக்கப்பட்டிருக்கும் ருத்திரலோகமும் மகேஸ்வரலோகத்திற் கோக்கப்பட்டிருக்கும் செல்வம் பொருந்திய மகேஸ்வர லோகமும் உறுதியாய் கருதுதற்கரிய சதாசிவலோகத்திற் கோக்கப்பட்டிருக்கும்.)

தற்பரந் தன்னிலே சதாசி வன்றன
துற்பவ வுலகெலா முறுதி யாமதிற்
கற்பித மாய்நிகழ்ந் திடுமெய் காணுறில்
அற்புத மாம்பர னல்ல தில்லையே. 10

(இ – ள்)

| | |
|---|---|
| உற்பவ சதாசிவன் தனது உலகு எலாம் தற்பரம் தன்னிலே உறுதியாம் | உற்பத்தியுடையனவாகிய சதாசிவ லோகங்கள் சத்ரூபமாய் சர்வாந்தரமாய் சிவசமிக்ஞையுடையவராயும் இரா நின்ற பிரத்யகான்மாவின் கண்ணே கோக்கப்பட்டிருக்கின்றது. |

18ம் சுலோகம் விடுபட்டர்த்தம் சர்வாதிஷ்டான சுவயம்பிரகாசமுள்ள பிரத்யகாத்மா ஒன்றிலும் இப்படி (கோக்கப்பட்டு) இல்லை அந்த சாக்ஷி சத்ரூபராயிருக்கின்றார்.

[இந்தப்பிரகாரம் பிருதிவியாதி பிரஹ்மலோகாந்தங்கட்கும் சர்வாந்தரபிரத்யகாத்மாவில் அத்தியஸ்தத்தன்மை

யால் பிரதித்வம் (வேறுபோல்) பிரதிபாதித்துப் பரமார்த்த மாய் அதிஷ்டான வியதிரித்வம் (வேறு பொருள்) இன்றெனக் கூறுகின்ருர்.]

| | |
|---|---|
| மெய்காணுறில் அதில் கற்பிதமாய் நிகழ்ந்திடும் | பாரமார்த்த திருஷ்டியால் நோக்கு மிடத்து (இவ்வாறே எப்போதும் பிரஹ்ம லோகாந்தமான அவ்வ ணைத்தும் தமது பிரதீதியின் அதிஷ் டானமாய் சச்சிதானந்த ரூபமா யுள்ள) பிரத்யகான்மாவிகண் அத் தியாசமாக ஓதப்புரோதமாயிருக் கின்றது |
| அற்புதம் ஆம்பரன் அல்லது இல்லையே | ஆதலின் (அதிஷ்டானமாக ஆரோ பம் மிஞ்சும் என்னும் ரீதியால்) ஆச் சிரியகரமாகியபிரஹ்மத்தைத் தவிர அவைகளில்லை யென்பதாம். |

10

19ம் சுலோகம் எதனிடத்தில் நன்ருய் நிரூபிக்குங்கால் எல்லாம் அத்தியஸ்த (கற்பித) ரூபமாயிருக்கிறதோ அவரே எல்லாம் வேறென்றுமில்லை.

20ம் சுலோகம் எந்த ஆத்மா ஸ்வயமாக சத்தாக வேறென்றின் உதவியில்லாமல் விளங்குகின்றதோ அவரே எல்லோரின் அந்தர்யாமி வேருருவரும் அன்று என்பது "மெய்க்காணுறில் + இல்லையே" என்பதின் மூலார்த்தமாம்)

(அ – கை) சுருதியில் (1) அத்தியாத்மம் (2) அதிபூதம் (3) அதிதெய்வம் என்னும் ஜெகத்துக்கு உபாதானராய் சர்வாந்தராய் சமஸ்தவுபாதியும் விடுபட்டவராகிய பிரத்ய காத்மா அந்த நியமன வியாபார யோகத்தால் அந்தர்யாமி என்று கூறப்பட்டது அதனைக் கூறுகின்ருர்.

உடைய தொன்றுடை யானெனும் வேறவை யின்றி லோகத்
திடையி ருந்துமி ருந்தில ஞயெவை யுமுடம் பாய்த்
திடமி தென்றறி யாவகை நின்ருெரு செய்கையின்றி
யடைய வுஞ்செயு மாரவ னந்தரி யாமியாவன்.

11

(இ – ள்)

| | |
|---|---|
| லோகத்திடை இருந்தும் | உபாதான காரணத் தன்மையால் பிருதி வியாதி சர்வ ஜெகத்திலும் (கடாதிகளில் மிருத்துவாதிகள் வியாபித்திருப்பது போல்) வியாபித்து ஆந்தரனுயிருப்பவனும் |
| இருந்திலனுய் | வாஸ்தபத்தில் அவற்றை ஆசிரயமாகக் கொண்டிராதவனுய் |
| எவையும் உடம்பு ஆய் | (சரீரம் போல ஆச்சாதகமாகிய பிருதி வியாதி) யனைத்தையும் தனக்கு உடம்பாக வுடையவனுயும் |
| திடம் இது என்று அறியாவகை நின்று | பிருதிவியாதி தேவதைகள் இவனே நமக்கும் நியந்தாவென்று திடமாக வறியாதபடி நிற்பவனும் |
| ஒரு செய்கை இன்று அடையவும் செய்யும் | பரமார்த்தத்தில் நிஷ்கிரியனுயும் உபாதி வயத்தால் சகலத்தையும் பிரேரணை செய்பவனுயும் |
| உடையது ஒன்று உடையான் எனும் வேறவை இன்றி | ஈதென்னுடையது இதையுடையவன் யான் எனப் பொருந்தா நின்ற பேதரூப அபிமானமில்லாதவனுயும் |
| ஆர் அவன் அந்தர் யாமி யாவன் | இருப்பவன் யாவனே அவன் அந்தரியாமி யாவன் என்பதாம். |

(உடையதொன்று × அந்தரியாமியாவன் = 21 + 22-ம் சுலோகார்த்தம் பிருதிவிக்குள்ளிருந்து அதைஎவர் நடத்துகின்றனரோ அந்தப் பிருதிவி எவரை அறிகிறதில்லையோ அவரே நமக்கும் பூமிக்கும் பராமிருதமான அந்தரியாமி.)

(23=24=25 ம்) அப்புகளிலும் அக்கினி அந்தரிக்ஷம் வாயு முதலிய சேதனசேனமாயுள்ள எல்லாவற்றினு மிப்படியேயிருந்து கொண்டிருக்கிறவர் சாக்ஷாத் அந்தர்யாமி.

(அ – கை) இந்த அந்தரியாமியை தம்மிடத்திருப்பவராக நாம் அறிவது போலப் பிருதிவியாதி தேவதைகளும் ஏன் அறியமாட்டார்கள் என்று சங்கித்துக் கூறுகின்ருர்.

காண்டல் கேட்டல் கருதல்செ யப்படு வானலன்ருன்
காண்டல் கேட்டல் கருதல்செ யப்படு வானெருத்தன்
றூண்டு சோதியி ஞலனல் சோமன ருக்கனெல்லா
மாண்ட போதும்வி ளங்கும னக்கரி யாகிநின்று. 12

(இ – ள்)

| | |
|---|---|
| தான் காண்டல் அலன் | சர்வாந்தரியாமியாகிய தான் ஒருவருடைய சட்சுவிற்குக் காணப்படுவானல்லன் |
| கேட்டல் கருதல் செயப்படுவான் அலன் | சப்தாதீதனுதலின் (கெட்பவனல்லன்) சுவிஷயனுதலால் சங்கல்ப விகல்பான்மகமனதினுல் விஷயீகரிக்கப்படாதவன் |
| ஒருத்தன் காண்டல் கேட்டல் கருதல் செயப் படுவான் | சர்வ நேத்திரங்களின் சன்னிகிதனு (முன்னிலேயா) யிருப்பதால் அவனெருத்தனே காண்பவன். சர்வ சுரோத்திரங்களிலும் சன்னிகிதத்துவத்தால் விடாத சிரவண சக்திகனுயிருப்பதால் கேட்பவன். விடாத மனன சக்திகனுய் சகலருடைய மனத்திலும் சன்னிகிதனுயிருப்பதால் மந்தா (நினைப்பவன்) (நிச்சயான்மக புத்தியென்னும் விஞ்ஞானத்தில் சன்னிகிதனுயிருப்பதால் விஞ்ஞாதவாகின்ருன்) |

[ சாக்கிர சொப்பனுதி யவஸ்தைகளில் சுகதுக்க போக்தாவாய் சம்சாரியாய சீவன் அந்தரியாமிக் கன்னியன் என்ரு சங்கித்து அவர்களின் அனன்யத்வத்தைப் பிரதி பாதிக்க வேண்டி ஆருவது அத்தியாயத்திலுள்ள ஜோதிர் பிராமணத்தில் சாக்கிர சொப்பனுதிய வஸ்தைகளிலுள்ள பதார்த்தங்களோடு விவகாரத்தாலும் முற்கூறிய விதமாயுள்ள ஆன்மாவுக்கு அதனுல் செய்யப்படும் புண்ணிய பாவங்கள் முதலிய சகல தர்மங்களினுடைய அனுகத (தொடர்ச்சி) மனமில்லாத அசங்கத்வமும் சுயஞ்சோதித்வமும் நிரதிசயானந்த சுபாவமும் அத்விதீயமும் பிரதிபாதிக்கப்பட்டன அதில் அவஸ்தாத்திரய சாக்ஷியாயிருக்கும் ஆன்மாவுக்குச் சுயம் சோதித்வம் பிரதிபாதிக்கும் பொருட்டு "ஆதித்யன் அஸ்த

மித்திடில் அக்கினி அக்கினி அஸ்தமித்திடில் வாக்கு வாக்கு அஸ்தமித்திடில் எது சோதிசு இப்புருடன்ருன்" என்றும் "ஆத்மாதானே இதற்குச் சோதிசு ஆகபவிக்கின்ருர்" என்றும் யாதொன்று சொல்லப்படுகின்றதோ அதைச் சங்கிரகித்துக் கூறுகின்ருர்.]

தூண்டு சோதியினுல் அனல் சோமன் அருக்கன் எல்லாம் மாண்டபோதும் விளங்கும் மனக்கரி யாகி நின்று — சூரியன் சந்திரன் அக்கினியாதி பாகியப் பிரகாசங்களில்லாத காலத்தும் ஆத்ம சொரூப சைதன்யப் பிரகாசம் அந்தக் கரண சாக்ஷியாய்த் தனது பிரகாசத்தினுலேயே எப்போதும் விளங்கிக் கொண்டிருக்கிறது மன்றிப் பாகியப் பிரகாசங்களை அபேக்ஷிக்கிறதில்லை யென்பதாம்.

(இதனுல் சாக்கிராவஸ்தையைக் கூறப்பட்டது.) 12

(அ — கை) சாக்கிராவஸ்தையில் ஆத்மப் பிரகாசத்தைக் கூறி சொப்பன சுழுத்தியில் ஆத்மப் பிரகாசவாயிலாக சொப் பிரகாசத்தைக் கூறுகின்ருர்.

சித்தமத்த மித்திடத்த பாவமுந்தெ ரிந்திடுஞ்
சுத்தநற் சுழுத்தியிற் றுய்க்குமாயை கண்டிடுஞ்
அத்தமித்த லும்பிறத்த லும்மிலான பாவபா
வத்தைவிட் டகண்டமா யறிந்தபோ தடங்கவாம். 13

(இ — ள்)

சித்தம் அத்தமித் திடத்து — (சுரோத்திராதியிந்திரிய வாயிலாக சத்தாதிவிஷய வியாபாரத்தோடு கூடிய) மனமானது லயித்த சொப்பனு வஸ்தையில்

அபாவமும் தெரிந் திடும் — இந்திரியவாயிலாக விஷய வியாபார அபாவத்தால் சித்திற்குக்கேவலம் சொப்பன பதார்த்தாகாரபரிணுமமான யாதோரிருப்புண்டோ அந்தச் சொப்பனுவஸ்தையும் பிரகாசாந்தர நிரபேக்ஷிகனுகவே சொரூப சித்பிரகாசத்தினுலேயே அவ்வாத்மாவே அறிகின்ருர்

| | |
|---|---|
| சுத்த நல்சுழுத்தியில் துய்க்கும் மாயை கண்டிடும் | (காரணபூதமாயுள்ள பாவரூப அஞ்ஞானத்தில் பாகிய இந்திரியங்களைப்போலப் சித்தம்லயபாவத்தையடைவதாகிய) சுத்தமான நல்ல சுழுத்தியில் அனுபவிக்கப்படுவதாகிய கேவலம் அஞ்ஞானமாகிய அவ்வவஸ்தையை அவ்வாத்மாவே அன்னியப்பிரகாசத்தை அபேக்ஷியாமல் அறியாநிற்பர் |
| அத்தமித்தலும் பிறத்தலும் இலான் | இம்மூவித அவஸ்தைகளிலும் சுயம்பிரகாசமானசிதான்மா ஆவிர்ப்பாவ (தோற்ற) திரோபாவ (மறைவு) தர்மரகிதமாயுள்ளார் |
| அபாவபவத்தை விட்டு அகண்டமாய் அறிந்தபோது அடங்க ஆம் | அறிந்ததும் அறியாததுமாயுள்ள சர்வபிரபஞ்சத்தையும் தானன்னென்று விடுத்து சாக்ஷிரூபமான தன்னைபிரஹ்மமாக அறிந்தபோது அனைத்தும் அறிந்ததாகும். 13 |

அத்தமித்தலும் + அகண்டமாம் (என்பதின் – சுலோகம் 29 தோற்றம் மறைப்பு அற்ற சுயம்பிரகாசமான ஆத்மா பாவம் அபாவமான எல்லாவற்றையும் எப்பொழுதும் அறிகிறான்) (சுலோகம் 30) பாவம் (இருக்கிறது) அபாவம் (இல்லை) என்றதால் அறியக்கூடிய எல்லாவற்றையும் அறிகிறவன் இவனே நன்கு விசாரிக்கும்பொழுது வேறொருவருமில்லை. இங்ஙனம் மூலார்த்தமாகும்.)

(அ – கை) ‘ துவைதத்தைக் காண்கிறானில்லை காணினும் அதைக் காண்கிறானில்லை" என்பதாதி சுருதியை வியாக்யானஞ் செய்கின்றார்.]

பின்னமான தன்றியே பிரமமாய றிந்தவன்
றுன்னுபேத மேவினும்சொ ரூபமேநி கழ்ந்ததாம்
ஞன்னின்ஞான நாசமில்லை ஞேயநாச மாகுநன்
தன்னின்ஞா னஞேயமாக வேறுறாத தன்மையால். 14

(இ – ள்)

| | |
|---|---|
| பின்னம் ஆனது இன்றியே பிரமமாய் அறிந்தவன் | பேதமின்றி தன்னைப் பிரஹ்மமாக அறிந்த யோகியானவன் |

| | |
|---|---|
| துன்னு பேதம் மேவி னும் சொரூபமே நிகழ்ந்ததாம் | சர்வாவஸ்தைகளிலும் பொருந்தா நின்ற துவிதத்தைப் பார்த்த போதிலும் பார்க்கவில்லை அவன் சொரூபஞானமாகவே விளங்கு கின்றான் |

(வித்வானுக்கு; தனக்கு வியதிரிக்தமான (வேறான) அவித்யா தத்காரியமானது ஞானத்தினால் நிவர்த்தியான தால் அவன் துவிதத்தை சக்ஷுவாதி இந்திரிய ஜெனித விசேஷ ஞானத்தால் பார்க்கினும் அவன் சொரூப ஞான மாகவே விளங்குகின்றான்.)

[எதனால் எனில் கூறுகின்றார்]

| | |
|---|---|
| ஞன்னின் ஞானம் நாசம் இல்லை | ஆத்மாவினுடைய சித்பிரகாச ரூப மாய் யாதொரு திருஷ்டியுண்டோ அதற்கு நாசமில்லை (அவிநாசியா யுள்ள ஆத்மாவினது திருஷ்டியும் ஆத்மதிரவியமுள்ளளவில் நசி யாது ஆதலால் திருஷ்டாவினது திருஷ்டிக்கு நாசமில்லாமல் விளங் குகின்றானென்பதாம் |

[ஆத்மதிருஷ்டி சர்வதாயிருக்குமானால் அதனாலே எக் காலத்தும் திருசிய செகத்தும் பிரதீதியேனுண்டாகவில்லை யென்று சங்கித்துக் கூறுகின்றார் ]

| | |
|---|---|
| ஞேயம் நாசம் ஆகும் | திருக்குரூப ஆத்மவிஷயமாயுள்ள துவித செகத்து (அதிஷ்டனத்துவ ஞானத்தால் அடையத்தக்கவுபாதி யில்) லீனமாகிறது (அதாவது பிரஹ்மத்தில் லீனமாகிறது |

(ஆதலால் துவித செகத்தின் தோற்றமின்றிய தன்மை யால் வந்ததேயன்றி சிதாத்ம திருஷ்டி பரிலோபத்தால் வந் ததன்று திருஷ்டாமாத்திரமாக விருக்கும் சுழுத்தி சமாதி களில் (ஆத்மாவினுடைய)

| | |
|---|---|
| ஞானம் ஞேயம் ஆக வேறு உறுத தன்மை யால் | ஞானத்துக்கு விஷயமாக வேறு பதார்த்தமில்லாத தன்மையால் என்பதாம்(ஞானம்-ஆத்மா ஞேயம் - நாமரூபப்பிரபஞ்சவிஷயமாம். நன். இன். சாரியை. அசையாம்) 15 |

(அ-கை) இங்ஙனம் அத்விதீய ஆத்ம நிஷ்டனுக்கு யாதொரு கதிமுதலியவைகளின் நிரதிசயத்வம் சுருதியிற் கூறப்பட்டதோ அதைச் சங்கிரகித்துக் கூறுகின்றார்.

இதுபரம மானகதி யிதுபரம மாமுலகும்
அதிசுகமு மாவதிது வழிவிறன மாவதிது
வுதறுதன தோலுரக முடலென வுளதுபர
மதனையறி வானதிக னகமதிவை யானுடலில்

(இ-ள்)

| | |
|---|---|
| இது பரமம் ஆன கதி | (எதனிடத்தில் அன்னியத்தை பார்க்கின்றானில்லையோ அப்படிப் பட்ட) இந்த பிரஹ்ம நிஷ்டையே வித்வானுக்கு பரமகதியடையுமிடம் (அன்னியம் அவித்தையால் கற்பித மானதால் மேலானதல்ல) |
| இது பரமம் ஆம் உலகு | இந்ந வித்வானுக்கு இந்த பிரஹ்ம நிஷ்டையே மேலான லோகமாம் (கர்மஜெனித லோகங்கள் பரம (மேலானது) மன்று சொல்லிய பரமாத்ம நிஷ்டை கர்ம ஜெனித மல்லாமல் சுபாவீகமாய் நிரதிசயமாய் காணப்படுதலால் அதுவே பரம லோகம்) |
| அதி சுகமும் ஆவது இது | (நிரதிசயப் பிரஹ்மான்ம பாவமான இந்தப் பிரஹ்ம நிஷ்டை நித்தியமாதலால்) இதுவே பரம சுகமாம் (ஏனைய விஷய சுகங்கள் அனித்திய மாதலாலும் தனது சொரூபானந்த லேசமாதலாலும் உபேக்ஷிக்கத்தக்க அவைகள் பரம மேலான சுகங்களன்று |
| அழிவு இல் தனம் ஆவது இது | இவ்வத்விதீய பிரஹ்ம நிஷ்டயினுடைய அடைவே மேலான தனமாம் (இதர சம்பத்துக்கள் கிரியா செனித மாதலால் அநித்தியங்களென்று பொருள்) |

[ இந்தப் பிரகாரம் பிரஹ்ம பூதனான புருஷன் மீண்டும் காரிய காரண சங்காதத்தை ஆத்மாவாக அபிமானியான்

என்னும் இவ்வார்த்தை சுருதியிற் சொல்லப்பட்டிருக்கிற திருஷ்டாந்தத்தால் சங்கிரகித்துக் கூறுகின்ருர். ]

| | |
|---|---|
| உதறு தனது தோல்<br>உரகம் உடல் என<br>உருது | (சர்ப்பமானது தனதாசிரயமான புற்று முதலிய விடங்களில் தன்னுல்) விடப்பட்டதாகிய தனது சட்டையை மீண்டும் தனது வடிவமாய் எப்படிக் கருதாதோ (அதாவது அறிகிறதில்லேயோ அப்படி) |
| பரமதனை அறிவான்<br>அதிகன் அகம் மதிவை<br>யான் உடலில் | பிரஹ்மத்தைச் சாக்ஷாத்கரித்த வித்வான் யாவரினும் மேம்பட்டவனுவன் (தான் அன்றென்று விடுத்த) தேகாதி பதார்த்தங்களில் ஓர் போதும் நான் என்னும் அபிமானத்தைச் செய்யான். |

35-ம் சு=ம் (அ - கை) தேகாத்ம பாவமானது பேதாதீனமாதலால் அதனுடைய நிருபணாங் கூடாது என்னும் அபிப்பிராயத்தால் "இதில் கிஞ்சித்தும் நாநாவான செகத்தில்லே" என்னும் அதன் நிசேஷத சுருதியைக் கூறுகின்ருர். சுலோகம் ]

(35 மூலம்) சர்வாதாரமாயும் சுவத சித்தமாயும் பிரத்யக் பூதமாயும் சிவசமிக்ஞையுடையதாயும் மிகவும் நிர்மலமாயும் பராநந்தமாயுள்ளதில் கிஞ்சித்தும் நாநாவான செகத்தில்லே. (வி=பிரஹ்மமானது துவிதப் பிரபஞ்சத்திற்கு அதிஷ்டான மாதலால் அதுவே துவிதப் பிரபஞ்சத்திற்கு அவதியாதலால் சர்வாதார மென்ருர். துவிதப் பிரபஞ்சம் போல் அதற்கும் அத்தியஸ்தத்வம் உண்டென்ற சங்கையை மறுக்கும் பொருட்டு அதிஷ்டானுந்தரத்தில் அத்தியஸ்தமா யில்லாமையின் அன்னியாதீன சத்தாக (உள்ளவடி) மாகாததால் சுவசித்த மென்ருர் மாயை யில்லாததால் நிர்மலமென்ருர் இவ்வித சொரூபராய்ச் சிவசமிஞ்ஞைவுடையராய் பிரத்யக்ரூபராயிருக்கின்ற இந்த ஆத்மாவானிடத்தில் பிருதக்காக ஓர் வஸ்துவுமில்லே என்று பொருள் இவ்வளவும் கவிநாயகர் சொல்லா தொழிந்தனர்.)

(அ – கை) வி (பேத) பக்ஷத்தில் சுருதியினுல் சொல்லப்படுகின்ற பாதகத்தைக் கூறுகின்ருர்.

தற்பரம மாகியுள தத்துவம தேயொழிய
அற்பமயல் காணுமவ ரத்துருவ மேயடைவர்
கற்பிதவஞ் ஞானமதி லுற்பவம தாமுலக
நற்பிரம மாயறிவர் நற்சிவம தாநயனர். 16

(இ – ள்)

| | |
|---|---|
| தற்பரமம் ஆகி உள தத்துவம் அதே ஒழிய | மேலான பிரஹ்மமாயுள்ள தத்துவத்தை விட்டு |
| அற்பம் அயல் காணும் அவர் | கிஞ்சித்தும் (நான் வேறு ஜெகத்து வேறு ஈசுவராதிகள் வேறு என) பேதத்தைப் பார்க்கும் அப்பேத தரிசியானவன் |
| அத்துருவமே அடைவர் | (அவித்தையினுல் வசீகரிக்கப்பட்டவனுய்) செனன மரணத்தையே யடைவன் |

[ஆதலால் சொல்லிய விதமாய் அத்விதீய ஆத்மதரிசனமே சிரேஷ்டமென்று நிகமனஞ் செய்கின்ருர்]

| | |
|---|---|
| கற்பித அஞ்ஞானம் அதில் உற்பவமதாம் உலகம் | பொய்யாகிய அஞ்ஞானமும் அதன் காரியமாகிய பிரபஞ்சமும் ஆகிய அனைத்தையும் |
| நற்பிரமம் ஆய் அறிவர் நல்சிவ மதாம் நயனர் | சிரேஷ்டமான பிரஹ்மமென்னும் திருஷ்டியையுடையவர் ஆனந்த ரூபமான பிரஹ்மமாகவே அறிவார்கள் (இதுவே செனன மரணத்தை நீக்குதலின் சிரேஷ்டமாம். |

16

(அ – கை) திருக்குருபரான ஆன்மா தெரிசிக்கத்தக்கவராகில் ஞானம் செயப்படு பொருளானமையின் கடாதிகள் போலவர்க்குத் திரிசியத்வம் நேரிடுமென்னில் கூறுகின்ருர்.

நிலையினிலை யாகி யளவிடவொணுத நிமலனுரு நாளு
　　　　　　　　　　　　　　　நினைகுவான்
சலனமுற நாவு மலைவலைவ ருத சமயகலை யோத றவிருவான்
உலகிலுதி யாது வுயர்வுகுறை வான தொருவினையினுலு மருவுரு
தலகிலுல கேவல் செயவுரியனுன வதிபதியு மாகுமமலனே. 17

(இ - ள்)

| | |
|---|---|
| நிலையில் நிலையாகி அளவிட ஒண்ணாத நிமலன் உரு | * கூடஸ்தமும் நித்யமும் ஆதலால் துருவமா (அசையாத நிலையா) யும் அளவிடக் கூடாதவனுய் (தனது விஷயமான சாக்ஷத்காரமுண்டா மளவில் சொருபப் பிரகாசத்தாற் ருனே பிரகாசித்தலால் அப்பிரமே யனுயும் தர்மா தர்மாதிமலரகிதமா யுள்ள அவ்வாத்ம சொருபத்தை |
| நாளும் நினைகுவான் | (சாக்ஷாத்கார விஷயமான பிரஞ் ஞையை)இடைவிடாது சம்பாதிக்கக் கடவன். |

(அதாவது அபரோக்ஷ பிராந்திபரோக்ஷ ஞானத்தால் நீங்காது உத்தமோத்தம அதிகாரிக்கு சற்குருவிடத்தில் மகா வாக்யம் கேட்டமாத்திரத்தில் விளங்கினுலும் மந்த மத்திமாதி களுக்கு அவ்விதம் விளங்காதென்றறிந்த புத்திசாலிகள். சற்குரு உபதேசத்தினுலும் சாஸ்திரவிசாரத்தினுலும் நிச்ச யித்துக்கொண்டு மறுபடியும் திடாபரோக்ஷஞானபரியந்தம் சிட்டுக்குருவி சமுத்திரத்தை வற்றும்படி செய்த முயற்சி போல அஞ்ஞான சந்தேக விபரீதமான இந்த மோக்ஷப் பிரதிபந்தத்தை நீக்கும் சிரவணமனன நிதித்தியானத்தை நெடுங்காலம் நிரந்தரம் நேசத்தோடும் செய்யத்தக்க தென் பதாம்.)

[இந்தப்பிரகாரம் ஆத்மவித்தானவன் அனுன்மவிஷய மான வெகு சப்தங்களை தியாகஞ் செய்யவேண்டுமெனக் கூறுகின்ருர்.]

| | |
|---|---|
| சலன முறநாவு மலைவு அலைவு அருத சமய கலை ஓதல் தவிருவான் | சலனம் பொருந்திய நாவினுல் மயக் கருபமான சலனத்தைவிட்டு நீங் காத சமய சாஸ்திரங்களென்னும் அனுத்ம விஷயமான வெகு சப்தங் களை ஓதுதலை விடக்கடவன் |

[கூறப்பட்டது கூறப்படுவதுமாயுள்ள சமஸ்தோப நிஷதார்த்தத்தைப் பிரதிபாதிப்பதாகிய "அந்த சிவன் மஹான் அஜன் ஆன்மா" என்று தொடங்கிய கண்டத்திற் சொல்லிய அர்த்தத்தை தெரிசிப்பிக்கின்ருன்]

† கூடம்-கொல்லன் அடைக்கல்லு; அதுபோல் நிர்விகாரமாயிருத்த லால் கூடஸ்தம்; அல்லது கூடமென்பது மித்தையாகிய புத்தியும் சிதா பாசனுமாம்; அவைகளில் அசங்கமாயிருப்பது கூடஸ்தமாம்.

| | |
|---|---|
| உலகில் உதியாது | உலகின்கண் காணப்படுவனவான ஜனனமரணுதி விவகாரமற்றவனு யும் |
| உயர்வு குறைவு ஆனது ஒரு வினையி னுலும் மருவுருது | உயர்வுதாழ்வாயுள்ள கருமசெனித மான (அதிசயத்தை) சாஸ்திரவிகி தமான அக்கினிஹோத்திராதிபுண் ணிய கர்மங்களும் சாஸ்திரநிஷேத மான பிரஹ்மகத்தியாதிபாவகர்மங் களும் யாதொன்ருேடும் பொருந் தாதாம் |
| அலகில் உலகு ஏவல் செய உரியன் ஆன | பிரஹ்மேந்திராதி சகத்தை பிரே ரணைசெய்ய வுரியனுவன் |
| அதிபதியும் ஆம் அமலன் | (அதாவது சர்வவசியும்) அவன் ஈசுவரனும் ஆவன் நிர்மலனுன ஆத்மா 17 |

பூதபதிபூத பாலனுல கூடுபோகமுடி யாத தானதோர்
சேதுவெனு மீச ஞனவனே மேவ றேடிவழிபாடு மேவியே
வேதமொழி யாலும் வேள்விபலவாலு மேவுதவதான பூசையே
யாதிவழி யாலு மாதரவி ஞலு மாயுமுனி ஞானியாகுவான். 18

(இ-ள்)

| | |
|---|---|
| பூதபதி பூத பாலன் | பிரஹ்மாதி ஸ்தம்பரியந்தமான சகல பூதங்கட்கும் அதிபதியும் பூதங்களைப்பாலனஞ் செய்வதால் பூதபாலனும் |
| உலகு ஊடுபோக முடியாததான ஓர் சேது எனும் | பிரஹ்மாதி லோகங்கட்கும் அந் தந்த மரியாதையைக் கடந்து போகக்கூடாதபடி வருணுச்சிரம முதலிய ஒழுக்கங்களை தரிப்பவரா கிய ஒப்பற்ற சேதுவாம் என்று கூறுபவனுன |

(இந்தப்பரமேஸ்வரன் உரைத்தருளிய சுருதி ஸ்மிருதிகளில் சொல்லிய மார்க்கத்தை அனுஷ்டித்தவர்களை அதனுலுண்டான ஞானத்தினுல் சமுசாரசமுத்திரத்தினின்றும் தாண்டச் செய்தலால் சேதுவாம்.)

[இங்ஙன் வேத்திய சொரூபத்தைப் பிரதிபாதித்து அதன் வித்யோத்பத்தியில் வேதானுவசனங்களுக்கு யாதொரு சாதனத்தன்மை சுருதியிற் கூறப்பட்டதோ அதைச் சங்கிரகின்ருர்.]

| | |
|---|---|
| ஈசனுனவனை மேவல் தேடி | அத்தன்மைய ஆத்ம சொரூபத்தை அறிய விரும்பி |
| வேதமொழி யாலும் | மந்திரப்பிராமண ரூபசர்வ வேதங்களினது நித்தியம் செய்யும் அத்தியயனத்தாலும் |
| வேள்விபலவாலும் | நித்திய நைமித்திக அக்கினிஹோத்திராதி பலவித யாகங்களினுலும் |
| மேவுதவ தான பூசையே ஆதி வழி யாலும் | * கிருச்சிரசாந்திராயணுதிகளால் பொருந்திய (அனசனரூப) தவத்தாலும் சுருதி ஸ்மிருதிகளில் விதிக்கப்பட்ட துலாபுருஷாதி) தானங்களாலும் ஆராதனை முதலிய மார்க்கங்களாலும் |
| ஆதரவினுலும் வழிபாடு மேவியே ஆயும் முனிஞானி ஆகுவான் | சிரத்தையினுலும் வழிபாடு செய்து விசாரிக்கின்ற மனன சீலனுனவன் ஞானத்தையடைவன் |

(அதாவது நிஷ்காம கர்ம உபாசனையால் அந்தக்கரண சுத்தியும் அதனுல் விவேகாதி நான்கு சாதனங்களும் அதனுல் சித்தித்த சிரவணமனன நிதித்தியாசனம் மூன்றும் மகாவாக்கிய தாற்பரியத்தின் பொருட்டு தத்துவம் பதார்த்தங்களின் சோதனமும் சற்குருவின் உபதேசமகாவாக்கியத்தைக்கேட்டு உள்ளதை உள்ளபடி அறிந்தவன் ஞானவானென்பதாம். முமூக்ஷு அடையவேண்டிய சோபானுக்கிரமமிதுவாம்.) அனசன ரூபதபசு - இச்சித்தபடி புசியாமல் சாத்வீக பதார்த்தங்களை சரீரதாரணத்தின் பொருட்டு உபயோகித்தலாம். துலாபுருஷதானம் துலாக்கோலால் புருஷனுக்குத் தக்கதனம் நிறுத்துக் கொடுத்தலாம்.)

* கிருச்சிரம். சாந்தி ராயணம் என்பன விரதங்களாம் இவை பாவ நிவர்த்திக்காகச் செய்யும் பிராயச்சித்தங்களாம் இவ்விரண்டும்

காயசோஷணங்களாம். கிருச்சிரம் (வற்றலாதல் – இளைப்புறுதல்) நான்கு வகையாம் (1) பிரஜாபத்யம் ஆவது மூன்று நாள் காலையில் உணவு அருந்தி மற்றைக் காலங்களில் உணவின்றியிருந்து, அடுத்த மூன்று நாள் மாலையில் மாத்திரம் உணவு அருந்தி அடுத்த மூன்று நாள் உணவைத்தான் விரும்பாது யாரேனும் கொடுத்தால் உண்டு மற்றை மூன்று நாள் உணவின்றியிருத்தலாம்.

2. தப்த கிருச்சிரம் ஆவது மூன்று நாள் காய்ச்சிய உஷ்ண சலத்தை மாத்திரம் ஆறுபலம் சாப்பிட்டு மறு மூன்றுநாள் காய்ச்சிய பாலை மாத்திரம் மூன்று பலம் சாப்பிட்டு அடுத்த மூன்று நாள் காய்ச்சிய நெய்யை மாத்திர ஒரு பலம் அருந்தி மற்றை மூன்று நாள் வாயு பக்ஷண மாத்திரம் செய்திருத்தலாம்.

3. கிருச்சிர அதி கிருச்சிரம் முற்கூறிய தப்த கிருச்சித்தினை இரு முறை அனுஷ்டிப்பது,

4. சந்தாப கிருச்சிரம் – கோசலம், கோமயம் (சாணி) பால் தயிர் நெய் குசோதகம் (தர்ப்பையை ஜலத்தில் நனைத்து அத்தர்ப்பையின் நுனிில் ஒழுகும் ஜலம்) இவைகளை முறையே வொவ்வொன்றையும் ஒவ்வொருநாளும் உட்கொண்டு மறுநாள் பட்டினியாக விருத்தலாம். கிருச்சிரவிரதம் பன்னிரண்டு நாள் அனுஷ்டிப்பதாம்.

சாந்திராயணம் :— (சந்திர–அயனம்-சந்திர மார்க்கம்) ஐவகைப் படும்.

1. பிபீலிகா மத்தியம், கிருஷ்ணபக்ஷப் பிரதமை முதல் துவக்கி பௌர்ணமியோடு முடிக்கப்படுவதாம் முதல் நாள் (கிருஷ்ணபக்ஷப் பிரதமையன்று) பதின்நான்கு கவளம் அன்னமும் மறுநாள் பதின் மூன்று கவள அன்னமும் இவ்வாறு ஒவ்வொரு நாளைக்கு ஒவ்வொரு கவளமாகக் குறைத்துக் கொண்டு வந்து அமாவாசையன்று உபவாசம் இருந்து மறுநாள் சுக்ல பக்ஷப் பிரதமை முதல் ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு கவளமாக அதிகப்படுத்தி பௌர்ணமியன்று பதினைத்து கவளம் சாப்பிடுவதாகும்.

2. இயம மத்தியம் – சுக்ல பக்ஷப் பிரதமை முதல் துவக்கி, அமாவாசையோடு முடிக்கப்படும். முதல் பக்ஷத்தில் உணவு கவளங்களை கூடுதலாக்கி பிற்பகுதியில் உணவுக்கவளங்களை குறைத்துவருவதாம்

3. ரிஷிசாந்திராயணம்–பிரதிதினமும் மூன்று கவளங்கள் வீதம் ஒரு மாதம் சாப்பிட்டு வருவதாம்.

4. சிசுசாந்திராயணம் – ஒவ்வொரு நாளும் காலையில் நான்கு கவளமும் மாலையில் நான்கு கவளமும் சாப்பிட்டு ஒரு மாதம் விரதமிருப்பதாம்.

(அ – கை) ''சர்வவசி'' என்றும் ''ஈசானர்'' என்றும் உபதேசித்து இருப்பது கொண்டு அவ்விதமுள்ள விதி (நேர்) முக வாக்கியத்தினுல் பிரதி பாதிதமாயுள்ள ஆத்மத் துவத்திற்குச் சோபாதிகத்வ சங்கையை நிவர்த்திப்பதற்கு நிஷேத (பிறதொன்றன்) முகத்தினுல் மனோவாக்குக் கெட்டாத அந்தப் பிரத்யகான்ம வஸ்துவை நேதி நேதி (இதல்ல இதல்ல) என்பதாதியால் சுருதி பிரதி பாதிக்கின்றது அந்த அர்த்தத்தைச் சங்கிரகித்துக் கூறுகின்றுர்.

குறியது வாதலாற் குறிக்க வும்படான்
இறுவது மிலனுடம் பென்று மின்மையாற்
செறிவது பற்றிலன் றீண்ட லின்மையால்
அறியிலவ் வறிஞனென் றேடு மார்ப்புருன். 19

(இ – ள்)

| | |
|---|---|
| குறியது ஆதலால் குறிக்கவும் படான் | (இதன்று இதன்று என நிச்சயிக்கப்பட்ட ஆத்ம தேவருக்கு வடிவமின்மையின் இந்திரியங்களால்) கிரகிக்கத் தக்கவரன்று அவர் எப்பொழுதும் கிரகிக்கிற சுபாவ முடையவராம் |
| உடம்பு என்றும் இன்மையால் இறுவதும் இலன் | எப்பொழுதும் தேகமற்றவராயிருத்தலின் நாசமில்லாதவராம் (அவரே காலகாலராய் உருவழிக்குஞ் சுபாவமுள்ளவராம்) |

[விருத்தி க்ஷய (உற்பத்தி நாச)த்தோடு கூடிய திருசியத்தினுடைய சம்பந்த வசத்தால் அதற்கு அதிஷ்டான ஆத்மாவிற்கு விகாரம் ஏன் வாரா தென்னிற் கூறுகின்றுர்.]

| | |
|---|---|
| செறிவது பற்றிலன் தீண்டல் இன்மையால் | நிர்லேப (ஆகாயம்போல் அசங்க)த் தன்மையால் ஒன்றேடும் சம்பந்த முருதவரும் ஆவர் (இவ்வித ஆத்ம தேவனே) |

5, யதிசாந்திராயணம் – உச்சியம் போதில் தினமொன்றுக்கு எட்டுக் கவளங்கள் வீதம் ஒரு மாதம் விரதம் இருப்பதாம். சாந்திராயணம் இரண்டுபக்ஷவிரதமாகும். இவற்றின் விசேஷ நிருபணத்தைத் தர்ம சாஸ்திரங்களிற் காணவும.

| | |
|---|---|
| அறியில் அவ்வறிஞன் ஒன்றோடும் ஆர்ப்பு உருன் | வித்வான் அறிவாளுயின் (சாக்ஷாத் கரிக்கில்) அவனும் அனுத்மபதார்த் தங்களில் ஒன்றோடும் சம்பந்தப் படான். |

(ஆசக்தி (விருப்பத்திற்)க்கு ஏதுவாய் மித்யா பூதமாய் இருக்கிற திருசியம் (நாமரூப பிரபஞ்சமானது) பரமார்த்த மாக சம்பந்திக்காததால். மரீசிகா (கானல்) மறுபூமி (ஊஸர பூமி) நனைக்கப்படாததுபோலு மென்பதாம்.) 19

(அ-கை) அந்த விது இருக்கினுல் கூறப்பட்ட தென்று சுருதி தன்னுல் பிரதி பாதிக்கப்பட்ட பொருளினது சம்வாதமாக உதாகரிக்கின்ற மத்திரத்தைக் கூறுகின்ருர்.

தத்துரு வினையினு லுயர்வு தாழ்வுரு
வித்துவான் மகிமையே விளம்பி னித்தமா
மத்தகு சொருபத்தை யறிந்து பாவமாம்
இத்துயர் வினையொடு மென்றுஞ் சேர்வுருன். 20

(இ-ள்)

| | |
|---|---|
| விளம்பில் தத்துறு வினையினுல் உயர்வு தாழ்வுரு | கூறுமிடத்து அனுபவமாதியால் கெடுதலுறும் புண்ணிய பாவ கரு மத்தால் விருத்தி நாசங்களான விகாரத்தை யடையாத |
| வித்துவான் மகிமையே நித்தம் ஆம் | ஆத்ம ஞானியினது மகிமையே நான்கபாவமற்ற சதோதயமாகும் |
| அத்தகு சொருபத்தை அறிந்து | (ஆகையால் ஒருவன்) முற்கூறிய நித்திய மகிமா ரூபமான ஆன்மாவை அறிந்து |
| பாவம் ஆம் இத்துயர் வினையொடும் என்றும் சேர்வுருன் | பாவமாசிய துன்ப கர்மத்திஞேடும் எக்காலத்தும் சேராதவனுவன். (இப்பாடல் இடையில் சேர்த்ததாம்) 20 |

(அ-கை) அவ்வித வித்யோத்பத்தியில் பகிரங்க சாதனமான வேதானு வசனுதிகளால் உபதேசிக்கப்பட்டன. இனி சுருதியிற் பிரதி பாதிக்கப்பட்ட அந்தரங்க சாதனங் களைக் கூறுகின்ருர்.

சத்தியத் தான்மிகுஞ் சாந்தி தாந்தியால்
எத்தொழி லும்மிசை வற்றி ருத்தலாற்
பத்தியா லிறைவனைப் பண்ணும் பூசையாற்
சுத்தவே தாந்தமெய்த் துணிவு தோன்றுமால். 21

(இ - ள்)

| | |
|---|---|
| சத்தியத்தால் மிகும் சாந்தி தாந்தியால் | சத்திய வசனத்தாலும் (சத்திய மென்பதால் சர்வ யோகாங்க லக்ஷணமாம்) பாகிய இந்திரிய வியாபார உபரமரூப சாந்தியாலும் விஷய ஆசா நிவர்த்தி ரூபமான தாந்தியினாலும் |
| எத்தொழிலும் இசைவு அற்று இருத்தலாலும் | (லோகாந்தர சாதனமாயும் வித்தைக்கு விரோதமாயும் உள்ள) சர்வ கர்மங்களையும் விடுத்தல் ரூபமான உபரமத்தினாலும் |
| பத்தியால் இறைவனைப் பண்ணும் பூசையால் | *நவவித பத்தியோடு செய்யும் பரசிவத்தின் ஆராதனையினாலும் |
| சுத்த வேதாந்த மெய்த்துணிவு தோன்றும் | "சுரோதவ்யோ மந்தவ்யோ" என்பன முதலிய (சுத்தமான வேதாந்தங்களால் சித்தமாயுள்ள சிரவண மனனாதிகளால் எதார்த்த ஞானமுண்டாகு மென்பதாம் (அல்லதுண்டுபண்ணுமல் சுபாவத்தை விளக்குமெனினுமாம்) 21 |

*( நவவித பத்தி=சர்வத்திரவியாபக பரமேஸ்வரர் திருநாமங்களைக் கேட்பது (1) அந்நாமங்களை தனது முகத்தால் சொல்வது (2) அந்தப் பகவானை சதாதியானம் செய்வது (4) சந்தனம் அட்சதை புஷ்பம் தூபம் தீபம் முதலிய பதார்த்தங்களால் ஈசுவரனை அர்ச்சிப்பது (5) மனோவாக்கு காயங்களால் இறைவனிடத்தே நமஸ்கார ரூபமான வந்தனஞ் செய்வது (6) இறைவனின் சிநேக பாவம் செய்வது (7) இறைவனின் தாசபாவஞ் செய்வது (8) பரமேஸ்வரனிடத்தே சரீர ரூபமான ஆன்மாவை அர்ப்

பணஞ் செய்வது என்பதாம். சர்வத்திர வியாபக பரமேஸ்வரனை அர்ச்சிப்பது சேவிப்பது கூடாதெனினும் சலனரூப சன்னியாசி சற்குரு ரூபத்தாலும் அசலரூப சிவலிங்காதி மூர்த்தங்களாலும் கூடுமென்பது சுருதி ஸ்மிருதியாதிகளின் சம்மதமாம்.)  21

(அ-கை) அப்படியே ஜாபாலோபநிஷத்தில் பிரதிபாதித்த விபூதி தாரணாதிகளும் சிவப்பிரீதிகரமாதலின் பரவித்தையுற்பத்திக்கு அந்தரங்க சாதனங்களைக் கூறுகின்றார்.

வேளுடல் பொடிபட விழித்த விண்ணவற்
காளெனு மன்பினு லணியு நீற்றையுத்
தூளனம் பண்ணலாற் றெழுது போற்றலான்
மாளுதல் பிறத்தலாம் வழியை மாற்றலாம்.  22

(இ-ள்)

| | |
|---|---|
| வேள் உடல் பொடிபட விழித்த விண்ணவர்க்கு | *மன்மதனுடல் நீருகும்படியாக நெற்றிக்கண்ணை விழித்தெரித்த சிவபிரானுக்கு |
| ஆள் எனும் அன்பினுல்- | அடிமையுடையனுகி அன்போடும் |
| அணியும் நீற்றை உத்தூளம்பண்ணலால் | (அன்பரெல்லோரும்) அணிந்து கொள்ளும் விபூதியை உடம்பில் உத்தூளனம் (திரிபுண்டரம் ஆகிய விதங்களால்) தரித்தலாலும் |
| மாளுதல் பிறத்தலாம் மழியை மாற்றலாம் | செனன மரணமாகிய வழியை (மார்க்கத்தை) நீக்கிவிடலாமென்பதாம் |

(*பிரஹ்மா முதலிய தேவர்களின் தூண்டுதலால் மன்மதன் தென்றல் காற்றைத் தேராகவும், கரும்பை வில்லாகவும், முல்லை அசோகு செங்கழுநீர் மா தாமரையாகிய புஷ்பங்களை பாணங்களாகவும் ஸ்திரீ சந்திரன் கடலோசையாதி சேனைகளுடன் சுப்பிரமணியர் அவதார நிமித்தமாக கல்லாலில் சனகாதி நால்வருடன் சமாதியிலிருந்த தக்ஷிணாமூர்த்தியிடம் சென்று அம்பெய்திறந்தெழுந்தானென்பது கந்த புராணம்.)
22

மெய்யுறு மன்பினுன் மேவு சாதன
மையமின் ஞானமுண் டாக்கு மாக்கினுல்
வையக மியாவையு மன்னு போதமாக்
கையுறு கூவிளங் கனியிற் காணலாம் 23

(இ - ள்)

| | |
|---|---|
| மெய்யுறும் அன்பினுல் மேவு சாதனம் | உண்மையான சிரத்தையினுல் அடையத்தக்கதாயுள்ள வேதானுவசனுதிகளும் சாந்திதாந்தி முதலியனவும் சிரவண மன்னுதிகளுமாகிய சாதனங்கள் |
| ஐயம் இல் ஞானம் உண்டாக்கும் ஆக்கினுல் | சந்தேகமின்றிய ஞானத்தை உண்டுபண்ணும் (அங்ஙனம்) உண்டாக்கினுல் |
| வையகம் யாவையும் மன்னு போதமா | சர்வப் பிரபஞ்சத்தையும் நிலைபெற்ற சேதன ரூப பிரஹ்மமாக |
| கையுறு கூவிளங் கனியில் காணலாம் | அஸ்தத்திலுள்ள வில்வப் பழம் போல் அதிகாரி அபரோக்ஷமாயறியலாமென்பதாம். 23 |

(அ - கை) உள்ளங்கையிலிருக்கிற வில்வப்பழம்போல சகலதிரிசிய கூட்டத்தையும் பரசிவ ரூபமாக அபரோக்ஷமாக எவன் அறிகின்றுனே அந்த இவனுக்கு என்னுண்டாம் என்ற சங்கைக்கு சமாதானமும் நான்தேசிகனுக்கு விதேகத்தையும் என்னையும் கொடுக்கின்றேன் என்ற சுருதியினுல் தன்னேடும் எல்லாப் பொருளையும் பிரஹமோபதேசம் செய்கின்ற குருவின் பொருட்டு கொடுக்கத்தக்கதென்று உபதேசித்த பொருளையும் கூறுகின்றுர்.]

மேவு பாவம்வெல் லாதுமெஞ்ஞானியை வென்றிடு
மிவனெல்லாம்
பாவ மானது மாதலால் வேதனம் பண்ணவல் லபனுன
தேவ தேவனுந் தேசிகன் றனக்குமுன் செய்பொரு ளுடலாவி
யீவ தேகடனி றைவனெம் பிரானென வேத்திமெய்
யிதயத்தால்

(இ - ள்)

| | |
|---|---|
| மேவு பாவம் மெய்ஞ் ஞானியை வெல்லாது | (செய்யத்தக்கதுஞ்செய்யத்தகாதது மாகப் பொருந்திய புண்ணிய பாவங்களானது தத்துவஞானியை தபிக்காது |
| வென்றிடும் இவன் எல்லாப் பாவம் ஆனதும் | இந்த ஞானி அந்தக் கருமங்களை ஆத்மாக்கியானத்தால் தபிப்பன் (உதாரணம் பகற்கீதை "எறியா வெரி + பொடியாமிதோர் பொருளே") |
| ஆதலால் வேதனம் பண்ணவல்லவனை தேவ தேவனும் தேசிகன் தனக்கு முன் | அவ்வித மகிமையுடையனுதலால் ஞானத்தையுபதேச வாயிலாக உண்டுபண்ணுபவனையும் தேவற்குந் தேவனையும் உள்ள தேசிகனது சந்நிதானத்தில் |
| இறைவ எம்பிரான் என ஏத்தி மெய்யிதயத்தால் ஈவதே கடன் | எமது பெருமானே எமது தலைவனேயென்று உண்மையான பக்தியோடு கூடிய மனத்தினுல் துதித்துக்கொடுப்பது அவசியமான கடமையேயாம் |

24

(குருவின் சந்நிதியில் நின்று துதித்துக் கொடுப்பதாம்)

(அ - கை) அத்தன்மையான குருவைத் தாய் தந்தை யாகக் கருதி யொருக்காலும் துரோகஞ் செய்யக்கூடாது என்னும் இந்த அர்த்தத்தைப் பிரதிபாதிக்கின்றதான யாஸ்க்கரால் உதாகரிக்கப்பட்ட மந்திரத்தைக் கூறுகின்றூர்.

மாய வன்புலத் தெழாவகை தீர்ந்த
தன் வாய்மையான் மயிர்க்காலாற்
பாய வின்னமு திருசெவித் துளைவழி
பாச்சினுன் பதுமத்தாள்
தாயுந் தந்தையுஞ் சுற்றமு மற்றுநற்
றனமுமென் றடைவான்றன்
காய முள்ளள வும்புகழ்ந் தேத்துவான்
கற்றதோர் கலையாலே

25

(இ – ள்)

| | |
|---|---|
| மாயவன் புலத்து எழா வகை | பொய்யாயும் கொடியதாயும் உள்ள சப்தாதி விஷயங்களில் மனமானது பரந்தெழாதபடி |
| இன்னமுது இரு செவிததுளேவழி மயிர்க்காலால் பாய | இனிமையான மோக்ஷாமிர்தத்தை யிரண்டு சுரோத்திராதி வழியால் உள்ளே ததும்பி வெளியே வரும் விதமாக |
| தீர்ந்த தன் வாய்மை யால் பாச்சினுன் | முடிவான தனது உபதேசத்தால் பாயச் செய்தவனுகிய குரு நாதனு டைய |
| பதுமத்தாள் | தாமரை மலர் போலு மிரானின்ற திருவடியானது |
| தாயும் தந்தையும் சுற்றமும் நல்தனமும் என்று அடைவான் | மாதாவும் பிதாவும் சுற்றத்தவர் களும் நல்ல செல்வமும் ஆகு மெனக் கருதி அடைந்த அதிகாரி யானவன் |
| தன் காயம் உள்ள அளவும் கற்றதோர் கலேயாலே புகழ்ந்து ஏத்துவான் | தனது சரீர பதன பரியந்தம் அப் பியசித்த சாஸ்திர வசனங்களால் புகழ்ந்து துதிக்கத்தக்க தென்ப தாம் |

(சத்தாதி விஷயங்களில் மனமானது செல்லாதபடி முடிவான உபதேசத்தால் இனிய அமுதமானது உள்ளே ததும்பி வெளியில் மயிர்க்காலால் வரும்படி இரண்டு சுரோத்திர வாயிலாக பாயும்படி செய்தவனது திருவடித் தாமரையை மாதா பிதா சுற்றம் தனமென்று கருதி அடைந்த அதிகாரி தன் சரீரமுள்ள பரியந்தம் அப்பியாசித்த சாஸ்திர வசனங்களால் புகழத்தக்க தென்பதாம்.) 25

(அ – கை) இந்த மந்திரத்தின் பொருளேயே விரித்துக் கூறுகின்ருர்.

தேசிகன்றன் றிருமேனி சிந்தை செய்யச்
சிவனேச்சிந் தித்தாஞஞ் செம்பொற் ருளிற்
பூசனைசெய் திடவெங்கு மாகி நின்ற
பூரணனே யினிதாகப் பூசித் தாஞ

நாசமிலாச் சிவனும நவின்ருனுண்ட
நாயகன்றன் றிருநாம நவின்ருனுகில்
ஈசனையே யிகழ்ந்தானுங் கண்ணிற் காண
வெழுந்தருளுந் திருக்கோல மிகழ்ந்தா னுகில். 26

(இ - ள்)

| | |
|---|---|
| தேசிகன் தன் திரு மேனி சிந்தை செய்ய | அதிகாரியானவன் ஆசாரியனது வடிவத்தை தியானஞ் செய்ய |
| சிவன் தனைச் சித்தித்தானும் | பரமேஸ்வரனை தியானஞ் செய்த தாகும் |
| செம்பொன் தாளில் பூசனை செய்திட | சற்குரு நாதனுடைய அழகிய திரு வடிகளில் பூஜை செய்ய |
| எங்கும் ஆகி நின்ற பூரணனை இனிதாகப் பூசித்தானும் | சர்வகதமாகிய பரிபூரண ரூப பரமேஸ்வரனை நன்ருகப் பூசித்தவ னுகும் |
| ஆண்ட நாயகன் தன் திருநாமம் நவின்ருன் ஆகில் | தன்னை யடிமையாக்கி யாண்டரு ளிய அருளிறையினது அழகிய நாமத்தை செபஞ் செய்வானுகில் |
| நாசம் இலாச் சிவன் நாமம் நவின்ருன் | நாசரகிதமான பரசிவனது திரு நாமமாகிய பஞ்சாட்சரத்தை செபித்தவனுகும் |
| கண்ணில் காண எழுந்தருளும் திருக் கோலம் இகழ்ந்தான் ஆகில் | சர்ம சட்சுவினுற் காணும்படியாக அருளே திருவுருவாய் எழுந்தரு ளிய குருமூர்த்தியினது வடிவத்தை நிந்திப்பானுகில் |
| ஈசனையே இகழ்ந் தானும் | அவன் சிவனையே நிந்தித்தவ னுகும் |

(ஆதலினுல் முமூட்சு சற்குருவை பரசிவனுகப் பார்த்து முக்கரணங்களாலும் ஆராதனை செய்ய வேண்டு மென்பதாம்.)

26

(அ - கை) ஆசாரியனது திருவடியைச் சார்ந்தவனே அல்லற்படு குழியை விட்டு நீங்கி அனைத்திற்கும் தானுய் நிறைந்து பரம்பொருளாகி விளங்குகின்ருனெனக் கூறுகின்ருர்.

ஆதலினால் வேதவே தாந்தத் துண்மை
யறிவானாய் முழுதுமறிந் தடங்கி னான்றன்
பாதமடை வான்முத்தி வேண்டி னல்லற்
பரப்பையெலாங் கைவிடுவான் பரிவோ டுங்கட்
கோதுவதிற் கிடைப்பதிலை யருளா லெல்லா
மோதினேனிப் பொருண்மெய் யுணர்ந்தோர்செய்யு
நீதிபிழை நினைந்திடவு மில்லை யெங்கும்
நிறைந்தபரம் பொருளாகி நிகழா நின்றான். 27

(இ – ள்)

| | |
|---|---|
| ஆதலினால் | (தேசிகனைப் புகழ்ந்தது மிகழ்ந்ததும் பரமேஸ்வரனுக்கேயுறித்தாகு மகிமையுடையவன்) ஆதலான் |
| முத்தி வேண்டின் | மோக்ஷத்தை விரும்பிய அதிகாரியானவன் |
| வேத வேதாந்தத்து உண்மை அறிவானாய் | (பூர்வபக்ஷமிதுவெனவும் சிந்தாந்தமிதுவெனவும்) வேத வேதாந்தங்களின் எதார்த்தத்தை அறிந்தவனாயும் |
| முழுதும் அறிந்து அடங்கினான் தன் பாதம் அடைவான் | அறிய வேண்டியதை யனைத்தும் அறிந்து அமதியை யடைந்தனாயும் உள்ள பிரஹ்மக் ஞானியின் திருவடியை அடையத்தக்கவன் |
| அல்லல் பரப்பை எலாம் கைவிடுவான் | அதனால் சர்வ துக்கங்களும் விட்டொழிவன் (அவனுக்கு விடுபடுமென்பதாம்) |
| பரிவோடும் உங்கட்கு ஓதுவதில் கிடைப்பது இலை | ஓ! தேவர்களே உங்களுக்கு பிரியத்தோடுங் கூடி உபதேசித்த விஷயத்தில் சேஷமொன்றுமில்லை. |
| இப்பொருள் மெய் யுணர்ந்தோன் | இங்கு கூறிய பிரஹ்மாத்ம வைக்கிய ரூபமாகிய பொருளை உள்ளபடி சாக்ஷாத்கரித்த வித்வான் |
| செய்யும் நீதிபிழை நினைந்திடவும் இல்லை | செய்யா நின்ற விதி நிஷேதங்களைக் கருதுகின்றானுமில்லை (அன்னியர்கள் ஞானியினது விதி நிஷேதங்களை கருதத்தக்கதாகவுமில்லை) |

| | |
|---|---|
| எங்கும் நிறைந்த பரம்பொருள் ஆகி நிகழா நின்றான் | எல்லாவிடத்தும் நிறைந்த பரிபூரண சொரூபமாகி விளங்குகின்றான் என்பதாம். 27 |

(அ-கை) எல்லா உபாயத்தாலும் அடைய முடியாதஅப் பிரஹ்ம வஸ்துவை அடைதற்கு ஆசாரியனது கிருபையை அடைய முயற்சிப்பதே அத்யாவசியம் என்று கூறுகின்றார்.

(இது கவி நாயகர் வாக்கியம்)

ஒருவரா லொருவிரகி லுணர்வொணா ததுபரம
குருவினா லறியவரு மதனைநேர் தருகுரவ
னருளையா தொருவழியினா லடையலா மதுமுயல்கை
கருமமா மெனநிகரில் கருமநான் முகனருளும்

(இ - ள்)

| | |
|---|---|
| ஒருவரால் ஒரு விரகில் உணர்வு ஒணாதது | ஒரு புருஷராலும் ஓர் உபாயத்தினாலும் அறிய முடியாததான பிரஹ்மமானது |
| பரம குருவினால் அறிய வரும் | மேலான சற்குருவினது கிருபையால் அதிகாரிக்குத் தெரிந்துணரும்படி வரும் |
| அதனை நேர் தருகுரவன் அருளை | அத்தன்மைய பிரத்யகபின்னபரமாத்மாவை அபரோக்ஷமாக அடையும்படி செய்யா நின்ற குருமூர்த்தியினது கிருபையை |
| யாதொரு வழியினால் அடையலாம் அது முயல்கை கருமம் ஆம் என | எவ்வித உபாயத்தால் பெறலாமோ அவ்வித வுபாயத்தில் முயற்சித்தலே முமூட்சுக்களுக்கு கர்த்தவ்வியமான செய்கையாமென்று |
| நிகரில் கரும நான் முகன் அருளும் | சமான மற்ற சிருஷ்டித் தொழிலோடு கூடிய சதுர்முகப் பிரஹமாவானவர் இவ்வாறு தனது திருவாக்கால் அருளிச் செய்தன ரென்பதாம் |

10 வது பிரகதாரணிய உபநிஷதார்த்தம்உஸத் கார்க்கி அந்தர்யாமிப்பிராமண தாற்பரிய முரைக்கும் அத்தியாயம் சம்பூரணம் ஆகதிருவிருத்தம் (468)

சற்குருநாதன் துணை

## பதினேராவது அத்தியாயம்

(அ – கை) இந்தப்பிரகாரம் பிரகதாரணிய உபநிஷத்திற்கும் பிரஹ்மான்ம வைக்கிய பரத்வம் உண்டென்று கூறிக் கதிசாமானியம் (சிரேஷ்ட மார்க்கத்தால்) தெரிசிப்பதற்காக எசுர்வேதத்தில் உள்ள கடவல்லி சுவேதாசுவதர உபநிஷத தாற்பரியம் உரைக்கும் இவ்வத்தியாயம் ஆரம்பிக்கின்ருர்:

(இது கவிநாயகர் வாக்கியம்)

பன்னுநன் குருவெனும் பரம்ப ரன்றிறஞ்
சொன்னதன் மையையெலாந் தோன்ற நானுமக்
கின்னமுங் கூறுவ னெனவி யம்பினு
னன்னவா கனத்தினு னமரர்க் கன்பினல் 1

(இ – ள்)

| | |
|---|---|
| பன்னும் நன்குரு வெனும் பரம் பரன் திறம் | யாவராலும் துதிக்கப்பட்டவராயும் மேலான குருவாயுமுள்ள பரமேஸ்வரன் எத்திரம் |
| சொன்ன தன்மையை எல்லாம் தோன்ற நான் உமக்கு இன்னமும் | எனக்குபதேசித்தனரோ அத்தன்மையை யெல்லாம் உங்களுக்கு விளங்கும்படி மறுபடியும் |
| கூறுவன் என அன்பினல் | உபதேசிக்கின்றேன் என்று கிருபையினல் |

அன்னவாகனத்தினன் –அம்சாரூடராகிய பிரஹமதேவர்
அமரர்கட்குஇயம்பினன்–தேவர்களுக்குக் கூறுவாராயினர் 1

(அ – கை) உத்தாலகர் மகனுகிய நசிகேதுவிற்கு எமன் கொடுத்த மூன்றுவரங்களுள் இதில் ஆத்ம வித்யாவிஷயமாக மாத்திரம் சங்கிரகித்துப் பிரஹ்மா உபதேசிக்கின்ருர்.

(மூன்றுவரங்களாவன பிதாவின் பிரசன்னத் தன்மை வரம் (நீண்டகால குரு சிசுரூஷை) அக்கினியின் ஞானரூப வரம். கர்மலக்ஷணம்) ஆத்மஞான ரூபவரம் (ஆத்மவித்யா லக்ஷணம்)

குகையி லிருப்ப தாய்மிகவுங் கூட மாகி யெவ்விடத்துந்
திகழ்வ தாகி யொருவர்க்குந் தெரியா தாகும் சிவனுருவம்
மிகவு நன்ருய் மேலாமவ் வுருவ மெய்மை விளங்குமவன்
சுகதுக் கங்க டீர்ந்துவெறுஞ் சுகசொ ரூப ஞகின்ருன். 2

(இ - ள்)

| | |
|---|---|
| சிவன் உருவம் குகையில் இருப்பதாய் | பிரஹ்மசொரூபம் புத்திரூப குகையின் கண்ணிருப்பதாயும் |
| மிகவும் கூடமாகி எவ்விடத்தும் திகழ்வது ஆகி | பிராகிருதவிஷய ஞானங்களால் மிகவும் மறைந்ததாயும் யாண்டும் விளங்குவதாயும் |
| ஒருவர்க்கும் தெரியாதாகும் | அத்தியந்தம் சூட்சுமம் ஆதலால் யாவர்க்கும் தோன்ருதாயிருக்கும் |
| மேலாம் அவ்வுருவம் மெய்மை | அனைத்திற்கும் மேலாகிய அப்பிரஹ்ம சொரூப எதார்த்தத் தன்மையை |
| மிகவும் நன்ருய் விளங்கும் அவன் | சந்தேகவிபரீதமாகிய பிரதிபந்தங்களின்றி அறிகின்றவன் |
| சுகதுக்கங்கள் தீர்ந்து வெறும் சுக சொரூபன் ஆகின்ருன் | இன்பதுன்பமான (சர்வ துக்கங்களினின்றும்) வீடுபட்டு அத்தியந்தம் நிரதிசய சுகசொரூபனுகின்ருன் 2 |

(அ - கை) தர்மத்தினின்றும் அன்னியம் என்னும் மந்திரார்த்தத்தைச் சங்கிரகித்துக் கூறுகின்ருர்.

தருமா திகட்கும் பூதங்க டமக்கும் வேரு யாதொன்
றருமா மறைக ளறைகின்ற தரிய பிரம சரியாதி
சரியா நின்ரு ரியாதுபெற வதுதற் பரமக் கரமதனைத்
திரமா யறியு மவன்சிந்தை செய்வ தெல்லாஞ் சித்திக்கும் 3

(இ - ள்)

| | |
|---|---|
| தர்மாதிகட்கும் | சாஸ்திரீயதருமானுஷ்டான ரூப புண்ணியத்திற்கும் அவிகித (பாவ கர்ம) ஆசரணரூபபாவத்திற்கும் |
| பூதங்கள் தமக்கும் | திரிகாலாவச்சின்னத்திற்கு மேலாய் |

| | |
|---|---|
| வேருய் யாதொன்று அருமா மறைகள் அறைகின்றது | பரமாக யாதொன்ருன தத்துவத்தை அறியும்படி மாக்ஷிமை பொருந்திய சுருதிகள் பிரதிபாதிக்கின்றனவோ |
| அரிய பிரஹ்ம சரியாதி இயாதுபெற சரியா நின்றனர் | குருகுல வாசாதி லக்ஷணத்தையுடைய அரிய பிரஹ்மச்சரியம் முதலியவற்றை யாதொரு தத்துவத்தை யடையும் பொருட்டு முமூட்சுக்கள் அனுஷ்டிக்கின்ருர்களோ |
| அது தற்பரம் அக்கரம் | அத்தத்துவமே பரசிவ ரூபமும் அக்ஷர (நாசமற்ற) ரூபமும் ஆம் |
| அதனை திறமாய் அறியும் அவன் | (இரணிய கருப்பாதி லக்ஷணமான அபரப்பிரஹ்மமாய் உபாசிக்கத் தக்கதாயும், சமஸ்த உபாதிகளும் விடுபட்ட சச்சிதானந்த ஏகரசமாய பரப்பிரஹ்மமாய் அறியந்தக்கதாயும் உள்ள புரணவாத்மகமான) அவ்வக்ஷரத்தை (தனது அதிகாரத்திற்குத்தக்க) திடமாக வுபாசித்தவன் (அல்லது) அறிந்தவன் |
| சிந்தை செய்வது எல்லாம் சித்திக்கும் | அடைய இச்சித்ததெல்லாம் சித்திக்கும் (இச்சித்த சகுணமோ அல்லது நிற்குணமோ அடையப்படும். 3 |

அந்தப் பரமே யெப்பொருட்கு மாலம் பனமா வதுவதனைச்
சிந்தைக் கேறத் தெளிவுற்ருன் செனியான் மரியான் ஒரு திசையில்
வந்துற் றிலனேர் வடிவமில னதனுல் வரவு போக்காகும்
இந்தத் தொழில்களென்றுமில னெங்குந் தானு யிருக்கின்ருன். 4

(இ - ள்)

| | |
|---|---|
| அந்தப் பரமே எப்பொருட்கும் ஆலம்பனம் ஆவது | பிரண வாத்மகமான அவ்வக்ஷர ரூபமே சர்வ பதார்த்தங்களுக்கும் பற்றுக்கோடாயிருப்பது |
| அதனைச் சிந்தைக்கு ஏறத் தெளிவுற்ருன் | பராபர பிரஹ்மாத்ம வடிவத்தால் அந்தப் பிரணவாத்மகமான ஆலம்பனத்தை அறிந்தவன் |

(அபரப் பிரஹ்ம ஞானத்தினுல் (உபாசனையால்) அர்ச்சராதி மார்க்கமாக பிரஹ்ம லோகத்தை யடைகின்றுன் பரப் பிரஹ்ம ஞானத்தை அடைந்தவன் பிரஹ்மலோகமாகிய பிரஹ்மத்தோடு சுபாவசித்தாபேதத்தை இருதய குகையிலடைந்திருக்கின்றுன் என்பதாம்.)

[அந்தப் பிரணவத்தினுல் அறியத்தக்க பரப்பிரஹ்ம சொரூப மித்தன்மைத்தெனக் கூறுகின்றுர்.]

சென்யான் மரியான் – உற்பத்தி நாசமற்றவன்

[தொய்தத்தைப் போல ஆத்மாவும் ஏன் உற்பத்தியாகாதெனச் சங்கித்துக் கூறுகின்றுர்.]

| | |
|---|---|
| ஒரு திசையில் வந்து உற்றிலன் | (ஆத்ம பின்னமான வனைத்தும் அசத்தாகலின்) ஒரு காரணத்தினின்றுஞ் செனிப்பவனல்லன் |
| ஓர் வடிவம் இலன் | – அவன் ஒரு அவயவ மில்லாதவன் |
| அதனுல் வரவு போக்கு ஆகும் இந்தத் தொழில்கள் ஒன்றும் இல்லாதவன் | அக்காரணத்தால் கமனுகமன மாகிய இத்தொழிகளொன்றும் தன்னிடத்தில் இல்லாதவன் (பின்னையோ) |
| எங்கும் தானுய் இருக்கின்றுன் | சர்வ தேகங்களிலும் தானெருவனே யிருக்கின்றுன். |

(இவையனைத்தும் வஸ்துவின் லக்ஷணம் இதனைக் கவி நாயகர் பிரஹ்ம வித்து லக்ஷணமாகக் கூறினர்.)

(அ – கை) ஆத்ம லக்ஷணம் கூறுகின்றுர்.]

பொன்றவுட லைத்துணிசெய் போதுமிறை பொன்றுன்
கொன்றிடுத லுங்கொலை யுறுந்தொழிலு மில்லான்
நின்றுபெறு மைச்சிறுமை யிற்பெருகி நுட்பாய்
என்றுமித யக்குகையி லேயிலகு கின்றுன்.　　5

(இ – ள்)

| | |
|---|---|
| பொன்ற உடலைத் துணிசெய் போதும் இறை பொன்றுன் | பரசிவன் சரீரத்தை நாசமாகும்படி ஆயுதங்களால் சேதித்தபோதும் நாசமாகான் |

[உலகத்தில் ஓரான்மா மற்றோரான்மாவைக் கொன்றவனாகக் காணப்படுதலின் அவ்வான்மாக்கள் கொல்வோன் கொல்லப்படுவோன் என்னும் ரூபத்தால் சர்வப் பிராணிகட்கும் சம்மதமாகுமென்று சங்கித்துக் கூறுகின்றார்.]

கொன்றிடுதலும் கொலை உறும் தொழிலும் இல்லான் — கொலை செய்கின்ற தொழிலும் கொல்லப்படுதலும் இல்லாதவனாகும்

பெருமையில் பெருகி — பெரிதுக்கும் பெருதாயிருப்பவனும்

சிறிதுக்கும் நுட்பாய் நின்றும் — அணுவிற்கும் அணுவா (மனோ வாக்குகளுக்கெட்டாதவனா) யிருப்பவனும்

என்றும் இதயக்குகையிலே இலகுகின்றான் — எப்போதும் பிரஹ்மாதி ஸ்தம்ப பூச்சி பரியந்தமான சர்வ பிராணிகளின் இருதயமாகிய குகையின் கண் ஆத்ம பூதமாக விளங்குகின்றான் என்பதாம். 5

அண்ணியனு மாகுமதி தூரியனு மாகும்
வண்ணமில தானமகி மாவருளி னாலே
கண்ணினிகழ் வாமலது காணவெளி தோதான்
றிண்ணமுற நானறிவன் வேறுதெளி வாரார். 6

(இ - ள்)

வண்ணம் இலது ஆகும் மகிமா — அரூபமாயும் அபரிச்சின்னமாயும் உள்ள மகாதேவன்

*அண்ணியனும் ஆகும் அதிதூரியனும் ஆகும் — சுத்தாந்தக்கரணமுடையவர்க்கு சமீபனும் அஃதின்றியவர்க்கு அத்யந்தம் சேய்மையனுமாவன்

அருளினால் — இந்திரிய அந்தக்கரணங்களின் பிரசாதத்தால்

(விஷய உபயோகத்தினால் செனித்த சஞ்சல சேஷத்துவ (மனக்கலக்க) நிவர்த்தியால் - வசீகார வைராக்கியத்தால்.)

* (அ+ம்) தூ÷ம் = இருந்து கொண்டே தூரம் போகும் படுத்துக்கொண்டிருந்தே எங்கும் போகும் என்பது 9-ம் சுலோகம் மூலார்த்தம்.

| | |
|---|---|
| கண்ணில் நிகழ்வாம் அலது காண எளிதோ தான் | சுத்த புத்தியின் கண்ணே விளங்கும் அன்னிய வேறு உபாயங்களால் அம்மகா தேவனை அறிய சுலபனோ (அன்று) |
| திண்ணம் உற நான் அறிவன் வேறு தெளிவார் ஆர் | திடமாக எமனாகிய நான் அறிவேன் அன்னியர் அம்மகாதேவனை யெப்படி அறிவர். 6 |

(அ - கை) மேலும் ஆத்மாவின் எதார்த்தத்தையும் அதனது ஞான பலத்தையும் தரிசிப்பிக்கின்றார்.

நின்றுமுட றோறுமுட லின்றிநிகழ் வானாய்ப்
பொன்றுமத னோடுமொரு பொன்றுதலு றானா
யென்றுநிலை யாயுலக மெங்குமொரு தானா
மொன்றையறி வானிடர்க ளொன்றிலுழ லானால். 7

(இ - ள்)

| | |
|---|---|
| உடல் தோறும் நின்றும் உடல் இன்றி நிகழ்வானாய் | சரீரங்களிலிருந்தும் சரீரமில்லாதவனாய் விளங்குகின்றவனாயும் |
| பொன்றும் அதனோடும் ஒரு பொன்றுதல் உறானாய் | அனித்தியங்களான தேவ பிதிர் மனுஷ்யாதி சரீரங்களிலிருந்தும் (ஆகாயம் போல் தான்) ஓர் சிறிதும் நாசத்தை யடையாதவனாயும் |
| என்றும் நிலையாய் உலகம் எங்கும் ஒருதானும் | எப்போதும் நிலைத்த வஸ்துவாயும் சர்வ ஜெகத்திலும் ஏகவியாபகனாயுமுள்ள தானும் |
| ஒன்றை அறிவான் இடர்கள் ஒன்றில் உழலான் | ஆத்மரூபமான அத்விதீயப் பிரஹ்மத்தை சாக்ஷாத்கரித்த ஞானியானவன் யாதொரு துன்பத்திலும் வருத்தத்தை யடையான். (ஆல் - அசை) 7 |

(11×ம்) இந்த ஆத்மா படிப்பாலாவது மேதையாலாவது பல கேள்வியாலாவது அடையக்கூடியதன்று எதை இவன் கோருகிறானோ அதாலேயே அடையக்கூடியது இந்த ஆத்மா தனது நிஜரூபத்தை விளக்கி காட்டுகிறது. மொழி பெயர்க்காமல் விடுபட்டர்த்தம்.

(அ – கை) ஆத்ம ஞான கதி சாதனங்களைத் தரிசிப்பிக்கின்றார்.

இகழுபுன் னெறியை விட்டொருப் படுமிங்
கிந்திய மனங்கண்மீண் டிருக்குந்
தகவினை யுடையா னருள்பெறு மந்த
வருளினாற் றத்துவஞ் சாரும்
மிகபர மிரண்டும் புசிப்பவ னிவனிங்
கெவ்விடத் தேயுள னிங்கன்
றிகழுற மிகுத்த தேவரு மறியார்
மனிதரோ வினித்தெளி வுறுவார். 8

(இ – ள்)

| | |
|---|---|
| இகழு புல் நெறியை விட்டு | நிந்திக்கத்தக்க பாவமார்க்கத்தை விடுத்து |
| இந்தியம் மனங்கள் மீண்டு ஒருப்படும் இருக்கும் தகவினை உடையான் அருள் பெறும் | சுரோத்ராதி இந்திரியங்களும் மன முதலியவைகளும் தத்தம் விஷயங்களினின்றும் திரும்பியேகாக்கிரமாயிருக்கும் தன்மையினை யுடைய புருஷன் (குரு சாஸ்திரங்களால் உண்டுபண்ணப்படுவதான) அபரோக்ஷஞானத்தை அடைவான் |
| அந்த அருளினால் தத்துவம் சாரும் | அவ்வபரோக்ஷ ஞானத்தினால் பரப்பிரஹ்மத்தை அடையா நிற்பன் |
| இகபரம் இரண்டும் புசிப்பவன் எவ்விடத்தே உளன் | பிரஹ் க்ஷத்திரியாதிகளால் உபலக்ஷிதமான சர்வ ஜெகத்தையும் அன்னமாகவும் சகலத்தையும் சம்மாரம் பண்ணும் காலனாகிய மிருத்துவை உபதம்சமா(கறியா)கவும் புசிப்பவனாகிய பரமாத்மா யாண்டு எவ்வித லக்ஷணத்தை யுடையவனாக விருக்கின்றான். (என்பதாக) |
| இங்கு இங்கன் திகழ் உற மிகுத்த தேவரும் அறியார் | இவ்விடத்து இந்தப் பிரகாரம் விளங்கும்படி சத்துவ குணம் மிகுந்த தேவர்களே அறியாரென்னில் |

| | |
|---|---|
| மனிதரோ இனித் தெளிவுறுவார் | இரஜோகுணமிகுந்த மனிதர்களோ இனி அறிந்து கொள்ளச் சமர்த்தராவர். (பின்னை ஆகார் அவ்வளவு துர்லபமென்பது பொருள்.) |

8

(அ-கை) சொல்லிய அர்த்தத்தை ரதரூப கற்பனையால் பிராப்தப் பிராப்தவ்விய (அடைபவனும் அடையத் தக்கதாயும் உள்ள) பாவத்தால் விரிப்பான் உபாதியால் வந்த சீவேசுரர்களுடைய லோகசித்தமான பேதத்தை அனுவதிக்கின்றது "சத்தியம் போல் புசியா நின்றனர்" என்னும் மந்திரத்தின் பொருளையும் சீவேசுரருக்குப் பேதமுண்மையன்றென்பதே அபிப்பிராயம் என்பதையும் வெளியாக்கும் பொருட்டு அதைப் பிரதி பாதிக்கின்ருர்.]

ஏயபே ருலகில் வினைப்பய னுகர்ந்தங்
　　கிதயமே மருவுவா ரிருவர்
சாயையா தபமா கின்றனர் சீவ
　　சங்கரர் என்றிடத் தகுவார்
ஓயுமா றறவே யுண்பவன் சீவ
　　னூட்டுவான் சிவனிவர் தமக்கிங்
காயபே தந்தான் உபாதியால் வந்த
　　தல்லதபே தமே யாகும்.

9

(இ-ள்)

| | |
|---|---|
| ஏய பேர் உலகில் வினைப்பயன் நுகர்ந்து | தன்னால் செய்யப்பட்ட கருமத்தின் பலரூபமாகப் பொருந்திய பார்க்கப் படுவதாயுள்ள இந்தத் தூல சரீரத்தில் கரும பலன்களைப் புசித்து |
| அங்கு இதயமே மருவுவார் இருவர் | சத்துவ குண பரிணம புத்தியில் இருப்பவர் இருவர் |
| சாயை ஆதபம் ஆகின்றனர் | நிழலும் வெயிலும் போல விலக்ஷணமுடையவராவர் |
| சீவ சங்கரர் என்றிடத் தகுவார் | அவர்களே சீவனும் ஈசுவரனும் என்று சொல்லத்தக்கவர்கள் |

| | |
|---|---|
| ஓயும் ஆறு அறவே உண்பவன் சீவன் | நிரந்தரம் கரும பலன்களை புசிப்பவன் சீவனுகும் |
| ஊட்டுவான் சிவன் | அப்பலன்களை உண்பிப்பவன் பரமேஸ்வரனுகும் |
| இவர் தமக்கு இங்கு ஆய பேதம் | இந்தச் சிவ சீவர்கட்கு இவ்விடத்து உண்டாகிய பேதம் |
| உபாதியால் வந்தது அல்லது அபேதமே ஆகும் | சுத்த சத்துவ குணமாயை மலின சத்துவ குண அவித்தையாகிய உபாதியால் வந்ததே யன்றி வாஸ்தபத்தில் இவர்களுக்கு அபேதமே வடிவமாகும். (என்பதாம்) 9 |

(அ - கை) அவித்யா வுபாதிலுல் உண்டான சீவனுக்கு அவ்வவித்தையிலுல் சம்சாரம் வருவதும் வித்தையிலுல் மோக்ஷம் வருவதும் ஆகிய இவ்விரண்டும் இரதரூப கற்பனையால் பிரதி பாதிக்கின்ருர்.]

தேசினிகழ் தேருடல்செ லுத்துமதி பாகன்
பாசமன மாமது பிணித்துவரு பாய்மா
வீசுபுல னும்விடய வீதிமிசை தானும்
ஈசனிவை யாதும்விளை யாடியிடு கின்ருன். 10

(இ - ள்)

| | |
|---|---|
| உடல் தேசில் நிகழ்தேர் | சரீரமே பிரகாச ரூபமாய் விளங்கு மிரதமாம் |
| மதி செலுத்தும் பாகன் | புத்தியே அத்தேரை நடத்தும் சாரதியாம் |
| மனம் பாசம் ஆம் | (சங்கற்பவிகல்பரூப) மனமே கடிவாளமாம் |
| வீசு புலன் அது பாய்மா ஆம் | (விஷயங்களில்) பரந்து செல்லா நின்ற இந்திரியங்களே (மனமென்னும் கடிவாளத்திலுல் பந்தித்து வாரா நின்ற) குதிரைகளாம் |
| தான் ஆம் ஈசன் | (கர்ம பல போக்தாவாயும் சம்சாரியாயும் உள்ள) ஆத்மாவே இரதஸ்வாமியாம் (இரதத்திலிருப்பவன்) |

| | |
|---|---|
| விடய வீதிமிசை | சப்தாதி விடயங்களாய வீதியின் கண்ணே |
| இவை யாதும் விளை யாடி இடுகின்றான் | (இவ்வாத்மா வான ரதிகன்) இவ்வித சாமக்கிரிகள் அனைத்தோடுங் கூடி கிரீடிக்கின்றான் |

(தேகேந்திரியங்களோடுங் கூடிய ஆத்மாவே போகங்களைப் புசிக்கின்றான் அன்றி சின்மாத்திர ரூபமான ஆத்மா புசிப்பவனன்றாம் அஃதேனெனில்) "மற்றொருவன் புசிக்காதவன்" என்னுஞ் சுருதியாலென்க.)

(அ - கை) முன் சொல்லிய ரதரூப கற்பனையை முன்னிட்டு அவிவேகிக்கு இந்திரியங்கள் வசமாகாத தன்மையையும் விவேகிக்கு வசமாந் தன்மையையும் கூறுகின்றார்.]

யோகமன மொன்றியறி வாமுணர்வி லானுக்
காகமுறு மைம்புலவ யங்கள்வய மாகாப்
பாகனைய றிந்தபரி போலமன னத்தே
யாகுமதி யாளனைய றிந்துவய மாமால். 11

(இ - ள்)

| | |
|---|---|
| யோக மனம் ஒன்றி அறிவு ஆம் உணர்வு இலானுக்கு | சமாகித சித்தத்தோடுங் காரியாகாரியம் (இது செய்யத்தக்கது இது செய்யத்தகாதது) என்னும் விசாரத்தால் ஆத்மக்கியானமின்றிய புருஷனுக்கு |
| ஆகம் உறும் ஐம்புல வயங்கள் வயம் ஆகா | சரீர ரூபமாகிய இரதத்தின் கண்ணே பொருந்திய பஞ்சேந்திரியங்களாகிய குதிரைகள் சுவாதீனமாகாவாம் |
| பாகனை அறிந்த பரி போல | சாரதியின் பலத்தைக் குறிப்பால் அறிந்த குதிரையைப்போலும். (பதியின் குணமறிந்த பாரியைப் போலும்) |
| மனனத்தே ஆகும் மதியாளனை அறிந்து வயமாம் | சமாகிதத்தோடும் விசார ரூபமாகிய விவேகத்தோடுங் கூடிய ஆத்மக்கியானமுள்ளவனுக்கு இந்திரியங்களான குதிரைகள் தெரிந்து சுவாதீனமாகும். (என்பதாம்) |

(அ - கை) இவ்விருவரும் கிரமமாகச் சம்சார மோக்ஷங்கட்கு அதிகாரிகள் என்று கூறுகின்ருர்.]

வருத்தமில தாமனன மற்றமதி கேடன்
பரத்தைய டையான்மிகு பவத்தையடை கின்ருன்
ஒருக்குமன ஞலுணர்வு கூடினவன் வீடாய்
இருக்குமிட மேவியதி னின்றுமிளே யாஞல். 12

(இ - ள்)

| | |
|---|---|
| வருத்தம் இலதாம் மனனம் அற்ற மதி கேடன் | சமாகிதத்தோடும் சிரம ரகிதமான விசாரக்கியானமுமில்லாத புத்தி யீனஞனவன் (முற்கூறிய |
| பரத்தை அடையான் மிகு பவத்தை அடைகின்ருன் | பிரணவாத்மகமான பிரஹ்மத்தை அடையான் (அதுமாத்திரமன்று பின்னேயோ) செனன மரணுதி லக்ஷணத்தையுடைய மிகுந்த சமுசாரத்தை யடைகின்ருன் |
| ஒருக்கு மனஞல் உணர்வு கூடினவன் | சமாகிதத்தோடும் விசார ரூபமான வீவேக ஞானத்தோடுங் கூடிய புருஷன் |
| வீடாய் இருக்கும் இடம் மேவி அதில் நின்றும் இளேயான் | விடுபட்டிருப்பதாக முற்கூறிய பரப்பிரஹ்மத்தையடைந்து அப்பதத்திலிருந்து மீண்டும் செனன மரண ரூபமான சிரமத்தை யடையான் என்பதாம். (ஆல் - அசை) |

(விசாரமுள்ளவன் மோக்ஷம் அடைவன் விசாரமற்றவன் பிறப் பிறப்பான துக்கத்தை அடைவனென்பதாம்.) 12

(அ - கை) அந்தப் பரத்தை மேலும் விசேஷித்துக் கூறுகின்ருர்.

பொருந்து ஞானமா மதியிஞன் மனத்தளே பூட்டியைம்
புலப்பாய்மா
பரந்தெ ழாவகை தன்வச மாக்கிஞன் பரம்பத மடைகின்ருன்
றிருந்து மாலுடைப் பதமது வதுபரஞ் சிவனெனுந் திருநாமத்
திருந்த வாறுதா னிருந்தவாறன்றிவே றிணேயிலா
விறையாவன். 13

(இ - ள்)

| | |
|---|---|
| பொருந்து ஞானம் ஆம்மதியினுல் | ஆத்மானுத்மா விவேக ஞானரூப புத்தியாகிய சாரதியினுல் |
| மனத்தனை பூட்டி ஐம்புலப் பாய்மா | மனமாகிய கடிவாளத்தைப் பூட்டிய பஞ்சேந்திரியங்களாகிய குதிரைகள் |
| பரந்து எழாவகை தன்வசம் ஆக்கினுன் | சப்தாதி விஷயங்களில் பரந் தெழுந்து செல்லாதபடி சுவாதீன மாகத் திருப்பிக்கொண்டவன் |
| பரம்பதம் அடைகின்ருன் | பரமபதத்தை (ஆத்மக்கிஞானத் தால் சம்சாரமார்க்க தீரமாகிய பிரஹ்மத்தை) அடைகின்ருன் |
| அது திருந்து மாலுடைப்பதம் | அப்பிரஹ்மபதமே திருத்தமாகப் பொருந்திய விஷ்ணுபதமாம் (அது வியாபக பிரஹ்மபதமாம்) |
| பரம் அது சிவன் எனும் திருநாமத்து இருந்த வாறுதான் இருந்தவாறு அன்றி | பரமாகிய அதுவே சிவன் என்னும் திருநாமத்தோடும் தானிருந்த வண்ணமே இருந்ததே அல்லாமல் |
| வேறு இணை இலா இறை யாவன் | வேறு சமானமற்ற எப்பொருட்கும் இறைவன் யாவன் (இன்று) 13 |

(அ - கை.) இங்ஙனம் கூறிய சொரூபமே லீலையினுல் உமை யொரு பாகமான சிவமாயிற்று சச்சிதானந்த ஏகரச மான இந்தப் பரசிவ சொரூபமே உருத்திரன் முதலிய குண மூர்த்திக்கும் மற்றைய இந்திராதி தேவர்கட்கும் பரமபத மென்று கூறுகின்ருர்.

அருள தாலுரு வொன்றியே நின்றுள வகில நாயகனென்றும்
பொருள தேபர மாம்பத மியாவரும் புகலிட மதுவாகும்
கருணை மேவிய சிவனெழிங் துருத்திரன் கண்ண ஞன்முக
னென்பார்
இருள தாகுமே பரம்பத மெனும்படி யெங்ஙனே யிமையோரே 14

(இ - ள்)

| | |
|---|---|
| அருளதால் உருவு ஒன்றியே நின்றுள | திருவருளாகிய பராசத்தியோடு திருவுருவத்தைப் பொருந்தி நிற்கின்ற |

| | |
|---|---|
| அகில நாயகன் என்னும் பொருளதே பரம்பதம் | செகந்நாயகனென்னும் மகாதேவ ரூப வஸ்துவே மேலாகிய பரமபதமாம் |
| இயாவரும் புகலிடம் அதுவாகும் | சுகத்தை விரும்பிய சகலரும் அடையக்கூடிய ஸ்தானமும் (அத்வைதமும்) அதுவேயாம் |
| கருணை மேவிய சிவன் ஒழிந்து | கிருபையே சொருபமாகப் பொருந்திய சிவபெருமானையல்லாமல் |
| உருத்திரன் கண்ணன் நான்முகன் என்பார் இருளதாகுமே | உருத்திரன் விஷ்ணு பிரஹ்மாவாகிய இவர்கள் ஒளியற்றவரே |
| இமையோரே பரம் பதம் எனும்படி எங்ஙனே | ஏ! தேவர்களே (நசிகேது) பரமபதமெனும்படி எங்ஙனம் உரியவராவர் பின்னையோ ஆகாரென்பதாம் 14 |

(அ - கை) இந்திரியாதிகளுக்கு உத்திரோத்திரம் (ஒன்றற்கொன்று) சூட்சுமத்வம், வியாபகத்வம், பிரத்யகத்வம் தாரதம்மியக் கிரமமாகக் கூறிப் பரசிவத்திற்கு நிரதிசய சூட்சுமத்வாதிகளை நிரூபிக்கின்றார்.

இந்தி யங்களிற் பொருளெனும் பரமன மிவற்றினும் பரமதீதில்
புந்தி நற்பரம திலுமான் பரமெலாம் பொன்றிய தெரியாமை
யந்த மானினும் பரமவ்வி யத்தமா மதிற்பரம் புருடன்றன்
இந்த மெய்ப்பரம் புருடனிற் பரம்பிறி தில்லைமே லிவனேயாம் 15

(இ - ள்)

| | |
|---|---|
| இந்தியங்களில் பொருள் எனும் பரம் | சூட்சும பூதமும் சப்தாதி விஷயங்களும் சுரோத்திராதி இந்திரியங்களைப் பார்க்கிலும் பரமாம் (தாம் பிரகாசிக்க இந்திரியங்கள் ஆரம்பிக்கப்படுதலால் (உண்டாக்கப்படுதலால்) விஷயங்கள் பரமாம்) |
| இவற்றினும் மனம்பரம் | இப்பொருள்களைப் பார்க்கிலும் (வியாபகமாயும், சூட்சுமமாயும் பிரத்யக்காயும் இருத்தலால்) மனம் ஆரம்பகபூதம் பரமாம் |

| | |
|---|---|
| அத்தில் புந்தி நல்பரம் | அம் மனத்தைப் பார்க்கிலும் (வியாபகத்வாதியாயிருத்தலால்) புத்தியாரம்பகபூதம் சூட்சுமமான பரமாம் |
| அதிலும் மான்பரம் | அந்த விசேஷ அகங்காரரூப புத்தியைப் பார்க்கிலும் (வியாபகத்வாதிகளாயிருத்தலால்) சமஷ்டி புத்தியாகிய சாமானிய அகங்கார ரூப மகானுத்மா பரமாம். |
| அந்தமானினும் எலாம் பொன்றிய தெரியாமை பரம் | அந்த மகானுத்மாவைப் பார்க்கிலும் (வியாபகத்வாதிகளாயிருத்தலால்) சகல காரியங்களின் லயஸ்தானமாகிய அவ்வியத்தம் பரமாம் |
| அவ்வியத்தம் ஆம் அதில் புருடன் பரம் | அவ்வியத்தத்தைப் பார்க்கிலும் சூட்சுமதரனுய் சர்வகாரணபூதனுகிய பிரத்யக்காத்மா பரமாம் |

[இவனினும் அன்னியன் சூட்சுமனுயுளன் என்னும் சங்கையை நிராகரிக்கின்ருர்.]

| | |
|---|---|
| இந்த மெய்ப்பரம் புருடனில் பரம் பிறிது இல்லை மேல் இவனே யாம் | இந்த சிற்கனப் பிரத்யகான்மாவை பார்க்கிலும் பரமாக வேருெரு வஸ்துவானது இல்லையென்பதாம். |

(இந்தப் பிரகாரம் சூக்ஷுமத்வ பிரத்யகாத்மத்வாதி சர்வதர்மங்களுக்கும் இவனே பரியவசானம் (முடிந்த) பூமியாம் என்ற பரமகாஷ்டையுமாம், அடையாநின்றவர்களான சம்சாரிகட்குப் பரமமான கதியுமாம்) ஆரம்பகம் – காரணம், ஆரம்பம் – காரியம்.)

(அ – கை) சுருதியில் கூறிய புருஷ பதத்திற்கு உரை செய்கின்ருர்,

புருட னென்றுரை செயப்படு வதுபரி பூரண மாகின்ற
சொரூப நின்றவா நிற்கவிங் கருளொடு தோன்றவல் லவன்ருனே
அரனு மன்றுமா லயனுமன் றெவர்க்குமுன் னாகியே யாவர்க்குந்
தெரிவ ருஞ்சிவ னவனேயிங் கொருங்கிய சிந்தையார் தெளிவாரே. 16

(இ – ள்)

| | |
|---|---|
| புருடன் என்று உரை செயப்படுவது பரி பூரணம் ஆகின்ற சொரூபம் | திரிவித பரிச்சேத ரகிதனுயும் சத் யக்ஞ் ஞானதி லக்ஷணத்தை யுடை யவனுயும் உள்ள பரசிவனே சாக்ஷாத் புருட சத்தத்திற்கு அர்த்தமாம் |
| தானே நின்றவா நிற்க | அவனே யிருந்தவண்ண மிருக்க |
| இங்கு அருளொடும் தோன்ற வல்லவன் | இங்கு லீலேயினுல் தன்னுடைய சிவசத்தி ரூபத்தைக் காட்டும் பொருட்டு சாம்பமூர்த்தியை (அர்த்தநாரீஸ்வர ரூபமாக)த்தரித் தருளும் சமர்த்தனுகின்ருன் |
| அரனும் அன்றுமால் அயனும் அன்று | உருத்திரன் அவனினும் வேறன்று விஷ்ணு பிரஹ்மாவாகிய இவர்கள் அவனினும் வேருனவர்களன்று (அவனது சொரூபமே) |
| எவர்க்கும் உள்ளா கியே யாவர்க்கும் தெரிவு அரும் சிவன் அவனே | சர்வாந்தரராயும் யாவராலும் அறிதற்கசக்கியராயும் உள்ள பரமேஸ்வரனே |
| இங்கு ஒருங்கிய சிந்தையார் தெளிவாரே | குரு சாஸ்திர சமஸ்க்காரத்தினுல் உண்டான ஏகாக்கிர சித்தமுடைய புருடரறிவார்களென்பதாம். 16 |

(அ – கை) அதனது தெரிசனுேபாயத்தை கூறுகின்ருர்.

வாக்கது மனத்திடை வைக்கு மம்மனம்
போக்கிடும் புந்தியுட் புந்தி மானிலே
ஆக்கிடு மந்தமா னிவைய னேத்திலுங்
தாக்கறுஞ் சாந்தமாங் தன்னிற் சாந்தமாம். 17

(இ – ள்)

| | |
|---|---|
| வாக்கது மனத்திடை வைக்கும் | வாக்கு முதலிய சர்வேந்திரியங் களையும் மனத்தின் கண்ணே லயஞ் செய்யத்தக்கது |

| | |
|---|---|
| அம்மனம் புந்தி உள் போக்கிடும் | அம்மனத்தையும் விசேஷ அகங்காரமாகிய நிச்சய ஞானரூப புத்தியின் கண்ணே யொடுக்கத்தக்கது |
| புந்தி மானிலே ஆக்கிடும் | அந்தப் புத்தியையும் சாமானிய அகங்காரமாகிய மகானுத்மாவினிடத்திலொடுக்கவும் |
| அந்த மான் | – அந்த மகானுத்மாவையும் |
| இவை அனைத்திலும் தாக்கு அறும் சாந்த மாம் தன்னில் சாந்தமாம் | சர்வ நாம ரூபங்களுமிறந்த நிர்விகார சாக்ஷி சின்மாத்திர ரூப முக்கியாத்மாவில் ஒடுங்கச் செய்வதாம் |

[புத்தி – நிச்சய ரூப ஞானம். மான் – புத்தியின் சமஷ்டிபூதமும் சூட்சும தரமுமாகிய இரண்ய கர்ப்போபாதி. அந்தமான் – மகாத்மா வென்னும் பெரிய இரண்ய கர்ப்பத்தை (தாக்கறுஞ் சாந்தமாந்தன்னில் சாந்தமாமென்பது – அவ்வியத்தத்தில் ஒடுக்கக்கூடாதென்பதாம்) வாக்கென்பது தசேந்திரிய உபலக்ஷணமாம் ஒன்றிலொன்று ஆக்குவது பின்னுள்ள வஸ்துவைப் பாவித்து முன்னுள்ள வஸ்துவின் வியாபாரத்தை விடுதலாம் தான் அதைப் பாவித்தால் இதுதானே விடுமென்பதாம்.] 17

(அ – கை) பிருதுவியாதி பூதங்கட்கே உத்திரோத்திரம் ஒவ்வொரு குணங்கள் நியூனமாயிருத்தலால் சூக்ஷுமதாரதம்மியங் காணப்படுகிறது அங்ஙனமானால் அந்தச் சத்தாதி சர்வ குணங்களுமின்றிய பிரத்யகாத்மாவிற்கு நிரதிசய சூக்ஷுமத்தன்மை யுண்டென்பதில் சொல்ல வேண்டுவதென்னை என்னும் அபிப்பிராயம் கொண்டு அவைகளின் நிசேஷத்தால் ஆத்ம சொரூபத்தைத் தெரிசிப்பிக்கின்றார்.

ஒலிமுத லுரைப்பன வொன்று மின்றியே
யெலையில தாகியெப் பொருட்டு மேலதாய்ச்
சலமதின் றியவது தன்னைத் தம்முளே
நிலைபெற வறிந்தவர் மரண நீங்குவார். 18

(இ – ள்)

| | |
|---|---|
| ஒலி முதல் உரைப்பன ஒன்றும் இன்றியே | சொல்லப்படுவனவாகிய சப்தாதிகள் யாதொன்று மின்றியதாயும் |

(அதாவது அசப்தமோ அரூபமோ ஸ்பரிசிக்கக் கூடாததோ நாசமற்றதோ ரசமற்றதோ நித்தியமோ கந்தமற்றதோ என்பது மூலார்த்தம்.)

எலே இலது ஆகி – அனாதி அனந்தமாயும்

(அதாவது: (1) எது எல்லாவிடத்துமின்றி யாதேனும் ஓரிடத்திருக்கின்றதோ அது தேசத்தால் அந்தமுடையதாம். உதாரணம் கடம். ஆத்மா எங்கும் வியாபித்திருத்தலானும் சர்வதேசமும் ஆத்மாவின் கண் மாயையால் கற்பிக்கப்பட்டிருத்தலானும் அது தேசத்தால் அந்தமுடையதன்று. (2) எது உற்பத்திக்கு முன்னும் அழிவு பாட்டிற்கும் பின்னும் இல்லையோ அது காலத்தால் அந்தமுடையது உதாரணம் உடல் முதலியன ஆத்மா சட்பாவ விகாரங்களும் இன்மையின் அது காலத்தால் அந்தமுடையது அன்று. (3) எந்த வஸ்துவிற்கு அன்னிய வஸ்துக்களோடு பேதமுண்டாகிறதோ அந்த வஸ்துவிற்கு வஸ்துவால் அந்தமுண்டு உதாரணம் குட முதலியன. ஆன்மா அவ்வியல்பின்றி (கடம் படமன்று படம் கடமன்று என்பதாதியதின்றிய எல்லாவற்றின் சொரூபமாயிருத்தலால் அது வஸ்துவால் அந்தமுடையதன் றென்பதாம்.)

| | |
|---|---|
| எப்பொருட்கும் மேலதாய் | சர்வ வஸ்துக்களுக்கும் விலக்ஷணமாயும் |
| சலமது இன்றிய அது தன்னை | நிர்விகார கூடஸ்தராயும் உள்ள அந்தப் பரப்பிரஹ்ம சொரூப ஆத்மாவை |
| தம்முள்ளே நிலைபெற அறிந்தவர் | தம் இதயத்தின் கண்ணே திடமாக சாக்ஷாத்கரித்த ஞானிகள் |
| மரணம் நீங்குவர் | (அவித்யா காமகர்ம லக்ஷணமான சமுசாரத்தில் நின்றும்) விடுபடுவார்கள் |

(சத்தாதி விஷயங்களின்றியதுதான் அவைகளின் விலக்ஷணமென்று கூறியது) 18

(அ - கை) சொல்லியவண்ணமாகவுள்ள ஆத்மா எல்லோராலும் ஏன் காணப்படவில்லையெனச் சங்கித்து அதற்குக் காரணங் கூறுகின்றார்.]

பரப்பி னானிந்தி யங்களைப் பராக்குறப் பரம்பர னுள்ளாகி
இருத்த லாலறி வொண்கிலன் புறம்புள விரதமே காண்கின்றான்
றிருப்பி ஞானநா ட்டத்தினா லப்பொரு டெரியவே பெறுந்தீர
னொருத்த னேயவி நாசியாம் பரவொளி யாயவ னொளிர்கின்றான்
19

(இ - ள்)

| | |
|---|---|
| பரம்பரன் இந்தியங்களை பராக்கு உறப் பரப்பினான் | செகத் சிருஷ்டாவாகிய மகேஸ்வரன் சுரோத்திராதி இந்திரியங்களை பகிர்முகமாகவே சிருஷ்டித்தான் (அந்தப் பரம்பரன்) |
| உள்ளாகிஇருத்தலால் அறிவு ஒண்கிலன் | அனைத்திற்கும் ஆந்தரமாயிருத்தலால் புருஷன் அவ்வான்மாவை அறிகிறானில்லை (பின்னையோ) |
| புறம்பு உள இரதமே காண்கின்றான் | பராக்கு விஷயமாயுள்ள சப்தாதிகளையே அறிகின்றான் (அவ்விந்திரியங்களை) |
| திருப்பி ஞான நாட்டத்தினால் அப்பொருள் தெரியவே பெறும் தீரன் | (விஷயங்களினின்றும் வைராக்கியத்தால் அந்தர்முகமாக)திருப்பி (அகம் பிரஹ்மாஸ்மியென்னும்) ஞானதிருஷ்டியால் அவ்வாத்மவஸ்துவை அறிந்தவனாகிய தீரன் எவனோ |
| ஒருத்தனே அவிநாசியாம் பர ஒளியாய் அவன் ஒளிர்கின்றான் | அவனொருத்தனே நாசரகிதமாகிய ஆத்ம சோதி சொரூபமாய் விளங்குகின்றானென்பதாம். |

(இந்திரியங்கள் பராக்காயிருத்தலால் காணவில்லை என்பதாம்.)
19

பேத மாகிவே றாகிய பொருள்கண்மேற் பேதைமை யதனாலே
காதன் மேவினர் காலபா சத்திலே கட்டுணக் கடவாரே
யாத லாலழி வின்றிய பொருளிலே யறிஞரா தரித்தல்லா
லேது மாதரித் திடாத வரப்பொரு ளெய்தியே யிருக்கின்றார் 20

(இ – ள்)

| | |
|---|---|
| பேதம் ஆகி வேருகிய பொருள்கள் மேல் | ஆத்மபின்னமாயும் ஒன்றற்கொன்று வேருகியுமுள்ள சப்தாதி விஷயங்களின்கண்ணே |
| பேதைமை அதனுலே காதல் மேவினர் | அஞ்ஞானத்தினுல் ஆசையை அடைந்த புருஷர்கள் |
| கால பாசத்திலே கட்டு உணக்கடவரே | காலனது பாசக் கயிற்றினுல் (அவிவிவேகிகள்) கட்டுப்படுவார்கள் |
| ஆதலால் அழிவு இன்றிய பொருளிலே அறிஞர் ஆதரித்தல் லால் ஏதும் ஆதரித் திடாதவர் | நித்தியமான ஆத்மவஸ்துவின் கண்ணே விவேகி புருஷர்கள் ஆசையைச் செய்து அன்னிய அநித்திய பதார்த்தங்களில் விருப்பம் செய்யாதவர்களாய் |
| அப்பொருள் எய்தியே இருக்கின்ருர் | அன்னம் நீரிலிலுள்ள பாலருந்தல் போல் அவ்வாத்ம வஸ்துவை அடைந்திருக்கின்ருர்கள். 20 |

(அ – கை) அவ்வான்மாவை அறியுமுபாயத்தைக் கூறுகின்ருர்.

சத்தப் பரிச வுருவிரதங் கந்தா திசமைந் தனமுதலாய்
எத்தைக் கொண்டிங் கறிகின்ரு னதனை யொழிய வேதுளதாம்
அத்தற் பரத்தைக் கண்டிந்த வவத்தை மூன்றுங் காணுமை
சித்தித் திருக்கு மவனலமுந் தீங்கு மின்றித் திகழ்கின்ருன் 21

(இ – ள்)

| | |
|---|---|
| சத்தப் பரிச உருவு இரதம் கந்தாதி சமைந்தன முதலாய் | சப்தம் பரிசம் உருவம் இரசம் கந்தம் முதலியனவும் * மைதுனம் முதலியனவுமாகிய எல்லா விஷயங்களையும் |
| எத்தைக்கொண்டு இங்கு அறிகின்ருன் அதனை ஒழிய | யாதொருசொரூபப் பிரகாசத்தினுல் ஆத்மா அறிகின்ருனே அந்த சொரூபப்பிரகாசமாகிய ஆத்மாவை திருஷ்டாவாகக்கொண்டு விளங்குவதொழிந்து இவ்வுலகின் கண்ணே எப்பதார்த்தங்கள் சேஷமாயுளது (ஒன்றும் இலதாம்) |

* மைதுனம் — ஆண் பெண்களின் சையோகமாம்.

| | |
|---|---|
| அத்தற்பரத்தைக் கண்டு இந்தஅவத்தை மூன்றும் காணாமை சித்தித்து இருக்கும் அவன் | அவ்வாத்மாவை சாக்ஷாத் கரித்து இச்சாக்கிராதி அவஸ்தைகள் (மூன்றையும் (பழுதையை அறிந்தவன் பாம்பை யறியாததுபோல்) பாராதிருக்குந் தன்மையை அடைந்திருக்கும் புருஷன் |
| நலமும் தீங்கும் இன்றித் திகழ்கின்றான் | சுக துக்கங்களின்றி நிரதிசயானந்தமாய் விளங்குகின்றான். 21 |

(அ – கை) அவ்வாறு சாக்ஷியான ஆன்ம சொரூபத்தை விசேஷித்துக் கூறுகிறார்.]

மூன்றா கின்ற வவத்தையென மொழியும் புரங்கள் மூன்றுணருஞ்
சான்றா யறியி லறிகின்ற தன்னில் வேறா காதவைதான்
ஊன்றா வுணர்வே யுருவான வொளியே யுளதாய் வித்தாகித்
தோன்றா நின்றுந் தோன்றாது நிகழ்வா னென்றுஞ்
சுதந்தரத்தால் 22

(இ – ள்)

| | |
|---|---|
| மூன்று ஆகின்ற அவத்தை என மொழியும் புரங்கள் உணரும் சான்றாய் அறியில் | மும்மையாகிய அவஸ்தை யெனக் கூறப்படுவனவான சாக்கிராதிகளை அறியா நிற்கும் சாக்ஷிரூபமாகத் தன்னை அறியுமிடத்து |
| அறிகின்ற தன்னில் வேறு ஆகாத அவை தான் ஊன்றா உணர்வே உரு ஆன ஒளியே | அவ்வவஸ்தைகள் சாக்ஷி ரூபமாகிய தன்னில் நின்றும் பின்னமாகாது நிலைத்த சேதன வடிவான சிவமே |
| உளதாய் வித்து ஆகி தோன்றா நின்றும் | (தனது மாயா விலாசத்தினால் ஒரு போது) திரந்திரமில்லாத விஷயங்கள் உள்ளதாகிய நனவு கனவு ரூபமாகவும் அவற்றின் லயமான சுழுத்தி ரூபமாகவும் விளங்கியும் |
| தோன்றாது என்றும் சுதந்தரத்தால் நிகழ்வான் | தத்துவ திருஷ்டியில் அங்ஙனம் புரத்திரய ரூபமாக விளங்காமல் சகல வுபாதிகளும் விடுபட்டு எப்போதும் சுயமாகவே பிரகாசியா நிற்பன் |

(ஆத்மாவே உபாதி வசத்தால் அவ்வவ்வஸ்துகளாகவும் உபாதியின்றிய போது சுயமாகவும் விளங்கு மென்பதாம்.) 22

(அ – கை) "யாதொன்று இகத்தில் அதுவே பரத்திலும் யாதொன்று பரத்தில் அதுவே இகத்திலும்" என்ற சுருதியின் தாற்பரியத்தைக் கூறுகின்றார்.]

பரமிக மாய்நிகழ்ந் ததுப ரம்பொருள்
ஒருபொருள் பிறிதிலை யுளது போற்பல
கருதுமே லவன்கணிற் காண்ப தெங்கணும்
மரணமேம ரணமேம றித்துஞ் சார்வதே. 23

(இ – ள்)

| | |
|---|---|
| இகம் | இந்த காரிய காரண சங்காதங்களிலும் |
| பரம் | செகத் காரணனாய் சர்வக்ஞ்ஞனாகிய சூரியாத்மகமான பிரஹ்மத்தினிடத்தும் |
| ஆய் நிகழ்ந்தது | யாது சச்சிதானந்த ஏகரசமாயிருந்து விளங்கா நின்றதோ |
| பரம் பொருள் ஒரு பொருள் பிறிது இலை | அந்தப் பரமாகிய தத்துவ மிரண்டும் ஏகவஸ்துவாம் அவைகட்கு பேதமில்லையாம். |

(சர்வக் ஞத்வாதி கிஞ்சிக் ஞத்துவாதி பேதப் பிரதிபாசமானது மாயை அவித்தை யெனும் உபாதிகளால் வந்ததேயன்றி உண்மையில் ஏக்ரூபமே அவ்வுபாதிகளில்லாத சுழுத்திகளில் ஞானி அஞ்ஞானிகளிருவருக்கும் சுபானுபவமாம்.)

[விபக்ஷத்தில் (பேதபக்ஷத்தில்) பாதகங் கூறுகின்றார்.]

| | |
|---|---|
| பல உளது போல் கருது மேல் | (உபாதியால் வந்த பேதத்தை) உண்மைப் பேதமுளது போல் ஒருவனறிவனேல் |
| அவன் கணில் காண்பது | அவனது திருஷ்டியில் பார்க்கப் படுவது |
| எங்கணும் மரணமே | – யாண்டும் மரணமேயாம் |

| | |
|---|---|
| மறித்தும் சார்வதும் மரணமே | மறுபடியும் செனித்தும் அடையப் படுவதும் மரணமேயாம். |

(எதுவரையில் ஈசுவர கிருபை குரு கிருபையால் தத்துவத்தை அறியவில்லையோ அதுவரையில் பேததரிசி செனன மரணமே அடையா நிற்பன் என்பதாம்.) 23

(அ – கை) பரமாகிய பிரஹ்மத்தைக் காட்டிலும் செகத்து பேதமாக அநுபவிக்கப்படுகின்றதே யென்று சங்கித்து உபமானத்துடன் அதன் தாதான்மிய (கற்பித பேத வாஸ்தவ அபேத) த்தைப் பிரதி பாதிக்கின்றார்.]

வன்னிதா னொருவனா யிருக்க மற்றவ
னுன்னிய வுருவமாய்த் தோன்று மாறுபோ
லின்னதெ னுமலுட் புகுந்து மேகனா
யன்னிய னாகியொன் றோடு மார்ப்புறான். 24

(இ – ள்)

| | |
|---|---|
| வன்னிதான் ஒருவனாய் இருக்க மற்றவன் உன்னிய உருவமாய்த் தோன்று மாறுபோல் | அக்கினியானது ஏகமாயிருந்தும் அவ்வக்கினி பேதமாகக் கருதா நின்ற காஷ்டாதி உபாதிகளை யடைந்து தரிசிப்பவனாகிப் பேத மாகத் தோன்றினும் வாஸ்தபத்தில் எப்படி அவைகட்கு விலக்ஷண மாய் ஏகனோ அதுபோல |
| இன்னது எனுமல் உள் புகுந்து | சச்சிதானந்த பரசிவனும் இது தான் பிரவேசித்தற்குரியது பிர வேசித்தற்குரியதன் றென்றொழி யாது சர்வ பூதங்கட்கும் அந்த ரான்மாவாய் தேவ மனுஷ்யாதி சரீரங்களிற் பிரவேசித்தும். |

[ஒருவனாயுள்ள ஆன்மாவே அங்கங்கே அந்தந்த ரூபமாயிருக்கினும் அதனால் செய்யப்படும் சம்சார துக்கானுபவம் அவனுக்கு உண்டாகாதெனக் கூறுகின்றார்.]

| | |
|---|---|
| ஏகன் ஆய் அன்னியன் ஆய் | (பேதமான அவ்விஷயங்கள் போலத் தோன்றினும் வாஸ்தபத்தில் அவைகட்கு) விலக்ஷணனாய் ஏகனாயுளன். |

[ இவ்விதம் பிரகாசியா நின்ற ஆன்மாவுக்கு அச்சம்பந்தத்தால் சம்சார துக்கானுபவம் உண்டாமென்று சங்கித்துக் கூறுகின்ருர். ]

| | |
|---|---|
| ஒன்ருேடும் ஆர்ப்பு உருன் | அவைகளெவற்ருேடும் சம்பந்தப்படான் |

( ஏனெனில் சூரியனுனவன் எல்லோருடைய நேத்திரங்களுக்கும் ஒளியாயுபகாரஞ் செய்தும் அந்நேத்திர ரூபங்களாய்ப் பிரவேசித்தும் அசுப தெரிசனத்தால் உண்டாகும் பாவ தோஷங்களோடு எப்படிச் சம்பந்தப்படவில்லையோ அப்படியே வாயு எப்படி சீதோஷ்ண உபாதி சம்பந்தத்தால் வேருய்த் தோற்றினும் வாஸ்தபத்தில் ஏகமோ அப்படியே பரசிவனும் ஏகனுய் சர்வாந்தரனுய் இருப்பினும் விவகர்ரத்தில் பேதமாகத் தோற்றினும் வாஸ்தபத்தில்அப்பூதங்களின் விலக்ஷணமாகவே யிருப்பானென்பதாம்.) (இது மூலார்த்தமே) (விடுபட்டர்த்த சுலோகம் 39=40)

24

(அ – கை) சர்வர்களுக்கு முக்கியனுன ஆன்மா ஒருவனே இவனுக்குச் சமானமாகவும் அதிகமாகவும் ஒருவனில்லை யெனவும் எல்லாவுலகும் எங்ஙனம் இவன் வசமாகுமெனவும் இவனை உணரவல்லார்க்கு வேதம் எப்படி உணர்த்துமெனவும் சங்கித்துக் கூறுகின்ருர்.)

பல்லாயிரங்கோ டிகளாக பண்ணு நிற்கும் பரம்பரனை
யெல்லாம் வசீகரிப்பானு யெதுக்கு முள்ளாமொரு வடிவை
யல்லாதொன்று மில்லையென வனுபவத்தா லகத்துணர
வல்லார் தமக்குப் பேரின்பம் வடிவாய் மொழியு மாமறைதான் 25

(இ – ள்)

| | |
|---|---|
| எல்லாம் வசீகரிப் பானுய் | சர்வத்தையும் தன்வசமாக வைத்திருப்பவனுயும். |
| எதுக்கும் உள்ளாம் ஒரு வடிவை | பூதபௌதிகமாயுள்ள சர்வ ஜெகத்திற்கும் ஆந்தரனுயுள்ள தனது ஏகரூபத்தை |

| | |
|---|---|
| பல்லாயிரம் கோடிகள் ஆகப் பண்ணு நிற்கும் | (விசித்திர உபாதி (அநேகசத்தி) வசத்தால்) அநேகாயிரங்கோடி ரூபங்களாகச் செய்யா நிற்கும். |
| பரம்பரனை அல்லாது ஒன்றும் இல்லை என | பரமாத்ம வஸ்துவைத் தவிர வேறொரு பொருளும் இல்லையென்று |
| அனுபவத்தால் அகத்து உணர வல்லார் தமக்கு | சாஸ்திராசாரிய வுபதேசத்தாலும் சுபானுபவத்தாலும் இருதயத்தின் கண்ணே சாக்ஷாத்கரிப்பவர்களுக்கு. |
| பேரின்பம் வடிவாய் மொழியும் மாமறை தான் | மாக்ஷிமை பொருந்திய சுருதியானது பிரஹ்மானந்தமே அவர்களது சொரூபமெனப் பிரதிபாதியா நிற்கும். 25 |

(அ - கை) "நித்தியன் நித்தியங்களுக்கு சேதனன் சேதனங்களுக்கு" என்ற சுருதியின் பொருளைப் பிரதிபாதிக்கின்றார்)

யாவனறியப் படாமையினு லிவ்வேறுண்டா மிவ்வேறெத்.
தேவனுலே நிலைபெற்றுச் சேதனங்க ளாய்த்திகழு.
மோவலறவே யப்பரனை யுள்ளத்துணர்ந்தோ ருள்ளத்தே
தாவில் சாந்தி குடிகொள்ளு மல்லாதாரைச் சாராதால். 26

(இ - ள்)

| | |
|---|---|
| யாவன் அறியப் படாமையினல் இவ்வேறு உண்டாம் | யாதோர் ஆத்ம சொரூபம் அறியப் படாமையினல் இத்தோய்த ஜெகத் தானது தோற்றுகின்றதோ |
| இவ்வேறு எத்தேவனுலே நிலை பெற்றுச் சேதனங்களாய் திகழும் | இந்த ஆகாசாதி பதார்த்தங்கள் எத்தேவனுலே யாதொரு ஜெகத் சம்பந்தத்தால் நித்தியங்களா இருக்கின்றனவோ யாதொரு சைதன்ய யோகத்தால் (சம்பந்தத்தால்) தேவமனுஷ்யாதிகளும் சேதனங்களாக விளங்குகின்றனவோ |
| ஓவல் அறவே அப்பரனை | ஒழிவின்றி யிலங்கும் அந்தப்பரமாத்ம சொரூபத்தை |

| | |
|---|---|
| உளத்து உணர்ந் தோர் உள்ளத்தே | தமது அந்தக்கரணத்தின் கண்ணே சாக்ஷாத்கரித்தவர்களது மனத்தே |
| தாவில் சாந்தி குடிகொள்ளும் | கெடுதலற்றதாயும் விஷயங்களி னின்றும் உபரதி ரூபமானதுமான கைவல்லிய விஸ்ராந்தியானது நிலைத்திருக்கும் |
| அல்லாதாரைச் சாராது | அங்ஙன மறியாத மூடரை அச் சாந்தியானது பொருந்தாதென்ப தாம். (மூடர் – பிராகிருத புருடர்) (பிரகிருதி சம்பந்தம் பிராகிருதம்). |

26

(அ – கை) குறிக்கக் கூடாத ஆன்ம சுகமானது விஸ் பஷ்டமா (நன்ருக) விளங்குகின்றதா இல்லையா வென்னும் சங்கைக்கு உத்தரங் கூற இச்சித்தவராய் அவ்விடத்தில் (ஆன்ம சந்நிதானத்தில்) சூரியன் விளங்குகின்ருனில்லை யென்னும் சுருதியின் பொருளைக் கூறுகின்ருர்.]

இதுவதென வொண்ணுத வெல்லையில்பே ரின்பத்தை
யதுவிதுவென் பர்களறிவோ வறியாமை யோவறிவே
யெதுவுமிறை யானிகழ்வ திறைநிகழ்வி லிவையொன்ருன்
மதிபருதி யனலொளியு மறுவில்பர ஞளொளியாம். 27

(இ – ள்)

| | |
|---|---|
| இது அது என ஒண்ணுத எல்லை இல் பேர் இன்பத்தை | இப்படிப்பட்டதென்றும் அப்படிப் பட்டதென்றும் வாக்கினுலும் மனத் தினுலும் சொல்லவும் அறியவும் முடியாத அபரிச்சின்ன பிரஹ்மானந்தத்தை |
| அது இது என்பர்கள் | பிரஹ்ம நிஷ்டர்களான பண்டிதர் கள் அப்பொருளை இப்படிப்பட்ட தென அபரோக்ஷமாக அநுபவிக் கின்ருர்கள் |

[நசி கேதுவின் கேள்வி]

| | |
|---|---|
| அறிவோ அறியாமையோ | அப்பொருள் சாதகர்களுக்கு விளங்குகின்றதா விளங்குகின்ற தில்லையா என்னில் |

| | |
|---|---|
| அறிவே | (நித்தியா பரோக்ஷசுவரூபமாக) அறியப்படுவதாகும் |
| எதுவும் இறையால் நிகழ்வது | சர்வ பதார்த்தங்களும் பரமாத்மாவினுலேயே விளங்குகின்றது |
| இவை ஒன்ருல் இறை நிகழ்வு இல் | இப்பொருள்கள் யாதொன்றினுலும் ஆத்மா விளங்குகின்றதில்லை |
| மதி பருதி அனல் ஒளியும் மறுவு இல் பரனுல் ஒளியாம் | சந்திரன் சூரியன் அக்கினி முதலியப் பிரகாசங்களும் குற்ற மற்ற ஆத்மாவினுலேயே பிரகாசங்களாம் (ஆந்தர பாகியமான அஷ்டப் பிரகாசங்களும் ஆத்மப் பிரகாசத்தைப் பெற்றுப் பிரகாசிசிக்கிறதென்பதாம்) 27 |

(அ-கை) தோன்ரு நின்ற காரியப் பிரபஞ்சங்கட்கு மூலகாரணமின்றிப் பொருந்தாமையின் அதனது காரணம் இருக்குந் தன்மையைக் கூறுகின்ருர்)

அரசதொன் றும்பர்வே றாகிநீள் சாகைகீழ்
நிறைசெய்தெங் கணுநிறைந் தென்றுநின் றுள்ளதாற்
கரையிலண் டங்களெல் லாமதன் கண்ணதா
மொருபரம் பொருள்கடந் திடவொணு தொருவரால். 28

(இ-ள்)

| | |
|---|---|
| அரசு அது ஒன்று | அவ்வியத்தாதி ஸ்தாவரந்தமாயுள்ள அஸ்வத்தமென்னும் ஒரு விருக்ஷமானது |
| உம்பர் வேறு ஆகி | (சம்சார மண்டலத்திற்கு மேலாயுள்ள) பிரஹ்மத்தையே மூலகாரணமாகவும் (ராகத்துவேஷாதிகள் அவாந்தரகாரணமாகவும்) கொண்டு |
| கீழ் நீள்சாகை நிரை செய்து | (சொர்க்க நரகாதி) அபரங்களையே நீண்ட கிளைகளாகப் பரப்பி |
| எங்கணும் நிறைந்து என்றும் உள்ளது | எவ்விடத்தும் வியாபித்து எக்காலத்தும் திறமாயிருப்பது (அதாவது ஜனுதனமாயிருப்பதாம்) |

| | |
|---|---|
| கரை இல் அண்டங்கள் எல்லாம் அதன் கண்ணதாம் | அளவற்ற காரிய ரூபமாய் வாசாரம்பமாயுள்ள அண்டங்களனைத்தும் பரமார்த்த சத்திய ரூபமாயுள்ள அந்தப் பிரஹ்மத்தின்கண்ணே அத்தியஸ்தமாயிருந்தும் அதை ஆசரித்துப் பரமார்த்தப் பிரதீதியாகின்றன. |
| ஒரு பரம்பொருள் கடந்திட ஒணுது ஒருவரால் | சமானுதிகமற்ற பரப்பிரஹ்மத்தை யாவராலும் விவகாரப்படுத்தக் கூடாது (மீறுவதற்கில்லை) யென்பதாம். 28 |

[(அ - கை) சுருதியினல் எந்தப் பொருளின் ஞானத்தால் அமிர்தத்தன்மை சித்திக்குமென்று சொல்லப்பட்டதோ அதனைக் கூறுகின்ருர்.]

எச்சகத் துஞ்சலிப் பிக்குமீ சானனும்
வச்சிரத் தைப்பெறு மனிதன் வீடுறு மிவற்
கச்சமுற் றங்கிகா லர்க்கனிந் திரன்யம
னிச்சயிப் பானதந் தொழில்செயா நிற்பரால். 29

(இ - ள்)

| | |
|---|---|
| எச்சகத்தும் சலிப்பிக்கும் ஈசானன் ஆம் | சர்வ ஜெகத்தையும் தனது ஆக்ஞா வசத்தால் தத்தம் வியாபாரங்களில் பிரேரிக்கும் ஈசான ரூபமும் |
| வச்சிரத்தைப் பெறும் மனிதன் வீடு உறும் | பயவேதுவானதும் ஆகிய பிரஹ்மத்தைத் தனது சொரூபமாகச் சாக்ஷாத்கரித்த புருஷன் அமிர்தமான மோக்ஷத்தை அடைவன். |

[பிரஹ்மத்திற்குக் கூறிய அக்கினிவாயு சூரியன் முதலிய திக்குப் பாலகரின் பயவேதுத்துவத்தை விவரணஞ் செய்கிருர்.]

| | |
|---|---|
| இவற்கு அச்சம் உற்று அங்கி கால் அர்க்கன் இந்திரன் யமன் | இந்த வஜ்ரரூப பரசிவத்திற்குப் பயந்து அக்கினி வாயு சூரியன் இந்திரன் எமன் முதலிய லோக பாலகர்கள் ஆகிய இவர்கள் |

| | |
|---|---|
| நிச்சயிப்பான தம் தொழில் செயா நிற்பர் | மேற்கூறிய பரமேஸ்வரனால் நியமிக்கப்படுபவரான இவர்கள் தத்தம் வியபகாரங்களை ஜாக்கிரதையாகச் செய்கின்றார்கள். |

(பேதபாவனையால் அவர்கள் முற்கற்பத்தில் பூசித்துப் பதவியை விரும்பியதால் ஞானிகளாயிருந்தும் பயந்து செய்வரேல் அஞ்ஞானிகளுக்கு பயத்திற்குச் சொல்லவும் வேண்டுமோ.) 29

(அ - கை) "இவன் அசத்தியனாயின்" என்னுஞ் சுருதியைக் கூறுகின்றார்.]

உண்ணாடி யாகத்தி னுணராத வன்று
னுடம்பாமு டம்புக்கு ளேகாண லாகுங்
கண்ணாடி போலப்பி ராணாதி கத்தைக்
கடம்போற்க ழித்துக்க ழித்தற்ற பின்னைக்
கண்ணான பரனன்றி வேறின்மை யாலக்
கண்ணான வனுபூதி யாகின்ற கண்ணால்
எண்ணாரும் வேறின்மை கண்டார்கள் நேரே
யிறவாது பிறவாதெ லாமாயி ருப்பார். 30

(இ - ள்)

| | |
|---|---|
| ஆகத்தின் உள் நாடி உணராதவன்தான் | வித்தியாதிகார யோக்கியமான இந்த சரீரத்திலேயே இருதயத்திலே விளங்கா நின்ற பிரத்யகாத்மாவை விசாரித்து அனவச்சின்ன பரசிவ சொரூபமாக எவன் அறியும்படியான சக்தனல்லனோ அந்த அஞ்ஞ புருஷன் |
| உடம்பு ஆம் | (சகல லோகங்களிலும் புண்ணிய பாவத்தால்) சரீரதாரணத்தின் பொருட்டு கற்பிக்கப்பட்டவனாம் |

["எப்படி கண்ணாடியில்" என்றும் சுருதியுள்ள பொருளைச் சங்கிரகின்றார்.]

| | |
|---|---|
| கண்ணாடிபோல உடம்புக்கு உளே காணல் ஆகும் | எப்படி நிர்மலமான கண்ணாடியில் தன் வடிவமானது தோற்றுகின்றதோ அப்படி இம்மானுடசரீரத்தின் கண்ணே சிரவண மனனாதி சாதன கலாப (கூட்ட) அநுஷ்டானத்தினால் ஆத்மரூப பிரஹ்மமானது அபரோக்ஷமாகத் தோற்றும். |

[ "இந்திரியங்கட்குப் பிருதக்பாவம்" என்று யாதொன்று சொல்லப்பட்டதோ அதன் அபிப்பிராயத்தை கூறுகின்றார்.]

| | |
|---|---|
| பிராணாதிகத்தைக் கடம்போல் கழித்து | இந்திரிய பிராணாதி சங்காதத்தைக் கடம்போல் அறியப்பட்டு சடமாகலின் ஆத்மா வன்றென்று நீக்கி |
| கண்ணானபரன் அன்றி வேறு இன்மை யாலே | திருக்கு ரூபமான ஆன்மாவைத் தவிர வேறு பொருளின்மையால் |
| கழித்து அற்ற பின்னை | அங்ஙனம் சங்காதத்தை ஆன்மா வன்றென்று நீக்கிய பின்னர் 32 |
| அக்கண்ணான அநுபூதி ஆகின்ற கண்ணால் | அச்சேதனமாகிய ஆத்ம வடிவ பிரஹ்மத்தை விஷயமாக வுடைய சுவானுபவ திருஷ்டியால் |
| எண்ணாரும் | – புத்திக்குப் பொருந்துமாறு |
| வேறு இன்மை நேரே கண்டார்கள் | சர்வ ஜெகத்திற்கும் பிரஹ்மத்தோடு அபின்னத்தன்மையை அபரோக்ஷமாக அறிந்தவர்கள். (சோகமற்றவர்களும்) |
| இறவாது பிறவாது எலாமாய் இருப்பர் | செனியாமலும் மரியாமலும் சர்வாத்மகமாகிய பிரஹ்ம சொரூபமாகவே இருப்பார்களென்பதாம். (* விடுபட்ட சுலோகம் 53 – 54 ம் கீழ்) 30 |

* இந்திரியங்களைவிட மனதும் மனதைவிட சத்வமும் சத்வத்தைவிட மஹத்தும் மகத்தைவிட அவ்வியத்தம் அவ்வியத்தத்தைவிட சாக்ஷாத் வியாபகமாயும் லிங்கமற்றதாயுமுள்ள பரம் உத்தமம் இந்தப்பரத்தை யறிந்தால் அமிர்தத்வம் அடையப்படும். விடுபட்ட மூவார்த்தம் 53 — 54 கடோப நிதஞ் சுலோகம்.

(அ-கை) நிருபாதிகனுன ஆன்மா எப்படி அறியச் சக்கியனுவன் எனச் சங்கித்து அதற்குச் சமாதானங் கூறுகிருர்.]

ஒருவருங் கண்ணுற் காண வொண்ணும தன்றுள்ளத்தாற்
கருதவுந் துணிந்தங் கொன்றக் கடவது மலாத தைத்தான்
சுருதியா லனுப வத்தாற் துணிந்தவர் சுகசொரூப
மருவியே மாண்டு மீண்டும் வரும்வழி மறப்ப ரன்றே. 31

(இ-ள்)

| | |
|---|---|
| உள்ளத்தால் கருதவும் துணிந்து அங்கு ஒன்றக் கடவதும் அலாது | குரு சாஸ்திரங்களால் சம்ஸ்கிருத (சுத்த) மான விவேக புத்தியினுல் தியானித்து உள்ளபடி சாக்ஷாத்கரிக்கத்தக்கதேயன்றி |
| ஒருவரும் கண்ணுல் காண ஒண்ணு மது அன்று. அதைத்தான் | யாதொருவருக்கும் நேத்திர முதலிய இந்திரியங்களால் அறியக் கூடிய தல்லாத அவ்வாத்ம சொரூபத்தை. |

[ "எவர்கள் இவனை அறிகின்ருர்கள்" என்ற சுருதியின் பொருளைக் கூறி அவற்றுள் கூருததாயுள்ள மற்றைச் சுருதி வாக்கியங்களுக்கும் தாற்பரியமாய் விளக்கியுங் கூறுகின்ருர்.]

| | |
|---|---|
| சுருதியால் அனுபவ வத்தால் துணிந்தவர் சுகசொரூபம் மருவியே | சுருதி யுக்தி சுவானுபூதியாகிய இந்த உபாயங்களினுல் நிச்சயித்த மகான்கள் ஆனந்த ரூப பிரஹ்மத்தையடைந்து |
| மாண்டு மீண்டும் வரும் வழி மறப்பர் | மரித்து மீண்டும் செனிக்கும்படியான சமுசார மார்க்கத்தைமறந்துவிடுவார்கள் (அவர்கள் சமுசாரத்தையடைய மாட்டாரென்பதாம்). |

31

கடவல்லியுபநிஷத தாற்பரியம் சம்பூரணம்

## சுவேதாசுவுதர வுப நிஷத தாற்பரியம் ஆரம்பம்

(அ – கை) இவ்வாறு சச்சிதானந்த ஏகரச பிரஹ்மான்ம வைக்கிய பரத்துவத்தைக் கடவல்லி சாகோப நிஷத்துக்கும் தரிசிப்பித்துப் பின்னர்ச் சுவேதாசுவதரசாகோப நிஷத்திற்கும் பரத்துவமுள தென்பதை அத்தியாய சேஷத்தால் தரிசிப்பிக்கத் தொடங்கி அவ்வுப நிஷத்தில் "யாதொன்று ஜெகத் காரணமோ அது பிரஹ்மமென்று அறியும் பொருட்டு காலம் சுபாவம் நியதி யதிரிச்சை என்பவை யாதிகளால் செகத் காரணத்வ முண்டென்பதை பூர்பட்சமாக்கித் தியான யோகத்தையுடையோர்கள் தன் குணங்களால் கூடமாகிய பரமேஸ்வர சம்பந்தியைக் கண்டார்கள்" என்னும் சுருதியினுல் மாயா சத்தி சகிதனுய்ச் சொப்பிரகாச சிதான்மாவான பிரஹ்மத்திற்கு ஜெகத் காரணத்துவம் வர்ணிக்கப்பட்டுள்ளது அப்படிப் பட்ட சத்தியோகத்தை அதற்குப் பிரதி பாதிக்கின்ருர்.]

வித்தக வேதப் பொருளதாய் ஞான
விழியினுல் விளங்கிடும் பொருட்கோர்
புத்தியினுலு முள்ளவா றறியப்
போயிடா தாயிருந் துள்ள
சத்தியுண் டந்தச் சத்தியா லென்றுந்
தான்பிறி வாகியத் துவித
சத்திய ஞான வனந்தவா னந்த
தத்துவ மாகியே யிருக்கும். 32

(இ – ள்)

வித்தக வேதப் பொருளதாய் — வித்தையை யுடையதான சகல வேதங்களிலும் பிரசித்தமாயுள்ளதாயும்

ஞான விழியினுல் விளங்கிடும் பொருட்கு — யாதொரு ஞானம் பூர்வம் சொல்லப் பட்டதோ அந்த ஞானத்தினுல் அறியத்தக்கதாயும்

ஓர் புத்தியினுல் — யாதோர் புத்திசாலிகளாலும்

| | |
|---|---|
| உள்ளவாறு அறியப் போயிடாதாய் இருந்துள்ள சத்தி உண்டு | இத்தன்மைத்தெனச் சிந்திக்கக் கூடாததாய் சர்வ துர்க்கட காரியாயுள்ள வோர் சத்தி யுள்ளது |
| அத்துவித சத்திய ஞான அனந்த ஆனந்த தத்துவம் ஆகியே | அத்துவிதமாய் சத்தியமாய் ஞானமாய் அனந்தமாய் ஆனந்தமாய் தத்துவமாயிருந்தும். |

[ இதில் போக்தா போக்கியம் போகப் பிரதன் (ஊட்டுவான்) என மூவிதம் காணப்படுகின்றது அவ்வித பேதம் அத்விதீய பிரஹ்மத்தில் எப்படி கூடும் எனச் சங்கித்து அந்தச் சத்தி அப்பேதத்தைக் கூட்டி வைக்கிறதெனக் கூறுகின்ருர். ]

| | |
|---|---|
| தான் அந்தச் சத்தியால் என்றும் பிறிவு ஆகியே இருக்கும் | தான் அந்தச் சத்துவ ராஜத தமோகுணன் மிகையான மாயையால் எப்போதும் (கடாதியுபாதிகளால் ஆகாசம் போலப்) பேதமுடையதாகக் காணப்படுகிறது. |

( சத்தியோடு கூடியும் அத்விதீயமாயிருத்தல் சத்தி தன்னிடத்தில் அத்தியஸ்தமாகலின் என்றும் பிறிவாகியேயிருத்தல் அஞ்ஞர்கள் திருஷ்டியிலென்பதாம். யதிரிச்சை – காரணமின்றி அகஸ்த்துமாத்தாயுண்டாதல் பூர்வம் முனிவர்கள் செகத்காரணம் விசாரம் பண்ணி சைதன்ய சகித சத்தியைக் காரணமாகக் கண்டார்கள் என்பதாம், )

(அ – கை) அந்த மூல சுருதியில் போக்தா| போயக்கியம் போகப் பிரதர் என்று மூன்றுவிதங் காணப்படுகிறது. அவ்வித பேதம் அத்விதீய ஆன்மவஸ்துவில் எப்படிச் சம்பவிக்கும் என்று சங்கித்து முற்கூறிய சத்தியோகத்தால் விவகார பூமியில் கூடுமென்று தரிசிப்பிக்கின்ருர். ]

மெய்யதா முருவம் விமலமா மிறைக்கு
விளங்கிய திவ்வியமா முருவம்
வையமா முருவ மற்றுமோ ருருவம்
மறைமுத லாகவே விளம்பல்

செய்யுநூ லெல்லாம் வேறுமோ ருருவஞ்
சிவனுடை வடிவிலை யிவற்றிற்
றுய்யதா முருவஞ் சொல்லிலவ் விறைக்குத்
துலங்கிய ஞானமே சொரூபம். 33

(இ - ள்)

| | |
|---|---|
| விமலம் ஆம் இறைக்கு மெய்யதாம் உருவம் | முன்சொன்ன சத்தியக்ஞான அனந்த ஆனந்தமாகிய லெக்ஷண முடைய நிர்மலமான பரசிவத்திற்கு |
| விளங்கிய திவ்விய மாம் உருவம் | விளங்கா நின்ற பிரகாசமான சீவ வடிவ போக்தாரூபமொன்று |
| வையமாம் உருவம் | செகத்தாகிய போக்கியமான வுருவ மொன்று |
| மற்றும் ஓர் உருவம் | போகப்பிரதனான ஈசுவர ரூப மொன்று |
| இவற்றில் மறைமுத லாகவே நூல் எல்லாம் விளம்பல் செய்யும் அவ்விறைக்கு | இவற்றில் சோபாதிகமான இம் மூன்றைப் பார்க்கிலும் விலக்ஷண மாக வேத முதலாக சர்வ சாஸ்தி ரங்களும் பிரதிபாதிக்கும் அவ்வித பரசிவத்திற்கு |
| துய்யதாம் உருவம் சொல்லில் துலங்கிய ஞானமே சொரூபம் | பரிசுத்தமான வடிவத்தைக் கூறு மிடத்து விளங்கா நின்ற ஞானமே பரமார்த்த பரசிவனுக்கு எதார்த்த மான வடிவமாம் (அங்ஙனமின்றி) |
| வேறும் ஓர் உருவம் சிவனுடை வடிவு இலை | அதற்கு வேறாகிய சோபாதிய ஜீவேசுவர செகத்துக்கள் அவனது எதார்த்த வடிவமன்றென்பதாம் 33 |

(அ-கை) சுருதியில் "எல்லார்க்கும் ஜீவனமானதில்," என்ற மந்திரத்தால் ஜீவனுக்கு அவித்தையினால் சம்சார சக்கரத்தில் சுற்றுதலும் வித்தையினால் பிரஹ்ம தாதான்மியமும் கூறப்பட்டதைக் கூறுகின்றார்.]

பெரியதாய் எவர்க்கு முள்ளதா யுயிராய்
நிறைந்துள பிரமசக் கிரத்தே
திரிதரா நிற்குஞ் சீவனிப் பரிசே
திரிதரு மிவனையுந் திரிக்கும்

பரமனா யுள்ள வவனையு மனனம்
பண்ணியிப் படியிலே பார்ப்பா
னொருவனே செனன மரணமற் றென்று
முள்ளதாய் நிகழ்ந்திட வுரியான். 34

(இ – ள்)

| | |
|---|---|
| பெரியதாய் எவர்க்கும் உள்ளாய் | பெரிதுக்கெல்லாம் பெரிதாயும் சர்வாந்தரராயும் (யாவர்க்கும் உற்பத்தி ஸ்திதி ஸ்தானமாயும்) |
| உயிர் ஆய் நிறைந்துள பிரம சக்கரத்தே | சர்வத்திற்கும் பிராணபூதராயும் இராநின்ற பிரஹ்மத்தினால் (ஈசுவரனால்) நியமிக்கப்பட்ட சமுசார சக்கிரத்தின்கண்ணே |
| சீவன் திரிதரா நிற்கும்– | ஜீவனானவன் சுழலா நிற்பன் |
| இப்பரிசே திரிதரும் சீவனையும் | இங்ஙனஞ் சுழலா நிற்கும் சீவனையும் |
| திரிக்கும் பரமனாய் உள்ள அவனையும் | ஜீவனை செகத் சக்கரத்தில் கருமத்தினால் சுற்றும்படி பிரேரிக்கும் பரமேஸ்வரனையும் |
| மனனம் பண்ணி இப் படியிலே பார்ப்பான் ஒருவனே | சாஸ்திராசாரிய உபதேசத்தால் விசாரித்து இப்பூமியின்கணணே அபேதமாகப் பார்ப்பவன் எவனோ அவனொருவனே |
| செனனமரணம் அற்று என்றும் உள்ளதாய் நிகழ்ந்திட உரியான் | (விசாரசென்னிய அபேத ஞானத்தினால்) செனனமரண ரூப சமுசார சக்கிரத்தின்கண்ணே சுற்றுதலற்று எப்போதும் நித்தியமான பிரஹ்மத்தை அடைந்து அவ்வாகாரமாக விளங்க வுரித்தானவனாவன் (அன்னியன் இன்றென்பதாம். 34 |

(அ-கை) சீவேசுவரர்களின் தாதான்மியத்தை (கற்பித பேதவஸ்தப அபேதத்தை) நன்றாய் பிரதிபாதிக்கும் அன்னிய சுருதியின் மந்திரத்தை எடுத்துக் கூறுகின்றார்.]

அறிவனு மறியா தானும் ஆய்நிகழ் பரசீ வர்க்கு
மறையினுல் வடிவாற் றர்க்க வழியினு லனுப வத்தாற்
பிறிவிலா மாயை போக வேதுவாம் பிரமந் தானிங்
கறைதரு மெல்லாந்தானு யகர்த்திரு வாகி நிற்கும். 35

(இ – ள்)

| | |
|---|---|
| அறிவனும் அறியாதானும் ஆய்நிகழ் பரசீவர்க்கு | அபரிச்சின்ன சைதன்ய (ஞான) ஏக சுபாவனும் (கர்த்தாவும் போக்தாவும்) ஆவிர்தக்ஞானமு (சிற்றறிவு) டையவனுமாய் முறையே விளங்கா நின்ற ஜீவேசுவரர்களுக்கு |
| மறையினுல் வடிவால் தர்க்க வழியினுல் அனுபவத்தால் பிறிவு இலா | தத்துவமசியாதி சுருதி வாக்கியங்களாலும் சத்தியக்ஞானுனந்தாதி சொரூப லக்ஷணத்தாலும் (சுருதிகளுக்கனுகூலமான) யுக்தியினுலும் (மகான்களது) அனுபவத்தினுலும் அபேதமாம் |

(அவர்களின் பேதகாரணமான உபாதியை தரிசிப்பிக்கின்ருர்.)

| | |
|---|---|
| மாயை போக ஏதுவாம் | மலின சத்துவப் பிரதான மாயையானது சீவனிடத்திருந்து போக்துருத்வாதி செனனத் துவாரமாக அவனுக்குப் போகவேதுவாம் |

(அதனுல் கர்த்தா போக்தாவாயுளன் என்பதாம்.)

| | |
|---|---|
| பிரமம்தான் இங்கு அறைதரும் எல்லாம் தானுய் அகர்த்திருவாகி நிற்கும் | ஈசுவரனுனவர் சுவாதீனமாயையை யுடையவர் ஆதலால் தன் கற்பிதங்களாயிருக்கின்ற நாநாவித செகத்ரூபனுகத் தோன்றினுலும் கர்த்தாவாதி சகல தர்ம ரகிதனுயிருக்கின்ருர். |

(உபாதிபரித்தியாகத்தால் இரண்டுக்கும் ஐக்கியமென்பதாம்.)

(அ – கை) க்ஷரம் பிரதானம் அமிர்தாக்ஷரம் அரன் என்னும் மந்திரார்த்தத்தைக் கூறுகின்ருர்.]

நாச முற்றுவிடு மாயை சீவனசி யானி ரண்டினிலு நாதனு
மீச னிற்குமிறை யைத்தி யானபர னுக வந்தவியல் பாலுமே
யோச கத்தினிலே யாலு மேகமெனு முண்மை யாலுமுயிர்
முடிவினிற்
தேசெ னத்திகழு மிங்ங னேபிறிது செய்த மாயை சிதை
வாகுமால். 36

(இ - ள்)

| | |
|---|---|
| மாயை நாசமுற்று விடும் சீவன் நசியான் | மாயை நாசமுடையது சீவன் நாச ரகிதன் (இலக்ஷிய பாகம் நாச மின்றியதாம்) (சீவபாவமடைந்த பிரஹ்மரூபம் அக்ஷரம்) |
| இரண்டினிலும் நாதன் ஆம் ஈசன் நிற்கும் | (சத்தியோகம்) இவ்விரண்டினிடத் தும் சீவமாயை வடிவமாய் கருத்த னுகிய பரமேஸ்வரன் அவ்வவ்வடிவ மாய் பேதமாயுள்ளான். |

(சேதனம் தாதான்மியத்தால் பேதமாகத் தோற்றுவது சோபாதிகமென்பதாம்.)

[ஆத்மஞானத்தினுல் அப்பொழுதே முத்தி காணுமை யால் அந்த ஞானத்திற்கு அம்முத்திக்குச் சாதனமாந்தன்மை பிரத்தியக்ஷ விருத்தமென்னும்பிராந்தியை நீக்கும்பொருட்டு "அவனுடைய தியானத்தால்" என்னும் சுருதியை உதாகரிக் கின்றுர்.]

| | |
|---|---|
| இறையைத் தியான பரன் ஆக வந்த இயல்பால் | சர்வபேதமற்ற சச்சிதானந்த பிரஹ்மத்தை இவையனைத்தும் பிரஹ்மமல்லவாஎன்று தியானித்து வந்த ஞானத்தினுல் |

(அல்லது பிரஹ்மமே நானென்னும் சிரவண செனித மான சீவப்பிரஹ்ம வைக்கிய விஷயாபரோக்ஷ ஞானத்தினுல் பேதப்பிரபஞ்சம் நிவர்த்தியாம்)

| | |
|---|---|
| யோசகத்தின் நிலையால் | (நான் பிரஹ்மமென்று பேதபாதக அபேதசாதக யுக்தியோடு செய்யும் மனனத்தினுல் (நான் பிரஹ்மமல்ல வென்னும் சம்சயவேதுவான மாயை நிவர்த்தியாம்) |

| | |
|---|---|
| ஏகம் (நான்) எனும் உண்மையால் | நான் பிரஹ்மமென்னும் (அகண்டைகரசப் பரசிவ சொரூப மென்னும் ஞானனுசந்தான ரூப மான) நிதித்தியாசனத்தினுல் |

(அந்தப் பிரத்யக்வடிவ பிரஹ்மவைக்கிய விஷயமான அபரோக்ஷ ஞானமுளதாம் அதனுல் மாயை அதன் விலாசம் நிவர்த்தியாம்)

| | |
|---|---|
| முடிவினில் உயிர் தேசு எனத் திகழும் | பிராரப்த கருமபலபோக முடிவினில் ஆத்மா சிதேகரச சுயம்பிரகாசமாய் விளங்கும் |
| இங்ஙனே பிறிவுசெய்த மாயை சிதைவு ஆகும் | இந்த விதேக கைவல்லிய அவசரத்தில் பேதமாக்கிய சகலமான மாயையும் தனது வாசனையோடுகூட நாசமாகும் |

(ஞானவானுக்கு அபரோட்ச ஞானத்தினுல் அகங்காரத்திற்கும் ஆத்மாவிற்கு முள்ள பிரமஜதான்மிய சம்பந்தத்தோடு சஞ்சித கர்மமும் அஞ்ஞானத்தின் ஆவரண சத்தியும் நிவர்த்தியாம் பிராரப்த கரும நாசத்தால் அஞ்ஞானத்தின் விக்ஷேபசத்தியின் நாசமும் அகங்காரத்திற்கும் தூல தேகத்திற்குமுள்ள கர்ம ஜதாதான்மியமும் சிதாபாசனுக்கும் அகங்காரத்திற்கும் உள்ள சகஜதாதான்மியமும் நாசமும் உண்டாமென்பது சுருதி யுக்தி யனுபவ சம்மதமாம் ஆதலால் வித்துவானுக்கு தேகாதிப் பிரபஞ்ச விவகாரம் தோற்றுவானேன் என்பதில் சங்கையில்லை) 36

(அ—கை) சொல்லிய தியானுதிகட்குப் பலத்தைப் பிரதிபாதியா நின்ற சுருதியைச் சங்கிரகித்துக் கூறுகின்ருர்.]

ஈசனை யறிந்த வந்த விடத்திலே யெண்ணு மெல்லாப்
பாசமும் நசித்த ருனும் பணியறப் பவத்தின் றீர்வும்
காசுறு மகில மாயக் கங்குலின் கழிவுந் தானே
யாசறு மகண்ட ரூபி யாகையு மனைத்து மெய்தும். 37

(இ—ள்)

| | |
|---|---|
| ஈசனை அறிந்த அந்த இடத்திலே | பரமேஸ்வரனை தனது வடிவமாகச் சாக்ஷாத்கரித்த அந்தச் சமயத்திலே |

| | |
|---|---|
| எண்ணும் எல்லாப் பாசமும் நசித்தல் தானும் | கருதாநின்ற மூலமாயை ஆவரணம் கர்மகிரந்தி அகங்காரகிரந்தி சம்சயக்கிரந்தி நான் கர்த்தா போக்தாவென்னும் பிராந்தி முதலியவைகளின் நாசமும் |
| பணி அற பவத்தின் தீர்வும் | (*அவித்தியாதி பஞ்ச கிலேசங்களின் நீக்கவாயிலாக) கிருத கிருத்தியத் தன்மையும் செனன மரணங்களாகியவற்றின் நீக்கமுமுண்டாம் |

---

* விசாரித்துப் பார்க்க எது இல்லாமற் போகிறதோ அது அவித்தை எனப்படும். அவ்வவித்தையும் 1. மூலா வித்தை 2. தூலா வித்தை என இருவகைத்தாம்.

1. சுத்தசைதன்னியத்தை மூடிக்கொண்டிருப்பதுமூலாவித்தை.
2. கட முதலிய உபாதியுடைய சைதன்னியத்தை மறைப்பது எதுவோ அது தூலாவித்தையாம். மூலாவித்தையும் காரிய காரண பேதத்தால் இருவகைத்து.

1. ஆவரண விக்ஷேப சத்திகளுடன் கூடி அநாதி பாவ ரூபமாயிருப்பது காரண வடிவ அவித்தையாம்.
2. ஒன்றில் மற்றொன்றின் புத்தி வடிவத் தோற்றம் எதுவோ அது காரிய வடிவ அவித்தையாம்.

அவற்றில் காரிய வடிவ அவித்தையும்.

1. அநாத்மாவாகிய தேகாதிகளிடத்தில் ஆத்ம (நானெனும்) புத்தி.
2. அநித்யமான ஆகாசாதிகளில் நித்திய புத்தி.
3. துக்க ரூப தனுதிகளில் சுக புத்தி.
4. அசுசியான சரீரம் ஸ்திரி புத்திரர்களை முத்தமிடுதல் முதலியவற்றில் சுசி,புத்தி என்று இவ்வாறு நான்கு வகைப்படும்.

1. இக்காரியாவித்தையே பஞ்சகிலேசத்தில் அவித்தை எனக் கூறப்படும்.
2. புத்தி ஆத்மாக்களின் ஒருமையுணர்ச்சி அஸ்மிதை இதனையே சமானிய அகங்காரமென்றும் கூறுவர்.
3. அநுகூல பதார்த்தத்தின் ஞானத்தால் உண்டாகும் புத்தி விருத்தி ராகமாம்.
4. பிரதிகூல பதார்த்தத்தின் ஞானத்தால் உண்டாகும் புத்தி விருத்தி துவேஷமாம்.
5. மரண பயத்தால் சரீரத்தை ரக்ஷித்தலிலுண்டாகும் ஆக்கிரகம் அபிநிவேஷமாம். இவ்வைந்துமே பஞ்சகிலேசமாம்.

[“அதனுடைய தியானத்தினுல் மூன்ருவதாகிய (காரண) தேகம் நிவர்த்தியாகிறது” என்னுஞ் சுருதியைக் கூறுகின்ருர்.]

| | |
|---|---|
| காசுறும் அகிலம் ஆயக் கங்குலின் கழிவும் | தோஷத்தோடு சர்வமாகிய தமோ ரூப அவித்தியா நிவர்த்தியும் |
| தானே ஆசு அறும் அகண்டரூபி ஆகையும் அனைத்தும் எய்தும் | இயல்பாகவே தோஷரகிதமான அகண்ட பிரஹ்ம ரூபமாய் அவசேஷித்தலும் (பிரஹ்மப் பிராப்தியும்) சர்வமும் அடையப்படும். |

(சிரவணுதிகளால் முன் மாயை முதலிய பரோக்ஷமாய் கிஞ்சிற்று நீங்கி பின் அபரோக்ஷ ஞானத்தால் முழுவதும் நீங்குமென்பதாம்.)

(அ – கை) சோபாதிகத்தை விடுத்து நிருபாதிகத்தை தியானிக்க வேண்டும் எனப் பிரதிபாதிக்கின்ருர்.]

மேவிய தன்பா லுள்ள மெய்ப்பொரு ளொன்று மன்றி
யாவுமிங் கறிய வேண்டா வறிந்துமிப் பொருளு மாகிச்
சீவனு யுண்பானுகிச் சிவனென வூட்டு வானுய்
மூவித மாகி நிற்கும் மூலமாம் பிரமந் தானே. 38

(இ – ள்)

| | |
|---|---|
| மேவிய தன்பால் உள்ள | பொருந்தா நின்ற தனதிதயத்தி லுள்ள |
| மெய்ப்பொருள் ஒன்றும் அன்றி யாவும் இங்கு அறியவேண்டா | சத்துரூப பிரத்யகபின்ன பிரஹ்மமொன்றையே சிந்திக்கவேண்டுமேயன்றி சர்வத்தையும் சிந்திக்க வேண்டுவதில்லை |

[போக்துரு போக்கியாதி பேதத்தான் மூவிதமாகச் சகத்துத் தோற்றுகிறது அதுவும் மாயாதீத பிரஹ்மத்தில் அத்தியஸ்தத் தன்மையால் அதனினும் அன்னியமாக இல்லையென்னும் மர்மத்தைப் (ரகசியத்தை) பிரதிபாதிப்பதாகிய மந்திரத்தை யுதாகரணமாகச் சொல்லுகின்ருர்.]

| | |
|---|---|
| அருந்தும் இப்பொருளும் ஆகி | போகிக்கும் படியான (ஸ்திரி, புத்திர, தனுதி) போக்கியமாகியும் |
| சீவனுய் உண்பான் ஆகி | சீவரூப போக்தாவாகியும் |
| சிவனென ஊட்டுவனுய் | பரசிவ ரூப போகப்பிரதனுயும் (வினைப்படி சுகதுக்கங்களை அனுபவிக்கச் செய்பவனுயும்) |
| மூலம் ஆம் பிரமம் | – ஜெகத் காரண பிரஹ்மமானது |
| மூவிதம் ஆகி நிற்கும் | இந்தச் சோபாதிக மூன்றுவடிவமாயிருக்கும். |

(இந்தச் சீவேசுவர ஜெகத்தாகத் தோற்றும் மாயாம் சமான நாம ரூப சோபாதிகத்தை விடுத்து பிரஹ்மாத்ம சொரூபமான சச்சிதானந்த நிருபாதிகத்தை தியானிக்க வேண்டு மென்பதாம். 38

(அ – கை) இவ்வித பிரஹ்ம ஞானேபாயத்தைப் போதிக்கும் பொருட்டு "எப்படி அக்கினியுடைய மூர்த்தி" என்ற சுருதியின் பொருளைக் கூறுகின்றுர்.]

தீம ரந்தொறும டைந்தழிவு ருது தெரிவா
காமை நின்றரணி யால்வடிவு காணு மதுபோ
லாமு டம்பிலழி வின்றிமறை கின்ற வமல
ஞேமெ னும்பொருளு ணர்ந்திடவு டம்பில் வெளியாம். 39

(இ – ள்)

| | |
|---|---|
| தீ மரந்தொறும் அடைந்து அழிவுருது தெரிவு ஆகாமை நின்ற் | அக்கினியானது விருக்ஷங்களில் பொருந்தி மறைந்தும் நாசமின்றியிருந்து |
| அரணியால் வடிவு காணும் அது போல் | மேலரணி கீழரணியாக கடைதலான விவகாரத்தால் எப்படி பிரத்யக்ஷமாக அக்கினியினது சொரூபம் வெளிப்படுகிறதோ அப்படியே |
| ஆம் உடம்பில் அழிவு இன்றி மறைகின்ற அமலன் | சர்வப் பிராணிகளினது சரீரங்களில் நாசமின்றி மறைந்திருக்கும் நின்மலனுன பரசிவன் |

ஓம் எனும் பொருள் உணர்ந்திடவும் உடம்பில் வெளியாம் } பிரணவார்த்தத்தை அறிய அவர்களது இருதயத்தில் ஸ்பஷ்டமாக பிரத்தியக்ஷமாகின்ருனென்பதாம்

[பரம் அறியத்தக்கது அபரம் தியானிக்கத்தக்கது என்று முற்கூறிய அக்ஷரத்துவம் இங்கு கூறப்பட்டது. சோபாதிக ஆத்மா கீழரணியாகவும் ஓங்காரம் மேலரணியாகவுமாம், பிரணவாக்ஷரம் பராபரமாகிய பிரஹ்ம சொரூபம் " அப்பிரணவ சொரூபப் பிரஹ்மமே நான் என்று ஒரு க்ஷணமும் விடாமல் தியானம் செய்தல் மதனமாம் இவ்வுபாயத்தால் நிருபாதிக நிர்விசேஷ சுயம்பிரகாச ஆத்ம சொரூபத்தை, எப்படி விறகு முதலியவற்றில் தெரியாதிருக்கின்ற அக்கினி முதலியவற்றை. தீக்கடைக்கோல் முதலிய சாதனங்களால் விடாது கடைதலாதிகளால் அடையப்படுகின்றதோ அப்படி சாக்ஷாத்கரிக்கப்படு மென்பதாம்]

பிரணவ தியானத்தின் விசேஷக் கிரமம் சுரேசுவராசாரியரால் செய்த பஞ்சீகரண கிரந்தத்திலும் விசாரசாகரம் 5-ம் தரங்கம். 281 – 295 வரை பிரசங்கத்தில் விரிவாகப் பார்க்கலாம். 39

(அ – கை) ஆன்ம தெரிசனத்தை அநேக திருஷ்டாந்தங்களால் கூறுபவராய் சத்தியாதி சாதனங்களால் அடையத்தக்கதென்று உபதேசிக்கின்ருர்.]

உலத்த லின்றியொழி வற்றபொரு ளுண்மை யதுவாஞ்
சலித்த லின்றியத வத்தினவர் தங்க ணெதிரே
திலத்தி லெண்ணெயர ணிக்கனற திக்க ணிகழ்நெய்
நிலத்தி னீரெனநி கழ்ந்துவெளி யாகி நிலையாம். 40

(இ – ள்)

உலத்தல் இன்றி ஒழிவு அற்ற பொருள் } நாசமின்றியதும் நீக்கமின்றியதும் ஆகிய அக்ஷர பிரஹ்மமானது

உண்மை அதுவாய் – சத்திய வசனத்தை யுடையராய்

| | |
|---|---|
| சலித்தல் இன்றிய தவத்தினவர் தம் கண் எதிரே | இளைத்து ஓய்தலில்லாத கிருச்சிர சாந்திராயணாதி வருணாச்சிரமவிகிதமான சுதர்மத்தையுடைய சாதகரின் இருதயத்தின் கண்ணே. |
| திலத்தில் எண்ணை | எள்ளில் ஆட்டுதலாய விவகாரத்தால் எண்ணையும் |
| அரணிக்கனல் | கட்டையில் கடைதலாய விவகாரத்தால் அக்கினியும் |
| ததிக்கண் நிகழ் நெய் | தயிரைக் கடைதலாய விவகாரத்தால் நெய்யும் |
| நிலத்தில் நீர் | பூமியில் தோண்டுதலாய விவகாரத்தால் ஜலமும் |
| என நிகழ்ந்து வெளியாகி நிலையாம் | எப்படிப் பிரத்தியக்ஷமாய்க்காணப் படுகிறதோ அப்படியே சிரவணமனனாதியுபாயங்களால் பிரத்யக்ஷமாய் பிரகாசித்து மறைவின்றி நிலைத்து விளங்கும். (பிரஹ்மமானது தியானத்தின் அந்தத்தில் ஞான முண்டாய் அபரோக்ஷமாகு மென்பதாம்.) 40 |

(அ – கை) இவ்வாறு அத்விதீய பிரஹ்மத்திற்குத் தனது சத்தி வசத்தால் போக்துரு போக்கியம் போகப்பிரதன் என்னும் இம்மூவகை ரூபமான ஸ்திதியும் அவற்றினின்றும் பிறிக்கப்பட்ட அபரிச்சின்ன சிதானந்த ஏகரசமான நிருபாதிக ரூபத்தினுடைய ஞானத்தினால் மோக்ஷமுண்டாமென்னும் சகல சாஸ்திரங்களையும் சங்கிரகித்துப் பிரதிபாதியா நின்ற சூத்திர பூதமான சுவேதாசுவதரத்தின் பிரதமாத்தியாயத்தைச் சொல்லி மற்றய வைந்தத்தியாயங்களும் கூறவந்தவற்றையே விரித்தலினால் அவற்றைச் சங்கிரகித்துக் கூறுகின்றார்.]

ஆகு ஞானநற் றவமறை யீறறை யருத்தமு மதுவல்லா
லியாக தானபுண் ணியங்களா லியோகம்வந் தெய்தும்வந் தெய்துற்ற
யோக ஞானமுள்புகுத்துமெய் யுணர்வதா னுள்ளவா றுளவாறே
யேக மானவீ டளித்திடுங் கருமத்தா லின்பவீ டெய்தாதே. 41

(இ – ள்)

| | |
|---|---|
| நல் தவம் ஞானம் ஆகும் | வேதோத்தம தவசினுல்(சித்தசுத்தி வாயிலாக) ஞானமான துளதாம். |
| அருத்தமும் | அந்த ஞானத்தினுலடையப்படுவ தாகிய பொருளும் |
| மறை ஈறு அறை அது அல்லால் | உபநிஷத் பிரதிபாத்தியமாம் (இவ் வருத்தம் சுவேதாசுவதரம் முத லத்தியாய தாற்பரிய) மன்றி (ஐந் தத்தியாய தாற்பரியமுமாம்) |

[ அவ்வருத்தத்தைக் கூறுகின்றுர். ]

| | |
|---|---|
| யாகதான புண்ணி யங்களால் | நிஷ்காமமாகச் செய்யப்பட்ட (ஈஸ்வரார்ப்பண புத்தியாலனுஷ் டிக்கப்பட்ட) நித்திய நைமித்தி யாதி கருமங்களினுல் |
| யோகம் வந்து எய்தும் | கைவல்லிய வுபநிஷத் முதலிய வற்றிற்கூறிய *யோகாங்கங்கள் வந்து பொருந்துவதாகும் |
| வந்து எய்துற்ற யோகம் ஞானம் உன் புகுத்தும் | சிரவணுதி ரூபயோக வாயிலாக ஞானத்தை உள்ளே அடையப் பண்ணும் |
| மெய்யுணர்வுதான் உள்ளவாறு உள வாறே ஏகமான வீடு அளித்திடும் | பிரஹ்மாத்ம வைக்கிய ஞான மானது எப்படியுள்ளதோ அப் படியே யிருப்பதாகியும் அபரோக்ஷ மாயும் அபேத ரூபமாகியமோக்ஷத் தைக்கொடுக்கும் |
| கருமத்தால் இன்ப வீடு எய்தாதே | கருமானுஷ்டானத்தால் மாத்திரம் நிரதிசயானந்த மோக்ஷமானது அடையப்படாது. 41 |

(அ – கை) பிரஹ்ம வித்தியா சம்பிரதாய கோப்பனத் தின் (ரகசியத்தின்) பொருட்டு மூல சுருதியில் யாதொரு அதிகாரி விசேஷ லக்ஷணஞ் சொல்லப்பட்டதோ அதையும் தெரிசிப்பிக்கின்றுர். ]

* அஷ்டாங்கம் முதலியவற்றை பகவற்கீதை 6ஆம் அத்தியாயம் பதஞ்சல யோக சூத்திர முதலியவற்றில் அறியவும்.

மிக்க சித்தராய் வன்னவாச் சிரமங்கள் விட்டுமே லாய்நின்ற
பக்கு வர்க்கிது பகரலா மல்லது பகர்ந்திடப் படாதென்றுந்
தக்க நற்குரவன்றனைச் சிவனெனத் தானினைந் திடுவாருட்
புக்க லாகுமிங் குரைத்த மெய்ப் பரம்பொருள் புரணமாய்
வெளியாக. 42

(இ – ள்)

| | |
|---|---|
| மிக்க சித்தர் ஆய் | மேலான சாந்தி முதலிய குணங்களோடு கூடிய சித்தத்தை யுடையவராயும் |
| வன்ன வாச்சிர மங்களை விட்டு | வர்ணாச்சிரமங்களை (அபிமானம்) விடுத்து |
| மேலாய் நின்ற பக்கு வர்க்கு இது பகரலாம் அல்லது | மிகவும் மேன்மையாய் நின்ற பக்குவத்தினையுடைய அதிகாரிகளுக்கு இந்த பிரஹ்ம வித்தையை உபதேசிக்கத்தக்கதே யன்றி |
| என்றும் பகர்ந்திடப் பாடாது | (சாந்தி முதலிய சாதனமின்றியவனுக்கும் மகனல்லாதவர்க்கும்) ஓர்போதும் உபதேசிக்கக்கூடாது |

'அக்கினி' என்றல் முதலிய மந்திரங்களால் பஸ்ம தூளனமும் திருபுண்டர தாரணமும் அத்யாசிரமம் என்று பெரியோர்கள் சொல்லுகிருர்கள். 70-ம் சுலோகார்த்தம். விடுபட்டது.

[ சிவபத்தியை போல குருபத்தியும் வித்தியோற்பத்தியில் அந்தரங்க சாதனமென்று சுருதியை உதாகரிக்கின்ருர். ]

| | |
|---|---|
| தக்க நல்குரவன் தனைச் சிவன் எனத் தான் நினைந்திடு வாருள் | தகுதியான ஞானசாரியனை பரமசிவன் என்று நினைத்து வழிபாடு செய்பவர்களாகிய அதிகாரிகளின் அந்தக்கரணத்தின் கண்ணே |
| இங்கு உரைத்த மெய் பரம்பொருள் புரண மாய் வெளியாக புக்கல் ஆகும் | இங்கு கூறிய பரமார்த்தமாகிய பிரஹ்ம சொரூபமானது புரணமாய் (சம்பூரண விளக்கமாகவும்) அபரோக்ஷமாகவும் தோன்றுமென்பதாம். |

(அ – கை) பிரதிபாதித்து வந்த உபநிஷதார்த்தத்தை நிகமனஞ் செய்கின்ருர். ]

அரிய மாமறை வாக்கிஞ லுங்களுக் கறியவு மறைந்தேனன்
தெரியு மாகின்மற் றவன்றெரி யாமையைக் கடந்துபோய்ச் சிந்தைக்குப்
பிரிய மாகிய பரப்பிர மத்தையே பெற்றுமேற் பிறவாமைக்
குரிய ஞகுமென் றுரைத்தன னுணர்விஞ லுலகெலாம் படைத்திட்டான். 43

(இ – ள்)

| | |
|---|---|
| அரிய மாமறை வாக்கிஞல் | அறிதற்கரியதாயும் மாக்ஷிமை பொருந்தியதாயுமுள்ள சுருதி வாக்கியங்களுக்கு |
| நான் உங்களுக்கு அறியவும் அறைந்தேன் | நானுங்களுக்கு அறியத்தக்க விஷயங்களனைத்தையும் உபதேசித்தேன் |
| மற்றவன் தெரியும் ஆகில் | இந்தப் பிரஹ்ம வித்தையாகிய உபதேசத்தை ஒருவன் உள்ளபடி அறிவாஞயின் |
| தெரியாமையைக் கடந்து போய் சிந்தைக்குப் பிரியமாகிய பரப்பிரமத்தையே பெற்று | அஞ்ஞானத்தை நீங்கினவஞய் (நிரதிசயானந்த மாதலின்) மனதுக்குப் பிரியமான பரபிரஹ்மத்தைக் (கண்டசாமீகர நியாயம் போல) அடைந்து |
| மேல் பிறவாமைக்கு உரியன் ஆகும் என்று உரைத்தனன் | மீண்டும் செனியாத தன்மைக்கும் உரித்தானவன் ஆகுமென்று கூறியருளினர் (ஆரென்னில்) |
| உணர்விஞல் உலகு எல்லாம் படைத்திட்டான் | தனது சங்கற்ப மாத்திரத்தால் சர்வ லோகங்களையுஞ் சிருஷ்டித்த பிரஹ்மாவானவர் 43 |

(11-வது) கடவல்லி சுவேதா சுவதர வுபநிஷதங்களின்
தாற்பரியம் உரைக்கும் அத்தியாயம்
சம்பூரணம் ஆக திருவிருத்தம் (511)

சற்குருநாதன் துணை.

## பன்னிரண்டாவது முன் சொல்லிய உபநிஷதங்களின் அருத்தத்தைத் தொகுத்து உரைக்கும் அத்தியாயம்.

(அ-கை) இந்தப் பிரகாரம் ஐதரேய முதலிய சர்வ சாகைகளிலும் உள்ள உபநிஷங்களையும் கூறிப் பிரதிபத்தி (ஞான) சௌகரிய (அனுயாச சாத்திய) த்தின் பொருட்டு அச்சர்வ உபநிஷதங்களிலுமுள்ள அர்த்தங்களைச் சங்கிரகமாகக் கூறிப் பிரதிஞ்ஞை செய்கின்றார்.]

[ இது கவி நாயகர் வாக்கியம் ]

வகுத்து நானுமக் குரைத்தநான் மறைகளின் பொருளைத்
தொகுத்து நான்சொலக் கேண்மினென் றின்னவா
சொன்னான்
உகத்தை நான்கையு மொன்றதா யிரமொரு பகனான்
முகத்தி னாற்பொரு ணான்குநான் மறையினான் மொழிவான். 1

(இ-ள்)

| | |
|---|---|
| ஒன்றது ஆயிரம் யுகத்தை நான்கையும் ஒரு பகல் | (கிரேதா திரேதா துவாபர கலியுக மாகிய) சதுர்யுகமாயிரத்தையு மொரு பகலாக வுடையவனாயும் |
| நான் முகத்தினால் பொருள் நான்கும் நான் மறையினால் மொழிவான் | தனது நான்கு முகங்களினாலும் தருமம் அர்த்தம் காமம் மோக்ஷம் ஆகிய நான்கையும் நான்கு வேதங் களின் வாயிலாகக் கூறுபவராகிய பிரஹ்மாவானவர் |
| வகுத்து நான் உமக்கு உரைத்த நான் மறைகளின் | நான் உங்களுக்கு விஸ்தாரமாகக் கூறிய இருக்கு முதலிய நான்கு வேதங்களிலுள்ள |
| பொருளைத் தொகுத்து நான் சொலக் கேண் மின் என்று இன்னவா சொன்னான் | ஐதரேய முதலிய சர்வ வுப நிஷதங் களின் பொருள்களனைத்தையும் சங்கிரகித்து உபதேசிக்க நீங்கள் கேட்கக் கடவீர்களென்று இந்தப் பிரகாரம் தேவர்களுக்கு உபதேசித்தாரென்பதாம். |

(அ – கை) சர்வோபநிஷதங்களுக்கும் சம்மதமான அர்த்தமானது பிரத்யக பிரஹ்மதாதான்மியமே யென்று சொல்லுகின்ருர்.]

பாடு கின்ற வெக்கலையின் பயனுந் தெரிந்து பகர்கின்றேன்
ஓடு கின்ற சிந்தையொழித் தொருப்பட்டெவருங் கேண்மினுரை
ஆடு கின்ற நானென்னு முரைக்கு மறிவுக் கும்மறிவாய்
நாடு கின்ற வுணர்வொன் றுண் டதுவே யான்மா
நமக்கெல்லாம். 2

(இ – ள்)

| | |
|---|---|
| பாடுகின்ற எக்கலையின் பயனும் தெரிந்து பகர்கின்றேன் | பிரதி பாதியா நின்ற சர்வ சாஸ்திரங்களின் அருத்தங்களையும் விசாரித்துத் தெரிந்து உங்களுக்கு உபதேசிக்கின்றேன் |
| ஆடுகின்ற சிந்தை ஒழித்து ஒருப்பட்டு எவரும் கேள் மின் | விஷயங்களில் செல்லா நின்ற விருத்தி ஞானத்தைத் தகைந்து ஏகாக்கிரசித்ததோடு நீங்கள் யாவரு மிருந்து கேளுங்கள் |
| உரை ஆடு கின்ற நான் என்னும் உரைக்கும் | சொல்லா நின்ற அகமென்னும் சத்தத்திற்கும் |
| அறிவுக்கும் அறிவாய் நாடுகின்ற உணர்வு ஒன்று உண்டு | அதன் ஆகார விருத்தி ஞானத்திற்கும் ஆலம்பனமாய் (பற்றுக்கோடாய்) கருதா நின்ற சேதனமொன்றிருக்கிறது |
| அதுவே ஆன்மா நமக்கு எல்லாம் | அவ்வித சாக்ஷிரூபப் பிரத்தியக்கே நம்மனைவர்க்கும் ஆன்மாவாம். |

( காரிய காரண சங்காதவிசிட்டசைதன்யம் ஆன்ம சத்தத்திற்கு வாச்சியம் அஃதான்மாவாகப் பிரதீதியாயினும் தேகேந்திரியங்களால் உண்டாயிருப்பதால் கடாதிகள் போல் அனுத்மா ஆதலால் சர்வாந்தர சாக்ஷியான சின் மாத்திர ரூபனே அகஞ்சத்தத்திற்கு லக்ஷியனுன ஆன்மா வாம் தேகாதிகள் ஆன்மாவன்றென்பது பொருள். ) 2

மாச தில்லாப் பரனாகி யிருக்கத் தனது மாயையினால்
ஈச னென்பு தறியாம லிறந்தான் பிறந்தான் போலிருக்கும்
பாசம் விடுமா நினைவுறுவான் பாரம் பரியத் தாற்பண்ணு
மாசின் மறையா லாசையெலா மறலாற் சாந்தி யாதியினால். 3

(இ – ள்)

| | |
|---|---|
| மாசது இல்லாப்பரன் ஆகி இருக்க | அவ்வான்மா நிர்தோஷமாகிய பிரஹ்மமாக விருக்கவும் |
| தனது மாயையினால் | – தன்னுடைய மாயையின் வசத்தால் |
| ஈசன் என்பது அறியாமல் | தன்னை பிரஹ்ம சொரூபமென வறியாமல் |
| இறந்தான் பிறந்தான் போல் இருக்கும் | செனித்து மரிக்கின்ற கருத்தாவான அகங்காரியைப்போல தன்னைக் கருதுவன் |

[இந்தப் பிரகாரம் சம்சாரித்வமானது சொச்சொருபாஞ்ஞானத்தினால் பண்ணப்பட்டதால் தனது சொரூபப் பிராப்தி விஷயத்தில் ஞானத்தினும் அன்னியமாய் யாதொன்றையும் அபேக்ஷிக்கத்தக்க தில்லையோ அந்த ஞானமும் இந்தக் கிரமமாய்ச் சித்தியா நிற்கும் என்று சொல்லத் தொடங்கினார்.]

| | |
|---|---|
| பாசம் விடுமா நினைவு உறுவான் | சம்சார பந்தம் விடும்படி முயற்சிக்கும் அதிகாரியானவன் |
| பாரம் பரியத்தால் பண்ணும் மாசில் மறையால் | குருபரம்பரை வாயிலாகச் செய்யா நின்ற குற்றமற்ற வேதத்திற் பிரதிபாதிக்கப்பட்ட அக்கினிஹோத்திராதி நித்தியநைமித்தியாதி நிஷ்காம கருமங்களின் அனுஷ்டானத்தினாலும் |
| ஆசை எலாம் அறலால் | (சுத்த சித்தத்திலுண்டான * விவேகத்தினாலும்) வைராக்கியத்தினாலும் |

* (விவேகம் — அன்னமானது நீரையும் பாலையும் பிரிப்பது போல ஆத்மாவைக் கிரியையும் நாசமுமின்றியதாகவும், அநாத்மாவான தேகாதிப் பிரபஞ்சத்தை நாநாவிதமாகத் தோற்று முலகத்தை கிரியையும் நாசமுமுடையதாகவும் திடமாகப் பிரித்தறிதலாம் இதனாலுண்டாகும் வைராக்கியம்–தியாகம் செய்யும் இச்சை அல்லது இச்சை

சாந்தி ஆதியினுல் } சாந்தியாதி சமாதி சட்கத்திஞலும் (முமூட்சுவத்திஞலும்) 3

பத்தியால் குரவன் பாதம் பணிந்துவே தாந்தம் பண்ணுஞ்
சுத்தமா வாக்கியத்தால் துணிந்தவப் பொருளைத் தூய
புத்தியாற் றுணிந்து கொண்டப் பொருளனு போகமாகச்
சித்தியா னிற்கு மைக்யஞ் சிவபதந் தனையே சாரும் 4

---

இல்லாமையாம் இது யதமானம் வியதிரேகம் ஏகேந்திரியம் வசீகாரம் என நான்காம். அவற்றுள் யதமானம்—இந்தச் சகத்தில் எது சாரம் எது அசாரம் எனக் குரு சாஸ்திரங்களால் நிச்சயிப்பேனென்ற மந்த விவேகம் ஆம். வியதிரேகம் – நகுலக் கொடியை ஆசிரயித்துப் பாம்புடன் போரிடும் கீரி போன்று சற்சங்கத்தை ஆசிரயித்துக் குணகுணங்களை யறிந்து துற்குணத்தை விடுதலும் நற்குணத்தை கொள்ளுதலாலுண்டாம் உற்சாகம். ஏகேந்திரியம் – மனத்தில் தூலமான ஆசையிருந்தும் துக்கமென நிச்சயித்து விஷயங்களில் பிரவிர்த்தியாது இருத்தலாம். வசீகார வைராக்கியம் – ஆசையானது தூலமாயெழாமல் அந்தக்கரணத்தில் சமஸ்காரமாத்திரமாயிருப்பதாம். இதுவும் மந்தம், தீவிரம் தீவிர தரமென்பதாம். தார புத்ர தனாதி நாசத்தால் சம்சாரத்தை வெறுக்கும் புத்திவிருத்தி மந்தமாம். இந்த லோகத்தில் புத்திராதி சம்பத்தாலுண்டாகும் சுகத்தை தேகமுள்ளளவு மிச்சியார்திருத்தல் தீவிரமாம். புணரா விருத்தியுண்டென்றறிந்து சர்வலோகங்களிலு மிச்சை யற்றிருத்தல் தீவிரதரமாம். இவற்றில் ஞானத்துக்குக் காரணம் தீவிரதரவசிகார வைராக்கியமாம் அதனாலுண்டாம், சட்சம்பத்தி — சமம்தமம் சிரத்தை சமாதானம் உபரதி திதிக்ஷை என்பதாம் அவற்றுள். மனதை விஷயங்களினின்றும் தடுப்பது சமமாம். இந்திரியங்களை விஷயங்களிற் செல்லாமற்றடுப்பது தமமாம். வேத குருவாக்கியங்களில் விசுவாசம் வைப்பது சிரத்தையாம். மனது சலியாமல் நிர்க்குண சொருபத்தில் ஸ்திரமாய் நிற்பது சமாதானமாம், ஸ்திரிதனம் ஜாதி அபிமானம் முதலிய கர்மத்தின் சாதனங்களோடு சகல கருமங்களையும் விட்டு விஷயங்களை விஷம்போல நீக்கி விடுதல் உபராமமாம். சீதோஷ்ண பசிதாக முதலிய துவந்துவங்களை சகிப்பது திதிக்ஷமாம் இவற்றில் சிரத்தையானது தயிர் கடைதலில் பாத்திரம் போலும் மா முதலிய விருக்ஷங்களுக்கு பழம் போலும் சகல சாதனங்களின் சம்பத்தியாகும் அச்சிரத்தையை துற்சங்கத்தினின்றுங் காப்பாற்ற வேண்டும் இந்த ஆறும் ஒன்று மற்றொன்றை அபேக்ஷிக்கிறபடியால் ஒரே சாதனம் சட்சம்பத்தியாம்; அதனாலுண்டாம் மூமூட்சுத்வம் — சர்வ துக்க நிவர்த்தியும் பிரஹ்மப் பிராப்தியும் மோக்ஷத்தின் சொருபமாம் அதில் பசித்தவன் அன்னம் தேடுவது போலும் தலையில் தீ பிடித்தவன் சலம் தேடுவது போலும் தீவிரமான இச்சையாம் இச்சாதனங்களைக் கொண்டு குருவை அடையத்தக்க தென்பதாம்.

(இ – ள்)

பத்தியால் குரவன் பாதம் பணிந்து } அதிகாரியானவன் குருபக்தியால் ஆசாரியனது திருவடியை பத்திர புட்ப பலாதிகளோடு போய் அர்ச்சித்து வணங்கி

வேதாந்தம் பன்னும் } (அவர் பிரியத்தினல் அநுக்கிரகிக்கும்) வேதங்களின் சிரமாகிய உபநிஷதங்களிற் கூறும்

சுத்தமா வாக்கியத்தால் –* பரிசுத்தமான மகாவாக்கியத்தால்

* (அதாவது இருக்கு வேதத்தின் மகாவாக்கியம் பிரக்ஞானம் ஆனந்தம் பிரஹ்மம்–சர்வாந்தக்கரணங்களிலும் உள்ள பிரக்ஞையை பிரஹ்மமென்பதால் நானும் அறிவு வடிவமாயிருத்தலால் பிரஹ்மமா மென்னு மிது மனன வாக்கியமாம். எசுர்வேதத்தின் மகாவாக்கியம். அகம்பிரஹ்மாஸ்மி – குரு உபதேசத்தைக் கேட்ட அதிகாரிக்கு நான் பிரஹ்மரூபமாயிருக்கின்றேனென்பதாம் இது அனுபூதி வாக்கியமாம். அதர்வண வேதம் மகாவாக்கியம் அயம் ஆத்மா பிரஹ்மம்–சுருதியுக்தி அனுபவங்களுக்குச் சம்மதமாக நித்தியாபரோக்ஷமான ஆத்மா பிரஹ்ம ரூபமாமென்பதாம் இது சம்மத வாக்கியமாம். சாமவேதத்தின் மகாவாக்கியம் தத்துவமசி – குருவானவர் அதிகாரியை நோக்கித் தற்பத லக்ஷியார்த்தரூப பிரஹ்மமே துவம்பத லக்ஷியார்த்தரூபமாகிய நீயாகின்ருய் என்பதின் விசாரம், அவித்தையால் சமுசார சக்கரத்தில் சுழலுஞ் சீவன் தன்னல் செய்யும் புண்ணிய புஞ்சபரிபாகத்தாலும் ஈசன் திருவருளாலும் விவேகாதி சாதனங்களோடு கூடியவனுய் குருவினல் உபதேசிக்கப்பட்ட மகாவாக்கியத்தினல்பிரத்யகான்மாவையும் பிரஹ்மத்தையும் அது நீயாகின்ருய் என்பதில், எப்படி ஒரு புருஷன் மற்றொரு புருஷனை நோக்கி காசியிற் கண்டவரசனே யிந்தச் சந்நியாசியாவன் இவன் அவனென்னும் பாவத்தில் காலம் தேசம் வேஷம் முதலியன வைக்கிய விரோத பாகத்தை விட்டு புருஷனது லக்ஷணமான நீண்ட கரம் நெடுங் கண்களில் குளிர்ந்த பார்வை வாக்கினில் இன்சொல்லுமாகியவற்ருல் அவனே இவனென்னும் எல்லா வாச்சிய பாகங்களுக்கும் புருஷனேடு ஆசிரயத்தன்மை தாதான்மியத்தன்மைச் சம்பந்தமெதுவோ அந்தப் பாகத்தியாக லக்ஷணையினல் ஏக புருஷனை அறிவிப்பது போல ஜீவேசுவரருக்கு ஐக்கிய விரோதமான சர்வக்ஞத்துவாதி கல்யாண குணங்களும் மாயையும் கிஞ்சிங்கத்வாதி ஈன குணங்களும், அவித்தையும் விட்டு அவிரோதமான சத்து சித்து ஆனந்த தன்மையால் அது நீ ஆகின்ருய் என்னும் எல்லா வாச்சிய பாகத்திற்கும் அகண்ட சேதனத்தோடு அதிஷ்டானத்தன்மை தாதான்மியத் தன்மைச் சம்பந்தம் எதுவோ அந்தப் பாகத்தியாக லக்ஷணையானது இருவாச்சியங்களில் உள்ள சேதன பாகங்களுக்கும் அபேதம் சுபாவ சித்தமாயறியத்தக்கதென்பதாம்.

சாந்தி ஆதியினல் } சாந்தியாதி சமாதி சட்கத்தினுலும் (முமூட்சுவத்தினுலும்) 3

பத்தியால் குரவன் பாதம் பணிந்துவே தாந்தம் பண்ணுஞ்
சுத்தமா வாக்கியத்தால் துணிந்தவப் பொருளைத் தூய
புத்தியாற் றுணிந்து கொண்டப் பொருளனு போகமாகச்
சித்தியா நிற்கு மைக்யஞ் சிவபதந் தனையே சாரும் 4

இல்லாமையாம் இது யதமானம் வியதிரேகம் ஏகேந்திரியம் வசீகாரம் என நான்காம். அவற்றுள் யதமானம்—இந்தச் சகத்தில் எது சாரம் எது அசாரம் எனக் குரு சாஸ்திரங்களால் நிச்சயிப்பேனென்ற மந்த விவேகம் ஆம். வியதிரேகம் – நகுலக் கொடியை ஆசிரயித்துப் பாம்புடன் போரிடும் கீரி போன்று சற்சங்கத்தை ஆசிரயித்துக் குணகுணங்களை யறிந்து துற்குணத்தை விடுதலும் நற்குணத்தை கொள்ளுதலாலுண்டாம் உற்சாகம். ஏகேந்திரியம் – மனத்தில் தூலமான ஆசையிருந்தும் துக்கமென நிச்சயித்து விஷயங்களில் பிரவிர்த்தியாது இருத்தலாம். வசிகார வைராக்கியம் – ஆசையானது தூலமாயெழாமல் அந்தக்கரணத்தில் சமஸ்காரமாத்திரமாயிருப்பதாம். இதுவும் மந்தம், தீவிரம் தீவிர தரமென்பதாம். தார புத்ர தனுதி நாசத்தால் சம்சாரத்தை வெறுக்கும் புத்திவிருத்தி மந்தமாம். இந்த லோகத்தில் புத்திராதி சம்பத்தாலுண்டாகும் சுகத்தை தேகமுள்ளவு மிச்சியாதிருத்தல் தீவிரமாம். புணரா விருத்தியுண்டென்றறிந்து சர்வலோகங்களிலு மிச்சை யற்றிருத்தல் தீவிரதரமாம். இவற்றில் ஞானத்துக்குக் காரணம் தீவிரதரவசிகார வைராக்கியமாம் அதனுலுண்டாம், சட்சம்பத்தி — சமம்தமம் சிரத்தை சமாதானம் உபரதி திதிக்ஷ என்பதாம் அவற்றுள். மனதை விஷயங்களினின்றும் தடுப்பது சமமாம். இந்திரியங்களை விஷயங்களிற் செல்லாமற்றடுப்பது தமமாம். வேத குருவாக்கியங்களில் விசுவாசம் வைப்பது சிரத்தையாம். மனது சலியாமல் நிர்க்குண சொரூபத்தில் ஸ்திரமாய் நிற்பது சமாதானமாம், ஸ்திரிதனம் ஜாதி அபிமானம் முதலிய கர்மத்தின் சாதனங்களோடு சகல கருமங்களையும் விட்டு விஷயங்களை விஷம்போல நீக்கி விடுதல் உபராமமாம். சீதோஷ்ண பசிதாக முதலிய துவந்துவங்களை சகிப்பது திதிக்ஷமாம் இவற்றில் சிரத்தையானது தயிர் கடைதலில் பாத்திரம் போலும் மா முதலிய விருக்ஷங்களுக்கு பழம் போலும் சகல சாதனங்களின் சம்பத்தியாகும் அச்சிரத்தையை துற்சங்கத்தினின்றுங் காப்பாற்ற வேண்டும் இந்த ஆறும் ஒன்று மற்றொன்றை அபேக்ஷிக்கிறபடியால் ஒரே சாதனம் சட்சம்பத்தியாம்; அதனுலுண்டாம் மூமூட்சுத்வம் — சர்வ துக்க நிவர்த்தியும் பிரஹ்மப் பிராப்தியும் மோக்ஷத்தின் சொரூபமாம் அதில் பசித்தவன் அன்னம் தேடுவது போலும் தலையில் தீ பிடித்தவன் சலம் தேடுவது போலும் தீவிரமான இச்சையாம் இச்சாதனங்களைக் கொண்டு குருவை அடையத்தக்க தென்பதாம்.

(இ – ள்)

பத்தியால் குரவன் பாதம் பணிந்து — அதிகாரியானவன் குருபக்தியால் ஆசாரியனது திருவடியை பத்திர புட்ப பலாதிகளோடு போய் அர்ச்சித்து வணங்கி

வேதாந்தம் பன்னும் — (அவர் பிரியத்தினுல் அநுக்கிரகிக்கும்) வேதங்களின் சிரமாகிய உபநிஷதங்களிற் கூறும்

சுத்தமா வாக்கியத்தால் –* பரிசுத்தமான மகாவாக்கியத்தால்

---

* (அதாவது இருக்கு வேதத்தின் மகாவாக்கியம் பிரக்ஞானம் ஆனந்தம் பிரஹ்மம்–சர்வாந்தக்கரணங்களிலும் உள்ள பிரக்ஞையை பிரஹ்மமென்பதால் நானும் அறிவு வடிவமாயிருத்தலால் பிரஹ்மமாமென்னு மிது மனன வாக்கியமாம். எசுர்வேதத்தின் மகாவாக்கியம். அகம்பிரஹ்மாஸ்மி – குரு உபதேசத்தைக் கேட்ட அதிகாரிக்கு நான் பிரஹ்மரூபமாயிருக்கின்றேனென்பதாம் இது அநுபூதி வாக்கியமாம். அதர்வண வேதம் மகாவாக்கியம் அயம் ஆத்மா பிரஹ்மம்–சுருதியுக்தி அனுபவங்களுக்குச் சம்மதமாக நித்தியாபரோக்ஷமான ஆத்மா பிரஹ்ம ரூபமாமென்பதாம் இது சம்மத வாக்கியமாம். சாமவேதத்தின் மகாவாக்கியம் தத்துவமசி – குருவானவர் அதிகாரியை நோக்கித் தற்பத லக்ஷியார்த்தரூப பிரஹ்மமே துவம்பத லக்ஷியார்த்தரூபமாகிய நீயாகின்ருய் என்பதின் விசாரம், அவித்தையால் சமுசார சக்கரத்தில் சுழலுஞ் சீவன் தன்னுல் செய்யும் புண்ணிய புஞ்சபரிபாகத்தாலும் ஈசன் திருவருளாலும் விவேகாதி சாதனங்களோடு கூடியவனுய் குருவினுல் உபதேசிக்கப்பட்ட மகாவாக்கியத்தினுல்பிரத்யகான்மாவையும் பிரஹ்மத்தையும் அது நீயாகின்ருய் என்பதில், எப்படி ஒரு புருஷன் மற்ருெரு புருஷனை நோக்கி காசியிற் கண்டவரசனே யிந்தச் சந்நியாசியாவன் இவன் அவனென்னும் பாவத்தில் காலம் தேசம் வேஷம் முதலியன வைக்கிய விரோத பாகத்தை விட்டு புருஷனது லக்ஷணமான நீண்ட கரம் நெடுங் கண்களில் குளிர்ந்த பார்வை வாக்கினில் இன்சொல்லுமாகியவற்ருல் அவனே இவனென்னும் எல்லா வாச்சிய பாகங்களுக்கும் புருஷனுேடு ஆசிரயத்தன்மை தாதான்மியத்தன்மைச் சம்பந்தமெதுவோ அந்தப் பாகத்தியாக லக்ஷணையினுல் ஏக புருஷனை அறிவிப்பது போல ஜீவேசுவரருக்கு ஐக்கிய விரோதமான சர்வக்ஞத்துவாதி கல்யாண குணங்களும் மாயையும் கிஞ்சிங்கத்வாதி ஈன குணங்களும், அவித்தையும் விட்டு அவிரோதமான சத்து சித்து ஆனந்த தன்மையால் அது நீ ஆகின்ருய் என்னும் எல்லா வாச்சிய பாகத்திற்கும் அகண்ட சேதனத்தோடு அதிஷ்டானத்தன்மை தாதான்மியத் தன்மைச் சம்பந்தம் எதுவோ அந்தப் பாகத்தியாக லக்ஷணையானது இருவாச்சியங்களில் உள்ள சேதன பாகங்களுக்கும் அபேதம் சுபாவ சித்தமாயறியத்தக்கதென்பதாம்.

| | |
|---|---|
| துணிந்த அப்பொருளை | நிச்சயிக்கப்பட்ட பிரத்யக பிரஹ்ம வைக்கியமான பொருளை |
| தூய புத்தியால் துணிந்து கொண்டு | பரிசுத்தமான புத்தியால் சிரவண மனனாதிகளால் நிச்சயித்துக் கொண்டு |
| அப்பொருள் அனுபோகமாகச் சித்தியா நிற்கும் | நிச்சயிக்கப்பட்ட அவ்வஸ்து வானது அனுபோகமாகச் சித்திக் கும்படி (நிதித்தியாசனஞ் செய்து) |
| ஐக்யம் சிவபதம் தனையே சாரும் | பிரத்யகபின்ன பிரஹ்மாயிக்கிய விஷயமான அபரோக்ஷஞானத் தைப் பெற்றதனால் பிரஹ்மபதத் தையே அடைவானென்பதாம். 4 |

(அ - கை) அதனையே விஸ்தரித்துக் கூறுகின்றார். ]

ஊனிலொரு பற்றுமுள னன்றியுட னிற்கும்
நானெனவி ளம்புதனை நற்சிவம தாகத்
தானறியு மாகிலொரு வன்றனுரு வாகும்
ஞானபரி பூரணந லந்தனைய டைந்தான். 5

(இ - ள்)

| | |
|---|---|
| ஊனில் ஒரு பற்றும் உளன் அன்றி | தேகத்தின் கண்ணே யாதொரு பற்றும் உடையவனாதலின்றி |
| உடல் நிற்கும் நான் என விளம்பு தனை | அச்சரீரத்தின் கண்ணே யாதொரு அகம் துவம் பதங்களுக்கு லக்ஷய மாகவிருக்கும் ஆத்மாவை (ஒருவன்) |
| நல் சிவமது ஆகதான் அறியும் ஆகில் ஒருவன் | ஆனந்தமாயும் அபரிச்சின்ன மாயும் இராநின்ற பிரஹ்ம சொருப மாக சாக்ஷாத்கரிப்பானாகில் அவன் சாக்ஷாத்கரித்த அந்தக்ஷணமே (அவித்தைலயமடைகிறது) |
| தனுருவாகும் ஞான பரிபூரண நலம்தனை அடைந்தான் | தனது சொருபமாகிய சேதன பரி பூரண ஆனந்தத்தை அடைந்தவ னாவன். |

(பின் சிரவண மனனாதிகளால் உற்பன்னமாய ஞானத்தினால் சுகதுக்காதி சகல துவந்துவங்களையும் விட்டதாய் நீ நான் என்னும் சத்தங்களினால் லக்ஷிதமாய் அபரிச்சின்னமாயுள்ள சாக்ஷியாகிய சின்மாத்திர ரூபத்தைப் பரசிவ ரூபமாக நன்றாய் சாக்ஷாத்கரித்து அந்த ஞான சமகாலத்திற்றானே தான் பரிபூரணத் தன்மையை அடைகின்றான். சுருதியும் ஞான சமகாலத்திலேயே சர்வாத்மியப் பிராப்தியை வித்துவானுக்குத் தரிசிப்பிக்கின்றது "அவ்விதனை அறிந்து வாமதேவரிஷியானவர் நான் மனுவானேன் சூரியனானேன்" என்று அவ்வவ்வுருவங்களை அடைந்தார் என்னும் இதுவே என்பதாம்.) 5

(அ - கை) தத்துவ ஞானிக்குச் சுவய திருஷ்டியினாலும் பாவாபாதி (தோற்றம் தோற்றமின்மை முதலிய) பேதத்தை யாசரித்துள்ள ஜெகத்தனைத்தும் காரண ரூபமான பிரஹ்மமாகவே பிரகாசிக்கும் என்று பிரதிபாதிக்கின்றார்.)

செறிவா யெங்குந் திகழ்ந்துள்ள சிவனா னென்னுந் திகழ்வுற்றான்
நெறியா னிகழு நிகழ்வெல்லா நிமல மாயே நிகழ்ச்சிதரும்
அறிவா யறியாமையுமாகி யறிவிப் பவனா யறிவானைப்
பிறிவா யுளதா யிலதாகிப் பிரம மொன்று மேபிறழும். 6

(இ - ள்)

| | |
|---|---|
| செறிவாய் எங்கும் திகழ்ந்து உள்ள சிவன் நான் என்னும் திகழ்வு உற்றான் | பரிபூரணமாய் எவ்விடத்திலும் விளங்காநின்ற பரசிவனே நானென்னும் ஞானத்தையடைந்த வித்வானுக்கு (அஞ்ஞான நிவர்த்தி யானால்) |
| நெறியால் நிகழும் நிகழ்வு எல்லாம் நிமல மாயே நிகழ்ச்சி தரும் | கிரமமாக பிரதீதியாகின்ற தோற்றம் அனைத்தும் நிர்மல ரூப பிரஹ்ம மாகவே விளங்கா நிற்கும் |

[ வஸ்துவினது இயல்பைக் கூறுகின்றார். ]

| | |
|---|---|
| அறிவாய் அறியாமையும் ஆகி | ஞானமும் அஞ்ஞானமுமாகியும் |

அறிவிப்பவனுய் அறிவானுய் } குருவும் சீடனுமாகியும்

பிறிவு ஆய் – நாநாவித பேதமாகியும்

உளதாய் இலதாகி – பாவமாகியும் அபாவமாகியும்

பிரமம் ஒன்றுமே பிறழும் } பிரஹ்மமொன்றே நிகழும் (அத்விதீய பிரஹ்ம சொரூபமே இவைகளனைத்துமாகவும் விளங்குமென்பதாம்.

(ஏனெனில் அந்தக்கரணத்தில் எழும் விருத்திகளைத் திற்கும் அஞ்ஞான நீக்கமே பிரயோஜனமாம் அவ்வஞ் ஞானமும் பிரஹ்ம சேதனத்தையே ஆசிரதமாயிருப்பதால் சர்வ விருத்திகளும் சாக்ஷாத் பிரஹ்ம சொரூபத்தையே அப ரோக்ஷபடுத்தியும் விசாரமற்றவர்கள் மரத்தை யானையாகப் பார்ப்பதே போல பிரஹ்மத்தையே ஜீவேசுர செகத்தாக நோக்குகின்றார்கள் விசாரத்தோடு கூடிய ஞானிகளோ யானையின் வடிவம் மரமே யென்று பார்ப்பது போல நாம ரூபத்தை விட்டுச் சச்சிதானந்த ரூப பிரஹ்ம மாகவே பார்ப் பார்களென்பதாம்.)

(10 சுலோகம்) ஹே! தேவர்காள் வியாவஹார திருஷ்
டியால் அவித்தை என்றும் அதன் நிவர்த்தியென்றும் சொல்
லப்படுகிறது தத்துவ திருஷ்டியாலோ அவித்தையும் அதன்
நிவர்த்தியுமில்லை. (இது மொழி பெயர்க்காமல் விடுபட்ட 6
அர்த்தமாகும்.)

அடையவும் பிரமமே யெனவ றிந்துளோன்
அடைவதங் கதனையே யாகு மன்றியே
யிடையிலோர் மாயையுண் டென்ன வெண்ணு மேற்
கடையதே யாமவன் கற்ற கல்வியே. 7

(இ – ள்)

அடையவும் பிரமமே என } சர்வ ஜெகத்தையும் பிரஹ்ம சொரூபமென்றே

| | |
|---|---|
| அறிந்துளோன் | அறிந்த ஞானியானவன் எவனே அவன் |
| அங்கு அடைவது அதனையே ஆகும் | அவ்விடத்தில் அடையா நிற்பதும் அந்தப் பிரஹ்மத்தையேயாம் |
| அன்றியே | – இவ்விதம் அபேதமாயறிவதன்றி |
| இடையில் ஓர் மாயை உண்டு என்ன எண்ணுமேல் | மத்தியில் செகத்ரூப மாயையானது பிரஹ்மத்தின் பின்னமாக உண்டென்று ஒருவன் அறிவானாயின் |
| கடையதே அவன் கற்ற கல்வி | அவனால் கற்றறிந்த அறிவானது கீழானதேயாம் |

(ஏனெனில் விபரீதமாய் ஒன்றை மற்றொன்றாக கிரகித்தலால் அதாவது பிரஹ்மத்தை செகதாதிகளாயறிதலால் அப்பேத ஞானம் அஞ்ஞான காரியமானதால் சிரேஷ்டமாகாதென்பதாம்)

7

(அ-கை) "ஆன்மாவினின்றும் ஆகாசமுண்டாயிற்று" என்றது முதலான சிருஷ்டிகளைக் கூறுகின்ற சுருதியானது பேத செகத்தைப் பிரதிபாதிப்பது யாது நிமித்தம் என்று சங்கித்துக் கூறுகின்றார் ]

மாயையென் றொன்றுண்டாக மதிப்பது மனன மல்ல
ஆயினும் அகண்ட ஞான வங்கமா மிந்த ஞானங்
காயம்வே றுகு மென்கை காரண மாக வித்தைத்
தூயநான் மறைக ளோதுந் துவந்துவந் தீர்கை சுட்டி 8

(இ – ள்)

| | |
|---|---|
| மாயை என்று ஒன்று உண்டாக மதிப்பது மனனம் அல்ல | மாயை என்னும் ஓர் பதார்த்தமானது பிரஹ்மத்தினும் பின்னமாக உண்டென்று அறிவது எதார்த்த ஞானமல்லவாம் |
| ஆயினும் இந்தஞானம் அகண்ட ஞான அங்கம் ஆம் | அங்ஙனமாயினும் பிரஹ்மத்தினும் பின்னமாக செகத்தை விஷயம் பண்ணுவதாகிய இந்த ஞானமானது அபேத ஞானத்திற்கு உபகாரமாம் ஆதலால் |

| | |
|---|---|
| காயம் வேருகும் என் கை காரணம்ஆக | சரீராதி செகத்தானது பிரஹ்மத்தி னும் பின்னமாமென்று தெரிவிக்கு நிமித்தமாகவும் |
| துவந்துவம் தீர் கை சுட்டி | (ஆன்மாவுக்கு செனன மரண சுக துக்க பசி தாக மாதி) துவந்துவங் கங்களை நிவர்த்திக்கு நிமித்தமாக வுங்கருதி |
| இத்தைத் தூய நான்மறைகள் ஓதும் | இந்தத் தொய்த செகத்தைப் பரி சுத்தமான நான்கு வேதங்களும் பிரதிபாதியா நிற்கும் 8 |

(அ – கை) ஜெகத் மித்யா பூத (வடி) மாஞல் "சீவிக்கு மளவும் அக்கினி ஹோத்ரம் செய்யத்தக்கது. அந்த இவனை வேதானு வசனத்தால் (வேதங்களின் தொடர்ந்த வாக்கியங் களால்) பிராமணுதிகள் அறிதற் கிச்சியா நின்றனர்" என்னுஞ் சுருதிகளால் சாத்திய சாதன பாவ முதலியவை களையேன் பிரதிபாதியா நின்றது எனச் சங்கித்து கூறு கின்ருர்.]

யாதொரு படியிற் ருேன்று மியல்பிஞற் செகத்துக் குண்மை
யோதிய துபநிடந்தா ஞெரோரிடத் துண்மை யாகப்
பேதமா முலகு தோன்றிற் பிறப்பதற் கேது வாகும்
ஈதெலா மில்லை யென்ன லின்பத்துக் கேது வாகும் 9

(இ – ள்)

| | |
|---|---|
| யாதொரு படியில் தோன்றும் இயல்பிஞல் | எந்தெந்தப் பிரகாரத்தால் பிரதீ தியாகின்றதோ அந்தந்தப் பிரதீ தியின் இயல்பிஞல் |
| சகத்துக்கு உபநிடதந் தான் ஓரோர் இடத்து உண்மையாக ஓதியது | ஜெகத்துக்கு உபநிடதங்கள் ஒவ் வோரிடத்தில் சத்தியத்வத்தைப் பிரதிபாதித்துள்ளது |

(பிரதீதியை முன்னிட்டு வியவகாரிய சத்யத்வமென்பது தாற்பரியம்.)

| | |
|---|---|
| பேதமாம் உலகு தோன்றில் பிறப்ப தற்கு ஏது ஆகும் | பேதமாகிய உலகானது பரமார்த்த சத்தியமாக ஒருவனுக்குத் தோன்றுமாகில் அவ்விதத் தோற்றம் அவனுக்குச் செனனத்திற் கேதுவாகும் |
| ஈது எலாம் இல்லை என்னல் இன்பத்துக்கு ஏதுவாகும் | இவ்வெல்லா செகத்தும் மித்தை என்றறிவது ஆனந்தரூபமோக்ஷத்திற்கு ஏதுவாகும் 9 |

ஆகை யாலகிலத்தையே மாயையென் ருகமெய் யாய் வந்த
மோக மாற்றுதற் பொருட்டொரோ விடத்திலே
மொழிந்தது முதுவேதம்
பாக மாகிய சித்தரைக் குறித்துமெய்ப் பரம்பொரு ளாகின்ற
வேக மேநிகழ் கின்றதெல் லாமென வியம்பிய திதயத்தால். 10

(இ - ள்)

| | |
|---|---|
| ஆகையால் | செகத்து வியாவகாரிய சத்தியமாதலால் |
| ஆகம் மெய்யாய் வந்த மோகம் மாற்றுதல் பொருட்டு ஒரோவிடத்திலே | சரீர முதலியவைகள் சத்தியமென்று தோற்றுவதாகிய விபரீதத்தை நிவர்த்திப்பதற்கு ஏகதேசத்தில் |
| முதுவேதம் அகிலத்தையே மாயை என்று மொழிந்தது | பழமையான வேதமானது செகத்தை மாயா காரியமென்று கூறிற்று (கயிற்றிற் பாம்புபோன் மித்யா தாற்பரியமா யிங்ஙனம் கூறியதும் மத்திம மந்தாதிகாரிகளைக் குறித்தாம்.) |
| பாகம் ஆகிய சித்தரைக் குறித்து | வேதமாதாவானவள் பக்குவமான சித்தமுடைய உத்தமாதிகாரிகளைப் பார்த்து |
| மெய்ப் பரம்பொருள் ஆகின்ற ஏகமே எல்லாம் நிகழ்கின்றது என | எதார்த்த பிரஹ்ம ரூபமாகிற ஏக வஸ்துவே சர்வ செகத்ரூபமாகவும் விளங்குகின்றதென்று |
| இதயத்தால் இயம்பியது | மனப்பூரணமாய்ப் பிரதிபாதித்தது. |

10

"பிருகிருதியை மாயையாகவும் மகேசனை மாயாவி யாகவும் அறியத்தக்கது" என்றும் "இத் துவிதம் மாயா மாத்திரம்" என்றும் "சர்வம் பிரஹ்மம்" என்றும் "இந் தச் சகமனைத்தும் இவ்வான்ம சொரூபம்" என்றும் இப்படி யுபதேசித்த சுருதியானது தோற்றுநின்ற செகமனைத்தும் அகண்டை கரச பிரஹ்மமே யென்று போதித்தது என்று பொருள்." 9

மெய்யை நாடின்மெய்ப் பரமலால் விச்சை யுமவிச்சையு
வேறேயோ
வைய மானது மற்றொரு பொருள்களு மில்லையாம் மனனஞ்
செய்
துய்ய யோகிமுன் எப்படி யெப்படித் தோற்றுகின் றதுதோற்றம்
செய்யு மியாவையுஞ் சிவன்வடி வாகவே திகழ்த்திடுந்
திடமாக. 11

(இ – ள்)

| | |
|---|---|
| மெய்யை நாடில் | உண்மையாக விசாரித்துப் பார்க்கு மிடத்து |
| மெய்ப்பரம் அலால் | பரமார்த்தமான பிரஹ்மத்தைத் தவிர |
| அவிச்சையும் விச்சை யும் வேறேயோ | அஞ்ஞானமும் ஞானமும் பின்னமா யிருக்கின்றதோ (இன்றென் பதாம்) |
| வையமானதும் மற்றொரு பொருள் களும் இல்லை | அஞ்ஞான காரியமான செகத்தும் வேறு பொருள்களும் பரமாத்மாவி னும் பின்னமாக இல்லை யென்பதாம் |
| இம்மனனம் செய் துய்ய யோகி | இப்படிப்பட்ட அபேதமாகிய விசாரத்தோடு கூடிய பரிசுத்த ஞானவானாகிய யோகியினது |
| முன் எப்படி எப்படி தோற்றுகின்றது | முன்னமே எந்தெந்தப் பிரகாரம் செகத்து தோற்றுகின்றதோ |

| | |
|---|---|
| தோற்றம் செய்யும் யாவையும் | அந்தந்தப் பிரகாரம் தோற்று நின்ற சர்வ செகத்தும் (அந்த ஞானிக்கு) |
| சிவன் வடிவு ஆகவே திகழ்ந்திடும் திடம்ஆக | பிரஹ்ம சொரூபமாகவே திடமாக விளங்குகின்றதாம் (ஞானிக்குச் சர்வமும் பிரஹ்மமாகவே தோன்றுமென்பதாம்.) 11 |

(அ – கை) சர்வ ஜெகத் விஷயாவபாசம் (தோற்றம்) யாது அது சிவமேயென்னும் இவ்வித ரூபமான யாதொரு புத்தியுண்டோ அதுவும் பூர்வ கர்ம வாசனையினால் சர்வ ஜெகத்தும் பிரதீதியுண்மையினால் இங்ஙனம் பூர்வ வாசனையை ஆசரித்துண்டான புத்தியுஞ் சம்பவியாது என்று சொல்லுகின்றார்.]

யாதொரு படியிற் றோற்ற மென்றியம் பியது முன்னை
வாதனை யதனைப் பற்றி யல்லது மற்றொன் றில்லை
போதமே யுள்ள தென்றும் பூரண ஞகை யாலே
யோதமில் வேலை போலு மொழிவற நிறைந்த யோகி. 12

(இ – ள்)

| | |
|---|---|
| யாதொரு படியில் தோற்றம் என்று இயம்பியதும் | முற்கவியில் ஞானிக்கு எல்லாவித செகத்தும் தோற்றுகின்றதோ அதெல்லாம் பிரஹ்ம சொரூபமென்று கூறியது |
| முன்னை வாதனை அதனைப் பற்றி அல்லது மற்று ஒன்று இல்லை | பூர்வம் ஜெகத்துண்டென்று கூறியது அநுபவ செனித வாசனையை யனுசரித்துக் கூறியதேயன்றி இப் போதிருக்கும் அநுபவத்தைப் பற்றிய விவகாரமன்றாம் |

[ஞானியின் அனுபவமெப்படி யென்னிற் கூறுகின்றார்.]

| | |
|---|---|
| ஒழிவு அற நிறைந்த யோகி | நீக்கமின்றி (பொன் முதலியன பூடன முதலியவற்றில் நிறைந்தது போல் ஜீவேசுவர செகத்தில் சச்சிதானந்தமாய்) நிறைந்த ஞானியானவன் |

| | |
|---|---|
| என்றும் போதமே உள்ளது | எப்போதும் சேதனரூப பிரஹ்மமே யுள்ளது (அதுவே தானென்னும்) |
| பூரணன் ஆகையாலே | பரிபூரண அநுபவத்தோடு கூடினவனுதலால் |
| ஓதம் இல்வேலை போலும் | நிர்த்தரங்க சமுத்திரம் போலும் (நிருவிகற்பனய் சிதேகரசனய் நிச்சல சுபாவனய்தானய் இருப்பானென்பதாம் வேறுவிதமாயில்லை) 12 |

அப்படி யிருந்த யோகி யனுபவத் தன்மை தானும்
எப்படி யென்று காணு னீசன்மா னுனுங் காணேஞ்
செப்பிட வறியா வேதா கமங்களுஞ் சிவனுர் மேனி
யெப்படி யென்னின் மற்றப்படியிலே யிருந்த தென்னும். 13

(இ – ள்)

| | |
|---|---|
| அப்படி இந்த யோகி அனுபவத்தன்மை | அவ்வாறு நிர்த்தரங்க சமுத்திரம் போலிருந்த யோகி புருஷனது அனுபவமாகிய நிலைமையை |
| தானும் எப்படி என்று காணுன் | அந்த யோகி புருஷனும் எப்படிப் பட்டதென்று அறிந்திலன் |
| ஈசன் மால் நானும் காணேம் | உருத்திரபகவானும் மகாவிஷ்ணுவும் பிரஹ்மாவாகிய நானும் அறிமாட்டோம் |
| வேத ஆகமங்களும் செப்பிட அறியா | சுருதிஸ்மிருதி புராண ஆகமங்களும் இப்படிப்பட்டதென்று கூற அறியாவாம் |
| சிவனுர் மேனி மற்று எப்படி என்னில் | பரசிவ சொரூபமான பிரஹ்ம நிஷ்டையின் ஸ்திகியானது வேறெந்தவிதமாயிருக்குமென்னில் |
| அப்படியிலே யிருந்தது என்னும் | எப்படியோ அப்படியிருந்த தென்று சுருதிஸ்மிருதி யாகமங்கள் கூறுமென்பதாம். |

(சுவப்பிரகாச பிரஹ்ம ரூபமாயிருக்கும் வித்வானுக்கு ஞானஏதுக்களான அந்தக்கரணுதிகள் அவித்யா காரியங்களாதலால் வித்தையினுல் அவற்றை நிவர்த்தித்தலால் தானும் அவ்வவத்தையைக் கரும கருத்துரு பாவமாயறியான் என்பார் "அப்படியிருந்த யோகியனுபவத் தன்மை தானும் எப்படியென்று காணுன்" என்ருர்.) 13

(அ-கை) அப்பரசிவனே இயற்கை ஞானத்தையுடையவன் எனப் பிரதிபாதிக்கின்ருர் ]

அம்பி காபதி யறியுமிவ் வனுபவ மவனரு ளாகுமக்
கொம்ப ருளறிந் திடுந் திருவருளேயே கோலமாய்க் கொண்டந்த
வெம்பி ரானரு ளாலரி நாம்பிற ரியாவரு மறிவோமத்
தம்பி ரானறிந் தமையெவ ராலெனச் சங்கையுந் தகுமோதான் 14

(இ – ள்)

| | |
|---|---|
| அவ்வனுபவம் அம்பிகாபதி அறியும் | ஞானியினது அனுபவமாகிய யாதோர் * பிர்மநிஷ்டையுண்டோ அந்நிஷ்டையானது உமாபதியாகிய பரமசிவத்துக்குச் சுபாவ சித்தமாம் |
| அவன் அருள் ஆகும் அக்கொம்பு அருள் அறிந்திடும் | அப்பரமேஸ்வரனுடைய அருட் சத்தியாகிய கொடிபோன்ற உமாதேவிக்கும் அந்த ஞானம் சுபாவ சித்தமாகும் |
| திருவருளேயே கோலமாய்க் கொண்ட | அழகிய கிருபையைத் தனது வடிவமாகத் தரித்திருக்கின்ற |
| எம்பிரான் அருளால் | எமது கடவுளாகிய பரசிவ கிருபையால் |
| அரி நாம் பிறர் யாவரும் அறிவோம் | விஷ்ணுவும், பிரஹ்மாவாகிய நானும் தேவர்களாகிய நீங்களும் மற்றுமுள்ளோரும் அறிவோம் (அவ்வனுபவமுடையவராவோம்) |
| அத்தப்பிரான் அறிந்தமை எவரால் எனச் சங்கையும் தகுமோ | அப்பரசிவன் அனுபவத்தை உடையவனுவது யாரால் அடைந்தாரென்று சங்கிக்கவும் கூடுமோ 14 |

* அந்நிஷ்டையும் சவிகற்பம் நிர்விகற்பம் என இருவிதமாம்.
அறிவோன், அறிவு, அறிபடு பொருளான திரிபுடித் தோற்றத்தோடு
கூடி அத்வைத பிரஹ்மத்தில் அந்தக்கரண விருத்தி நிலைத்தல் சவி
கற்பம் அதுவும் அகம்பிரஹ்மாஸ்மி என்னும் சத்தத்தோடு கூடியதை
சத்தானுவித்தம் எனவும், சத்தமின்றியதை சத்தா நனுவித்தம் என
வும் கூறுவர். திரிபுடித் தோற்றமின்றி அகண்ட பிரஹ்மாகாரமான
அந்தக்கரணவிருத்தியின் நிலமையை நிருவிகற்பமென்பர். சவி
கற்பமே நிர்வி கற்பத்திற்கும் சாதனமாகும். நிருவி கற்பமும் அத்
வைத பிரஹ்மாகாரமான அந்தக்கரணத்தின் அறியாதவிருத்தியோடு
கூடில் அது அத்வைத பாவரூபமாம். அவ் விருத்தியும் அப்பியாச
மிகுதியால் சாந்தமானல் விருத்தி யின்றிய அந்நிஷ்டை அத்வைத
அவஸ்தான ரூப நிஷ்டையாம். இதை ஒருகணம் அடைந்தாலும்
மோக்ஷமடைவன். எனில் மிகுதியை சொலவு வேண்டுமோ!

(அ – கை) சற்குருநாதனுடைய சுபானுபவ திருஷ்டியாலுண்டாகும் அதிகாரியின் ஞானானுபவமே பரசிவ சொரூபமாம் எனப் பிரதிபாதிக்கின்றார்]

ஞான மாகிய விழியினாற் குருபர னயந்து நோக்கிட வுண்டாம்
ஆனு பூதியா தொன்றது வேசிவ னாவதப் படியுள்ள
மேனி தான்வினை யொத்தவப் பொழுதிலே வெளிப்படும் வெளிகாணல்
ஆன தேசிகன் றன்னையப் பரம்பொரு ளென்னவா தரஞ் செய்வான் 15

(இ – ள்)

| | |
|---|---|
| ஞானம் ஆகிய விழியினால் குருபரன் நயந்து நோக்கிட | ஞானதிருஷ்டியினால் ஆசாரியன் கிருபையோடு கூடி வீக்ஷிக்க |
| உண்டாம் அனுபூதி யாது ஒன்று அதுவே சிவனாவது | உண்டாவதாகிய அனுபவம் யாதொன்றோ அதுவே பரசிவ சொரூபமாம் |
| அப்படி உள்ள மேனி தான் | அவ்வித பரசிவ சொரூபமாயுள்ள அனுபவமானது (பிரஹ்மானுபவமாம) |
| வினை ஒத்த அப்பொழுதிலே வெளிப்படும் | கருமசாமிய காலத்தில் அபரோக்ஷமாக சித்திக்கும் |

(சுகிர்த துஷ்கிருத) கர்மங்களினுடைய பலமானது போகத்தினாலே க்ஷயமாகும்போது (சஞ்சித கர்மத்துக்கு அந்திய சென்மத்திலே அவ்விதம் சாம்யம் வருவதாம்) அவ்வனுபவத்தின் பொருட்டு அதிகாரியானவன்)

| | |
|---|---|
| வெளிகாணல் ஆன தேசிகன் தன்னை | திருவருளே திருவுருவமாகி பிரத்யக்ஷமாய்க் காணும்படி எழுந்தருளிய ஆசாரியனை |
| அப்பரம்பொருள் என்ன ஆதாரம் செய்வான் | அப்பரசிவசொரூபமென்று கருதிப் பத்திசெய்யத் தக்கதென்பதாம். 15 |

(அ-கை) சுகதுக்க ஏதுவான எவ்வித சிரமமாயினும் சற்சீடனானவன் சற்குருநாதன் திருவுள்ளப்படியே நடந்து கொள்ளவேண்டுமென்று பிரதிபாதிக்கின்றார்.]

நேச நெஞ்சினாற் றனக்கது நினைவல வாயினு நெறியென்றே
தேசி கன்றிரு வுள்ளமே செய்குவான் செனித்திடு குலத்துக்கு
மாச தாயினு மாச்சிர மத்திலே வழுவினு முலகெல்லாம்
ஏசி வீடினு மறம்புகழ் தனபிற விழப்பினு மிடரேனும். 16

(இ-ள்)

| | |
|---|---|
| தனக்கு அது நினைவு அலவாயினும் | ஆசாரியன் ஆக்ஞை தனக்கிஷ்டம் இல்லாவிட்டாலும் |
| செனித்திடு குலத்துக்கு மாசது ஆயினும் | தான் பிறந்த வம்சாவழிக்குக் கேடுண்டானபோதிலும் |
| ஆச்சிரமத்திலே வழுவினும் | தான் கொண்ட சன்னியாச முதலிய ஆச்சிரமங்களில் தோஷம் நேர்ந்த போதினும் |
| உலகு எல்லாம் ஏசி வீடினும் | உலகத்தில் சர்வஜனங்களும் நிந்தித்துப் புறக்கணித்தாலும் (அதாவது தள்ளிவிட்டாலும்) |
| அறம் புகழ் தனம் பிற இழப்பினும் | தருமத்தை இழந்தாலும் கீர்த்தியை இழந்தாலும் செல்வத்தை இழந்தாலும் பந்துமித்ர புத்ர களத்திராதி வேறெவற்றை இழந்தாலும் |
| இடர் ஏனும் | அச்செயலால் இன்னும் எவ்வளவு துன்பம் வந்து நேர்ந்தபோதினும் |
| நேச நெஞ்சினால் | – பிரியத்தோடுங் கூடிய மனத்தினால் |
| தேசிகன் திருவுள்ளமே செய்குவான் | (இதுவேதான் வேதவிதியென்னும் அபிப்பிராயத்தை உடையவனாய்) ஆசாரியனது அபிப்பிராயப்படியே முமுக்ஷுவானவன் செய்யத்தக்கதென்பதாம். |

16

(அ-கை) குருநாதன் கிருபையுள்ளவனிடத்தில் பரமேஸ்வரன் சந்தோஷமடைவானென்றும் அவனது திரு

மேனியே ஈசனருள் புரியும் ஸ்தானமென்றும் அப்படிப்பட்ட குருவிற்கு அபசாரம் செய்யும் மாணவன் அதோகதி அடைவன் என்றும் பிரதிபாதிக்கின்றார்.]

தேசிகன்றிரு வுள்ளமுண் டாகவச் சிவன்றிகழ்ந் திடுகின்றான்
ஈச னிங்கருள் செய்யவந் திருக்கிற விடமிவன் றிருமேனி
மாச தொன்றிவ னளவிலே செயிலெரி வாய்நா கினிற் பூத
நாச மெவ்வள வவ்வள வுஞ்செல நண்ணுநன் னெறிநண்ணான்

(இ - ள்)

| | |
|---|---|
| தேசிகன் திருவுள்ளம் உண்டாக அச்சிவன் திகழ்ந்திடு கின்றான் | ஆசாரியனது கிருபையானது ஒருவனுக்குண்டாக (அதனால்) அவனிடத்தில் பரமசிவனும் சந்தோஷத்தை அடைகின்றான் |
| ஈசன் இங்கு அருள் செய்யவந்து இருக்கிற இடம் இவன் திருமேனி | பரமேஸ்வரன் இவ்விடத் தனுக்கிரகிக்கும்பொருட்டு எழுந்தருளியிருக்கும் ஸ்தானமானது இக் குருமூர்த்தியினது திருவுருமேயாம் |
| இவன் அளவில் மாசது ஒன்று செய்யில் | இவ்வாசானுக்கு ஓர் அதிகாரியானவன் ஓர் குற்றத்தைச்செய்வானாயின் |
| பூதநாசம் எவ்வளவு அவ்வளவும் செல | சர்வ பூதங்களின் நாசமானது எவ்வளவு காலங்கழித்துண்டாகுமோ அவ்வளவு காலபரியந்தமும் |
| எரிவாய் நரகினில் நண்ணும் நல் நெறி நண்ணான் | சதாதபிக்கின்ற ரௌரவாதி நரகங்களில் வீழ்ந்து கிடப்பன் மீண்டும் நன்மார்க்கத்தை யோர்போதும் மடையான். |

[குருபரன் சிவ சொரூபம் ஆதலால் அவனுக்குக் குற்றமில்லாமல் நடக்க வேண்டு மென்பதாம்.] 17

(அ - கை) மனோவாக்கிற்கதீத பரசிவத்தினருள் பெருவிடினும் தானடைந்த குருவருள் பெற்றவனுக்குச் சர்வ நலன்களுமுண்டாகு மென்று பிரதிபாதிக்கின்றார்.]

அருவெனு மமலன்று னருளில னெனினுஞ்சார்
குருபர னருளுண்டே யெனிலொரு குறையுண்டோ
திருவடி தரவந்தார் திருவுள மிலரென்றால்
ஒருவரு மிலர்கண்டீ ருறுதுயர் களைகின்றார். 18

(இ - ள்)

| | |
|---|---|
| அருவெனும் அமலன் அருளிலன் எனினும் | அருவமாயும் நிர்மலமாயுமுள்ள பரசிவனொருவனுக்குக் கிருபை செய்திலனேனும் |
| தான்சார் குருபரன் அருள் உண்டே எனில் ஒரு குறை உண்டோ | தான் சரணாகதியாகஅடைந்துள்ள குருமூர்த்தியினது கிருபை யிருக்குமாயின் அவனுக்கு யாதேனும் ஓர் குறைபாடுண்டாகுமோ (ஓர்போது மின்றென்பதாம்) |
| திருவடி தரவந்தார் திருவுளம் இலர் என்றார் | தனக்குத் திருவடி சூட்டியுள்ள குருமூர்த்தியானவர் கிருபை செய் திலரென்றால் |
| உறு துயர் களை கின்றார் ஒருவரும் இலர் | அவனுற்ற துன்பத்தை நிவர்த்திக் கத்தக்கவர் வேறொருவருமில ரென்பதாம். |

[இங்கே ஆசாரியனது கிருபையானது முக்கியம். ஏனெனில் ஈசுவரன் கோபித்தால் குரு ரக்ஷிப்பார். குரு கோபித்தால் ரக்ஷிப்பாரில்லை என்பது கருத்தாம். அங்ஙனமின்றி ஈசுவரனது கிருபை வேண்டாமென்பது அபிப்பிராயமன்று] கண்டீர் என்பது அசை. 18

(அ - கை) தனக்கன்னியமில்லாத பிரத்யகபின்ன பரமாத்மாவை * பத்தாமவனைப்போல சுபானுபவத்தைத் தருகின்ற குருநாதனுக்கு முக்கரணங்களாலும் சேவை செய்யவேண்டுமெனப் பிரதிபாதிக்கின்றார்.]

---

* கானலாற்றைக் கடந்த பத்துச் சிறுவர் பத்தாமவனை தாமென அறியாமல் ஆப்தன் மொழியால் அறிந்தது போல் இச்சீவன் சம்சாரமாகிய கானலாற்றில் தூலதேகம் அந்தக்கரணம் ஞானேந்திரியங்கள் கர்மேந்திரியங்கள் பிராணாதி வாயுக்கள் பஞ்ச பூதங்கள் அவித்தை

உறுவது தனில்வேறு யுளதல வதுநேரே
பெறவருள் பெரியோனே பெருகிய குருவாவா
னெறியுட லுளநாவா னிலைபெற வழிபாடே
செறிபவ னருளாலே சிவகதி யடைவானால். 19

(இ - ள்)

| | |
|---|---|
| உறுவது தனில் வேறு உளது அல | ஒருவனடையத்தக்கது பிரத்ய கான்மாவாகிய தன்னினும் பின்னமாகவில்லை |
| அது நேரே பெற அருள் பெரியோனே பெருகிய குருவு ஆவான் | அப்பரமாத்மாவை சாக்ஷாத்தாக அடையும்படி அனுக்கிரகஞ் செய்கின்ற பெரியோனே மகத்தாகிய ஆசாரியனும். |
| நெறி உடல் உளம் நாவால் | அவ்வாசிரியனுக்குக் கிரமமாக சரீரத்தாலும் மனத்தாலும் வாக்காலும் |
| நிலை பெற வழிபாடு செறிபவன் அருளால் சிவகதி அடைவான் | ஸ்திரமாகச் சேவை செய்கின்ற அதிகாரியானவன் அவ்வாசிரியனது கிருபையால் பிரஹ்மப் பிராப்தியை அடைவானென்பதாம். 19 |

காமம் கர்மம் ஆகிய ஒன்பது பேரோடு மிரங்கி அதன் மானுட தேகமாகிய கரையில் வந்தவன் தெய்வகதியால் ஞானவிருப்புற்று விசாரிக்குங்கால் தூல தேகம் புரியஷ்டக தேகமாகிய ஒன்பது பேரைக் கண்டான் அவர்களை அறிபவனாகிய தனது நிஜரூப பிரஹ்மத்தை அறியேன் யென்னும் ஆஞ்ஞானமும் அதனால் இல்லை விளங்கவில்லை யென்னும் ஆவரணமும் உண்டாயிற்று அதனால் அர்த்தாத்தியாசமும் ஞானாத்தியாசமுமாகிய விக்ஷேபமென்னும் சோகமுண்டாயிற்று பின்னர் பிரஹ்மம் இருக்கின்றது என்று குருவானவர் அவாந்தர வாக்கியத்தைச் சொல்ல அதனைக் கேட்டு "பிரஹ்மம் இருக்கிறது என்னும் பரோக்ஷ ஞான முண்டாகின்றது பின்னர் "பிரஹ்மம் யார்" என்று கேட்கக் குருவானவர் நீயே பிரஹ்மம் என்னும் மகா வாக்கியத்தைச் சொன்னார். அதனைக் கேட்டுச் சிஷ்யனுக்கு யான் பிரஹ்மம் என்னும் அபரோக்ஷ ஞானமுண்டாயிற்று அதனால் அஞ்ஞானத்தினாலாகிய ஆவரணத்தோடு கூடிய இருவகை அத்தியாச வடிவ விக்ஷேபத்தின் நீக்க முண்டாகின்றது அதனால் நிரதிசயானந்த ரூப தடையற்றானந்த முண்டாவதாம் இதனை விசேஷமாக அறிய விரும்பினால் விசார சாகரம் நான்காம் தரங்கம்: கைவல்லிய நவநீதம் தத்துவ விளக்கப்படலம் பஞ்சதசி திருப்தி தீபம் முதலியவற்றில் பார்க்கவும்.

இந்த விடும்பை யுடம்புறு மேது
தந்தை யெனப்புகழ் கின்றிலர் தக்கோர்
அந்த மிலாத வகண்டமு நம்முட்
டந்தவர் தந்தை யெனச்சமை வுற்ருர். 20

(இ - ள்)

| | |
|---|---|
| இந்த இடும்பை உடம்பு உறும் ஏது தந்தை எனப் புகழ் கின்றிலர் தக்கோர் | இத்துன்ப மயமாய சரீராதிகட்குக் காரணமாகிய புருஷர்களையும் (இந்த்ர சந்திராதி பதங்களை அடையும்படி யுபதேசிக்கும் புருஷர்களையும்) உயர்ந்தோர் (ஞானிகள்) குருவென்று கூறுகின்ருர் களில்லை. (பின்னையோ) |
| * அந்தம் இலாத அகண்டமும் நம்முள் தந்தவர் தந்தை எனச் சமைவு உற்ருர் | ஆதி மத்தியந்த ரகிதமாய் அகண்டைகரச பிரஹ்ம சொருபத்தை நமது இருதயத்தின் கண்ணே அனுபவ ரூபமாகத்தந்த பெரியோர்களே யிங்கு குரு சப்தார்த்தமாகக் கருதியுள்ளார்கள். |

[பதமுத்திகளை யுபதேசிக்கும் புருஷர்களை இங்கே அங்கீகரித்து நிஷேதித்தது அவர்கள் குரு சப்தத்திற்கு அமுக்கியார்த்த மென்பது தாற்பரியம்.) 20

உண்டு போற்ருேன்றும் உலகெலா முண்மை
யன்றென வுணர்த்தியெப் பொருளுங்
கண்டசான் றதனைக் காட்சிய தறவே
கண்டிடக் கரியெனக் காட்டும்
பண்டைவே தாந்த வாக்கியஞ் சொன்ன
படியிலே பரமனே டொன்ருய்
விண்டிடா வண்ண முணர்த்துவான் றன்னை
வியன்குரு வென்றிடும் வேதம். 21

* அந்தமிலா + உற்ருர்—என்பதின் (மூல சுலோகம் 37) குரு வென்றவர் ஆத்மாவிற்கு வேறில்லை இது சத்தியம் சந்தேகமில்லை. ஆத்ம லாபத்தைவிட மேலான லாபம் இல்லவே யில்லை சந்தேக மில்லை.

(இ – ள்)

| | |
|---|---|
| உண்டுபோல் தோன் றும் உலகு எலாம் உண்மை அன்று என உணர்த்தி | கடமிருக்கிறது படமிருக்கிறது என் பனவாக சத்தியம் போல் பிரதீதி யாகின்ற சர்வ செகத்தையும் அசத் தியமெனத் தெரிவித்து |
| எப்பொருளும் கண்ட சான்று அதனை | சர்வ பதார்த்தங்களையும் அறி கின்ற சாக்ஷி சொரூபத்தை |
| காட்சியது அறவே கண்டிடக் கரி எனக் காட்டும் | திரிசிய (நாமரூப) விலக்ஷணமாக (நீ ஏதோ அதுதான் இது என்று) அறியும்படி சர்வ சாட்சியாகவே அறிவிக்கும் |
| பண்டை வேதாந்த வாக்கியம் சொன்ன படியிலே பரமனோடு ஒன்றாய் | அனாதியாயும் வேதமுடிவாயுமுள்ள வுபநிஷதங்களின் மகாவாக்கியங் கள் கூறிய பிரகாரமே பிரஹ்மத் தோடு அபேதமாக |
| விண்டிடா வண்ணம் உணர்த்துவான் தன்னை வியன் குரு என்றிடும் வேதம் | பேதமில்லாதபடியே தனது நிஜ ரூபமான சிவத்தன்மையை உப தேசித்துத் தெரிவிப்பவனை வேத மானது விகிதா சாரியன் என்று கூறுகின்றதென்பதாம். 21 |

காட்சியை யெல்லாங் கண்ணதாய்க் கரைத்துக்
கண்ணொழித் தொருபொரு ளில்லா
மாட்சியை யளிக்க வல்லவன் குருவாம்
மாரிபோன் மாறுவேண் டாதே
மீட்சியில் பதத்தைக் கருணையா லளிக்கும்
வித்தகக் குரவனே யெவரும்
தாட்சிசெய் தேத்தற் குரியதத் துவமாஞ் 22
சங்கர னென்றிடத் தகுவான்.

(இ – ள்)

| | |
|---|---|
| காட்சியை எல்லாம் கண்ணதாய்க் கரைத்து | சர்வ திருசியங்களையும் திருக்கு ரூபமாகப் பிரவிலாபித்து (லயப்படுத்தி) |

| | |
|---|---|
| கண்ணொழித்து ஒரு பொருள் இல்லா | திருக்குருபப் பிரஹ்மவஸ்துவைத் தவிர வேறொரு வஸ்துவும் பரமார்த்தமாக இல்லாத |
| மாட்சியை அளிக்க வல்லவன் குருவாம் | மகிமையை உபதேசித்துத் தெரிவிக்கச் சமர்த்துடையவன் எவனோ அவனே குருவாம் |
| மாரிபோல் மாறு வேண்டாதே | மேகமானது (சீவர்களின் பூர்வ புண்ணியத்திற்கீடாய் வர்ஷிப்பதேயன்றி) கைமாறு கருதாததேபோல் |

(குருவும் பூர்வம் அனந்த ஜென்மங்களில் செய்த புண்ணியபுஞ்ச (கூட்ட) பரிபாகத்தினால் கருணாநிதியாகிய பரமேஸ்வரனே ஆவிர்ப்பவித்தலால் பிரதிப் பிரயோஜனத்தை கருதாமல்)

மீட்சியில் பதத்தை – திரும்புதலில்லாத பிரஹ்மபதத்தை

| | |
|---|---|
| கருணையால் அளிக்கும் | கிருபையால் உபதேசித்துத் தெரிவிக்கும் |
| வித்தகக் குரவனே எவரும் தாட்சி செய்து ஏத்தற்கு உரிய தத்துவமாம் | ஞானாசாரியனே யாவர்களும் வணங்கித் துதித்தற்குரியதாய் எதார்த்தமான |
| சங்கரன் என்றிடத் தகுவான் | சர்வ சீவர்களுக்கும் சுகத்தையே கொடுக்கும் சங்கரனே (சிவனே) என்று கூறத்தக்கவனாவன் (இங்ஙனம் குருவினிலக்கணமாம்) |

வருபிறப் பறவே வேண்டினான் மறையீ
றென்னுமம் புயத்தினை மலர்தற் (கு)
இரவியாய் நெஞ்சிற் கிசைந்தநற் குருவை
யாதொரு வழியினா லிறைஞ்சி
அருள்சுரந் திடுதற் காவதே செய்வா
னருமறை முடிவெலா மறையும்
பொருளைநே ராக வுமக்கெனக் கீசன்
புகன்றவப் படியிலே புகன்றேன்.

(இ – ள்)

| | |
|---|---|
| வருபிறப்பு அறவே வேண்டினன் | அனாதியாய் வாரா நின்ற ஜென னத்தை அத்தியந்தம் நீக்க முயற் சிக்கு அதிகாரியானவன் |
| மறை ஈறு என்னும் அம்புயத்தினை மலர் தற்கு இரவி ஆய் | வேதமுடிவில் விளங்கும் உபநிஷத மகா வாக்கியமென்னும் அழகிய தாமரை மலரை விகசிதமாகு (விரியு)ம்படி செய்தற்குச் சூரிய பகவானைப் போன்றவராயும் |
| நெஞ்சிற்கு இசைந்த நற்குருவை | தனது மனத்திற்கு உகந்தவராயும் உள்ள சற்குருமூர்த்தியை |
| யாதொரு வழியினல் இறைஞ்சி | சர்வ பிரகாரத்தாலும் முக்கரணங் களினலும் நவவித வழிபாடுசெய்து |
| அருள் சுரந்திடுதற்கு ஆவவே செய்வான் | அவரது கிருபையை தன்னிடத்திற் சுறக்கும்படி அதற்குரித்தாகிய செயல்களைச் செய்யத்தக்கது |

[பிரஹ்மா செய்துவந்த உபதேசத்தை முடிக்கின்ருர்.]

| | |
|---|---|
| அருமறை முடிவு எலாம் அறையும் பொருளை | அரிய வேத முடிவாகிய உபநிடதங் கள் அனைத்தும் பிரதிபாதியா நின்ற அருத்தங்களை |
| எனக்கு ஈசன் புகன்ற அப்படியிலே உமக்கு நேர் ஆகப் புகன்றேன் | எனக்குப் பரசிவனுபதேசித்த பிரகாரமே நானுங்களுக்கு சாக்ஷாத்தாக உபதேசித்தேன் என்பதாம். 23 |

எல்லாமறிவா னுயில்லா தில்லா ஞகி யெல்லாந் தான்
வல்லாஞகித் தீங்கொன்று மருவா ஞகி வடிவருளே
யல்லாதிலஞ மிறையுண்மை யன்றிச் சொல்லா னப்பொருளிற்
சொல்லா தில்லை யுங்கட்குச் சொன்னே னெல்லாஞ் சுருக்காக

(இ – ள்)

| | |
|---|---|
| எல்லாம் அறிவனுய் | சர்வத்தையும் சாமானிய விசேஷமா யறிவானுயும் |

| | |
|---|---|
| இல்லாது இல்லான் ஆகி | ஆப்தகாமனாயும் (சர்வகாமாப்தியை உடையவனாயும்) |
| எல்லாம் தான் வல்லான் ஆகி | சர்வ சத்திமானாயும் |
| தீங்கு ஒன்றும் மருவான ஆகி | விப்பிரவிச்சை (வஞ்சனை) முதலிய குற்றங்கள் யாதொன்றும் பொருந்தாதவனாயும் |
| அருளே வடிவு அல்லாது இலனாம் இறை | அவனது சொரூபம் கிருபையேயன்றி அன்னிய வடிவமில்லாதவனாயுமிரா நின்ற பரமேஸ்வரன் |
| உண்மை அன்றிச் சொல்லான் | சத்தியமான அருத்தத்தையன்றி வேறு பிரகாரமான அருத்தத்தை எனக்கு உபதேசியான் |
| அப்பொருளில் சொல்லாது இல்லை உங்கட்கு சுருக்கு ஆக | ஆதலின் அப்பரசிவன் கூறிய அருத்தத்தில் உங்கட்குபதேசிக்கச் சேடமென்றி எல்லாம் சங்கிரகமாக உபதேசித்தேன் இதினின்றும் அன்னியமின்றென்பதாம். 24 |

போதவடி வாயகண்ட பூரணனாஞ் சிவனுக்கு
யாதுமுளங் கைக்கனியா மிவனருளின் படியொழிய
வேதமுடி யிற்பொருள்தாம் வேண்டியவா விளம்பியிடும்
பாதகர்போய் ஏறவொண்ணாப் பாழ்ங்கிணற்றில்
வீழ்வர்களால். 25

(இ - ள்)

| | |
|---|---|
| போதவடிவாம் அகண்ட பூரணனாம் சிவனுக்கு | ஞான ரூபமாயும் அகண்ட பூரணமாயும் உள்ள பரசிவத்திற்கு |
| யாதும் உளங்கைக் கனியாம் | சர்வ பதார்த்தங்களும் உள்ளங்கை நெல்லிக் கனி போன்று அபரோக்ஷமாம் |
| இவன் அருளின்படி ஒழிய | இப்பரசிவன் அருளால் அனைந்தும் பிரஹ்ம சொரூபமென்றுபதேசித்த வண்ணமின்றி |

| | |
|---|---|
| வேதமுடியில் பொருள் தாம் வேண்டியவா விளம்பி இடும் பாதகர் | வேதமுடிவான அருத்தத்தை தான் விரும்பிய வண்ணம் அருத்தம் வேறு பிரகாரமாகச் செய்யும் பாவிகள் |
| போய் ஏற ஓணுப் பாழ்ங்கிணற்றில் வீழ்வர்கள் | ஒருபோதும் ஏற முடியாத அந்தக் கூபமாகிய நரகத்தில் வீழ்ந்து கிடப்பர்கள். 25 |

(விடுபட்ட மூலம் 52, 53-வது சுலோகார்த்தம். வேதார்த்தம் பரமாத்வைதமாம் அதனினும் பின்னமேல் எனது சிரமானது இங்கேயே அருந்து விழக்கடவது அல்லது வேதார்த்தம் வேறு பிரகாரமாம் என்னும் சங்கையினுல் இவ்வர்த்தத்தில் நிச்சய மில்லாதவர்களாகிய உங்களுடைய சிரமானது இங்கேயே யிற்றுவிழக்கடவது என்று பிரஹ்மா சபதம் செய்தார் என்பதாம்.

ஆதிவே தாந்தப் பொருளேயத் துவித
மாம்படிக் ககிலநா யகனுஞ்
சோதிபா தப்போ திரண்டையுந் தொட்டுச்
சூழுகே னென்றயன் சொல்லிக்
காதலாற் பிறவிக் கவுடத முக்கட்
கடவுளேக் கருத்தில்வைத் தவன்றன்
பாதமே பணிந்து பரவியிப் பரிசே
பத்தியாற் பரவச ஞனன். 26

(இ - ள்)

| | |
|---|---|
| ஆதி வேதாந்தப் பொருளே அத்துவிதம் ஆம் படிக்கு | அஞதி வேதாந்தங்களினர்த்த மானது அத்துவிதத்தில் தாற்பரிய மென்னுந் தன்மைக்கு |
| அகில நாயகனும் சோதி பாதப்போது இரண்டையும் | செகன்னுயகனுயும் சுயஞ் சோதியாயும் இராநின்ற பரசிவனது உபய திருவடித் தாமரைகளையும் |
| தொட்டுச் சூழ்கேன் என்று அயன் சொல்லி | பரிசித்துச் சபதஞ் செய்கின்றேன் என்று (சூதர் வாக்கியம்) பிரஹ்ம தேவர் அருளிச் செய்து |

| | |
|---|---|
| காதலால் பிறவிக்கு அவுடத முக்கண் கடவுளைக் கருத்தில் வைத்து | பத்தியினால் பவரோகத்திற்கு அவ்ஷதமாயும் திரியம்பகனுயும் உள்ள பரமேஸ்வரனை மனத்திற் றியானித்து |
| அவன் பாதமே பணிந்து | அவனது திருவடிகளை நமஸ்கரித்து |
| பரவி இப்பரிசே | – துதித்து இந்தப் பிரகாரமே |
| பத்தியால் பரவசன் ஆனான் | பரசிவ பத்தியினால் அவசராய் அவ் வித பரசிவமாகவே ஆய்விட்டார். |

26

[ தேவர்களும் அவ்விதமே யாய்விட்டார்களென்று கூறுகின்றார். ]

தேவருந் தேவ தேவர்க்குந் தேவாந்
திரியம்பகன் றனைத்தெண்ட னாக
பூவிலே விழுந்து போற்றியே யுருகிக்
கிடந்தவப் பொழுதிலே புத்தேண்
மூவரு மறியா முதல்வனு மிறைவன்
மூர்த்தியா முழுந்திய வருளாற்
காவியங் கண்ணி பங்கனாய் வந்து
தோன்றினான் கண்ணினாற் காண.

27

(இ – ள்)

| | |
|---|---|
| தேவரும் தேவதேவர்க்கும் தேவாம்திரியம் பகன்தனை | இந்திராதி தேவர்களும் பிரஹ் மாதி மூவர்கட்கும் தேவராயும் மூன்று கண்ணோடுங் கூடியவராயு முள்ளவரை |
| தெண்டனாகப் பூவிலே விழுந்து போற்றியே உருகிக் கிடந்த அப்பொழுதிலே | பத்தியோடு கூடி ஸ்மரித்து தண் டம் போல் பூமியில் விழுந்து நமஸ் கரித்துப் போற்றியே துதித்து மனங்கசிந்துருகி (இவ்வாறு பிரஹ்மாவும் தேவர்களும்) பரவச மாக பூமியில் வீழ்ந்து கிடந்த அச்சமயத்தில் |

| | |
|---|---|
| புத்தேள் மூவரும் அறியா முதல்வனும் இறைவன் | தேவ தேவராய மும்மூர்த்திகளும் அறிய முடியாத தலைவனாகிய பரமேஸ்வரன் |
| மூர்த்தியாம் முழுந்திய அருளால் | பூரணமாகிய தனது கிருபையால் ஒரு வடிவமா யுருத்தரித்து |
| காவியங் கண்ணி பங்கனாய் வந்து தோன்றினான் கண்ணினால் காண | நீலோர்ப்பலம் போலுமிரா நின்ற கண்களையுடைய உமாதேவியை யோர்பாகத்தில் உடையவனாக ஆவிர்ப்பவித்தார். 27 |

மாலுமவ் விடத்தே திருவொடுங் கூட
மகிழ்தரு மனத்தொடு வந்தான்
நாலுதிக் கிலும்பூ மாரியாய்ப் பொழிய
நாமசங் கீர்த்தன நாதம்
மேலெடுத் தெங்கும் விளங்குமப் பொழுதில்
விளங்கிய திருவுமா லவனுஞ்
சாலுமெய்ப் பத்தி யோடுமர்ச் சித்தார்
சங்கர னம்புயத் தாளில். 28

(இ - ள்)

| | |
|---|---|
| மாலும் அவ்விடத்தே திருவொடும் கூட மகிழ்தரு மனத் தொடும் வந்தான் | விஷ்ணுவும் பரமேஸ்வரனாவிற் பவித்த அந்தத்தலத்தில் இலக்ஷ்மி தேவியோடு சந்தோஷ சித்தனாய் வைகுண்டத்திலிருந்தெழுந்தருளினார் |
| நாலுதிக்கிலும் பூமாரி யாய்ப் பொழிய | நான்கு திசைகளிலும் புஷ்பம் மழை வருஷிப்பதுபோல் வருஷிக்கவும் |
| நாம சங்கீர்த்தன நாதம் மேலெடுத்து எங்கும் விளங்கும் அப் பொழுதில் | சிவநாம சங்கீர்த்தன நாதம் மேலோங்கி அண்டகடாக முட்டவும் விளங்கும் அந்தச் சமயத்திலே |
| விளங்கியதிருவும் மாலவனும் | மிகச்சிரேஷ்டமாக விளங்கா நின்ற இலக்ஷ்மி தேவியும் விஷ்ணுவும் |
| சாலும் மெய்ப்பத்தியோடும் சங்கரன் அம்புயத்தாளில் அர்ச்சித்தார் | மிகவும் உண்மையான பத்தியோடு கூடி பரசிவனது தாமரை மலர் போலுந்திருவடிகளில் அர்ச்சனை செய்தார்கள். 28 |

(பிரஹ்மா முதலிய தேவர்கள் பத்திப்பரவசராய் மூர்ச்சித்திருந்தனரென்பதாம்.)

தெரியில்வடி வேது மொருபொழுதிலாத சிவனுமருண் மேனி
திகழவே
அரியதனை நாடி யறியுமத னாலவ் வதிசயமொ டாடியருளினான்
உரியவனு பூதியுடையவிழி யாலவ் வுமையுமய னாதி யுணரவே
அருள்செய்தன ளீச னரியதிரு மேனி யமரரெதிர்காண
வருளினால். 29

(இ - ள்)

| | |
|---|---|
| தெரியில் வடிவு ஏதும் ஒருபொழுதும் இலாத சிவனும் | ஆராயுமிடத்து பிராகிருதவடிவமொன்றுமோர்போதுமில்லாத பரமேஸ்வரனும் |
| அருள் மேனி திகழவே | திருவருளே வடிவமாகத் தோன்றி |
| அரியதனை நாடி அறியும் அதனால் அவ்வதிசயமோடு ஆடி அருளினான் | யாராலும் அறிதற்கரிய தன்னை நாடியறியா நிற்கும் அனுபவத்தாலும் உளதாகிய ஆச்சரியமான சந்தோஷத்தினால் திருநடனம் புரிந்தருளினார் |
| உரிய அனுபூதி உடைய விழியால் அவ்வுமையும் | உரிமையாகிய அனுபவத்தோடு கூடிய திருஷ்டியால் அப்பார்வதி தேவியும் |
| அயன் ஆதிஉணரவே | பிரஹ்மா முதலிய தேவர்களும் அப்பரவசத்தினின்றும் பகிர்முக உணர்ச்சியடையும்படியாகவும் அல்லது பூரண ஞானத்தையடையும்படியாகவும் |
| அரிய ஈசன் திருமேனி அமரர் எதிர் காண | பரமேஸ்வரனது அறிதற்கரிய திருநடனத்தோடு கூடிய திவ்விய வடிவத்தை நேரே தெரிசிக்கும்படியாகவும் |
| அருளினால் அருள் செய்தனள் | கிருபையினால் அனுக்கிரகஞ் செய்தனள் என்பதாம் |

அந்தமறை யீறு தந்தபர ஞான வங்கணத னாலு மன்றியே
இந்தவிழி யாலும் அந்தவிமை யோர்கள் எங்கள் பெருமானை
எய்தினார்
சந்தமறை பாடி நின்றவர்க ளாதி சம்புதிரு நாம மாமெழுத்
தைந்து முரை யாடி யன்பினொடு பூசை யங்குநனி மேவி
யண்டர்தாம் 30

(இ - ள்)

| | |
|---|---|
| அந்த மறை ஈறு தந்த பரஞான அங்கண் அதனாலும் அன்றியே | அத் தத்துவ மசியாதி வேதாந்த மகா வாக்கியங்களாலுண்டான பிரஹ்மக்ஞான வடிவ அழகிய திருஷ்டியினாலும் அஃதல்லாமலும் |
| இந்த விழியாலும் அந்த இமையோர்கள் எங்கள் பெருமானை எய்தினார் | இந்தச்சர்ம சட்சுவினாலும் இந்திராதி தேவர்கள் எங்கள் பெருமானாகிய பரமேஸ்வரனை தெரிசித்தார்கள் |
| அண்டர்தாம் | அங்ஙன தெரிசித்த தேவர்கள் முதலானவர்கள் |
| சந்தமறைபாடி | அழகிய வேதங்களால் தோத்திரஞ் செய்து |
| ஆதிசம்பு திருநாமம் ஆம் எழுத்து ஐந்து உரை ஆடி | அனாதியான சம்புவினது அழகிய பஞ்சாக்ஷரமாகிய திரு நாமத்தை செபித்து |
| அங்கு நனி அன்பி னொடு மேவிபூசை நின்றனர் | அவ்விடத்தில் மிகவும் பத்தியோடு பூசித்து சந்நிதானத்தில் நின்றனர் என்பதாம் 30 |

அமையா வன்பாய் நின்றோ ரைப்பார்த் தையம்போய்
நமையே யெய்தப் பெற்றீ ரேயென் றனனாதன்
உமையென் னருளால் வந்த திதேயென் றுரைசெய்தாள்
இமையோ ரெல்லா மென்பு ருகிக்கொண் டின்புற்றார். 31

(இ - ள்)

| | |
|---|---|
| நாதன் அமையா அன்பாய் நின்றோரைப் பார்த்து | தலைவனாகிய பரமேஸ்வரன் இவ்விதம் பத்தியோடும் அமதியடையாமல் பூசித்துக்கொண்டு சந்நிதானத்தில் நின்ற தேவர்களை கருணையோடுங் கூடி ஈக்ஷித்து |

| | |
|---|---|
| ஐயம் போய் நமையே எய்தப்பெற்றிர் என்றனன | சகல சந்தேகங்களும் நீங்கி நம்மையே தங்களது வடிவமாக அடைந்தீர்கள் என்று திருவாய் மலர்ந்தருளினார் |
| உமை என்னருளால் வந்தது இதே என்று உரை செய்தாள் | உமாமகேஸ்வரியும் இந்தப் பரம பாவனமான பிரஹ்மவித்தை எனது கிருபையினாலேயே வந்தமைந்த தென்றருளினாள். |
| இமையோர் எல்லாம் என்பு உருகிக் கொண்டு இன்பு உற்றார் | இவ்வித திருவாக்கியங்களைக் கேட்டு தேவர்களனைவரும் எலும்புருகும்படியான அன்போடு கூடி ஆனந்தத்தையடைந்தார்கள். |

[ இவ்விதம் பரமேஸ்வரரும் பார்வதி தேவியும் செய்த அனுக்கிரகத்தினால் தேவர்கள் சந்தோஷத்தை யடைந்தார்களென்பதாம். ] 31

தொல்லை வேதமுஞ் சொல்லுதற் கரியவித் தோன்றல்
நல்ல னாயின னுமக்கென நாரண னவின்றான்
எல்லை தீர்கரு ணாகர னாகிய விறைவன்
சொல்லு வானருள் கீதையின் பலமெலாந் தொகுத்து. 32

(இ - ள்)

| | |
|---|---|
| நாரணன் தொல்லை வேதமும் சொல்லுதற்கு அரிய இத் தோன்றல் | விஷ்ணுவானவர் அனாதியான வேத சிகரங்களாலும் சொல்லுதற்கரிய விந்தப் பிரபுவாகிய மகா தேவரானவர் |
| உமக்கு நல்லன் ஆயினன் என நவின்றான் | உங்களனைவர்க்கும் பிரியத்தோடு கூடித் தெரிசனந் தரும் பொருட்டு ஆவிர்ப்பவித்தனர் என்று திருவாய் மலர்ந்தனர். |
| எல்லைதீர் கருணாகரன் ஆகிய இறைவன் | அளவில்லாத கிருபைக்கு இருப்பிடமாகிய பரமேஸ்வரன் |

| | |
|---|---|
| சொல்லுவான் அருள் கீதையின் பலம் எலாம் தொகுத்து | பிரஹ்மாவினுல் அருளிச் செய்யப்பட்ட பிரஹ்மகீதையின் பலன்களனைத்தும் சங்கிரகித்துக் கூறுவாராயினர். 32 |

(அ – கை) இந்தக் கீதையைப் படித்தல் கேட்டல் சொல்லுதல் எழுதுதல் வாங்கித் தானம் பண்ணுதல் ஆகிய இவைகளுக்குப் பலன் கூறுகின்ருர்.

பரமமா மிந்தக் கீதை படிப்பவன் பாரின் மீதே
திருவினுன் முகுந்த னெக்குந் தேசினு லிரவி யொக்கும்
மருவுமா மெனேயே வந்து மாசிலா விஞ்சை யாகும்
உருவமா முமையு மென்று மவனுளத் துறையா நிற்கும் 33

(இ – ள்)

| | |
|---|---|
| பரமம் ஆம் இந்தக் கீதை படிப்பவன் பாரின் மீது | சர்வ கீதைகளுக்கு மேலாகிய இந்தப் பிரஹ்மகீதையைக் குருமுகமாக படனஞ் செய்யப்பட்டவன் பூமியின் மீதிருந்தாலும் |
| திருவினுல் முகுந்தன் ஒக்கும் தேசினுல் இரவி ஒக்கும் | செல்வத்தினுல் விஷ்ணுவுக்குச் சமமானவன் பிரகாசத்தினுல் சூரியனுக்குச் சமமானவன். |
| எனேயே வந்து மருவும் | பரமான்மாவாகிய என்னேயே அடைவான் |
| மாசு இலா விஞ்சை ஆகும் உருவம் ஆம் உமையும் | குற்றமற்ற பிரஹ்மவித்யா சொரூபியாகிய உமாதேவியும் |
| என்றும் அவன் உளத்து உறையா நிற்கும் | அவனது இருதயத்தின் கண்ணே எப்போதும் வாசஞ் செய்யா நிற்பள். |

(இந்தக் கீதையைப் படித்தல் என்றதால் அதைக் கேட்டல் சொல்லுதல் எழுதல் வாங்கி தானம் பண்ணுதலாகியவைகள் சேர்த்து பிரஹ்மாப்பியாசமும் அதன் சாதனமும் ஆன

தால் அப்புண்ணியத்தால் செல்வம் அழகு தேஜஸ் முதலிய இகலோக சுகமும் ஞானத்தினுல் சர்வ துக்க நிவர்த்தி பரமானந்தப் பிராப்தியான பரசுகமும் அடைவானென்பதாம்.) 33

பிரமனு னீங்கள் பெற்றவிக் கீதை
பேசிய கீதைகட் கெல்லாம்
பரமமாய் வேதா சாரமா தலினுல்
படிக்கலா மறையவர் தமக்கே
சுருதியா தலினுற் சூத்திரா திகளாற்
சொல்லலா காதென வருளிப்
புரணமா யெல்லாக் கரணமுங் கடந்த
போதவின் பத்தினுட் புக்கான் 34

(இ - ள்)

| | |
|---|---|
| பிரமனுல் நீங்கள் பெற்ற இக்கீதை | பிரஹ்மாவினுல் உபதேசிக்கப்பட்டு உங்களுக்குக் கிடைத்த இந்தப் பிரஹ்மகீதையானது |
| பேசிய கீதைகட்கு எல்லாம் பரமம் ஆய் | இன்னும் அன்னியரால் உபதேசிக்கப்பட்ட கீதைகட்கெல்லாம் மேலானதாய் |
| வேதாகாரம் ஆதலினுல் மறையவர்க்கே படிக்கலாம் | வேத வடிவமானதால் பிராமணர்களுக்கே வாசிக்க வுரியதாகும் |
| சுருதி ஆதலினுல் சூத்திரர் ஆதிகளால் சொல்லல் ஆகாது என அருளி | உபநிஷத் வடிவமாதலின் சூத்திரர்முதலியோரால் சாக்ஷாத் சமஸ்கிருத பாஷையில் படிக்கப்படாது என்று அனுக்கிரகஞ் செய்து |
| புரணமாய் எல்லாக் கரணமும் கடந்த | பரிபூரணமாய் நேத்திராதி சர்வேந்திரியங்களும் மனதும் லயத்தையடையும்படியான |
| போத இன்பத்தின் உள் புக்கான் | ஞானுனந்தத்தின் கண்ணே அந்தர்த்தானமாயினுர். |

(இக்கீதை சாக்ஷாத் உபநிஷத் சாரமானதால் இது பிரஹ்மவித்யா சொரூபமாகும் இதை சத்யம் பிரஹ்மச்சரியம் அஹிம்சை தவம் முதலிய தெய்வீக சம்பத்துக்குரித்தான

விவேகாதி நான்கு சாதனங்களோடு கூடினவன் ஆரியனும் இந்த ஆரியத்தன்மையும் ஞானபூமியொன்றில் உதயமாகி மூன்றும் பூமியில் பூரணமாமென்றும் அம்மறையவனே படிக்கும் யோக்கியமாகும் என்பதாம் அன்றியும் இங்கே நிஷேதம் சம்ஸ்கிருத கீதையையன்றி தமிழ் கீதையை நிஷேதம் செய்யவில்லையென்பதும் ஆம்) 34

மாலுமா துடனே வானவர்க் கருளி
மகிழ்ந்துவை குண்டமே யடைந்தார்
மேலைவா னவரை நீத்தயன் பரமன்
மேனியே நோக்கிமீண் டிருந்தான்
ஞாலமால் விட்டு ஞானதற் பரராய்
நான்முகன் றன்முனே தெண்டம்
போலவே பணிந்து வானவர் தந்தம்
பொன்னகர் நோக்கியே போந்தார். 35

(இ - ள்)

| | |
|---|---|
| மாலும் மாதுடனே வானவர்க்கு அருளி | விஷ்ணுவுமிலட்சுமிதேவியோடும் இந்திராதி தேவர்கட்குபதேசித்து |
| மகிழ்ந்து வைகுண்டமே அடைந்தார் | சந்தோஷ சித்தனாய் தனது வாஸ ஸ்தானமாகிய வைகுண்டத்தை அடைந்தார் |
| அயன் மேலை வானவரை நீத்து | பிரஹ்மாவானவர் பின்னர் ஞானத்தோடு கூடியவர்களாகிய தேவர்களை விடுத்து |
| மீண்டு பரமன் மேனியே நோக்கி இருந்தான் | திரும்பிய மனத்தால் (இங்கே யாவிர்ப்பவித்து அனுக்கிரகித்த) பரமேஸ்வரனது திவ்விய மங்கள மூர்த்தத்தையே தியானித்துக் கொண்டிருந்தார் |
| வானவர் ஞால மால் விட்டு ஞான தற்பரராய் | சர்வ தேவர்களும் பிரபஞ்சமானது பிரஹ்மத்தினும் பின்னமாய் சத்தியமென்னும் பிராந்தியைவிட்டு ஞானாரூடராய் (திடபரோக்ஷ ஞான முடையவர்களாய் |

| | |
|---|---|
| நான்முகன் தன்முனே | திசைமுகனுயிருக்கும் குருவின் சந்நிதானத்தில் |
| தெண்டம்போலவே பணிந்து | தீர்க்கதெண்டம்போல் நமஸ்கரித்து |
| தம்தம் பொன்னகர் நோக்கியே போந்தார் | விடைபெற்றுக்கொண்டு தங்கள் தங்கள் வாசஸ்தானமாகிய சொர்க்கலோகத்தைப் போயடைந்தார்கள். 35 |

உத்தம மான கீதை உரைத்தன னுவகை யோடும்
பத்தியாற் கேட்பார்க் கென்றும் பகர்ந்திடம் படுமீதென்று
சுத்தவே தியர்க்குச் சொல்லிச் சூதனு ஞானக் கண்ணுன்
முத்தியா முருவே நோக்கி மோனமே யடைந்திருந்தார் 36

(இ - ள்)

| | |
|---|---|
| சூதனும் சுத்த வேதியர்க்கு | சூதமா முனிவரும் சுத்த மனதுடைய சௌனகாதி முனிவர்களைப் பார்த்து உங்களுக்கு |
| உத்தமம் ஆன கீதை உரைத்தனன் உவகையோடும் | சர்வோத்தமமான இந்தப் பிரஹ்ம கீதையை சந்தோஷத்தோடும் உபதேசித்தேன் |
| ஈது பத்தியால் கேட்பார்க்கு | இந்தப் பிரஹ்ம கீதையை என்னிடத்தில் சிரத்தை பத்தியுடன் கேட்கின்ற அதிகாரிகளுக்கு |
| என்றும் பகர்ந்திடப் படும் என்று சொல்லி | எப்போதும் உபதேசிக்கத்தக்கது என்பதாகத் திருவாய் மலர்ந்தருளி |
| ஞானக் கண்ணுல் | அகண்ட பிரஹ்மாகார விருத்தியால் |
| முத்தியாம் உருவே நோக்கி மோனமே அடைந்திருந்தார் | மோக்ஷரூபமாகிய சிவஸ்சொருபத்தை தியானித்துக்கொண்டு மௌனமாகவே இருந்துவிட்டார் |

(அ - கை) இந்தப் பிரகாரம் சூதமகா முனிவர் இருந்த சமயத்தில் அந்தச் சௌனகாதி முனிவர்கள் என்ன செய்தார்களென்றுல் அதைச் சொல்லுகின்றுர்.]

இனியனு யெல்லாந் தன்பா லிறைவனின் னருளாற் பெற்ற
முனிவனே முனிவரெல்லா முடியுற வணங்கி யேத்தி
நனிமிக நானென் கின்ற பதப்பொரு ளுடி வேறோர்
அனியமில் பிரமமாக வறிந்ததி சயத்தி ருந்தார். 37

(இ – ள்)

| | |
|---|---|
| இனியனாய் | சர்வ ஜீவர்களிடத்திலும் கிருபையையுடையவனான |
| இறைவன் இன்னருள் | பரமேஸ்வரனது இனிமையான கருணையால் |
| எல்லாம் தன்பால் பெற்ற | சர்வ பிரயோஜனங்களும் தன்னிடத்துடையவனாகப் பெற்றிருக்கின்ற |
| முனிவனை முனிவர் எல்லாம் முடி உற வணங்கி ஏத்தி | சூதமா முனிவரை சௌனகாதி முனிவர்களனைவரும் சிரமானது பூமியிற் பொருந்தும்படி நமஸ்கரித்துத் தோத்திரம் பண்ணி |
| நான் என்கின்ற பதப் பொருள் நனிமிக நாடி | அகமென்னும் சப்தலெக்ஷியார்த்தத்தை மிகவும் ஆராய்ந்து |
| வேறு ஓர் அனியம் இல் பிரமம் ஆக அறிந்து அதிசயித்து இருந்தார் | வேறென்று சொல்லத்தக்கதாக அன்னிய பதார்த்தமொன்றுமில்லாத பிரஹ்ம சொரூபமாகவே அறிந்து அதிசயமான ஆனந்தத்தோடுங் கூடியிருந்தார்கள். 37 |

(12-வது) முன் சொல்லிய உபநிஷதங்களின் தாற்பரியத்தைத் தொகுத்துரைக்கும் அத்தியாயம் சம்பூரணம்.
ஆக திருவிருத்தம் 547.

பிரஹ்மகீதை மூலமும், பிரஹ்மானந்தலகரியென்னும் உரையும் சம்பூரணம்.

உலகெலாம் வியக்க வேதன் உரைத்தருள் கீதை யார்க்கும்
இலகிட வுரையை என்னுள் இருந்தருள் செய்த வண்ணம்
அலகிலானந்த வெள்ளத் தழுந்திடக் கற்றோர் கேட்டோர்
நலமெலாம் அளிக்கும் ஈசன் நற்பதம் வாழ்த்துகின்றேன்.

ஸ்ரீ சற்குருநாதன் துணை.

உ

# பாட்டு முதற்குறிப்பு

# பிழையும் திருத்தமும்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 1 | 9 | ஒளியிளே | ஒளியினே |
| 8 | 9 | முத்தோன் | முகத்தோன் |
| 4 | 14 | நிர்குண | நிர்க்குண |
| 4 | 19 | விதாபங்கள் | விதாபவங்கள் |
| 5 | 27 | பொருப்பன் | பொறுப்பன் |
| 6 | 14 | பொருப்பன் | பொறுப்பன் |
| 12 | 4 | தெரிந்தோன் | தெரிந்தோன் |
| 31 | 3 | எனன | என்ன |
| 33 | 8 | சுபானுபவ | சுவானுபவ |
| 34 | 12 | மாத்திரமு | மாத்திரமும் |
| 35 | 2 | நிஷேக | நிஷேத |
| 36 | 13 | எல்பவர் | என்பவர் |
| ,, | 24 | இந்திரன் | இந்திரனென்பவன் |
| 50 | 8 | முடந்திடு | முடிந்திடும் |
| 53 | 19 | பூ மகன | பூ மகன் |
| 61 | 31 | விருதிதி | வருத்தி |
| 62 | 10 | | நிகழாது – விளங்காதாம் |
| 76 | 10 | சிறசாம் | சிறகாம் |
| 89 | 4 | அறிவுபொருள் | அறிபொருளும் |
| 90 | 7 | ஒன்று | ஒன்ரு |
| 96 | 22 | விசிட்டமாம | விசிட்டமாய் |
| 79 | 5 | கணனே | கண்ணே |
| 98 | 22 | உலகியலால் | உலகியல்பாம் |
| 114 | 18 | பிரஹ்மானது | பிரஹ்மமானது |
| 136 | 27 | மநுசியர் | மனிதர் |
| 140 | 34 | பாவித்தான் | பாலித்தான் |
| 141 | 17 | வெற்றிப் | வெந்நிட் |
| 143 | 12 | அவ் | அவை |
| ,, | 23 | சுவாவ | சுபாவ |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 149 | 27 | பிரகாசத்தின் | பிரசாதத்தின் |
| 166 | 11 | இறந்த | இறந்து |
| 172 | 29 | பிரஹ்மாமானவர் | பிரஹ்மாவானவர் |
| 173 | 22 | யனுவித்து | யனுவதித்து |
| 185 | 13 | நிச்சயத் | நிச்சயித் |
| 187 | 22 | குலாலனு | குலாலனும் |
| 207 | 7 | எங்கும | எங்கும் |
| 209 | 12 | பிரபிக்ஞா | பிரதிக்ஞா |
| 211 | 15 | திதொன்ற | தியாதொன்ற |
| 218 | 15 | டாதாகாது | டாகாது |
| 223 | 5 | உரைக்குல் | உரைக்கில் |
| 236 | 20 | வரூப | சிவரூப |
| 238 | 23 | ஞானதாதி | ஞாதாதி |
| 246 | 15 | தன்பெரும் | தன்பெரும் |
| 249 | 22 | உயர்த்தும் | உயர்ந்தும் |
| 252 | 6 | எறிந்து | எறிந்துகொண்டு |
| 259 | 17 | சுை | சுவை |
| 262 | 32 | சாலிக் | சாளக் |
| 269 | 29 | மல்ர் | மலர் |
| 271 | 15 | எல்லா | என்று |
| 283 | 8 | | போகம்யாவையும் |
| 300 | 20 | அநு | அது |
| 305 | 7 | ஆகியசோதிட | சோதிடமாகிய |
| 311 | 18 | களை | களையு |
| 312 | 27 | சிரென | சிரெள |
| 321 | 10 | சுருதி | சுருதியை |
| 336 | 18 | பொருளிநுட் | பொருளினுட் |
| 337 | 10 | பினன | பின்ன |
| 337 | 11 | நுபட் | நுட்ப |
| 337 | 28 | 5-ஆம் | 9-ஆம் |
| 344 | 35 | அறிபாத | அறியாத |
| 350 | 18 | யோகத | யோகத் |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 353 | 6 | தன்மைபினுல் | தன்மையினுல் |
| 370 | 23 | பிறதத்ல் | பிறத்தல் |
| 382 | 5 | ஜவர்களுக்கு | ஜீவர்களுக்கு |
| 385 | 23 | மென்று | மொன்று |
| 385 | 24 | வொன்று | வென்று |
| 393 | 11 | இப்பியே வெள்ளியாக தோன்றுவது போல் செகதாதிகள் தோன்றுமென்றனர்! அக்கியாதிவாதிகள் | |
| 416 | 26 | ஆத்மாவான் | ஆத்மாவின் |
| 446 | 2 | ஞானதி | ஞானுதி |
| 447 | 27 | பொருட்டு | பொருட்கு |
| 419 | 21 | ஸ்தம் | ஸ்தம்ப |
| 423 | 12 | மத்திர | மந்திர |
| 423 | 24 | பாவமாசிய | பாவமாகிய |
| 424 | 28 | 9 விதபத்தி | 3 ஈசுவரன் பாதங் களைச் சேவிப்பது |
| 425 | 21 | மழியை | வழியை |
| 457 | 13 | நிறை | நிரை |
| 465 | 21 | வஸ்பவ | வாஸ்தவ |
| 468 | 20 | நாசமும் | நாசம் |
| 474 | 24 | பதஞ்தள | பதஞ்சலி |
| 480 | 3 | பண்ணு | பன்னு |
| ,, | 20 | புணர் | புனர் |
| ,, | 36 | முமூட்சுத்வய் | முமூட்சுத்வம் |
| 490 | 20 | அறிமாட்டோம் | அறியமாட்டோம் |
| 491 | 33 | சொலவு | செலவும் |